ஸ்ரீ:

# ஹரிவம்சம்

## விஷ்ணு பர்வம்

(இரண்டாம் பாகம்)

திருவரங்கம்
**ஸ்ரீ உ.வே. S. ராமானுஜ ஐய்யங்கார்**
(ஸ்ரீ மகாபாரதம் தமிழில் மொழி பெயர்க்கச் செய்து
வெளியிட்ட ம.வீ. இராமானுஜாச்சார்யாரின் மாப்பிள்ளை)
அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டது.

**ஸ்ரீ சக்ரா பப்ளிக்கேஷன்ஸ்**
ஊரப்பாக்கம்.

# விஷயஸூசிகை

# விஷயஸூசிகை

# விஷய ஸூசிகை

## அத்யாயம் 65

### சாரவத பர்வதத்தில் - ருக்மினி வ்ரதோத்ஸவம். நாரதர் பாரிஜாத புஷ்பத்தை க்ருஷ்ணன் மூலம் ருக்மிணிக்கு அளித்து கௌரவித்தல் - சௌபாக்யத்தைப் புகழ்தல் - ஸத்யபாமை கோபம் கொளல்

ஜனமேஜயர் சொன்னார் :- "முனி ச்ரேஷ்டரே! வைசம்பாயனரே! மதுரையில் அவதரித்த புத்திமான் க்ருஷ்ணனது மங்களமான சரிதத்தைக் கேட்டு த்ருப்தி அடையவேயில்லை. த்வாரகையில் வசிக்கும் மணம் புரிந்து கொண்ட கிருஷ்ணனது ஆறு குண விசேஷம் பொருந்திய சரித்ரத்தைச் சொல்லும். உமக்கு எல்லாம் தெரிந்ததல்லவா!"

வைசம்பாயனர் சொன்னார் : ஜனமேஜயரே! ப்ரபுவே! கல்யாணம் செய்து கொண்ட க்ருஷ்ணனது விசித்ர சரிதம் அதற்கு அதே ஒத்தது. தெரிந்து கொள். ராஜாவே! ஜனமேஜயரே! புகழ் பெற்ற மிக்க தேஜஸ்வி வாசுதேவன் மணம் புரிந்து கொண்டு ருக்மிணி தேவியுடன் கூடி ரைவத மலையை அடைந்தான். மதுஸூதனன் ருக்மிணியின் உபவாஸ பூர்த்தியைக் கௌரவித்து ப்ராஹ்மணர்களைத் தானே திருப்தி செய்ய (ரைவத மலைக்கும்) சென்றான். நாரதரது அனுமதியின் பேரில் க்ருஷ்ணனால் அனுப்பப்பட்ட யாதவ குமாரர்களும், புத்ரர்களும், பிராதாக்களும் அங்கு சென்றனர். பதினாறாயிரம் பெண்களும் புத்திமான் (விஷ்ணுவுக்கு) அவனுக்குத் தக்க சோபையுடன் சென்றனர். குருச்ரேஷ்டனே! ஜனமேஜயனே! இந்த்ரியங்களை வென்ற க்ருஷ்ணன் அங்கு விரும்பிகிறவர்கள், தர்மத்தில் நிலை நிற்பவர், பக்தர், ப்ரிய வார்த்தையுடையவர், மங்கள நாமகோத்ரங் கொண்டவர், புண்ய கார்யம் செய்பவர், பிறப்பாலும் வித்தையாலும் யக்ஞத்தாலும் சுத்தமானவர், இத்தகைய மகான்களான ப்ராஹ்மணர்களுக்கு விருப்பப்படி கொடுத்தான். பக்த வத்ஸலன் ஸாதுக்களுக்குப் பிரியனும் புகலிடமுமான க்ருஷ்ணன் விரும்பிய பொருள்களால் ப்ராஹ்மணர்களை த்ருப்தி செய்து பந்துக்களையும் தக்கபடி த்ருப்தி செய்தான். பிறகு அந்த பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் உபவாஸ முடிவில் பீஷ்மகன் திருமகளும் தனது ப்ரிய மஹிஷியுமான ருக்மிணியை விசேஷமாகப் பஹுமானம் செய்தான். மஹிஷிகளுடன் வசிக்கும் அளவற்ற வீரமுடைய ருக்மிணீ ஸஹிதன் க்ருஷ்ணனிடம் நாரதமுனிவர் வந்தார். இந்திரன் தம்பி, அளவிடமுடியாத ஆத்ம ஸ்வரூபமுடைய கேசவன் எழுந்தருளின முனிவரை சாஸ்த்ர முறைப்படி பூஜித்தான்.

பாரதா! ஜனமேஜயனே! ஸாதுக்களால் மிகவும் பூஜிக்கத்தக்க நாரதமுனிவர் வாசுதேவனால் அர்ச்சிக்கப்பட்டு பாரிஜாத மரத்தின் புஷ்பத்தை க்ருஷ்ணனிடம் கொடுத்தார்.

ஹரி, க்ருஷ்ணன், அந்த சிறந்த வ்ருக்ஷத்தின் புஷ்பத்தை ருக்மிணியிடம் கொடுத்தான். பக்கத்திலிருந்த உத்தம ஸ்திரீயான அவள் க்ருஷ்ணனுக்கு மிகவும் உகந்தவளல்லவா? குற்றமற்ற. தாமரைக் கண்ணுடைய ப்ருத்யும்னன் (மன்மதன்) தாயார் ஆகிய ருக்மிணீ தேவீ அந்த புஷ்பத்தை ஏற்று க்ருஷ்ணனின் அகக் குறிப்பை அறிந்து சிரஸில் அணிந்து கொண்டாள். மூவுலகழகு முழுவதும் ஒருமிக்க குடி கொண்டவளும் நாராயணன் மனதுக்குகந்தவளுமான பீஷ்மகன் மகள் ருக்மிணி தெய்வ புஷ்பத்தால் அப்போது இருமடங்கு ப்ரகாசித்தாள்.

ப்ரஹ்ம புத்ரரான நாரத முனிவர், அவளை (நோக்கி) அப்படிச் சொன்னார் :- பதிவ்ரதே! தேவீ! இந்த ஒரு பூ உனக்கேதக்கது. உறுதியான வ்ரதமுடையவளே! உன் ஸம்பந்தத்தால் இந்தப் புஷ்பம் எல்லா விதத்தாலும் அழகு பெற்றது. இந்தப் புஷ்பத்திற்கு நீயே பொருத்தமுடையவள் என்பது என் அபிப்ராயம். கல்யாண குணங்கள் நிறைந்தவளே! ஸதா நாயகனிடம் ப்ரியமுள்ளவளே! ச்ரேஷ்டரூபமுடையவளே! நற்குணங்களால் ஆஸ்ரயிக்கப்பட்டவளே! சொல்வல்லோரில் சிறந்தவளே! ஸமயோசிதம் அறிந்தவளே! இந்தப் புஷ்பம் எப்போதும் வாடாதிருக்கிறது. ஒரு வருஷகாலம் விரும்பிய மணத்தைக் கொடுக்க வல்லது. ருக்மிணி தேவி இந்தப் புஷ்பம் விரும்பினபடி உஷ்ணமும் சீதமும் கொடுக்கிறது. தேவீ! மனதால் இஷ்டப்பட்ட மேலான ரஸங்களையும் பொழிகிறது. சிறந்த மேனியளே! உபாஸிக்கப்பட்டு பதியின் ப்ரீதியை கொடுக்கிறது. ப்ரீதி வளர்ப்பதினால் விரும்பிய நறுமணங்களையும் கொடுக்கிறது. தேவீ! நீ எந்தெந்த புஷ்பங்களை விரும்புகிறாயோ அந்தந்த புஷ்பங்களை இந்த வ்ருக்ஷராஜனின் புஷ்பம் கொடுக்கிறது. மங்களஸ்வரூபியே! இதுவே அத்திருஷ்டத்துக்கு மூல காரணமானது. தர்மஸ்வரூபியே! அப்படியே புத்திரனைக் கொடுக்கவல்லது. எப்போதும் சூட்டப்பட்டதாய் அமங்களத்தில் புத்தி செல்வதில்லை. எந்தெந்த மேனி நிறத்தை விரும்புகிறாயோ அதை கொடுக்கவல்லது. உருவம் சிறியதோ அல்லது பெரியதோ உனதிஷ்டப்படி தரிக்கச் செய்யும். கமலலோசனியே! இந்தப் புஷ்பம் விரும்பாத மணத்தைப் போக்க வல்லது. நறுமணத்தை வளர்க்கவல்லது. இரவில் விசேஷ வெளிச்சத்தையும் கொடுக்கிறது. நினைத்த மாத்திரத்தில் ஸந்தான (தேவ வ்ருக்ஷம்) வ்ருக்ஷ பூமாலையையும், நழுவாத புஷ்பம், ஆடை இவைகளையும், முக்யமான புஷ்ப மணங்களையும் கொடுக்கவல்லது. இதைச் சூட்டிக் கொள்கிற உனக்கு பசி, தாகம் வாட்டம் மேலும் மூப்பு இவை தேவர்களுக்குப் போல் விரும்பியபடி உண்டாகும். என்னென்ன கீதம் அனுகீதம்

கேட்க விரும்புகிறாயோ அந்ததந்த மிக இனிய நன்கு ஒலிக்கும் இசைகளை உன் இஷ்டப்படி கொடுக்கும். தேவி! ஒரு வருஷகாலம் முடிந்ததும் இந்த புஷ்பம் உனதருகிலிருந்து ச்ரேஷ்டமானபாரிஜாத மரத்தைத் திரும்ப அடைந்து விடும். மிக்க சோபையுடையவளே! உனக்கு மங்களம் உண்டாகட்டும். இந்த இயற்கை குணம் பாரிஜாத புஷ்பத்திற்கு ச்ருஷ்டிகர்த்தா ப்ரஹ்மாவால் தேவர்களது கௌரவத்திற்காக ச்ருஷ்டி கால முதலே அமைக்கப்பட்டது. ஹிமவான் மகள் பதிவ்ரதையான பார்வதி ஸதா இந்தப் புஷ்பங்களைச் சூட்டிக் கொண்டு தேவச்ரேஷ்டன் பரமசிவனுக்கு இஷ்டையாயிருக்கிறாள். அதிதி, இந்த்ராணி, மஹேந்திரன், தேவர்கள் இவர்களைச் சோகம் தாண்டச் செய்யும். தேவமாதா சாவித்ரி, எல்லாக் குணங்களுக்கும் தக்க ஸ்ரீதேவீ (லக்ஷ்மி)யும் அப்படியே தேவ பத்னிகளும் எல்லாத் தேவர்களும் இப்புஷ்பத்தைச் சூட்டிக் கொள்கிறார்கள். எல்லோருக்கும் இந்தப் புஷ்பம் சூடும் கால எல்லை ஒரு வருஷம் தான் ஸந்தேகமில்லை. போஜகுமாரீ! ருக்மிணீ! இப்போது பதினாறுயிரம் பெண்கள் நடுவில் நீ இருக்கிறாயல்லவா? உன்னை வாஸுதேவனுக்கு ப்ரியமானவளாக நான் அறிகிறேன். ஸர்வேஸ்வரனுக்கு ப்ரியமானவளே! குணவதியே! இப்போது உனது எல்லா ஸபத்னிகளும் கௌரவமாகிற ஜலத்தால் உன்னால் நனைக்கப்பட்டார்கள். மதுஸூதனனால் பாரிஜாத புஷ்பம் உனக்குக் கொடுக்கப்பட்டது. அதனால் இப்போது நீ புருஷனுக்கு ப்ரியமானவள் எனத் தெளிவு. உனது புகழும் தடுக்க முடியாதது.

சிறந்த மேனி நிறமுடைய ஸத்ராஜித் மகள் பதிவ்ரதை ஸத்யபாமை தன்னை ஸௌபாக்யவதியாகவும் பதிக்கு ப்ரியமானவளாகவும் எப்போதும் நினைத்து கொண்டிருக்கிறாள். அவள் இதை (வ்ருத்தாந்தத்தை) அறியப் போகிறாள். சாம்பன் தாய் ஜாம்பவதியும் காந்தாரியும் மஹாத்மா க்ருஷ்ணனது மற்ற பார்யைகளும் ஆசையற்று ஸௌபாக்யத்திற்கான விருப்பத்தை இன்று விட்டு விடுவார்கள்.

தேவீ! ருக்மிணீ! உன்னுடைய ஜயசீல ஸௌபாக்யமாகிற தேர் இன்று கிளம்பிவிட்டது. அது ஆயிரம் மனோரதமாகிய தேர்களாலும் வெல்ல முடியாதது. போஜ புத்ரியே! அழகியே! எல்லா வழியாலும் நான் அறிகிறேன். "நீ க்ருஷ்ணனுடைய இரண்டாவது ஆத்மா". ஹரிப்ரியே! மூவுலக ரத்னங்களிலும் சிறந்த பாரிஜாத புஷ்பத்தை உனக்குக் கொடுத்ததால், உன்னால் வாழ்க்கை அதிமேன்மை அடையப்பட்டது.

ஜனமேஜய ராஜாவே! நாரதரால் இவ்விதம் சொல்லப்பட்ட உண்மையான வாக்யத்தை ஸத்யபாமையால் அனுப்பப்பட்டு அங்கிருந்த பணிப் பெண்கள் கேட்டனர். அரசனே! ஜனமேஜயனே! தேவியினதும் அப்படியே மற்ற பத்னிகளதும் பணிப்பெண்கள் நாரதரால் சொல்லப்பட்ட விசேஷத்துடன் கூடிய விஷயங்களையும் நேரே பார்த்தும் அதையெல்லாம் காதால் கேட்டும் அப்பெண்களால் ஸ்த்ரீ ஸ்வபாவத்தால் விஷ்ணுவின் அந்தப்புரத்தில் அப்போது எல்லாம் ப்ரசாரம் செய்து வெளிப்படுத்தப்பட்டது. பிறகு வம்புப் பேச்சை காதுக்குக்காதோடு கேட்டு கூட்டம் கூட்டமாகக் கூடி ருக்மிணியின் குணத்தின் அதிமேன்மையைப் பத்னிகள் ஆலோசித்தனர். "அவள் ஜ்யேஷ்ட பத்னி. ஜ்யேஷ்ட புத்ர மாதா, தக்கவள்" என்று ஒன்று கூடி தாமோதரன் பத்னிகள் வெகுவாரியாகச் சொன்னார்கள்.

ஒப்பற்ற தேஜஸ்ஸுடைய க்ருஷ்ணனுக்கு ஸதா ப்ரியையான ஸத்யபாமை ஸபத்னியின் அந்த ஸௌபாக்யத்தின் உத்பத்தியைப் பொறுக்க முடியவில்லை. ரூப, யௌவன ஸம்பத்தையுடையவளும் தன் சௌபாக்யத்தால் கர்வமுடையவளும், அகங்கார முடையவளுமான ஸத்யபாமா தேவீ பொறாமை வசத்தையே அடைந்தாள். கோபத்தால் மிகக் கலங்கின மனதுடன் நிரம்ப விறகு சேர்க்கப்பட்ட நெருப்பின் காந்திபோல் ஜ்வாலித்து குங்குமத்தையும் உடன் பட்டாடையையும் களைந்து ஒரே வெண்மையான ஆடையை அணிந்தாள். பொறாமையுண்டாகி வளரும் நெருப்பால் நன்கு தீய்க்கப்பட்டு கோபம் கொண்டு சோபையிழந்த நக்ஷத்ரம், கார் மேகத்துள் புகுவது போல் ஏகாந்தமான கோபாக்ருஹத்துள் புகுந்தாள். நெற்றியில் கோபத்துக்குரிய சின்னமான பனியுடன் கூடிய சந்திரன் போல் வெளுப்பான பட்டத்தைத் தலையில் கட்டிக் கொண்டு முகத்தில் மற்ற இடங்களை கரைத்த சிவப்பு சந்தனத்தால் பூசி நினைத்து நினைத்து கோபத்துடன் தலையை அசைத்து நீண்ட தலையணையுடைய படுக்கையில் உட்கார்ந்து ஆபரணங்களையெல்லாம் களைந்து, பின்னலைக் கட்டிக் கொண்டிருக்கும் ஸத்யபாமை பணிப் பெண்களால் "உயர்ந்த குலத்தினளாகிய நீ அகாரணமாகக் கோபங் கொள்ளக்கூடாது'' என்று கூறி வெளியில் இழுக்கப்பட்டவளாய் வளைந்த புருவமுடைய அவள் பெருமூச்சு விட்டு பெருமூச்சு விட்டு தாமரைப் புஷ்பத்தைப் பிய்த்து எறிந்தாள்.

65 அத்தியாயம் முற்றும்.

## அத்யாயம் 66

## ஸத்யபாமையை க்ருஷ்ணன் ஸமாதானப்படுத்துதல் - ஸத்யாபாமையின் அபிலாஷைக்கான தபஸ்ஸுகளுக்கு அனுமதி கேட்டல்

வைசம்பாயனர் சொன்னார் : எல்லாமறிந்த அளவிடப்படமுடியாத ஸ்வரூபமுடைய கேசவன் நாரதமுனியுடன் ருக்மிணி பேசிக் கொண்டிருப்பதையறிந்து ஏதோ கார்ய வ்யாஜ்யத்தால் வெளிக் கிளம்பினான். வேகமாகவே அழகான ரைவதமலை ப்ரதேசத்தில் விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்ட ஸத்யபாமையின் பெரிய மாளிகையை அடைந்தான். கர்வங்கொண்டவளும், மனதுக்குகதந்தவளும், ப்ராணனைக் காட்டிலும் சிறந்தவளுமான ஸத்ராஜித் பெண்ணான ஸத்யபாமையை (கோபங்கொண்டவளாக) அறிந்து விஷ்ணு, க்ருஷ்ணன் மெதுவாகப் புகுந்தான். அந்த ஸத்யபாமை ப்ரணயத்தால் கோபித்தவளாக நினைத்து மதுஸூதனன் மிக பயந்தவனாய் மெதுவாக நுழைந்தான், அந்தக் க்ருஷ்ணன் நாரதருக்கு 'உபசாரம் செய்ய ப்ரத்யும்னனை ஏற்பாடு செய்து பணியாளை வாசலில் நிற்கச் சொல்லி உள்ளே நுழைந்தான். அவன் அப்போது 'கோபக்கிரஹத்தையடைந்து பணிப்பெண் போல் கிடக்கும் அடிக்கடி பெருமூச்சு விட்டு கொண்டிருக்கும் ப்ரியையைத் தூரத்திலிருந்து பார்த்தான். நகத்தின் முனையில் பொருந்தியிருக்கும் தாமரைப் பூவை முகத்தாமரையில் சேர்த்து அடிக்கடி பெருமூச்சுவிட்டும் சிரித்துக் கொண்டுமிருக்கிறாள். சிறிது வளைந்த முனையுடைய காலால் பூமியைக் கீறிக் கொண்டு முகத்தைப் பின்னால் திருப்பிக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தாள். இடது கையாகிய தாமரையில் முகத்தாமரையை வைத்து த்யானித்துக் கொண்டிருக்கும் தாமரைக் கண்களும் அழகிய எல்லா அவயங்களுமுடைய பெண்ணைக் க்ருஷ்ணன் பார்த்தான். பணிப்பெண்கள் கையிலிருந்த சந்தனத்தைப் பிடுங்கி தன் தலையை மார்பில் குனிய வைத்து கொண்டு தயவின்றி வீசி எறிகிற (குற்றமொன்றில்லா) ஸத்யபாமையைப் பார்த்தான். சயனத்திலிருந்து திரும்ப எழுந்து மீண்டும் மீண்டும் விழுந்து படுக்கிற ப்ரியையின் இதர சேஷ்டைகளையும் ஹரி பார்த்தான்.

எப்போது முகத்தை மறைத்துக் கொண்டு தலையணை மேல் வைத்தாளோ அப்போது இது தக்க ஸமயம் என்று க்ருஷ்ணன் உள்ளே சென்று தோழிகளை "நான் வந்ததைச் சொல்லாதீர்" என ஸமிஜ்ஞையால் தெரிவித்து பணிப் பெண்களால் இவனது ஸஞ்சாரம் (ரஹஸ்யமாம்படியே) தடுத்துக் கொடுக்கப்பட்டு

ஸத்யபாமையின் பின் பக்கத்தையடைந்தான். விசிறியையெடுத்து மறைவான பக்கத்திலிருந்து மெதுவாக காற்றை வீசினான். மெதுவாகச் சிரித்தான். பாரிஜாத புஷ்பத்தின் தொட்ட சேர்க்கையால் நறுமணம் அந்தப் பகவான் க்ருஷ்ணன் மனிதருக்கல்லாத திவ்ய மணத்தைக் கொண்டான். ஸ்த்யபாமை அத்யத்புதமான நறுமணத்தை முகர்ந்து ஆச்சர்யமடைந்தவளாய் முகத்தைத் திறந்தாள். 'இது என்ன இது?' என்று சொன்னாள். அழகிய புன்சிரிப்புடைய அவள் பின்புறம் நோக்கி (ஸர்வகந்த) தேவனைக் காணமல் அப்போது மணத்தின் காரணம் பற்றி பணிப் பெண்களை வினவினாள். வினவப்பட்ட அப்பணிப் பெண்கள் அப்போது ஒன்றும் பேசாமல் மண்டி போட்டு கை கூப்பி வணங்கி கீழ் நோக்கிய முகத்துடன் இருந்தனர். அபூர்வ மணத்துக்குக் காரணம் தெரியாமல் அவள் ஊகித்தாள். "பூமி ஸ்வபாவிதமான மணத்தை வெளிப்படுத்துகிறாள். அவளுடைய இந்த ஒப்பற்ற நறுமணம் இப்போது (புதிதாக) எப்படி வந்தது? இது எதுவாக இருக்கும்" என்று நாற்புறமும் பார்த்து அந்த ஸத்யபாமை லோக காரணமான கேசவனைத் திடீரெனக் கண்டாள். பிறகு நீர் ததும்பும் கண்களுடன்'சரிதான்' என்று சொன்னாள். கோபத்தால் காரங்கொண்டு ப்ரணய கோபங்கொண்டவளாய் ஆனாள். நீலாயதாக்ஷியும் மங்களமுமான அவள் அப்போது துடிக்கும் உதடுகளுடன் கீழ் நோக்கி பெருமூச்சு விட்டு ஒரு முஹூர்த்த காலம் வேறுபக்கம் முகத்தை திருப்பிக் கொண்டிருந்தாள். வலது புருவத்தைச் சுருக்கி கண்களைப் புரட்டி கையில் முகத்தை வைத்து க்ருஷ்ணனைப் பார்த்து "நீ சோபிக்கிறாய்" என்று சொன்னாள். அவள் கண்களிலிருந்து ப்ரணய கோபத்தால் உண்டாகிய கண்ணீர்ப் பெருக்கு தாமரையிதழிலிருந்து பனி நீர் போல் வழிந்தது. தாமரைக் கண்ணன் மிக்க த்வரையுடன் துள்ளியோடி அவள் தாமரை முகத்திலிருந்து விழுந்த கண்ணீரை இரு கைகளால் ஏந்தினான்.

ஸ்ரீவத்ஸத்தை மார்பில் கொண்டவன், தாமரைக் கண்ணன், ப்ரியையின் கண்களிலிருந்து மார்பில் விழும் கண்ணீரைத் துடைத்து (இவ்விதம்) சொன்னான் : "அழகி! நீலாயதாக்ஷி! பெண்ணே! உனது கண்களிலிருந்து தாமரையிலிருந்து நீர் போல் ஏன் நீர் பெருகுகிறது? காலையில் பூர்ணசந்திரனுடையவும், நடுப்பகலில் தாமரையின் தோற்றத்தையும் உனது முகம் ஏன் அடைந்திருக்கிறது? அழகிய ப்ருஷ்டபாகமுடையவளே! சிவப்பு ஆடையையும் ஜரிகை ஆடையையும் ஏன் உடுக்கவில்லை? எதற்காக வெள்ளையாடை உடுத்துள்ளாய்? வெள்ளி ஜரிகையும் குங்குமச் சிவப்பாடையும் உனக்கு மிக ப்ரியமானதாயிற்றே!

பெண்ணுக்குத் தேவ வணக்கத்துக்குப் பிறகு வெண்ணிற ஆடை விருப்பமாகாதே. அழகான திருமேனியுடையவளே! உனது உடல் ஆபரணமில்லாதிருப்பதின் காரணம் என்ன? சொல்லு. அழகுபடுத்த வேண்டிய இடம் ஏன் மாறுபட்டிருக்கிறது? நீண்ட கடைக்கண்ணுடையவளே! என் மனதுக்கினியவளே! ப்ரிய தோற்றமுள்ளவளே! உனது நெற்றி வெண்ணுடை பட்டத்தால் கட்டப்பட்டு நல்ல சந்தனக் குழம்பால் பூசப்பட்டுள்ளது. ஏன்? ப்ரியே! எக்காரணத்தால் உனது நெற்றிச் சோபையை மறைக்கிறாய்? எனது மனம் மிக வாடச் செய்யவா? சித்தரிக்கப்படவேண்டிய உனது கன்னங்கள் சந்தனப் பூச்சால் ப்ராகசிக்கவில்லையே! ரத்னபாணங்கள் நீக்கப்பட்ட உனது கழுத்து க்ரஹ நக்ஷத்ரங்கள் இல்லாது வர்ஷகால ஆகாயம் போல ப்ரகாசிக்கவில்லை. பூர்ண சந்திரன் போன்று வெளுத்து தாமரை வாஸனை கொண்டு மித பாஷையுடைய வாயால் என்னுடன் ஏன் பேசுகிறாயில்லை? பாதிக் கடைக் கண்ணாலேயாவது ஏன் என்னைப் பார்க்கிறாயில்லை? பெருமூச்சுடன், மைகலங்கிய கண்ணீரை விடுகிறாய். எதற்காக? கரு நெய்தல் பூ காந்தியுடையவளே! நல்ல மனதுடையவளே! முகத்தின் அழகைக் கெடுக்கும் மை கலங்கிய கண்ணீரை விடாதே. சிறந்த மேனியுளே! தேவீ! உனக்கு நான் பணியாளன்று உலகில் கீர்த்தி பெற்றவனல்லவா? அதனால் ஏன் முன் போல் நீ என்னை ஆணையிடுகிறாயில்லை? ப்ரியே! நான் உனக்கு என்ன அப்ரியம் செய்தேன்? ஸுந்தரி ! எதற்கு நீ உன்னை ஆயாஸப்படுத்தி கொள்கிறாய்? ஸர்வாங்கஸுந்தரி! மனதாலும் வாக்காலும் செயலாலும் உன்னை ஒரு வகையிலும் நான் மீறமாட்டேன். நான் இதை ஸத்யமாகச் சொல்கிறேன். பஹுமானித்து கொண்டாடத்தக்க [illegible] பலர். உன்னைத் தவிர ஸ்நேஹமும் பஹுமானமும் மற்றவரிடத்தில் எனக்கில்லை. தேவப்பெண் போன்றவளே! நான் மரித்தாலும் என்னிடமுள்ள வேட்கை உன்னை விடவே விடாது. இது எனது நிச்சயமான எண்ணமென்று அறிந்து கொள். பூமியில் பொறுமை முதலிய குணங்களும் ஆகாயத்தில் சப்தம் முதலிய குணங்களும் எப்படி இயற்கையோ, மலர்ந்த தாமரைச் சோபையுடையவளே! அப்படியே உன்னிடத்தில் எனக்கு ப்ரேமையும். இது ஸத்யம். அக்னியிடம் ஜ்வாலையும், சூர்யனிடம் ப்ரகாசமும், சந்த்ரனிடம் திவ்யகாந்தியும் எப்படி நிலையானவையோ அப்படியே உன்னிடம் எனக்கு ஸ்நேஹமும் நிலையானது."

ஸத்யபாமா இப்படிச் சொல்லும் தனது ப்ரியனான ஜனார்த்தனனை தன் கண்களிலிருந்து பெருகும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு

மெதுவாகச் சொன்னாள் : "ப்ரபோ! நீர் என்னைச் சேர்ந்தவர் என்னும் எண்ணம் எனக்கு முன் இருந்தது. இப்போது உம்மிடத்தில் ஸாதாரண நட்பைத் தான் வைத்துக் கொண்டிருக்கிறேன். முன்னா் காலப்போக்கு நிலையற்றது என நான் அறியவில்லை. இப்போது உலகப் போக்கு முழுவதையும் நிலையற்றதாக அறிகிறேன். அச்சுதனே! இறக்காத எனக்கு எல்லாப்படியாலும் இது இரண்டாவது ஜன்மம். இது விஷயம் அதிகம் சொல்வானேன். உமது அந்தரங்கத்தை அறிந்தேன். இனிமை வார்த்தையால் மாத்ரமே (இங்கு) காட்டப்படுகிறது. என்னிடம் அன்பும் இயற்கையாக இல்லை. வேஷம். மற்றொரிடத்தில் இயற்கை. புருஷோத்தமா! எல்லாப்படியாலும் நேர்மையான குணமுடையவளாகவும் பக்தையானவளுமான என்னை அவமதிக்கிறீா். தெரிந்து கொண்டே என்னிடம் வஞ்சகமாக நடந்து கொள்கிறீா். இவ்வளவு தானே போதும். பார்க்க வேண்டியதை எல்லாம் பார்த்தாய் விட்டது. அதற்கு மேல் கேட்க வேண்டியதும் கேட்டாய் விட்டது. உம் அன்பின் பயனும் பார்க்கப்பட்டுவிட்டது. புருஷோத்தமா! உம்மால் அனுக்ரஹிக்கத் தக்கவளானால், எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும். பரத்தில் உறுதி கொண்டு தவம் செய்வேன். தவமோ வ்ரதங்களோ பதியின் அனுமதி கொண்டு செய்யப்பட வேண்டும். பதியின் அனுமதியில்லாது செய்யபடுவது பயனற்றது அல்லவா?" அழகிய புன்சிரிப்புடைய மங்களையான அவள் இவ்விதம் இதைச் சொல்லி மறுபடியும் க்ருஷ்ணனின் ஆடையின் மஞ்சள் தலைப்பை கையால் இழுத்து முகத்தை மறைத்துக் கொண்டு கண்ணீா் பெருக்கினாள்.

அத்யாயம் 66 முற்றும்

## அத்யாயம் 67

### ஸத்யபாமையின் கோபம் துக்கம் இவையின் காரணத்தைக் க்ருஷ்ணன் அறிதல் - அவளுக்காகப் பாரிஜாத மரம் கொண்டு வருவதாகக் கூறி ஸமாதானப் படுத்துதல் - இருவரும் நாரதரை பூஜித்தல் - பாரிஜாத புஷ்பத்தின் மகிமையை நாரதர் கூறுதல்

வைசம்பாயனர் சொன்னார் :- பாரத! ஜனமேஜயரே! இந்த நாராயணன் மறுபடியும் ப்ரீதியாய் கோபங்கொண்ட கர்வமுடைய பதிவ்ரதையான ஸத்யபாமையைக் குறித்து ஸ்ரீக்ருஷ்ண பகவான் சொன்னார் : கமலக்கண்ணியே! நீ இப்படி மிக்க துக்கப்படுகிறாய். அதற்குக் காரணம் என்ன என்பது பற்றிச் சோகம் என் உடலையும் தகிக்கிறது. ஸர்வாங்க ஸுந்தரியே! எனது உயிரைப் பணயமாக

வைக்கிறேன். எனது நாசத்தில் உனக்கு விருப்பம் இல்லாமல் இருந்தால் சொல்லு. உனது ப்ரிய பதியால் கேட்கத்தக்கதானால் (உனது துக்க காரணம்) சொல்லு.

பிறகு ஸத்யவ்ரதத்தில் நிலையாகவுள்ள பர்த்தாவிடம் அப்படி கீழ் நோக்கியிருந்து கொண்டே ஸத்யபாமை கண்ணீரால் தழுதழுத்த குரலுடன் சொன்னாள் :- கேசிநாசனே! கமலக் கண்ணனே! கௌரவம் கொடுப்பவனே! உலகில் எது புகழ் பெற்றதோ அந்த ஸௌபாக்யம் எனக்கு உன்னால் உம்மாலேயே நிலை நிறுத்தப்பட்டது. தேவனே! உமக்கு ப்ரியையாயிருப்பதால் எல்லா ஸ்த்ரீகளின் நடுவில் கர்வங்கொண்டு தலை நிமிர்ந்திருக்கிறேன். எல்லாப் படியாலும் விரும்பத்தக்கவளாகவுமிருக்கிறேன். அப்படிப்பட்ட நான், இப்போது ஸபத்னிகளுக்கும் மற்ற ஜனங்களுக்கும் பரிகாசத்துக்கிடமாயினன். இவ்விதமாக அங்கங்கு உண்மையைக் கேட்டுத் தோழிகளால் சொல்லப்பட்டது. நாரதமுனி கொடுத்த பாரிஜாத புஷ்பம் இஷ்டப்பட்ட மஹிஷிக்குக் கொடுக்கப்பட்டது. உம்மால் நான் விலக்கி வைக்கப்பட்டேன். மிகச் சிறந்ததைக் கொடுப்பதால் உம்மால் அவளிடம் உள்ள அளவு கடந்த அன்பும் கௌரவமும் வெளிப்படுத்தப்பட்டதல்லவா? நாரதமுனி உமது முன்னிலையில் அவளை ஸ்தோத்ரம் செய்யவில்லையா? நீர் உமது அந்த ப்ரியையினது ஸ்தோத்திரத்தை ஸந்தோஷத்துடன் கேட்டுக் கொண்டிருக்கவில்லையா? நாரதரால் உமது முன்னிலையில் அந்த மனுஷி துதிக்கப்பட வேண்டுமேயானால் துர்பாக்யவதியான இந்த மனுஷி அங்கு எதற்காகச் சொல்லப்பட்டாள்? ப்ரபோ! அவளுக்கு அதிப்ரீதியைக் கொடுத்து பின்னர் மனவருத்தம் கொள்வதனால் எனக்குத் தவம் செய்ய அனுமதி தயவு செய்யும். தாமரைக் கண்ணா! நடந்ததை ஸ்வப்பனத்தில் பார்த்தால் கூட நம்ப மாட்டேன். நீர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே வேறு மாதிரி நடந்ததை கேள்விப்பட்டேன். ஒப்பில்லா தேஜஸ்ஸையுடைய அந்த நாரத முனிவருக்கே இஷ்டம். இஷ்டப்படியிருக்கட்டும். தேவா! நீர் அங்கு கேட்டும் பார்த்தும் இருந்தீர் என்பதே எனது வருத்தம். உலகில் ஸாதுக்களால் கௌரவத்துக்காக வாழ்க்கை நடத்தப்படுகிறது என்று நீரே சொல்லியிருக்கிறீர். இப்படியிருக்கும் போது மானத்தை விட்டு வாழ நான் விரும்பவில்லை. எனக்கு எங்கிருந்து காப்பு இருந்ததோ அங்கிருந்து இப்போது பயம். எல்லாவற்றிலிருந்தும் எவன் என்னைக் காக்கிறானோ அவன் இப்போது என்னைக் காக்கிறானில்லை. தேவா! ப்ரபோ! உம்மால் விடப்பட்ட நான் என்ன கதி அடைவேன்? உம்முடன் சேராமல் (பிரிந்து). சந்த்ரன் இல்லாது

அல்லிப் பூ அடைந்த கதியை நான் அடைவேன். கௌரவம் கொடுப்பவனே! (முன்னர்) ப்ரியையாயிருந்து (இப்போது) அப்ரியையாயினேனுனல் நான் தேவதைகளுக்கு (எனது) அறியாமையால் ப்ரியம் அப்ரியங்கள் என்ன செய்தேனே? அப்போது ப்ரியையாகவிருந்து இப்போது அப்ரியையான நான் வஸந்த கால புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட ரைவத மலையை மறுபடி எப்படி பார்ப்பேன். குயில் குரல் கலந்து பூமணம் வீசும் சுத்தமான காற்றை உம்மால் த்வேஷிக்கப்பட்டு துர்பாக்யவதியாயிருக்கிற நான் எப்படி அனுபவிப்பேன்? தேவ! உமது மடியிலிருந்து ஸமுத்திரத்தில் ஜலக்ரீடை செய்து (இப்போது) துர்பாக்யமடைந்த நான் கடலைப் பார்க்கக் கூட எப்படி முடியும்? ஸத்ராஜிதி! உன்னைக் காட்டிலும் எனக்கு ப்ரியமானவள் வேறொருத்தியில்லை என்று என்னை தெரிந்து கொள் என்று சொன்ன வார்த்தை இப்போது எங்குப் போயிற்று? இல்லையானுல் யார் அதை ஞாபகங்கொள்வார்? எனது மாமியார் என்னை உமது பஹுமானத்தால் ஆனந்தமுடையவளாய் பார்த்தாள். (இப்போது) உம்மால் அலக்ஷ்யம் செய்யப்பட்டு துர்பாக்யத்தால் மெலிந்தவளாய்ப் பார்க்கிறுள். கௌரவம் கொடுப்பவனே! மிக்க ப்ரியமுடைய உமது மறைவான ப்ரேமையால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? தேவனுன நீர் எப்போதும் அவளைப் போல் என்னைப் பார்க்கவில்லை. சத்ருநாசகனே! உம்மை இவ்வளவு ஒழுக்கமற்றவராக நான் நினைக்கவில்லை. இப்போது அந்த மனுஷி பக்கம் ப்ரியர், மற்றோருக்கு வஞ்சகராகவும் அறியப்பட்டீர். தேவனே! குரல், வர்ணம், கார்யம், ரூபம் இவையால் உம்மை முயன்று மறைத்துக் கொள்கிறீர். கள்வனே! அந்த மனுஷி பக்ஷம் இருந்து கொண்டு வார்த்தையால் மாத்ரம் என்னிடம் இனிய வஞ்சகனுக அறியப்படுகிறீர்.

பிறகு தேவன் ஹரி பொறுமை வசப்பட்ட கர்வங்கொண்ட ஸத்யபாமை தேவியை ஸமாதானத்தை முன்னிட்டு சொன்னுன். ப்ரியே! ப்ராணநாயகீ! கமலக் கண்ணியே! இப்படி இல்லை இதில் அதிகம் பேசி பயன் என்ன? என்னை உன்னுடையவனுக அறி. தேவீ! சொல்லிப் போகிற நாரதர் எனக்குப் ப்ரியம் செய்கிறவருய் அந்தப் பாரிஜாத புஷ்பத்தை அவளுக்காக என் முன்னால் தாக்ஷண்யத்திற்காவும் வேறு வழியின்றியும் கொடுத்தார். இதில் ஸந்தேஹமில்லை. அழகிய புன்சிரிப்புடையவளே! எனது இந்த ஒரே குற்றத்தை மன்னித்துப் பொறுத்துக் கொள். அழகிய ப்ருஷ்ட பாகமுடையவளே! மிக்க கோபங்கொண்டவளே! பாரிஜாத புஷ்பங்களை நீ வேண்டினுல் அதை நிறைவேற்றி வைப்பேன்.

இதை ஸத்யமாகச் சொல்கிறேன். ஸ்வர்கத்திலிருந்து வ்ருக்ஷ ராஜனை பாரிஜாதத்தைக் கொண்டு வந்து எவ்வளவு காலம் நீ விரும்புகிறயோ அதுவரை உனது க்ருஹத்தில் இருக்கச் செய்வேன். க்ருஷ்ணனல் இப்படி சொல்லப்பட்ட மஹிஷி ஸத்யபாமை சொன்னள். அச்சுதா! இப்படி யாரால் அந்த மரம் இங்கு கொண்டு வர முடியும்? அதோக்ஷஜன் மறுபிறப்பு எடுத்தவன் - சகடத்தின் கீழிருந்து அந்த அஸுரனை கொன்றபோது பார்த்தவர் சூட்டிய பெயர்) க்ருஷ்ணு! இந்த எனது வருத்தம் நீக்கப்பட்டதேயானல் எல்லாப் பெண்களைக் காட்டிலும் மேலானவள் ஆவேன். ஜகத்துக்கு உத்பத்தி, நாச காரணமான ஒப்பற்ற மதுஸூதனன் தேவன் க்ருஷ்ணன் "அப்படியே ஆகட்டும் இது நன்கு நடக்க கூடியதே" என்று சொன்னான். ஜனமேஜயரே! க்ருஷ்ணனல் "அப்படியே ஆகுக" எனச் சொல்லப்பட்ட கம்ஸ நாசகனான க்ருஷ்ணனின் மஹிஷி ஸாதுக்களால் விரும்பப்பட்ட ஸத்யபாமை மகிழ்ந்தாள்.

பிறகு ஸாதுக்களுக்கு எல்லா அபிஷ்டங்களையும் கொடுக்கவல்ல எல்லா உத்பத்தி காரணனை, எல்லாவற்றிற்கும் எஜமானனை ஜகன்நாதன் க்ருஷ்ணன், ஸ்நானம் செய்து அவஸ்யமான நித்ய கர்மங்களைச் செய்தான். ராஜனே! ஜனமேஜயனே! ஸ்நானம் செய்த தேவன் க்ருஷ்ணன் நாரத முனியை நினைத்தான். அந்த முனிச்ரேஷ்டரான தேவரிஷி ஸமுத்திரத்தில் ஸ்நானம் செய்து ஸ்நானத்திற்குப் பின் (இங்கு) எழுந்தருளினர்.

ராஜா! ஜனமேஜயரே! ஸாதுக்களுக்கு கதியான தர்மாத்மா அதோக்ஷஜன் க்ருஷ்ணன் வந்த அந்த முனிவரை ஸத்யபாமையுடன் கூடி முறைப்படி பூஜித்தான். ஸத்யபாமை நாரத முனிவரின் திருவடிகளை தானாகவே அலம்பினள். க்ருஷ்ண தேவன் அப்போது தானே கமண்டலத்தால் தீர்த்தம் சேர்த்தான். பிறகு அந்த ஜகத்குரு சுத்த ஸ்வரூபீ கேசவன் ஸுகமாக அமர்ந்திருக்கும் நாரத முனிவருக்குச் சிறந்த அன்னம் பரிமாறினர். சொல்வோரில் சிறந்த உதார குணமுடைய நாரத முனிவர் லோக கர்த்தாவால் அன்புடன் அளிக்கப்பட்ட அன்னத்தை மிக்க பரிவுடன் அமுது செய்தார். ப்ரபோ! ஜனமேஜயரே! பிறகு திருப்தியடைந்தவராய் ஆசமனம் செய்து ஆசீர்வாதங்களைக் கொடுத்தார். கேசவனும் அந்த ஆசீர்வாதங்களை மனமுவந்து ஏற்றுக் கொண்டார். பிறகு நாரதமுனி தன்னை வணங்கிய கமலக்கண்ணி ஸத்யபாமையை ஜலத்துடன் கூடிய வலது கையை விரித்து ஆசி கூறினர். தேவி! எனது தபோ பலத்தால் நீ

இப்போதெப்படியோ அப்படியே எப்போதும் இரு. விசேஷமான ஸௌபாக்யவதியாகவும் இரு. ராஜா! ஜனமேஜயரே! முனிபுங்கவரால் இப்படிச் சொல்லப்பட்ட ஹரிப்ரியை ஸத்யபாமா பெரு மகிழ்ச்சியுடன் எழுந்திருந்தாள். அளவிட முடியாத வீரன் புத்திமான் க்ருஷ்ணன் அப்போது முனிவரிடமிருந்து அனுமதி பெற்று அதிதி சேஷ அன்னத்தை உண்டான். பாரத! ஜனமேஜயரே! பிறகு அவச்யமான கார்யங்களைச் செய்து ஸத்யபாமாவும் பர்த்தாவின் அனுமதியுடன் வீட்டுக்குள் சென்றாள். பிறகு தேவி ஸத்யபாமை க்ருஷ்ணனின் அனுமதியுடனேயே வெளியில் வந்து நாரத மஹாத்மாவை வணங்கி க்ருஷ்ணன் பக்கல் இருந்தாள்.

நாரதர் ஒரு முஹூர்த்த காலம் இருந்து பின்பு க்ருஷ்ணனை பார்த்து சொன்னார் : "அதோக்ஷஜா! க்ருஷ்ணா! விடை பெறுகிறேன். இந்த்ர லோகம் செல்கிறேன். அங்குத் தேவ கந்தர்வர்களும் அப்படியே அப்ஸர கணங்களும் ஈசான முதல் தேவன் மஹேஸ்வரனை வணங்கி கானம் செய்வார்கள். ப்ரபோ! க்ருஷ்ணா! தேவதேவனைப் பூஜிப்பதற்காக தேவேந்திரன் மாளிகையில் ஒவ்வொரு மாசமும் உசிதமான இந்த ஆடல் பாடல் நடக்கும். மலைகளை அடக்கிய தேவதேவன் இந்தரனால் செய்யப்பட்டதை (உத்ஸவத்தை) கணங்களுடன் கூட பார்வதி ஸஹிதனை பரமேஸ்வரன் மறைந்திருந்து பார்க்கிறன். மிக்க தேஜஸ்வீ! க்ருஷ்ணா! நேற்று மஹாத்மா வ்ருக்ஷ ராஜன் பாரிஜாதத்தின் புஷ்பத்தைக் கொடுத்து நான் இந்த்ரனால் அழைக்கப்பட்டேன். ப்ரபுவே இந்தப் புஷ்பம் உனக்காக என்னால் கொண்டு வரப்பட்டது. வ்ருக்ஷ ராஜாவிடம் உண்டான இது (புஷ்பம்) தேவபோகத்துக்கு உரியதல்லவா?

தாமரைக்கண்ணா! க்ருஷ்ணா! அந்த மரம் எப்போதும் இந்த்ராணிக்கு இஷ்டமானது. ப்ரதி தினம் பூஜிக்கப்பட்டதால் ஸௌபாக்யத்தைக் கொடுக்கவே செய்யும். தர்மத்தில் நிலைத்த மஹாத்மா கச்யபரால் அதிதியின் (பூஜை முதலிய) புண்ய கார்யங்களின் பொருட்டு அப்போது பாரிஜாத மஹாவ்ருக்ஷம் படைக்கப்பட்டது. முன் தவத்துக் கிருப்பிடம் மரீசி மகன் மஹாதேஜஸ்வி கச்யபர் அதிதி தேவியால் ஸந்தோஷப் படுத்தப்பட்டாரல்லவா? அவளை வேண்டிய வரம் கேட்கச் சொன்னார். அவள் சொன்னாள்: "முனிச்ரேஷ்டரே! ஸௌபாக்யவதியாய் இருக்க வேண்டும். இஷ்டப்படி அலங்கரித்து கொள்ள எல்லா பூஷணங் களும் வேண்டும். விரும்பிய ஆடல் பாடல்கள் (அமைய) வேண்டும்

எப்போதும் மங்கைப் பர்வத்தினளாய் இருக்க வேண்டும். ஸதா பாபமற்றவளாயும், சோகமற்றவளாயும், பதி பக்தியுடையவளாயும் இருக்க வேண்டும். பிறகு எல்லா விருப்பங்களையும் கொடுக்கவல்ல, எப்போதும் நறுமணம் வீசும் புஷ்பங்கள் நிறைந்த பாரிஜாத வ்ருக்ஷத்தை அதிதியின் வேண்டுகோளை நிறைவேற்றப் படைத்தார். மூன்று கிளைகளையுடையது, எப்போதும் அழகிய தோற்றமுடையது. எல்லா பிரமன் முதல் புழு ஈராக) ப்ராணிகளுக்கும் மனோஹரமானது. அந்த வ்ருக்ஷத்திலேயே எல்லாப் புஷ்பங்களும் காணப்படுகின்றன.

அந்த மஹா வ்ருக்ஷத்திலிருந்து ஒரு ரூபவதியான பெண் இத்தகைய புஷ்பத்தைச் சூட்டிக் கொள்கிறள். மற்றவள் பல வித புஷ்பங்களைத் (வேறு) தரித்துக் கொள்கிறள். மேலும் ஒருத்தி தாமரை புஷ்பங்களையே. கச்யபமுனி மந்தார வ்ருக்ஷத்திலிருந்தும் சாரத்தை எடுத்து இந்த மஹா வ்ருக்ஷத்தை செய்தார். ஆகையால் இந்த ச்ரேஷ்டமான வ்ருக்ஷம் எல்லாவற்றிற்கும் மேலானதாயிற்று. பிறகு அங்கு மங்களமான அதிதி தேவி (தனது) ஸௌபாக்யத்துகாகவும் புண்யத்திற்காகவும் கச்யபரையும் மஹா பாரிஜாத வ்ருக்ஷத்தையும் சேர்த்து எனக்குத் (நாரதருக்கு) தானம் செய்தாள். அதிதி தேவியால் ஆத்ம ஞானி கச்யபர் கழுத்தில் பூமாலை சுற்றி புண்யத்தின் பொருட்டு எனக்குக் கொடுக்கப்பட்டார். தபோச்ரேஷ்டரான கச்யபரும் என்னல் மாற்றுப் பொருள் கொண்டு விடுவிக்கப்பட்டார். அப்படியே ஸௌபாக்கியத்திற்காக இந்த்ராணியால் இந்திரன் எனக்கு கொடுக்கப்பட்டான். பின்பு அவ்விதமே ரோஹிணி தேவியால் சந்த்ரனும் கொடுக்கப்பட்டான். அங்கனமே ருததி தேவியால் குபேரன் கொடுக்கப்பட்டான்.

இப்படி பாரிஜாத வ்ருக்ஷம் ஸௌபாக்கியத்தைக் கொடுக்கவல்லது. ஸந்தேகமில்லை. கங்கையின் கரையில் இந்த மஹா வ்ருக்ஷம் உண்டானதால் "பாரிஜாதம்" எனச் சொல்லப்பட்டது. மந்தார புஷ்பம் சேர்ந்திருக்கும் போது "மந்தாரம்" எனச் சொல்லப்படுகிறது. ஜனங்கள் அறியாமல் "ஏதோ ஒரு வ்ருக்ஷம் இது" என்று சொன்னர்கள். அதனல் இந்த மிகச் சிறந்த வ்ருக்ஷம் "கோவிந்தாரம்" எனப் புகழ் பெற்றது. இந்த உத்தம புஷ்பத்தையுடைய அந்த திவ்ய வ்ருக்ஷம் மந்தாரம், கோவிந்தாரம், பாரிஜாதம், எனும் பெயர்களால் அறியப்படுகிறது.

67 அத்தியாயம் முற்றும்

## அத்யாயம் 68

## பாரிஜாத மரத்தை இந்த்ரனிடம் வேண்டி நாரதரை தூதனுப்பல் - கொடாத பக்ஷம் - போர் பயமுறுத்தல்

வைசம்பாயனர் சொன்னார் : பிறகு புறப்பட விரும்பிய முனிச்ரேஷ்டராகிய நாரதரைப் பார்த்து அளவிட முடியாத வீரமுடைய க்ருஷ்ண பகவான் சொன்னார் : " குற்றமற்றவரே! தர்மத் தவமறிந்தவரே! மஹரிஷே! உம்மால் ஸ்வர்க்கம் சென்று முப்புரமெரித்த புத்திமான் சிவனது ஸபையிலுள்ளோரைப் பார்த்து (அங்கிருக்கும்) இந்த்ரன் எனது சொல்படி விண்ணப்பிக்கத் தக்கவன். முனே! நீர் முன் சரிதம் (வாமனாவதாரம்) அறிவீர். இந்த்ரனுடன் எனது ஸஹோதரத்வத்தை முன்னிட்டு இதை விண்ணப்பியும். தர்மாத்மாக்களில் சிறந்த முனிச்ரேஷ்டர் கச்யபரிஷி அந்தப் பாரிஜாத வ்ருக்ஷத்தை அதிதியின் சுகத்தின் பொருட்டு முதலில் படைத்தார். அந்த மஹாவ்ருக்ஷம் மிக்க ஸௌபாக்யத்தையும் புண்யத்தையும் கொடுக்கிறது. தேவந்திரன் முன்னர் தர்மத்தில் நிலைத்துள்ள தேவிகளோடு வ்ரதத்துடன் தர்மத்தின் பொருட்டு உமக்கு தானமாக கொடுக்கப்பட்டது.

இந்த மஹா வ்ருக்ஷத் தானத்தைக் கேள்விப்பட்டு எனது பத்னிகள் "பிரபுவே! இந்த்ரனே! புண்யத்திற்காகவும் தானதர்மத்திற்காகவும் உமது ப்ரீதிக்காகவும் பாரிஜாத மஹாவ்ருக்ஷத்தை த்வாரகைக்குக் கொண்டு வந்தால், தானம் கொடுத்த பின் திரும்ப அந்த மரத்தை ஸ்வர்கத்துக்குச் கொண்டு போனாலும் போகலாம்" என்கிறார்கள். முனிச்ரேஷ்டரே! நாரத பகவானே! அந்த இந்த்ர பகவான் இப்படி சொல்லத் தக்கவன். எனது ஆஜ்ஞையாக இல்லை. தேவேந்திரன் சிறந்த பாரிஜாத வ்ருக்ஷத்தை எவ்விதம் கொடுப்பானோ, அவ்விதம் நீர் முயற்சி செய்ய வேண்டும். தபோதனத்தவரே! அந்த விஷயத்தில் உமது தூத ஸாமர்த்யத்தைப் பார்ப்போம். எல்லா கார்யங்களையும் முடிக்கும் சக்தி உம்மிடமுண்டு என்பது எனது கொள்கை.

நாராயணனால் இவ்விதம் சொல்லப்பட்ட தபோதனமுடைய பகவான் நாரதரிஷி கேசிவதம் செய்த க்ருஷ்ணனை நோக்கி பலமாகச் சிரித்து சொன்னார். "யதுச்ரேஷ்டனே! அப்படியே ஆகட்டும் தேவேந்திரனுக்கு இவ்விதம் சொல்வேன். தேவேந்திரன் எவ்விதமும் பாரிஜாதத்தைக் கொடுக்கமாட்டான். தேவர்களாலும் அஸுரர்களாலும் ச்ரேஷ்டமான மந்த்ர மலையை ஸமுத்ரத்தில் வைத்துக் (கடைந்து) முன் பாரிஜாதம் எடுக்கப்பட்டது.

ஜனார்தனா! லோக கர்த்தா சிவனாலும் ச்ரேஷ்டமான மந்தர மலையிலிருந்து பாரிஜாதம் எடுத்து வர ஆள் அனுப்பட்டான். பின்பு இந்த்ரன் தானே சென்று சிவனை விண்ணப்பித்தான். இந்த்ராணியின் உத்யான வனத்தில் விளையாட்டு வ்ருக்ஷமாக இருக்கட்டும் என யாசித்தான். பாபமற்றவனே! க்ருஷ்ணா! மஹாதேவனால் "அப்படியே ஆகட்டும்" எனும் வரம் கொடுக்கப்பட்டது. பாரிஜாத வ்ருக்ஷம் விசித்ரமான குகைகளையுடைய மந்த்ரமலைக்குக் கொண்டு போகப்படவில்லை.

பிறகு, மஹாபாஹோ! க்ருஷ்ணா! முன் அந்த வ்ருக்ஷம் இந்த்ராணியின் "விளையாட்டு வ்ருக்ஷம்" என்ற பெயரால் தேவேந்திரனால் (சங்கரனிடமிருந்து) விடுவிக்கப்பட்டது. உமா தேவியின் ப்ரியத்திற்காக ஸாக்ஷாத் சிவன் நூறு கல்தூதி (200 மைல்) விஸ்தீரண மந்திர குகையையே பாரிஜாத வனமாகச் செய்தான். க்ருஷ்ணா! அந்த மலை வனத்தில் சூர்யக் கிரணங்கள் ப்ரவேசிப்பதில்லை. அப்படியே குளிர்ந்த சந்த்ர கிரணங்களும். க்ருஷ்ணா! வாயுவும் இல்லவேயில்லை. அங்கு உமா தேவியின் விருப்பப்படி சீதோஷ்ணங்களிருக்கின்றன அல்லவா? அந்த வனம் மஹாதேவனின் தேஜஸ்ஸால் ஸ்வயமாகவே சோபையுடையதல்லவா? யது ச்ரேஷ்டனே! க்ருஷ்ணா! பூத கணத்தோடு கூடிய பார்வதி பரமேஸ்வரரையும் என்னையும் தவிர வேறொருவன் திவ்யமான அந்த வனத்தை ஒரு வகையாலும் அடையமாட்டான். வ்ருஷ்ணி வம்ச திலகமே! க்ருஷ்ணா! அங்கு பாரிஜாத வ்ருக்ஷங்கள் நாற்புறமும் மனதால் விருப்பப்பட்ட முக்யமான சிறந்த பொருள் எல்லாவற்றையும் கொடுக்கின்றன. கேசவா! லோகநாதன், தேவதேவன் சிவன் ஆஜ்ஞையால் மஹாத்மாக்களான அந்த சிறந்த கூட்டங்கள் அவைகளை அனுபவிக்கின்றன. கேசவா! அந்த வ்ருக்ஷங்களின் பலன் அந்த (பாற்கடல்) பாரிஜாதத்தை விட மிகுந்த குணமுள்ளது. அந்த வ்ருக்ஷ வனம் மிக்க விரும்பத் தக்கது. அப்படியே அதன் சோபையும் குணங்களும் பன்மடங்கு சிறந்தவை. அந்த வ்ருக்ஷங்களும் உருவெடுக்க கூடியவை.

அவை உமையொடு கூடிய (காளைக் கொடியோன்) சிவனை கணங்களுடன் எப்போதும் உபாஸிக்கின்றன. ருத்ர தேஜஸ்ஸுடையவை, துக்கமற்றவை, ஸுகத்துடன் கூடியவை. மந்திர மலையிலுள்ள அந்த வ்ருக்ஷங்கள் பார்வதிக்கு இஷ்டமானவையல்லவா? மஹா பலமுடைய வரம் பெற்ற திமிருடையவன் பாபமே செய்பவன் பயங்கர ரூபி அந்தகன்

எனும் அஸுரன் அதில் நுழைந்தான். வ்ருதாசுரனைக் காட்டிலும் பத்து மடங்கு பலமுடையவன். எந்த ப்ராணியாலும் கொல்ல முடியாதவன். அவன் சத்ருவதம் செய்யவல்ல தேவன் ருத்ரனால் கொல்லப்பட்டான். தாமரைக்கண்ணா! தேவா! க்ருஷ்ணா! பாரிஜாதம் அடைதல் இவ்விதம் கஷ்டம். ஸஹஸ்ராக்ஷன் இந்த்ரன் உனக்கு பாரிஜாதம் கொடுக்க மாட்டான். இது உண்மையாகச் சொல்கிறேன். க்ருஷ்ணா! சசிதேவி இந்த்ராணியுடன் கூடின அந்த ஸ்ரேஷ்டமான மரம் மஹா தேஜஸ்வியான இந்த்ரனுக்கு எப்போதும் எல்லா விருப்பங்களும் கொடுக்கவல்லது.

ஸ்ரீபகவான் க்ருஷ்ணன் சொன்னான் : "நாரத முனிவரே! சசிதேவி இந்த்ராணியின் காரணமாக முன் அந்த வ்ருக்ஷம் புத்திமான் மஹா தேவனால் கொண்டு போகப்படவில்லை யென்பது மிகப் பொருத்தமானதே. அந்த சங்கரன் பெரியன். லோகத்தைப் படைத்தவன். எல்லாப் ப்ராணிகளுக்கும் உற்பத்திக் காரணம். அழிவற்றவன். அவனது பெருமைக்குத் தக்கவாறு செய்தான் என்று எனது எண்ணம். ஸாதுக்களின் ச்ரேஷ்டனே! பலாஸுரனை கொன்ற தேவந்த்ரனுக்கு நான் தம்பி. நாரத பகவானே! மகன் ஜயந்தன் போல் சீராட்டத் தக்கவன். தவச் செல்வரே! பகவானான நீர் பலவித உபாயங்களால் எல்லா வகையாலும் என் ப்ரீதிக்காக முயற்சி செய்ய வேண்டும். நீர் சக்தரல்லவா!

நாரதமுனே! ப்ரபோ ஸத்யபாமைக்காக "ஸ்வர்கத்திலிருந்து பாரிஜாத வ்ருக்ஷத்தை கொண்டு வருவேன்" என்று புண்யத்தின் பொருட்டு என்னால் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. தவச்செல்வரே! குற்றமற்றவரே! என்னால் அதை பொய்யாக்க எப்படி முடியும்? ப்ராமணரே! முன்னர் என்னால் பொய் சொல்லப்படவில்லை அல்லவா! நான் ப்ரதிஜ்ஞைப் பங்கம் செய்தால் உலகங்களே நிலைகுலைந்து விடுமல்லவா! நற்குணத்தோடு கூடிய எல்லா உலக தர்மங்களும் உலகம் நிலைத்திருக்க என்னால் காக்க தக்கதல்லவா. அந்த நான் எப்படி பொய் சொல்வேன். நாரத முனே! உமக்கு மங்களம் உண்டாகட்டும். தேவ கந்தர்வர்கள், கணங்கள், ராக்ஷஸர்கள், அஸுரர்கள், யக்ஷர், பன்னகர் ஆகிய இவர்கள் எல்லோரும் எனது ப்ரதிஜ்ஞையை மாற்ற முயன்றால் (அவர்கள்) ஸமர்த்தர் இல்லையல்லவா. அந்த இந்த்ரன் உம்மால் யாசிக்கப்பட்டு பாரிஜாத வ்ருக்ஷம் கொடுக்கவில்லையானால் பிறகு சசிதேவி இந்த்ராணியால் (வாசனை) பூசப்பட்ட இந்த்ரனின் மார்பில் கதையை ப்ரயோகிப்பேன். இவ்விதம் இந்த்ரன் சொல்லத்தக்கவன். ஸமாதானமாக யாசிக்கப்பட்டு வ்ருக்ஷத்தைக் கொடுக்காமல் போனால் எப்படியும்

நான் (நேரில்) போவது நிச்சயம். உம்மாலும் கூட நிச்சயம் செய்ய வேண்டியது தானே.

அத்யாயம் 68 முற்றும்



## அத்யாயம் 69

### மஹாதேவன் ப்ரீதிக்கு இந்த்ரன் விழா கொண்டாடுதல் - நாரதர் பாரிஜாதம் பற்றித் தூதுரைத்தல் - இந்த்ரன் கொடாமைக்குப் பல காரணம் கூறல்

வைசம்பாயனர் சொன்னர் : பிறகு நாரதரும் இந்த்ரன் மாளிகைக்குச் சென்று அங்கு மஹோத்ஸவத்தைப் பார்த்தார். அங்கு அந்த ராத்ரியைக் கழித்தார். அங்கு மஹாத்மாக்களான ஆதித்ய கணங்கள் ஸுரோத்தமரான வஸுக்கள் புண்ணிய கர்மாக்களால் ஸ்வர்க்கம் அடைந்த வித்வான்களான ராஜ ரிஷிகள், நாகர், யக்ஷர், ஸித்தர், சாரணர் தவச்செல்வரான ப்ரஹ்மரிஷிகள் நூற்றுக் கணக்கான தேவரிஷிகள் மிக்க பலம் வாய்ந்த மருத்துக்கள் தேவ கூட்டங்கள் மேலும் நூற்றுக்கணக்கான மற்றவர்களும் வந்தனர். எல்லோருக்கும் மிக்க மேம்பட்ட அளவற்ற வீரமுடைய மஹேஸ்வர தேவர் பார்வதியுடன் கூட தம் கணங்கள் சூழ வீற்றிருந்தார். தேவத் தலைவன் இந்த்ரனை ஒத்தவர்கள், ஆத்ம ஞானமுடையவர், அகங்காரமற்றவர், அறநெறி நிற்பவர், இவர்களால் அர்ச்சிக்கப்பட்ட ஆயிரங்கல்பங்கள் அழிவில்லா தேவ ரிஷிகளால் முனிச்ரேஷ்டர் களால் சூழப்பட்டு எல்லாவற்றிற்கும் மூல காரணன் பரமசிவன் வீற்றிருந்தான்.

பாரத! ஜனமேஜயரே! ருத்ரர்களும் கச்யப புத்ரர்களும் ஸ்கந்த பகவானும் அக்னியும் நதிச்ரேஷ்டமான கங்கையும் காந்திமான் தும்புருவும் சொல்வல்லோரில் சிறந்த பாரியும் பரமசிவதேவனை உபாசித்தனர். தவச்ரேஷ்டர்களான இவர்கள் தேவதேவர்களுக்குத் தலைவர்கள் அல்லவா? ராஜனே! ஜனமேஜயரே! தர்மத்தில் நிலைத்தவர் தவத்தில் நிலைத்தவர் ஸாதுக்களின் வழியை அனுஸரிப்பவர் ஆகிய எல்லா தேவ கணங்களும் இவர்களை (தலைவர்களை) அனுஸரிக்கின்றனர். புண்யத்தை விரும்பும் மனிதர்கள் தேவர்களைப் பூஜிக்கின்றனர். சுபத்தை விரும்பும் அத்தேவர்கள் அந்த மனிதர்களைக் கொண்டாடுகிருர்கள். குரு நந்தன! ஜனமேஜய! அவர்கள் தேவ, பித்ரு கார்யங்கள் செய்பவர். ஸந்யாஸ தர்மம் அனுஷ்டிப்பவர். ஸதா வேதம் ஓதி நியமம் அனுஷ்டான முள்ளவர். ராஜனே! அங்கு கந்தர்வர் தலைவன் ஸ்ரீமான் சித்ரரதன், புத்ரனுடன் கூட சந்தோஷமாகத் தேவ வாத்யங்களை வாசித்தான். ஊர்வசி

சித்ரஸேனன், ஹாஹா, ஹுஹு, கும்பரன், தும்புரு இவர்களும் மேலும் மற்றவர்களும் அறு குணம் கொண்ட கீதம் பாடினர். பாரத! ஜனமேஜய! ஊர்வசி, விப்ரசித்தி, ஹேமா, ரம்பா, ஹேமதந்தா, க்ருதாசீ அப்படியே ஸஹஜன்யா இவர்களும் பாடினர், ஆடினர். பகவான் மஹாதேவன் ஆத்மஞானி சிவபிரான் ஸபையில் வீற்றிருந்து அனுபவித்தான். இந்த்ரனின் ஏற்பாட்டால் மகிழ்ந்து ஜகத்துக்கே கதியான மஹாதேவன் தன் இருப்பிடம் சென்றான். பூதபதி சிவபிரான் சென்றதும் எல்லா ராஜாக்களும் வந்தபடியே சென்றனர். மஹேந்த்ரனால் கௌரவிக்கப்பட்ட தேவர்களும் தங்கள் இருப்பிடங்களை அடைந்தனர். பிறகு எல்லோரும் சென்றதும் தன் ஸபையோருடன் கூடி ஸுகமாக அமர்ந்திருக்கும் இந்த்ரனைக் குறித்து நாரதமுனி சென்றார். அந்தத் தவச் செல்வ நாரதரை இந்த்ரன் வணக்கத்துடன் எழுந்து பூஜித்தான். தன் ஆஸனத்துக்கு ஸமமான தர்ப்பை விரித்த பீடத்தையும் ஸமர்ப்பித்தான்.

பிறகு மஹாதேஜஸ்வி நாரதர் மஹேந்த்ரனைக் குறித்து இவ்வார்த்தை கூறினார். "தேவ ஸ்ரேஷ்டரே! நான் ஒப்பற்ற தேஜஸ்ஸுடைய விஷ்ணுவின் தூதன். குற்றமற்ற தேஜஸ்ஸுடைய அவனது (க்ருஷ்ணனது) மனக் கஷ்டத்தைப் போக்கக் கூடிய ஒரு சிறு கார்யத்தை முன்னிட்டு மஹாத்மா க்ருஷ்ணனால் த்வாரகையிலிருந்து அனுப்பப்பட்டிருக்கிறேன்" பிறகு இந்த்ர பகவான் மகிழ்ச்சியுடன் நாரத முனிவரின் பொருட்டு அப்போது மனமகிழ்ச்சி கொடுக்கும் வார்த்தைகளை சேர்ந்து கூறினான். "முனே! புருஷ ச்ரேஷ்டன் க்ருஷ்ணன் என்ன சொன்னான்? சீக்கிரம் சொல்லும். மஹாத்மா க்ருஷ்ணனால் வெகு காலத்துக்குப் பின் நினைக்கப்பட்டவனாயிருக்கிறேனல்லவா!"

நாரதர் சொன்னார் : "மஹேந்த்ர! கச்யப புத்ரருள் கீர்த்தி தரக் கூடிய உபேந்த்ரனை உன் தம்பியைப் பார்ப்பதற்கு சிரமப்பட்டு த்வாரகைக்குச் சென்றேன். ருக்மிணியுடன் ரைவதமலையில் அமர்ந்திருந்த சத்ருக்களை வெல்லவல்ல வீரனை அவனை உமையுடன் கூடிய காளைக் கொடியோன் பரமசிவனைப் போலக் கண்டேன். குற்றமற்ற தேவேந்த்ரனே! மிக்க தேஜஸ்ஸுடைய அவன் பத்னிகளுக்கு வியப்பு ஊட்ட பாரிஜாத புஷ்பம் என்னால் கொடுக்கப்பட்டது. பலவிருப்பங்களை அளிக்கவல்ல வ்ருக்ஷ ராஜனிடம் உண்டான அந்த பாரிஜாத புஷ்பத்தைப் பார்த்து அவனது பத்னிகள் மிக மேலான வியப்பையடைந்தனர். கௌரவம் கொடுப்பவனே! அவனுடைய மஹிஷிகளுக்கு அந்த புஷ்பத்தின் குணங்களும் மஹாத்மா கச்யபரால் படைக்கப்பட்டதும்

என்ஞல் சொல்லப்பட்டது. அதிதியால் ஆத்ம ஞானமறிந்த கச்யபர் புஷ்பமாலே கழுத்தில் சுற்றி புண்யத்திற்காக எனக்கு தானம் செய்யப்பட்டார். நீ இந்த்ராணியால் கொடுக்கப்பட்டாய். வேறு தேவர்களும் அங்ஙனமே கொடுக்கப்பட்டனர். கச்யபர் முதலிய மஹரிஷிகளால் மாற்றுக்ரயமும் கொடுக்கப்பட்டது (இவையெல்லாம்) என்ஞல் சொல்லப்பட்டது. அதைக் கேட்டு ஸத்யபாமையென்று புகழ்பெற்ற அவனுடைய மஹிஷிகளில் சிறந்தவள் உனது தம்பிக்கு மிக வேண்டியவள். இந்த புண்ய கார்யத்தை மனதில் நினேத்தாள். கௌரவம் கொடுப்பவனே! தேவா! 'அவளால் ப்ரார்த்திக்கப்பட்ட உம்முடைய தம்பி தேவ கணத்தலேவன் தேவ் தேவன் தர்மத்திற்காக வாக்குறுதி செய்தான். பிறகு பலவான்களில் சிறந்த வீரன் விஷ்ணு எனக்குச் சொன்ஞன்: "தேவத் தலேவனே இந்த்ரா! உள்ளவாறு சொல்கிற இந்த வார்த்தையைக் கவனித்துக் கேள். அச்சுதன் வணங்கிச் சொன்ஞன்: 'தேவச்ரேஷ்டனே! தம்பி சீராட்டத்தக்கவன். வ்ருக்ஷ ச்ரேஷ்டமான பாரிஜாதத்தை எடுத்து வருவேன். அஸுரர்களே அழிப்பவனே! உனது மாட்டுப்பெண்ணின் (மருமகளின்) மஞேரதம் ஸபலமாகட்டும். தேவத்தலேவனே! உனது நாட்டுப் பெண்ணின் தர்மகார்யத்தில் விசேஷமாக ஸபலமாக வேண்டும். லோகத் தலேவனே! இந்த உலகம் மங்கள வ்ருக்ஷத்தை (பாரிஜாத) பார்க்கட்டும். மனிதர்களும் என் பெருமையால் தேவ மங்களகார்யத்தை பார்க்கட்டும்."

வைசம்பாயனர் சொன்ஞர்: "பிறகு குருநந்தன! ஜனமேஜயனே! வாஸுதேவன் வார்த்தையைக் கேட்டு மஹேந்த்ரன் சொல்வல்லோரில் சிறந்த நாரதரை நோக்கி இந்த வார்த்தை சொன்ஞன்: 'ப்ராமணேத்தமரே! இந்த ஆஸனத்தில் அமர வேண்டும். விப்ரரே! உம்மால் சொல்லப்பட்டது பொருத்தமானது. அளவிட முடியாத தேஜஸ்ஸுடைய விஷ்ணுவுக்குப் பதில் சொல்லியனுப்புவேன். பிறகு நாரதர் உட்கார்ந்ததும். அவரிடம் அனுமதி பெற்ற இந்திரன். ப்ரபோ! ஜனமேஜயரே! அதற்கு (நாரதர்க்கு கொடுத்ததுக்கு) ஸமமான தன் ஆஸனத்தை அடைந்தான். ஆஸனத்தில் அமர்ந்த தேவர் தலேவன் வ்ருத்ராஸுரனே அழித்த இந்த்ரன் தன் பலத்தையும் வீர்யத்தையும் நினேத்து மகிழ்ச்சியளிக்கும் நாரதரை நோக்கிச் சொன்ஞன். "மஹர்ஷே! எல்லா ப்ராணிகளுக்கும் ஸுகத்தைக் கொடுக்கும் ஜஞர்தனன் க்ஷேமம் விசாரிக்கப்பட்டு என் வார்த்தைப்படி உம்மால் சொல்லத் தக்கவன். அச்சுதா! நீ எனக்குப் பிறகு இந்த ஜகத்துக்குத் தலேவன் இதில் ஸந்தேகமில்லே.

இந்தப் பாரிஜாதமும் இதர ஸ்ரேஷ்டப் பொருள்களும் உன்னைச் சேர்ந்தவை. தேவா! நீயோ பூபாரம் தீர்க்கப் பூமியை அடைந்திருக்கிறாய். எல்லா கார்யங்களுக்கும் கார்யஸித்திக்கும் மனித பாவத்தை அடைந்திருக்கிறாய். அதோக்ஷஜா! க்ருஷ்ணா! நீ பூபாரம் தீர்க்க ப்ரதிஜ்ஞையைத் தாண்டி மீண்டும் ஸ்வர்க்கம் வந்ததும் உனது பத்னி ஸத்யபாமையின் மனோரதங்களைப் பூர்த்தி செய்து வைப்பேன். கேசவா! அல்ப கார்யத்துக்காக ஸ்வர்க்கத்திலுள்ள சிறந்த பொருள்கள் மனித உலகத்துக்குக் கொண்டு போகத் தக்கவையல்லவென்பது முன்னோர் செய்த ஏற்பாடு. ப்ரபோ! மஹாபலவானே! க்ருஷ்ணா! தேவ வரம்பை மீறி நான் நடந்தேனேயானால் ப்ரஜாபதி கணங்கள் என்னை என்ன சொல்வார்கள்? புத்ர பௌத்ரர்களுடன் கூடிய மஹாத்மா ப்ரஹ்மாவால் இந்த உலகிற்கு எல்லா கார்யத்திற்கும் நிலையான நியமங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

ப்ரஹ்மாவால் வகுக்கப்பட்ட வழியை மீறிச் செல்லும் என்னை ப்ரபோ, புத்திமான் ப்ரஹ்மாவும் கேட்டு சாபத்தைக் கொடுப்பார். என்னால் உடைக்கப்பட்ட மரியாதை அணைகட்டை அஸுரர்கள் பயமில்லாமல் மீறுவர் (உடைப்பார்கள்). அப்படியே அஸுரரைச் சேர்ந்தவர்களும். கௌரவம் கொடுப்பவனே! க்ருஷ்ணா! பெண்ணுக்குத் தேவ வ்ருக்ஷம் பாரிஜாதம் இங்கிருந்து எடுத்துச் செல்லப்பட்டால் ஸ்வர்கவாஸி தேவர்கள் மனச் சோகம் அடைவர். ப்ரஹ்மாவால் மனிதர்களுக்கு விதிக்கப்பட்ட அனுபவங்களால் எனது ஸஹோதரன் காலவரம்பைக் கவனித்து ஸந்தோஷப்படட்டும். குழந்தாய்! க்ருஷ்ணா! இந்த ஸ்வர்கத்தில் எனக்கிருக்கும் அனுபவப் பொருள்கள் க்ருஷ்ணன், ஸ்வர்கத்திலிருந்து கொண்டே அனுபவிக்க தக்கவன். ஜனார்தனா! க்ருஷ்ணா! போக்ய வஸ்துகளின் ஆசையால் ஸந்தோஷமடைந்து அந்த அபிமானத்தால் தர்மத்தை மீறி பாபத்தையே அனுஸரிப்பாய். மஹாத்மா க்ருஷ்ணனுக்குப் பெண் வசப்பட்டிருத்தல் ப்ரஸித்தமடைந்து உலகில் அபகீர்த்தியின் சேர்க்கையை விளைவிக்கும் என்று எனது அபிப்ராயம்.

நாரதரே! மனிதவுலகில் மனித பாவமடைந்த க்ருஷ்ணன் தமையனுடன் நிர்பந்தம் செய்வது உசிதமில்லை. பாபமற்றவரே! நாரதரே! ஸ்வர்கத்திலே சிறந்த பொருளின் அபஹாரத்தால் எனக்கு அவமானம் ஏற்படும். விசேஷமாக பந்துகளிடமிருந்து நிந்தையும் மானக்கேடும் உண்டாகும். தாமரையில் பிறந்த ப்ரஹ்மாவால் ஸ்தாபிக்கப்பட்ட ஸாதுக்களின் தர்மங்களையும் தர்மார்த்த காமங்களையும் இந்த மதுஸூதனன் முறைப்படி அனுபவிக்கட்டும்.

நான் பாரிஜாத வ்ருக்ஷத்தைப் பூமிக்கு அர்ப்பணம் செய்வேனேயானால் இந்த்ராணி முதலாக யார் என்னை மதிப்பார்? பூமியின் மேல் பாரிஜாதத்தைப் பார்த்தும், தொட்டும் மனிதர்கள் பூமியில் ஸ்வர்க்க பலத்தைக் கண்டு ஸ்வர்க்கத்தின் பொருட்டு முயற்சி செய்ய மாட்டார்கள். நாரதா! மனிதர் பாரிஜாத குணங்களை அனுபவிப்பார்களேயானால் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் வித்யாஸம் இல்லாமல் போய் விடும். மனிதர்களால் அங்கு (பூமியில்) எந்த கர்மா செய்யப்படுகிறதோ அது இங்கு அனுபவிக்கப்படுகிறது. பாரிஜாத குணங்களை அடைந்தார்களே யானால், ஸ்வர்கத்தின் பொருட்டு எத்னம் செய்யமாட்டார்கள்.

தவச்செல்வரே! பாரிஜாதம் ஸ்வர்கத்தில் எல்லாச் சிறந்த பொருள்களிலும் மேலானது. பாரிஜாதம் பூமிக்குச் சென்றால் பூமி எப்போதும் தேவசமான மனிதர்களால் தேவ லோகத்துக்கு ஸமமாகும். தேவர்களுடன் ஸாம்யமடைந்த மனிதர்கள் பூமியில் ஸ்வர்க பலனையடைந்தவர்களாய் யாகங்கள் செய்ய மாட்டார்கள். புண்ய கார்யங்களை பண்ணமாட்டார்கள். தவச்செல்வரே! இப்போது ஸ்ரத்தையுள்ள மனிதர் ஸ்வர்கத்தை விரும்பி யஜ்ஞங்கள், ஜபம், நித்ய கர்மங்கள் இவற்றால் தினந்தோறும் எங்களை திருப்தி செய்கின்றனர். இதற்கு மாறாக அந்த பாரிஜாத குணங்கள் கூடினவர்களாய் எல்லா நற்கார்யங்களையும் செய்யமாட்டார்கள். நாங்கள் தேஜஸ் அற்றவர்களாகி விடுவோம். அவர்கள் தேஜஸ் உள்ளவர்கள் ஆவார். இங்கிருந்து நல்ல மழை பெய்ய அந்த மனிதர்கள் பயிர்களால் ஜீவிக்கின்றனர். அவர்களும் தானம் யஜ்ஞம் முதலியவைகளால் எங்களைப் போஷிக்கின்றனர்.

தர்ம மறிந்தவரே! மனிதர்களை பசி தாகம் வ்யாதி மூப்பு மரணம் சோகம் துர்கந்தம் மிக கொடிய வினைப்பயனால் வந்த ஈதி பாதைகள் இவை பிடிக்காவிட்டால் பாரிஜாத குணமடைந்தவர்கள் (ஸ்வர்க்கபோகம் குறித்து) என்ன முயற்சிச் செய்வார்கள்? விப்ரரே! பாரிஜாதத்தை அங்கு (பூமிக்கு) எடுத்துச் செல்வது எல்லாப் படியாலும் தகுந்ததன்று என்று கஷ்டமின்றி கார்யம் செய்யவல்ல க்ருஷ்ணன் இவ்விதம் உம்மால் சொல்லத் தக்கவன். எனது ஸஹோதரன் இதை ஆலோசித்து எப்படியெப்படி ஸந்தோஷப்படுவனோ அப்படியப்படி எனது ப்ரீதியை விரும்பும் உம்மால் கார்யம் செய்யத் தக்கது. ஹாரங்கள், ரத்னங்கள், அகில், சந்தனக் கட்டைகள், விசித்ரமான வஸ்த்ரங்கள் மனிதர்களுக்குத் தக்கவையெல்லாம் கேசவன் விரும்புமளவு மாட்டுப் பெண்ணுக்காக (மருமகளுக்காக) த்வாரகைக்கு எடுத்துப் போங்கள்

ஸ்வர்கலோக அபஹாரத்தை இப்போது செய்வது உசிதமன்று. நாரத முனிவரே! விரும்பியபடி மிக்க அளவு ரத்னங்கள் விசித்ர ஆபரணங்கள் நான் கொடுக்கிறேன். தேவர்களுக்குப் பிரியமான பாரிஜாத வ்ருக்ஷத்தை எந்த விதத்தாலும் கொடுக்க மாட்டேன்."

அத்யாயம் 69 முற்றும்

## அத்யாயம் 70

## நாரதரால் க்ருஷ்ணனின் மிரட்டலைக் கேட்டு இந்த்ரன் பாரிஜாதத்தைப் போர் புரியாமல் கொடுப்பதில்லை என நிச்சயித்தல்

வைசம்பாயனர் சொன்னார்: குருநந்தன! ஜனமேஜயரே! தர்மமறிந்தோரில் சிறந்தவர், தர்மஸ்வரூபி வார்த்தை (சொல்ல) அறிந்தவரான நாரதர் தேவராஜன் வார்த்தையைக் கேட்டு பதில் சொன்னார்: "பலாஸுரனைக் கொன்றவனே! இந்த்ரனே! மஹாபாஹோ! எனக்கு உன்னிடம் கௌரவம் இருக்கிறது. அவஸ்யம் என்னால் உனது ஹிதமே சொல்லத் தக்கது. உனது அபிப்ராயமறிந்த என்னால் முன்பே பரமசிவனுக்கு கூட இந்த பாரிஜாதம் கொடுக்கப்படவில்லை. அவனுக்கு (க்ருஷ்ணனுக்கு) சுருக்கமாக காரணங்களும் காட்டப்பட்டன. க்ருஷ்ணன் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்த உண்மையை உனக்குச் சொல்கிறேன். "நான் இந்த்ரன் தம்பி, மஹேந்த்ரனால் ஸதா சீராட்டத்தக்கவன். இப்படித் தாமரைக்கண்ணன் என்னிடம் சொன்னான். பதிலும் இந்த்ரன் கொடான் என்றதும் சொல்லப்பட்டது.

தேவனே! இந்த்ரனே! என்னால் இந்த்ரனின் (கொடாததின்) காரணங்கள் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டது. வ்ருத்ராஸுரனைக் கொன்றவனே! அதனால் க்ருஷ்ணனின் எண்ணம் மாறவில்லை. இந்த்ரனே! புருஷ ச்ரேஷ்டன் மதுஸூதனன் என் வார்த்தைகள் முடிந்ததும் கோபம் கொண்டவன் போல பதில் சொன்னான். 'நாரதமுனே! உமக்கு மங்களம் உண்டாகட்டும். தேவ கந்தர்வ கணங்கள், ராக்ஷஸர்கள், அஸுரர்கள், யக்ஷ, பன்னகர் ஆகிய இவர்கள் எல்லோரும் எனது ப்ரதிஜ்ஞையை மாற்ற முயன்றால் (அவர்கள்) ஸமர்த்தர் இல்லையல்லவா? அந்த இந்த்ரன் உம்மால் யாசிக்கப்பட்டு பாரிஜாத வ்ருக்ஷத்தைக் கொடுக்கவில்லையானால் பிறகு சசிதேவி இந்த்ராணியால் வாஸனை பூசப்பட்ட இந்த்ரனது மார்பில் கதையை ப்ரயோகிப்பேன். மஹேந்த்ரனே! உனது ஸஹோதரன் உபேந்த்ரனுக்கு இந்த நிச்சயம் உறுதி. எது நியாயம்

என்று எண்ணுகிறாயோ அதை ஆலோசனை செய்து செய். தேவேந்த்ரனே! நான் சொல்கிற உண்மையான நன்மையைக் கேள். பாரிஜாத வ்ருக்ஷத்தை த்வாரகைக்கு எடுத்து போதல் (நன்மையென) என் மனதுக்குப் பிடித்தமானது".

ராஜனே! ஜனமேஜயனே! நாரதரால் இவ்விதம் சொல்லப்பட்ட பலாஸுரனைக் கொன்ற இந்த்ரன் கோபங்கொண்டு இதைச் சொன்னான் : "தவச்செல்வரே! குற்றமற்ற உடன் பிறந்த தமையனை என்னிடத்தில் இப்படிச் செய்தானேயாகில் இப்போது என்ன செய்ய முடியும்? நாரதரே! முன்னர் க்ருஷ்ணன் என் விஷயமாகப் பல ப்ரதிகூல கார்யங்கள் செய்துள்ளான். ஸஹோதரன் என்று என்னால் பொறுத்துக் கொள்ளப்பட்டது. முன் காண்ட வனத்தில் அர்ஜுனன் தேரோட்டி க்ருஷ்ணனால் திமிர் கொண்ட அக்னியை அடக்கினான். எனது மேகங்கள் தடுக்கப்பட்டன. கோவர்தன மலையைத் தூக்கி பிடித்த க்ருஷ்ணனால் எனக்கு அப்ரியம் செய்யப்பட்டது. அப்படியே வ்ருத்ராஸுர வதத்தின் போது தனக்கு உதவி செய்ய என்னால் வேண்டப்பட்டான். "நான் எல்லாப் பூதங்களுக்கும் பொதுவானவன்" என்று சொன்னான். எனது தோள் வலிமை கொண்டு வ்ருத்ரன் என்னால் கொல்லப்பட்டான்.

நாரதரே! தேவாஸுர யுத்தங்கள் வந்த போதெல்லாம் க்ருஷ்ணன் தன்னிச்சைப்படி போர் செய்கிறான். முனிவரே! இவை உமக்கு நன்கு தெரிந்ததே! பல சொல்லிப் பயன் என்? ஆகையால் ப்ராரப்த கர்மாப்படி நடக்கட்டும். நாரதரே! பந்துக்களுள் கலகம் செய்யத்தக்கதில்லை. நீர் எனக்குச் சாக்ஷி. கேசவன் எனது மார்பில் கதையை விடுவதற்கு முயன்றால் இந்த்ராணியின் பெயரைச் சொல்லி என்ன குணம் காணப்படுகிறது. எங்கள் பிதா புத்திமான் கச்யபர் எனது தாயார் அதிதியுடன் கடற்கரை வனத்துக்குச் சென்றார். அவர்கள் சொல்படியே இருக்கும் இது. எனது ஸஹோதரன் மனதை அடக்காதவன். ரஜோகுணம் தமோகுணம் சூழ்ந்தவன். காமத்தால் பெண் வார்த்தையைக் கேட்டு குருவாகிற (தமையன்) என்னை இப்படிச் சொல்கிறான். விப்ரரே! எல்லா ஸ்த்ரீகளும் நிந்திக்கத்தக்கவர். அப்படியே ஸ்த்ரீ வசப்பட்ட க்ருஷ்ணன் என்னைத் தூஷித்த ராஜ்ய ஸபையும் நிந்திக்கத்தக்கது. மாமுனிவரே! கச்யப குலத்தில் (இம்மாதரி) நிந்திக்தக்கவன் காணப்பட்டதில்லை. எனது தாயார் (அதிதி) பிறந்த தக்ஷகுலத்திலும் இம்மாதிரி காணப்படவில்லை. நாரதரே! காமத்தாலும் ராகத்தாலும் கெடுக்கப்பட்ட க்ருஷ்ணனால் மூத்தவனென்பதும், தேவர் அரசனென்பதும் ஆதரிக்கப்படவில்லை

யல்லவா? பாபமற்றவரே! நாரதரே ப்ரஹ்மா, முன் க்ருஷ்ணனை நல்லொழுக்கமுடையவன்; ஞானம் நிறைந்தவன் என்று சொன்னார். ஆனால் என் தம்பி ஆயிரக்கணக்கான மனைவிகளுடனும் புத்திரர்களுடனும் சிறப்பாயிருக்கிறான். பிதா கச்யபரும் மாதாவும் சொன்னார்கள்: "ஸஹோதரனுக்கு ஸமமான பந்து கிடையாது. இதரர் சோற்று பந்துக்கள். என் பிதா கச்யபர் ஸஹோதரர்களின் விசேஷத்தைச் சொன்னார். பாபம் நிறைந்த திமிர் கொண்ட அஸுரர் (ஸஹோதரர்களாயினும்) என்னுடன் விரோதம் கொள்கின்றனர். விப்ரரே! ஆத்ம ஸ்துதியோடு கூடிய இது தானே சொல்லக் கூடாதது (ஆயினும் சொல்லும்படி) ஸமயம் வந்து விட்டது. ஆகையால் சொல்லப்படுகிறது. முனிச்ரேஷ்டரே! (பாபமற்றவரே) மதியில் சிறந்தவரே! முன் (தக்ஷ யஜ்ஞ ஸமயம்) தேவர்களது வரதானத்தால் வில் நாண் அறுக்கப்பட்டு (யஜ்ஞரூபி) விஷ்ணுவின் தலையும் அறுக்கப்படும் ஸமயம் அவன் உடல் என்னால் காக்கப்பட்டது. முயற்சி செய்து ருத்ர சக்தியால் அறுப்புண்ட தலை என்னால் சேர்க்கப்பட்டது. நாரதரே! மறுபடியும் அச்சுதன் கேசவன் தேவர்களில் சிறந்தவன் என்று தன்னை பாராட்டி சொல்லி வில்லை நாணேற்றிக் கர்வம் கொண்டிருந்தான். முனிச்ரேஷ்டரே! பிதாவோ மாதாவோ என்னை என்ன சொல்வார்கள் என்று விஷ்ணுவின் சரீரத்தை ஸ்நேஹத்துடன் காப்பாற்றியிருந்தேன். நாரதரே! முனிவரே! இந்த்ர வைஷ்ணவ (யஜ்ஞ) பாகத்தை நான் இவனுக்கே கொடுத்தேன். எனது தம்பி க்ருஷ்ணனை நான் ப்ரேமத்தோடு பார்க்கிறேன். தவச்செல்வரே! அவன் முதலில் வரும் போரில் நான் அரசனுகையால் முதலடி நான் கொடுப்பேன். நிச்சயம். தர்மமறிந்தவரே! பாபமற்றவரே! எல்லா அவதாரங்களிலும் என்னிடம் பக்தியுள்ள கேசவனை முயற்சி செய்து எனது சரீரம் போல் ரக்ஷிக்கிறேன்.

முனிவரே! எனது இந்த இந்த்ர லோகத்தை மரியாதை பங்கம் செய்து மேன்மேல் ச்ரேஷ்டமான (வைகுண்ட) லோகம் விஷ்ணுவால் படைக்கப்பட்டது. முனிவரே! அந்த அவமானம் என்னால் புறக்கணிக்கப்பட்டது. ஸஹோதர கௌரவத்தால் சிறு குழந்தை என்று என்னால் சீராட்டத்தக்கவன். நாரதரே! "இவன் என் பிள்ளை சிறு குழந்தை உன் தம்பி" என்றும் "கோவிந்தன்" கௌரவிக்கத்தக்கவன் என்றும் பிதாவாலும் மாதாவாலும் தெளியச் சொல்லப்பட்டவன். அங்குப் பூவுலகில் மனிதர்களுக்குக் கேசவன் மிகவும் இஷ்டமானவன். நாங்கள் த்வேஷிக்க தக்கவர்கள். ஸந்தேஹமில்லை. அங்கு அவனுக்கு ப்ரியம் அதிகம். கேசவன்

ஸர்வஜ்ஞன், பலவான், சூரன், ஸத்பாத்ரம், பிறரைக் கௌரவிப்பவன். இப்படி அவனைப் பற்றிய என் நினைவு வ்யர்த்தமாய் விட்டது. நாரதரே! சென்று வாரும். என் வார்த்தை கேசவனிடம் சொல்லத்தக்கது. சத்ருக்களால் போருக்கு அழைக்கப்பட்டு பின் வாங்கமாட்டேன். மஹிஷியால் ஜயிக்கப்பட்டவனே! க்ருஷ்ண அதை (போரை) விரும்பினால் வா! நீ விரும்புவது என்னால் பொறுக்கத்தக்கது. நீ விரும்புகிறபடி முதலில் என்னை அடிக்கலாம். ஜனார்த்தனா! சக்ரத்தாலும், சார்ங்கத்தாலும், கதையாலும் நந்தகமென்னும் வாளாலும் கருடன் மேலேறி தைரியம் கொண்டு அடி கேசவா. நீ அடித்தவுடன் தம்பியிடம் அன்பு என்னை வீரம் தளர்ந்தவனாகச் செய்யாவிட்டால் என் சக்திப்படி அடிப்பேன். பாபம் இந்த நிலை நிந்திக்கத்தக்கது. ஐயா முனிச்ரேஷ்டரே! சக்ரபாணியால் போர்க்களமடைந்து நான் ஜயிக்கப்படும் வரை பாரிஜாதத்தைக் கொடுக்கமாட்டேன்.

தவச்செல்வரே! அந்த தம்பி க்ருஷ்ணன் மூத்தவனான என்னைப் போருக்கு அழைக்கிறான். பாபம்! ஸ்த்ரீயால் ஜயிக்கப்பட்ட அந்த ஹரியை எதற்காக நான் பொறுப்பேன்? பகவான் நாரதரே! க்ருஷ்ணனால் ரக்ஷிக்கப்பட்ட த்வாரகைக்கு இப்போதே போம். விவாதத்தில் நிலைத்திருக்கும் அந்த அச்சுதன் 'முட்டாள்' என்று சொல்லத்தக்கவன். இந்த்ரன் உன்னால் ஜயிக்கப்படாதவரை பாரிஜாதத்தின் பாதி இலை கூடக் கொடுக்கமாட்டேன் என்று தவச்செல்வரே! நாரதரே! என் வார்த்தையை ஞாபகத்தில் வைத்திருக்கும் உம்மால் மதுஸூதனன் சொல்லத்தக்கவன். நாரத பகவானே! உம்மால் எனது ப்ரியத்திற்காகப் பயமில்லாமல் மறுபடி அச்சுதன் சொல்லத்தக்கவன். (பாரிஜாத) வ்ருக்ஷத்தை மாயையால் அபஹரிக்கலாகாது. நல்ல யுத்தம் இருக்கட்டும். கபடம் நிந்திக்கத்தக்கது.

அத்யாயம் 70 முற்றும்.



## அத்யாயம் 71

### நாரதர் க்ருஷ்ணன் பெருமையைச் சொல்லியும் இந்த்ரன் பாரிஜாத வ்ருக்ஷம் கொடுக்க மறுத்தல்

வைசம்பாயனர் சொன்னார் : சொல்வல்லோரில் சிறந்த நாரதர் தனியிடத்தில் தேவேந்த்ரனை நோக்கி கூறினார்: ராஜாக்கள் (தங்களுக்கு) ப்ரியமான வார்த்தைகளையே பிறரால் சொல்லத்தக்கவர். ஆனால் சமயம் வந்த போது அப்ரியமாயிருந்தாலும் ஹிதமே சொல்லத்தக்கது. உலகப்போக்கு நன்கறிந்தவன் நீதி விஞ்ஞானம் நன்கறிந்தவனான ஒருவன் குற்றம் காணதவனாய் இருக்கக் கூடாது

என்று சொல்கிறார்களல்லவா? கார்யம் அகார்யம் விசாரணை ஸமயம் வந்த போது நீ என்னைக் கேட்கிறாய். அதைச் சொல்கிறேன். மனதுக்குப் பிடித்தால் எடுத்துக் கொள். அவமானத்தை விரும்பாத நன்மையையறிந்த நண்பன் ஒருவனால் உன்னால் சொல்லபடாமலேயே நியாயமானதும் சமயோசிதமானதும் சொல்ல தக்கது. ஸாதுக்களால் அப்ரியமானாலும் ஹிதமானதே எல்லாபடியாலும் சொல்ல தக்கது. அது நண்பனின் கடமை. முன் ஸாதுக்களால் ஆதரிக்கப்பட்டதே. பொய்யன், தர்மம் குலைப்பவன், தனக்கு ப்ரியமற்ற வார்த்தை கேட்காதவன் இவர்களிடம் ஸாதுக்களால் ப்ரியமும் சொல்லத்தக்கதில்லை. நிந்திக்கப்பட்டவராவர்.

தேவா! கேட்போரில் சிறந்தவனே! இந்த்ரா! (நான்) சொல்ல வேண்டியதை எல்லாப் படியாலும் கேட்கப்பட்டும். ஸர்வஜ்ஞ! உனக்கு மேன்மை தரக்கூடிய என் வார்த்தையைக் கேட்டுச் செய்யவும் வேண்டும். தேவா! பலாஸுரனை கொன்றவனே! பந்து ஸஹோதரர்களுக்குள்ளோ நண்பர்களுக்குள்ளோ, பரஸ்பர பேதபுத்தி சத்ருக்களுக்கு ஆனந்தத்தைச் செய்வதாக ஆகிறது. இதில் ஸந்தேஹமில்லை. தேவேந்த்ரனே! புத்திமான்களில் சிறந்தவனே! ஹிதமான முடிவையுடைய கார்யம் அறியத்தக்கது. முடிவு விபரீதமானதையும் அறிந்து பின்னர். வருத்த முண்டுபண்ணுமதை அறிவாளிகள் ஆரம்பிக்கவே கூடாது. இத்தகைய கார்யம் ஆரம்பிக்கப்பட்டால் இந்த கார்யத்தின் முடிவை மங்களகரமாக நான் பார்க்கவில்லை. இது புத்திமான்களுடைய நீதியும். தேவனே! தேவத்தலைவனே! இதற்குக் காரணத்தை நன்கு தெரிந்து கொள். எல்லா உலகுக்கும் நியாமகனை ஹரி ஒருவனே ஜகத்துக்கு ப்ரதான காரண பூதன். அவனே எல்லா அறிவாளிகளும் ப்ரக்ருதிக்கு மேலான க்ஷேத்ரஜ்ஞனாக அறிகிறார்கள். அவ்யக்தமான அவனது வ்யக்தமான பிரிவு எல்லா உலகத்திற்கும் காரண பூதமானது. ஜ்ஞானமுடைய அந்த வ்யக்தமான எல்லாவற்றிற்கும் மேலான ஆத்மா விஷ்ணு தேவன்.

ப்ரக்ருதியின் முதல் பாகம் பலவண்ணமுடைய உமாதேவி எல்லாம் கலந்த வ்யக்த உலகப் போக்கை நிலை நிறுத்தும். ஸ்த்ரீ (சக்தி) பெயரும் பொருளுடையது. ருக்மிணி முதலிய ஸ்திரீகள் அந்த ப்ரக்ருதியின் வ்யக்தமான முதல் குணம். ப்ரக்ருதி தேவி அழிவற்றவள். குணங்களுடைய தேவன் மஹேச்வரன். தேவத்தலைவனே! விஷ்ணுவுக்கும் இந்த்ரனுக்கும் வித்யாஸமில்லை.

அந்த த்ரிகுணாத்மகமான மஹேச்வரனுக்கும் எப்போதும் அழிவில்லாத நியாமகன் ஹேமகுணமற்ற முதல்வன் நாராயணன். மஹாதேஜஸ்வீ. எல்லாவற்றையும் படைப்பவன் லோகத்தை ரக்ஷிப்பவன். தேவதலைவனே! போக்தா, கர்த்தா இருவரும் இந்த்ரியங்களையடக்கிய மஹேஸ்வரனான விஷ்ணு தேவன் இந்த்ர தேவகணங்களும் ப்ரஹ்மாவும் அப்படியே ப்ரஜாபதி கணங்களும் மஹாத்மாவான விஷ்ணு தேவனால் பின்னர் படைக்கப்பட்டவர்கள். இவ்விதம் விஷ்ணு தேவர்களுள் ஆதிதேவனாகச் சொல்லப்படுகிறான். அவன் எண்ணற்கரியன், அளவிட முடியாதவன், த்ரிகுணங்களுக்கு அப்பாற்பட்டவன்.

முன் அதிதி தேவியால் மஹாத்மா விஷ்ணு தவத்தால் பூஜிக்கப்பட்டார். ஸந்தோஷமடைந்த அவரால் அதிதி வரம் கேட்க அனுமதிக்கப்பட்டாள். தேவத்தலைவனே! அதோக்ஷஜனான நாராயணனை அறிந்து வணங்கி 'உன்னைப் போன்ற புத்ரனை விரும்புகிறேன்' என்று அதிதியால் சொல்லப்பட்டான். அவனால் (விஷ்ணுவால்) சொல்லப்பட்டது : "உலகில் என் போன்று வேறொரு புருஷன் இல்லையல்லவா! (ஆகையால்) நானே அம்சத்தால் உனக்குப் புத்ரனாக ஆவேன்". தேவத்தலைவனே! எல்லாம் ச்ருஷ்டிக்கும் மஹா தேஜஸ்வீ நாராயணனே உனக்கு ஸஹோதரனாகப் பிறந்தான். தேவா! அவனைத்தான் <u>உபேந்த்ரன்</u> என்று சொல்கிறார்கள்.

தேவா! கடந்த, நிகழ், புகும், கால உற்பத்தி நாச காரணனான ஹரி விரும்பியே கச்யபர் மகனாக பிறந்தான். அந்தந்தப் பாவங்களைக் கொண்டு மாறுகிறான். ச்ருஷ்டி, ஸம்ஹாரம் இதற்குக் காரணமான ஜகன்னாதன் கேசவ தேவன் ஜகத்தின் நன்மையை விரும்பி மதுரையில் அவதரித்தான். கௌரவம் கொடுப்பவனே! மாம்ஸ பிண்டம் நெய்யில் எப்படி வ்யாபிக்கப் படுமோ அப்படி கீர்த்தி வாய்ந்த விஷ்ணுவால் இந்த ஜகத்து வ்யாபிக்கப்பட்டுள்ளது. ப்ராஹ்மண ஸமூஹத்துக்குத் தேவன். ஸர்வாந்தர்யாமி, அந்தந்த பாவங்களுக்குத் தக்க மாறுதலடைபவன். வைகுண்டவாசி. ஸர்வோத்பத்தி, காரணன். ஜகத்தில் த்ரிகுணங்களைக் கடந்தவன். ஆகையால் ப்ரஜைகளைச் ச்ருஷ்டிப்பவன். பகவான் ப்ரபு பத்மநாபன். கேசவன், எல்லாத் தேவர்களாலும் பூஜிக்கத்தக்கவன். உலக ரக்ஷணத்துக்காக ஆதி சேஷரூபிதாரியாய் பெரும் புகழ் கொள்கிறான். வேத தத்வ விசாரம் செய்யும் ஸாதுக்களால் யஜ்ஞம் என்றும் சொல்லப்படுகிறான். க்ருதயுகத்தில் வெண்ணிறத் தேவன், த்ரேதாயுகத்தில் சிவப்பு நிறமுடையவன், த்வாபரயுகத்தில் மஞ்சள்

நிறம். கலியுகத்தில் கருப்பு நிறம். இப்படி எல்லாக் கல்பத்திலும் வ்யாபித்திருக்கும் ப்ரபு இந்தத் தேவனே திவ்யரூபதாரியான ஹரி. ஹிரண்யாக்ஷனை வதம் செய்தார். அந்தத் தேவன் வராஹ ரூபங்கொண்டு ஜகத்தின் நன்மையை விரும்பி நீரில் மூழ்கிப் பூமியை மேல் தூக்கினான். நாரஸிம்ஹ ரூபம் தரித்த ஹரி ஹிரண்யகசிபுவை வதம் செய்தான். வாமன ரூபம் கொண்ட விஷ்ணு உலகத்தையே ஜயித்தான். அந்த ஸ்ரீமான் தேவன் நாகபாசங்களால் பலியை கட்டவும் செய்தான். அளவற்ற பராக்ரமமுடைய உதாரகுணம் கொண்ட விஷ்ணு, தேவாஸுர லோகங்களையும் ஆக்ரமித்தும் முன் உனக்கே அனந்தமான செல்வத்தைக் கொடுத்தான். தவத்தைப் பூர்த்தியாகவொட்டாது செய்வோரையும் முறை தப்பித் தவம் புரிவோரையும் ஜனார்த்தனன் அழிக்கிறான். இது மஹாத்மா விஷ்ணுவின் கொள்கை. ஸாதுக்களுக்குப் புகலிடம் தருமத்தில் நிலைத்தவன்.

கோவிந்தன் தேவ சத்ருக்களான முக்ய அஸுரர்களை உனது ப்ரியத்துக்காக வதம் செய்தான். மனோவலிமை கொண்ட க்ருஷ்ணன், (முன்) ராமாவதாரத்தை எடுத்து ராவணனைக் கொன்றான். மனம்போல் திரியும் அஸுரர்களையும், யானைகளைச் சிங்கம் கொல்வது போல் கொன்றான். எல்லாப் ப்ராணிகளுக்கும் உத்தமோத்தமமான ஜகன்னாதன் உபேந்திரன் இன்றும் மனித உலகில் ஜகத்தின் நன்மைக்காக வஸிக்கிறான். ஹரி ஜடைதரித்து மான் தோல் போர்த்து தண்டம் ஏந்தி (வாமனனாக) அஸுரர்களிடையே ஜ்வாலையுடன் கூடிய அக்னி தேவர் கோவில் சஞ்சரிப்பது போல் ஸஞ்சரிப்பதை நான் பார்த்தேன். ஒரே அஸுரக் கடலால் சூழ்ந்த ஜகத்தை ஜகத்தின் நலத்தை விரும்பி அஸுரர் அற்றதாகச் செய்யும் கோவிந்தனையும் பார்த்தேன். தேவத்தலைவனே! ஜனார்த்தனன் உன்னுடைய பாரிஜாதத்தை அவனிடம் த்வாரகைக்கு [illegible] [illegible]. நான் பொய் சொல்லவில்லை. தேவேந்த்ரனே! [illegible] நீ க்ருஷ்ணனை அடிக்கமாட்டாய். க்ருஷ்ணனும் [illegible] உன்னை அடிக்கமாட்டான். தேவனே! என்னால் சொல்லப்பட்டதை எவ்விதத்திலும் கேட்காவிடில், உனக்கு ப்ரியமான நீதி தெரிந்த மந்த்ரிகளைக் கேள்".

வைசம்பாயனர் சொன்னார்: ஜனமேஜயனே! பிறகு நாரதரால் இவ்விதம் சொல்லப்பட்ட மஹேந்த்ர தேவன் ஜகத்குரு நாரதரை குறித்து பதில் கூறினான். "விப்ர முனிவரே! நீர் இவ்விதம் சொல்லும் கீர்த்தியுடைய க்ருஷ்ணன் அப்படியேதான். பலமுறை (இப்படி) என்னால் கேட்கப்பட்டுள்ளதல்லவா! க்ருஷ்ணன் இவ்விதம் மஹான்.

ஆயினும் ஸாதுக்களின் தர்மத்தை மனதில் கொண்டு கொடுக்க வேண்டிய மரத்தை நான் கொடுக்கமாட்டேன். மிக்க பெருமை பொருந்திய க்ருஷ்ணன் அல்ப கார்யத்துக்காகக் கோபம் கொள்ள மாட்டான் என்று எண்ணி ஸர்வகுண ஸம்பன்னனான க்ருஷ்ணனிடமிருந்து நான் பயமற்றிருக்கிறேன். முனிவரே! உமக்கு மங்களம் உண்டாகட்டும். மிகப் பெருமை பொருந்தியவர், ஸதா பொறுமை வாய்ந்தவராகவேயிருப்பர். ஞானக்கண்ணுடைய வ்ருத்தர்களின் வார்த்தைகளைக் கேட்பவர்களாகவும் இருப்பர். மஹாத்மாவான, தர்மாத்மாக்களின் சிறந்த ஸர்வஜ்ஞனான க்ருஷ்ணன் மூத்த ஸஹோதரனுடன் விரோதம் கொள்வது சரியல்ல. அதோக்ஷஜனான க்ருஷ்ணன் என் தாயாருக்கு வரம் கொடுத்தது போலவே அவளது மூத்த மகனிடத்தும் பொறுமை கொள்ளவேண்டும். ஜனார்தனன் தானாக விரும்பி உபேந்திரனானபடியே ப்ராதாவான இந்த்ரனுக்குப் பெருமை கொடுக்கவும் வேண்டும். இந்த க்ருஷ்ண தேவனால் முன்னமையே தமையன் என்னும் தன்மை (எனக்கு) ஆரம்பிக்கப்பட்டதல்லவா? இப்போதும் அதை விரும்புவான். மிகப் பெருமையுடையவனாகவே இருக்கட்டும். தைர்யம், புத்தி இவையுடைய தர்மமறிந்த தவச்செல்வ நாரதர், (மறுக்க) நன்கு உறுதி கொண்ட இந்த்ரனை யறிந்து அவனால் விடை கொடுக்கப்பட்டு யதுச்ரேஷ்டன் க்ருஷ்ணனால் பரிபாலிக்கப்பட்ட த்வாரகாபுரியை அடைந்தார்.

அத்யாயம் 71 முற்றும்.



## அத்யாயம் 72

### க்ருஷ்ணன் அமராவதி நகரை ஆக்ரமிக்க போவதாக நாரதர் மூலம் தெரிவிக்கப்பட்ட இந்த்ரன் ப்ரஹஸ்பதியைக் கேட்க அவர் கச்யபரைக் கேட்க கச்யபர் சிவனைப் பூஜித்தல்

வைசம்பாயனர் சொன்னார் : பிறகு முனிச்ரேஷ்டர், நாரதர் அழகிய த்வாரகையை அடைந்து சத்ருக்களை வெல்லவல்ல புருஷோத்தமன் நாராயணனைப் பார்த்தார். தம் மாளிகையில் ஸுகமாக வீற்றிருப்பவர், ஸத்யபாமையுடன் கூடியவர், எல்லா தேஜஸ்ஸையும் மீறிய திருமேனியுடன் ப்ராகாசிப்பவர், அந்த பாரிஜாத விஷயத்தையே நினைத்துக் கொண்டிருப்பவர், உறுதியான வ்ரதங் கொண்டவர், வார்த்தை மாத்ரத்தால் (மட்டும்) தேவியை ஸமாதானப்படுத்துபவர், இத்தகைய க்ருஷ்ணனை நாரதர் பார்த்தார்.

அதோக்ஷஜன் க்ருஷ்ணன் நாரதரைக் கண்டதுமே எழுந்து எதிர் கொண்டு சாஸ்த்ர விதிப்படி பூஜித்தார். ஸுகமாக வீற்றிருந்து களைப்பாறிய நாரதரை மதுஸூதனன் சிரித்து பாரிஜாத வ்ருக்ஷத்தைக் குறித்து வ்ருத்தாந்தத்தைக் கேட்டான்.

ஜனமேஜயரே! பிறகு தவச்செல்வர் நாரதமுனி இந்த்ரன் வார்த்தை முழுதும் எல்லாவற்றையும் விஸ்தாரமாக இந்த்ரன் தம்பிக்கு சொன்னார். க்ருஷ்ணனும் அவை எல்லாம் கேட்டு நாரதரைக் குறித்து சொன்னான் : "தர்மத்தில் நிலைத்தோரில் ச்ரேஷ்டரே! நான் நாளை அமராவதி (இந்த்ரன்)புரிக்குச் செல்வேன். ஹரி இப்படிச் சொல்லி நாரதருடன் கூடவே கடற்கரைக்குச் சென்றான். பிறகு அங்கு ஏகாந்தத்தில் நாரதரைத் தூது செல்ல சொன்னான். தவச்செல்வரே! இன்று மஹேந்த்ரன் மாளிகை சென்று தேவத்தலைவன் மஹாத்மா இந்த்ரனுக்கு எனது அபிவாதனம் முன்னிட்ட வார்த்தையைச் சொல்லும். "ப்ரபோ! இந்த்ரனே! என் முன் போரில் நிற்பதற்குத் தக்கவரில்லை. என்னைப் பாரிஜாதத்தை எடுத்து வருவதில் நிச்சயம் கொண்டவனாக நீர் அறிந்து கொள்ளும்.

பிறகு க்ருஷ்ணனால் இப்படி சொல்லப்பட்ட நாரதரும் ஸ்வர்க்கம் சென்று அளவற்ற தேஜஸ்ஸுடைய இந்த்ரனுக்கு க்ருஷ்ணன் வார்த்தையை சொன்னார். குருகுலத்தலைவனே! ஜனமேஜயனே! பின்பு பலாஸுரனை கொன்ற இந்த்ரன் ப்ரஹஸ்பதிக்குச் சொன்னான். ப்ரஹஸ்பதி இதைக் கேட்டு இந்த்ரனுக்குச் சொன்னார் : "பாபம் நிந்திக்கதக்கது. நூறுயாகம் செய்தவனே! நான் ப்ரஹம்மனின் இடத்திற்குச் சென்ற சமயம் இந்த நீதியற்ற செயல் ஆரம்பிக்கப்பட்டது. கலகம் பயங்கரமானதல்லவா? ஸ்வர்க்கலோகத் தலைவனே! தேவா! எனக்குச் சொல்லாமல் இந்தக் கார்யம் என்ன காரணத்துக்காக உன்னால் ஆரம்பிக்கப்பட்டது? இல்லாவிட்டால் உலகம் காமத்தால் தூண்டப்பட்ட விதியினால் நடத்தப்படுகிறது. வ்ருத்ராஸுரனைக் கொன்றவனே! விதி தாண்டுவதற்கு முடியாது. (ஆலோசிக்காமல்) திடீரென கார்யங்களின் ஆரம்பம் ஸ்லாக்யமாகச் சொல்லப்படுகிறதில்லை. ஆகையால் திடீரென ஆரம்பித்த இந்த கார்யம் அகௌரவத்தைப் கொடுக்கும்".

மஹாத்மா ப்ரஹஸ்பதியைக் குறித்து மஹேந்திரன் இவ்விதம் சொன்னான் : இப்படியான பிறகு இப்போது செய்யதக்கதை தேவரீர் சொல்லவேண்டும். நடந்தது, நடக்கப்போவது, இரண்டின் தத்வமறிந்த பெருந்தன்மையான புத்தியுடைய தர்ம ஸ்வரூபி ப்ரஹஸ்பதி பிறகு கீழ் நோக்கி ஆலோசனை செய்து இந்த்ரனுக்குச் சொன்னார்: "இந்த்ரனே! உன் மகனுடன் சேர்ந்து முயற்சி செய்.

ஜனார்த்தனனை (உன்னுடன்) போரிடச் செய். எப்படி ந்யாயம் உண்டாகுமோ அப்படிச் செய்கிறேன்". ப்ரஹஸ்பதி இவ்விதம் சொல்லி பாற்கடல் (கரையை) அடைந்தார். மஹாத்மா கச்யப முனியிடம் எல்லாம் சொன்னார். இதைக் கேட்டு கச்யபர் கோபங்கொண்டு ப்ரஹஸ்பதிக்குச் சொன்னார் : இது அவஸ்யம் நடக்கக் கூடிய கார்யமே! எப்படியானாலும் இது (போர்) நடந்தே தீரும். அதில் ஸந்தேகமில்லை. மஹரிஷி தேவசர்மாவின் (அவனுக்குத்) தக்க சீலமுள்ள பார்யையை இச்சித்த இந்த்ரனுக்கு. நினைக்கத் தகாதது நினைத்த இந்த தோஷம், மேல் விழுகிறது. ப்ரஹஸ்பதி முன்பே அந்த தோஷ சாந்தியின் பொருட்டு ஜலவாச தவம் ஆரம்பிக்கப்பட்டது. அந்தக் கொடிய தோஷமே வந்து விட்டது. தெய்வானுகூலம் இருக்குமேயானால் தவச்செல்வரே! இந்த யுத்த ஸமயம், அதன் மத்தியில் அதிதியின் கூட செல்வேன். அவ்விருவரையும் தடுப்பேன்".

தர்மாத்மா ப்ரஹஸ்பதியும் கச்யபரைக் குறித்து இவ்வார்த்தை கூறினார். "தக்க ஸமயம் வந்து விட்டது. நீர் அங்கு இருக்க வேண்டும். கச்யபரும் "அப்படியே" என்று சொல்லி ப்ரஹஸ்பதியை விடை கொடுத்தனுப்பி, பூத கணத் தலைவனை ருத்ர தேவனைப் பூஜிக்கச் சென்றார். அதிதியுடன் கூடிய புத்திமான் ப்ரபு கச்யபர் அங்கு ப்ரிய தோற்றமுள்ள காளைக் கொடியோன், மஹாத்மா ருத்ரனைப் பூஜித்தார்.

வைசம்பாயனர் சொன்னார் : அப்போது மரீசி மகன் கச்யபர், ஸ்தோத்ரம் செய்யத்தக்க ஜகத்குரு பரமசிவனை, வேதத்தில் சொல்லப்பட்டவைகளும், தம்மால் செய்யப்பட்டவைகளுமான ஸ்தோத்ரங்களால் ஸ்துதித்தார். கச்யபர் சொன்னார் : அரியன செய்பவன், விச்வேச்வரர், ஈசன், ஜகத் ச்ருஷ்டி கர்த்தா, தர்மத்தால் காணத்தக்கவன், வரமளிப்பவரில் ச்ரேஷ்டன், தைர்யத்துக்கிருப்பிடம், தேவத்தன்மை வாய்ந்தவன், விச்வேச்வரன், அத்தகைய எல்லாமாகிய உம்மை வணங்குகிறேன். தேவர் தலைவன், பாபத்தையழிப்பவன், ஜகன் மாயையால் ஜகத்தாகப் பரவியவன். உமது கர்ப்பத்தில் ஜலமும், மங்களமான பூமிகளும் உள. அத்தகைய விஸ்வேச்வரனாகிய உம்மை வணங்குகிறேன். சந்யாஸி ரூபங்கொண்டு இந்த்ரனால் கொடுக்கப்பட்ட தர்மத்தை அழித்த, சாலா ம்ருகங்களை (நாய்களை) கொன்றவன். விரூபாக்ஷன். நல்ல தோற்றமுடையவன். புண்யம் பிறப்பிடம். இத்தகைய விஸ்வேச்வரனாகிய உம்மை தலையால் சரணமடைகிறேன்.

தனித்திருந்து ச்ரேஷ்டமான எல்லா ஜகத்தையும் அனுபவிக்கிறன், ஜகத்தெங்கும் வ்யாபித்திருக்கிறன். தேஜஸ்ஸுக்கெல்லாம் தேஜஸ், புண்ய ரூபமாயிருப்பதால், அழிக்க முடியாதவன். ஸோமபானம் செய்வோர்களிலும், சந்த்ர கிரணங்களை பானம் செய்வோர்களிலும் சிறந்தவன். அவனது நிலைபெற்ற தேஜஸ் என்னை போஷிக்கட்டும். அதர்வவேதஸ்வரூபி. நல்ல சிரஸ்ஸுடையவன். எல்லா ப்ராணிகளுக்கும் காரணன், புண்யன், வீரன், தானவருக்குத் தொல்லை கொடுப்பவன், யஜ்ஞத்தில் ஆஹுதியானவன், யஜ்ஞகார்ய ஸ்வரூபி அத்தகைய விஸ்வேச்வர தேவனை சரணம் அடைகிறேன். எல்லா ஜகத்துக்களும் கூடிய விச்வமாயிருப்பவன். விச்வத்துக்கு ஆத்மா. அடைந்தவர்களை ப்ரீதி செய்பவன். மேலே செல்லும் ரதத்தில் செல்பவன். அத்தகைய விச்வேஸ்வரன் ஸதா எனக்கு நல்ல மனதுடனிருக்கட்டும். எல்லோருடைய உள்ளில் ஸஞ்சரிப்பவன். ப்ரகாசிப்பவன். அழகிய வேத சாகைகள் ஆனவன். மஹா பலமுடையவன். தர்ம வழிகாட்டி. ஸ்துதிக்கத் தக்கவன். ஆயிரங்கண்ணுடையன். நூற்றுக்கணக்கான காம வழிகளின் பலன் கொடுப்பவன். உக்ர ஸ்வரூபி, மஹாதேவன், விச்வ ச்ருஷ்டிகாரணன், அத்தகையவனை வணங்குகிறேன். புனிதன், யோகி, புகழப்படுபவன், பாபமற்றவன், ஸம்ஹார கர்த்தா, மங்கள நிதி, மங்களம் செய்பவன், பூதங்களுக்குத் தலைவன். ஜகத்தைத் தாங்குபவன், இந்த்ரியங்களை அடக்குபவன், சந்த்ரனைச் சூடியவன். இந்த்ரியங்கள் புகலிடம் இத்தகையவனைத் தலையால் வணங்குகிறேன்.

சீக்ரம் வரம் கொடுப்பவன், தோஷங்களைச் சாந்தி செய்பவன், இஷ்ட பலத்தைக் கொடுப்பவன். செய்யும் தர்மங்கள் சேருமிடம். விசேஷ ஸத்ய ஸ்வரூபி. சீக்ர பல பூர்த்தியைக் கொடுப்பவன். செல்வங்களைத் தாங்குபவன். ஆத்ம சுத்தி கொடுப்பவன். எல்லோருக்கும் பக்ஷ பாதமற்றவன். நிலையான வ்ரத முடையவன். இத்தகைய சூலாயுதமேந்தியவனை வணங்குகிறேன். அளவற்ற வீர்யமுடையவன், எல்லாக் கர்மங்கள் செய்விக்கும் அதிகாரி, முதல்வன். ஸர்வயஜ்ஞஸ்வரூபி. யஜ்ஞம் செய்வோர் பூஜிக்கும் முதல்வன். ஹவிர்பாகம் புஜிப்பவன். எல்லா புவனங்களிலும் தர்மத்தைத் தரிக்கும் முதல் விப்ரன். இத்தகையவனை சரணம் அடைகிறேன். குணங்களுக்கப்பாற்பட்டவன். விஷ்ணு ஸ்வரூபமானவன். கீர்த்தியின் சிகரம் எல்லா உலகங்களிலும் வியாபிப்பவன். அழகிய ரூபமுடையவன், சுத்தாத்மா, ஸத்யன், புருஷன், ஸத்ய லோகம் இருப்பிடம், பாபிகளை மோகிக்க

செய்பவன். இத்தகையவனை வணங்குகிறேன். யோகிகளுக்கு ஓங்கார ஸ்வரூபி. தானுகிய வேதத்தின் முக்யன். அழகிய கார்யங்களை செய்பவன். உறுதியான விரதமுடையவன். உறுதியான வில்லுடையவன். ப்ரஹ்மபுத்ரன். சூரன். ஸர்வஜ்ஞன் தனுர் வேதத்திலும் அஸ்த்ர ஞானத்திலும் சிறந்தவன். ஜீவன்களுக்கு அதிபதி. ஸம்ஹார கர்த்தா. இத்தகையவனை சரணடைகிறேன். உலகுக்கு அவன் ஒரே நண்பன். கடந்தது, வருவது இரண்டும் அவனே. எல்லா யஜ்ஞங்களிலும் (அக்னிரூபியாயிருந்து) ஹவிர் பாகத்தைப் புஜிக்கிறன். காமக்ரோதாதி சத்ருக்களையழிப்பவன். துஷ்ட சத்ருக்களுக்குத் தொல்லை கொடுப்பவன். தனக்கு மேலானவனற்றவன். யஜ்ஞத்தில் நல்ல ஹவிர்பாகத்தைக் கொள்பவன். தர்ம விபாகம் செய்பவன்.

இத்தகைய பகவான் தேவன் என்னைக் காக்கட்டும். ஒப்பற்ற இவன் ஈசன். எல்லா ஜகத்துக்களிலும் வ்யாபித்திருக்கிறன். இந்த உத்தமன், மருத்துக்களுக்கு முக்ய ப்ராணனைக் கொடுத்தவன். இரக்கத்தால் அழியாத ஸ்நேஹத்தையுடையவன். அவன் என்னை இப்போது மங்களமான கீர்த்தியின் பொருட்டு அடையட்டும். ப்ரஹ்மா எல்லா உலகிலும் உத்தமோத்தமனை இவனை ச்ருஷ்டித்தான். ப்ரஹ்மத்தை அறிந்தவன். வேண்டுதல் வேண்டாமையிலா த்ருப்தியுடையவன். அறுகுண பரிபூர்ணன், வேத வ்யாக்ருதியின் முழு ரஸத்தை ச்ருஷ்டித்தவன். அநேக ரூபங்கொள்பவன். சத்ருக்களைக் கொல்ல வல்லவன், அவனது அங்கங்கள் மூலம் என்னைக் காக்கட்டும்.

இந்த்ரியங்களுக்கு அப்பாற்பட்டவன், பிறப்பற்றவன், எல்லாம் அறிந்தவன், எல்லாவற்றிலும் ஸம்பந்தமுள்ளவன். மங்களகரன், எல்லோருக்கும் ப்ராணனை கொடுப்பவன். யானைத் தோல் போர்த்தவன், நிலை பெற்ற ரஸம், வாயுவுக்குத் தலைவன், பத்னியுடன் கூடிய (யாகம் செய்யும்) யஜமானனுக்குத் தலைவன். மங்களம் கொடுப்பவன். எல்லாவற்றின் ஸாரத்தைக் கொண்டவன். முக்கண்ணன், புஷ்டி கொடுப்பவன், விப்ரர்களுக்குத் தர்மோபதேசம் செய்பவன். யாகம் செய்வோருக்கு வரமளிப்பவன். ச்ரேஷ்டத்திலும் ச்ரேஷ்டன், போரில் வெல்பவன், தேவர்களுக்குத் தேவன். இத்தகைய ருத்ரனைச் சரணடைகிறேன். தேவர்களுக்கு (அக்னி) ரூபமானவனாய், பாபிகளுக்கு யமன், த்ரிவ்ருத்தி முதலிய துதிகளால் யாக பலம் கொடுப்பவன். ஸம்ஸார வ்ருக்ஷத்தை அழிப்பவன். எல்லாக் கர்மங்களுக்கும் ஸாக்ஷி. பூதங்களுக்குகெல்லாம் இருப்பிடம். பூதகணங்களுக்கு நாயகன், குணத்தை அறிபவன்

குணஸ்வரூபி. இத்தகைய ருத்ரனை சரணடைகிறேன். சத்ருக்களால் நெருங்கமுடியாதவன். யஜ்ஞம் நடத்துபவன், யஜ்ஞம் செய்பவர்களுக்கு ஆதி, மத்யம், அந்தஸ்வரூபி. எல்லோருக்கும் ஒத்த ஞான ஸ்வரூபன். வேத வ்ரதங்களில் பஹுவிதமாகப் பாடப்பட்டவன். மூவுலகுக்கும் ஈஸ்வரன். இத்தகைய ருத்ரனைச் சரணமடைகிறேன். பெரிய யானைத்தோல் போர்த்தவன் வ்ரதமுடையவன். மேகலை பூண்டவன், எளிதில் ஸந்தோஷப்படுபவன், கோபத்துக்கு நாயகன், பாபமற்றவன், அழிவற்றவன், பரமாத்மா, குணமுடையவன் ஜடாதாரி, வந்திக்கத்தக்க பெரியோரால் வந்திக்கப் படுபவன். இத்தகைய ஈஸனை வணங்குகிறேன். தேவர்களுக்குத் தேவன், புனிதங்களுக்குப் புனிதமானவன். புண்யாத்மாக்களுள் சிறந்தவன். பெரியவைக்கெல்லாம் பெரியவன். சாந்தஸ்வரூபி, இந்த்ரியங்களின் அதிஷ்டான தேவதைகளால் துதிக்கப்படுபவன். இத்தகைய தேவ நாதனை ருத்ரனைச் சரணடைகிறேன்.

எல்லா ப்ராணிகள் மனதில் ஸஞ்சரிப்பவன். புருஷன், ரஹஸ்யமெனப் பெயர் பெற்றவன். ஸ்வயம் ப்ரகாசன். ப்ரணவ ஸ்வரூபி. விசேஷ சோபையுடையவன் அழிவற்ற ஜீவாத்மாக்களுக்கு மூல காரணன். மங்கள தேவன், குணங்கள் நிறைந்தவன், இத்தகையவனை நன்கு வணங்குகிறேன். ஜகத்துக்கும் ஜீவாத்மாக்களுக்கும் உற்பத்தி காரணன் தன் உத்பத்திக்குக் காரணமற்றவன், அணுவானவன். தனிப்பட்ட பூதங்களுடன் ஒன்றியிருப்பவன். தனிப்பட்டவன், தான்தோன்றி, எல்லா ஜகத்தையும் ஸம்ஹரிப்பவன். கொடைவள்ளல், சுவைத்துண்பவன், மிக்க ஸந்தோஷமுடையவன். ரத்னம் இத்தகையவன் என்னைக் காக்கட்டும்.

அருகிலிருப்பவன், உபாயங்களுக்கு மிக ஸமீபத்திலுள்ளவன். ச்ரத்தையுடையவருக்குத் துக்க பலனளிப்பவன். நல்ல புண்யாத்மாக்களின் பெரிய கணங்களுக்கு நாயகன். மேஷ ராசி அதிதேவதை. அருணை பரிபூரணன். இத்தகையவன் என்னைக் காக்கட்டும். உள், வெளி பாபங்களை அழிப்பவன், ஜகத்துக்குத் தானே கர்த்தா. பூதங்களுக்குக் காரணன், தன் குணம் மாற்றி ஆயுதமெடுப்பவன். புண்யாத்மாக்களுக்கு உத்தம தேஜஸ்ஸைக் காட்டுபவன். இத்தகைய தேவதேவன் எனது பாபத்தைப் போக்கட்டும். வஞ்சனையாக ஆயுதமெடுத்து தேவர்களைக் கொல்ல வந்த மாயாவி அஸுரர்கள் இவன் சரத்தால் எரிக்கப்பட்டார்கள். மஹத்திலிருந்து வெளிப்பட்ட தேவதைகளுக்கு முதல் கடவுள். பெரும் புறக்கடலைத் தரிப்பவன்.

இத்தகையவன் என்னைப் பாபத்திலிருந்து காக்கட்டும். தக்ஷ யஜ்ஞத்தில், யஜ்ஞ பாகத்தைப் பெற வந்த தேவர்களின் யஜ்ஞ பாகத்தை அழிக்க வந்தவன். தக்ஷ யஜ்ஞ தேவதா புருஷனால் சரணமடையப்பட்டவன். ஸர்வஜ்ஞன். யாகத்துக்கு ஆதியும் அந்தமும். தக்ஷயஜ்ஞ அழிவுக்குக் காரணன். அத்தகைய தேவன் என்னைக் காக்கட்டும். உத்தமனான புண்யன் வேறாகி (ப்ரஹ்மாவாகி) ஜகத்தை ச்ருஷ்டித்து தானாகி அதை அழிக்கிறான். எல்லாவற்றிற்கும் பரம ரஹஸ்யம். அறுகுணங்களுக்கு முக்யன். அத்தகையவன் முன்னும் பின்னும் கவனித்து என்னைக் காக்கட்டும்.

முக்குணங்களும் எல்லாக் காலங்களிலும் நிலைத்திருக்குமவன். இவனது அந்தரங்க பாவத்திலிருந்து ஸத்ய மிகுதி உண்டாயிற்று. ரக்ஷகர்களுக்கெல்லாம் ரக்ஷகன். துஷ்டர்களை அடியோடழிப்பவன். உலக முதல்வன். தொல்லை கொடுப்போரைக் கோபிப்பவன். இவனது இருப்பிடத்துக்கு முதல்வன் விஷ்ணு. ஜகத் ஸ்வரூபத்தையும் படைத்த ப்ரஹ்மாவும், ப்ரஹ்ம புத்ரர்களும் விப்ரர்களும் (ரிஷிகளும்) இவனை நெருங்க முடியாமல் அகௌரவப்படுகிறார்கள். உமையொடு கூடிய ஸாது ரக்ஷகனான இவன் எனக்கு மேன்மையைக் கொடுக்கட்டும். இவனிடமிருந்து பூதங்கள், தைர்யம், செல்வம். உத்பத்தி ஸ்திதி (ரக்ஷகம்) முடிவு உண்டாகின்றன. எல்லோருடைய ஹ்ருதயத்திலும் மறைந்திருக்கும் மஹாத்மா. சிவனால் நன்கு அறியத்தக்க. அந்தப் புருஷோத்தமன் விஷ்ணுவின், ஹ்ருதயத்தில் இவன் இருப்பவன் எனச் சொல்லபடுகிறவன். லிங்கத்தை அடையாளமாகவுடையவன். முக்கண்ணன் எல்லாவற்றிற்கும் ஈசன், ஸ்த்ரீ புருஷ சின்னமாயிருப்பவன். லோக மாதா, உமாபாகன், இவ்விரண்டு உமா மஹாதேவனைக் காட்டிலும் வேறுப்பட்ட மூன்றுவது வஸ்து கிடையாது. ஆகையால் இவன் ஸர்வ ஸர்வேஸ்வரன். இவனை நான் வணங்குகிறேன்.

இவ்விதம் மிகத் துதிக்கப்பட்ட தர்மாத்மா காளைக் கொடியோன் பகவான் ருத்ரன் தர்மமறிந்தோரில் சிறந்த கச்யபருக்குக் காக்ஷிதந்தான். தேவேசன் குளிர்ந்த மனதுடன் இப்படிச் சொல்லவும் செய்தான். கச்யப ப்ரஜாபதியே! நீ துதிக்கும் கார்யத்தை நான் அறிவேன். மஹாத்மாக்களான இந்த்ர உபேந்தர தேவர்கள் இருவரும் தம் ஸ்வபாவத்தையடைவர்கள். கச்யபா! முனி தேவ சர்மா விஷயத்தில் மஹேந்த்ரன் தகாததை நினைத்தானல்லவா! கச்யபா! தபஸால் விளங்கும் இவனது

பார்யையை முன் விரும்பினன். தர்ம மறிந்தவரே! தக்ஷ புத்ரி அதிதியுடன் உம்மால் அங்கு இந்த்ரன் இருப்பிடம் செல்லப்படட்டும். உனது இரண்டு பிள்ளைகளுக்கும் மங்களம் உண்டாகும். ப்ரஹ்மாவின் புத்ரர் அளவிடப்படமுடியாதவர் அறிவாளியான கச்யபர் இவ்விதமான பரமசிவன் வார்தையைக் கேட்டு தேவ கூட்டத் தலைவன் ருத்ரனை வணங்கி மகிழ்ந்த மனதுடன் தேவலோகமடைந்தார்.

அத்யாயம் 72 முற்றும்

## அத்யாயம் 73

### இந்த்ரன்-க்ருஷ்ணன், ஜயந்தன்-ப்ரத்யும்னன், ப்ரவரன்-சாத்யகி, ஐராவதம்-கருடன் இவர்களிடையே போர்

வைசம்பாயனர் சொன்னர் : பிறகு மஹாத்மா விஷ்ணு சூர்யோதயத்திற்கு ஒரு முஹூர்த்த காலம் பின்னர் வேட்டை வ்யாஜங்கொண்டு ரைவத மலையை அடைந்தான். ஜனமேஜயரே! தேவன் க்ருஷ்ணன் மனிதச்ரேஷ்டன் ஸாத்யகியை தனித் தேரிலேற்றி (மகன்) ப்ரத்யும்னனை பின் தொடர்ந்து வரச்சொல்லி க்ருஷ்ணதேவன் ரைவத மலையையடைந்து (ஸாரதி) தாருகனைப் பார்த்துச் சொன்னன் : தாருகா! நீ இந்த எனது தேரை இங்கேயே வைத்து குதிரைகளைத் தடுத்து நிறுத்தி பாதி நாள் என்னை எதிர்பார்த்திரு. ஸாரதி ச்ரேஷ்டா! தேருடனேயே த்வாரகையில் நுழைவேன்". அளவற்ற வீரமுடைய புத்திமான் க்ருஷ்ண பகவான் இவ்விதம் சொல்லி ஜயத்தில் முயற்சி கொண்டு ஸாத்யகியோடு கருடன் மேல் ஏறினன். ராஜா! ஜனமேஜயரே! சத்ருக்களை அழிக்கவல்ல ப்ரத்யும்னன் ஆகாயத்தில் போகக்கூடிய தனித்தேருடன் க்ருஷ்ணனைப் பின்தொடர்ந்து சென்றனன்.

புத்திமான் ஹரி பாரிஜாதத்தை அபஹரிக்கும் ஆசையுடன் ஒரே நிமிஷத்தில் தேவ உத்யானமான நந்தவனத்தையடைந்தான். அங்கு அதோக்ஷஜன் பகவான் க்ருஷ்ணன் பல ஆயுதமேந்தி நெருங்க முடியாத நந்தவனத்திலிருக்கும் வீரர்களைப் பார்த்தான். அவர்கள் நன்றாகப் பார்த்துகொண்டிருக்கும் போதே பாரத! ஜனமேஜயரே! ஸாதுக்களுக்கு புகலிடமான மஹாபலவான் க்ருஷ்ணன் பாரிஜாத மரத்தை லகுவாக பெயர்த்தெடுத்து பக்ஷிராஜன் மேல் ஏற்றினன். பாரதா! ஜனமேஜயரே! அந்தப் பாரிஜாதம் உருவெடுத்து கேசவன் அருகில் வந்தது. வாஸுதேவனால் பாரிஜாத வ்ருக்ஷம் ஸமாதானப்படுத்தப் பட்டது. மஹாத்மா கேசவனால் "வ்ருக்ஷமே நீ பயப்படாதே" எனச் சொல்லவும்பட்டது. அதோக்ஷஜன்

க்ருஷ்ணன் புறப்பட்டு (தன்னுடன்) வரும்படி பாரிஜாத வ்ருக்ஷத்தை பார்த்து பின்பு சிறந்த அமராவதிபுரியை வலம் வந்தான். ஜனமேஜய ராஜனே! நந்தவனத்தை ரக்ஷிக்கும் அந்த காவலாளர்களும் சென்று பாரிஜாத வ்ருக்ஷச்ரேஷ்டம் அபஹரிக்கப்படுகிறது என்று மஹேந்த்ரனுக்குத் தெரிவித்தனர். பின்பு ப்ரபு இந்த்ரன் ஐராவதத்தின் மேலேறி. தேரிலேறின ஜயந்தனால் பின் தொடரப்பட்டு வெளிக்கிளம்பினான்.

கிழக்கு வாசலையடைந்து சத்ருக்களை நாசஞ்செய்யும் கேசவனைப் பார்த்து (இந்த்ரன்) சொன்னான் : 'அப்பா மதுஸூதனா என்ன இந்தக் கார்யம்'. பிறகு கருடன் மேலிருக்கும் கேசவன் இந்த்ரனை வணங்கிச் சொன்னான். 'நாட்டுப் பெண்ணின் புண்யகார்யத்துக்காக இந்த மரம் எடுத்துச் செல்லப்படுகிறது பின்பு இந்த்ரன் க்ருஷ்ணனைக் குறித்துச் சொன்னான்: தாமரைக்கண்ணா! இப்படி வேண்டவே வேண்டாம். அச்சுதா போர் புரியாமல் மரம் எடுத்துக் கொள்ளத் தக்கதல்ல. கேசவனே! மஹாபாஹோ! முதலில் என்னை அடி. என்னிடம் கதை கௌமோதகியை வீசு. உனது ப்ரதிஜ்ஞை ஸபலமாகட்டும். ஜனமேஜயரே! பிறகு க்ருஷ்ணன் சிரித்துக் கொண்டே இடிபோன்ற கூர்மையான அம்புகளால் தேவேந்த்ரனது சிறந்த யானையை அடித்தான். இந்த்ரன் திவ்யமான உத்தம பாணங்களால் கருடனை அடித்தான். மேலும் வேகமாகப் போகும் க்ருஷ்ணனது அம்புகளை விரைவாக முறித்தான். தேவேந்த்ரன் விட்ட பாணங்களை க்ருஷ்ணன் முறித்தான். க்ருஷ்ணன் விட்ட பாணங்களை இந்த்ரன் அறுத்தான்.

ஜனமேஜயரே! மஹேந்த்ரனது வில்லோசையாலும் க்ருஷ்ணனின் சார்ங்க வில்லின் ஓசையாலும் ஸ்வர்க்க வாஸிகள் மோஹித்தனர். பிறகு அவ்விருவருக்குள் போர் நடக்கும் ஸமயம் கருடன் மேலிருக்கும் பாரிஜாத மரத்தை மஹாபலவான் வீர ஜயந்தன் அபஹரிக்க முயன்றான். அப்போது கம்ஸனைக் கொன்ற கேசவன், பிறகு ப்ரத்யும்னனை "இதை எடுக்காமல் தடு" என்று சொன்னான். ருக்மிணியின் கீர்த்தி வாய்ந்த புத்ரன் ப்ரத்யும்னன் அந்த ஜயந்தனைத் தடுத்தான். ஜயிப்பவரில் ச்ரேஷ்டனான ஜயந்தன் தேரிலிருந்தே ருக்மிணி புத்திரனைச் சிரித்துக் கொண்டே உடல் முழுதும் அடித்தான். தாமரை கண்ணன் ப்ரத்யும்னன் ரதத்திலிருந்தே ரதத்திலிருக்கும் இந்த்ரன் மகன் ஜயந்தனை ஸர்ப்பத்துக்கொப்பான பாணங்களால் தொல்லை கொடுத்தான். ஜனமேஜயரே! வீர ஜயந்தன், ருக்மிணி புத்ரன் இவ்விருவருக்கும்

அந்தப் பயங்கரமான யுத்தம் நடந்தது. உலகில் அஸ்த்ர வீரர்களில் சிறந்தவரான மஹாபலம் வாய்ந்த ச்ரேஷ்டர்களான மஹேந்த்ரன் உபேந்தரன் குமாரர்கள் போரில் அடிக்குப் பதிலடி பரிமாறிக் கொண்டனர். தேவர்களும் முனிவர்களும் சாரணரும் ஸித்தரும் வியப்புடையவராய் மிகக் கொடிய அந்த யுத்தத்தைப் பார்த்தனர்.

ஜனமேஜயரே! பிறகு ப்ரவரன் எனும் மஹாபலவான் தேவதூதன், பாரிஜாதத்தை மறுபடி அபஹரிக்க ஆசைப்பட்டான். ஜனமேஜயரே! அவன் தேவேந்த்ரன் தோழன். பெரிய அஸ்த்ரமறிந்தவன். சத்ருக்களை வெல்லவல்லவன். ப்ரஹ்மாவின் வரதானத்தால் கொல்லப்பட முடியாதவன். ப்ராஹ்மணன் தவஸித்தி பெற்றவன். ஜம்பூத்வீபத்திலிருந்து ஸ்வர்கமேறியவன். ஜனமேஜயராஜனே! தன் சக்தியால் இந்த்ரனுடன் தோழமை பெற்றான். க்ருஷ்ணன் வருகிற ப்ரவரனைப் பார்த்து ஸாத்யகியிடம் சொன்னான். "ஸாத்யகீ! இங்கிருந்தே ப்ரவரனை அம்புகளால் தடு. ஸாத்யகியோ இவன் மேல் தயையில்லாமல் பாணங்கள் விடத்தக்கவையல்ல. எல்லா முறையாலும் இவனது ப்ராஹ்மண ஆலோசனையின்மை பொறுக்கத்தக்கதல்லவா! மஹாபாஹோ ஜனமேஜயனே! பிறகு ப்ரவர ப்ராஹ்மணன் அப்போது அறுபது தேர்ந்த அம்புகளால் கருடன் மேலிருக்கும் ஸாத்யகியை நன்றாக அடித்தான்.

ஸநியின் பௌத்ரன் ஸாத்யகி (புருஷப்புலியான) அம்புகளை வீசும் ப்ரவரனின் வில்லை முறித்தான். ப்ராஹ்மணன் கொல்லத் தகாதவன். தன் வழியில் பெரிய குற்றம் செய்தாலும் யாதவர்களால் கொல்லத் தகாதவரல்லவா! ஜனமேஜயரே! மனிதரில் சூரனே! பொறுத்தது போதும். போரில் எல்லாப்படியாலும் போர் செய்" எனச் சிரித்துக் கொண்டு ப்ரவரன் ஸாத்யகியைச் சொன்னான்: "யாதவனே! ஸாத்யகீ நான் பரசுராமரின் சிஷ்யனும் கூட. ப்ரவரன் எனக் கீர்த்தி பெற்றவன். புத்திமான் இந்த்ரனின் நண்பன். ப்ராஹ்மணனைத் தேவதை மதிக்கும் மதுஸூதனனைக் கௌரவித்து தேவர் என்னிடம் போர் புரியார். யதுகுலவீரனே! ஸாத்யகீ நான் இந்த்ரனின் நண்பனெனும் கடன் கழிக்க வந்துள்ளேன்". நரச்ரேஷ்டனே! ஜனமேஜயராஜனே! பிறகு ஸாத்யகி - ப்ராஹ்மணச்ரேஷ்டன் இருவருக்கும் திவ்ய அஸ்த்ரங்களால் கொடியபோர் மூண்டது. ஜனமேஜயராஜனே! அப்போது மிக்க மஹாத்மாக்களான அவர்களுள் அந்த போர் நடக்கும்போது ஆகாயம் நடுங்கிற்று. ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஆயிரக்கணக்கானவரும் நடுங்கினர். போரில்

க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னன் அஸ்த்ரவல்லோரில் சிறந்த ஜயந்தனை அதிக்ரமிக்க முடியவில்லை. ஜயந்தனும் மஹாத்மா மாயாவி (மன்மதன்) சூரச்ரேஷ்டன் க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னனை அதிக்ரமிக்க முடியவில்லை. நரச்ரேஷ்ட ஜனமேஜயா! பரஸ்பரம் வெல்ல விரும்பும் அந்த இரு போர் வீரரும் "பாபம் பிடி! திருப்பியடி" என்று (சொல்லிப்) போர் செய்தனர். ஜனமேஜயராஜனே! கீர்த்திமான் இந்த்ரன் மகன் ஜயந்தன் விசேஷமாகப் பேசி வேகமாக திவ்ய அஸ்த்ரத்தால் க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னனை நாற்புறமும் அடித்தான். அந்த ப்ரத்யும்னன் நாற்புறமும் ஒளி வீசி வேகமாக வரும் அஸ்த்ரத்தை அம்பு கூட்டத்தாலும் கூரிய அம்புகளாலும் ஸ்தம்பிக்கச் செய்தான்.

குருகுலதிலகனே! ஒளி வீசும் கொடிய அஸுரரை அழிக்கவல்ல ருக்மிணி மகனுக்காகப் போடப்பட்ட அஸ்த்ரம் போர்க்கள நடுவில் விழுந்தது. நரச்ரேஷ்டா! ஜனமேஜயனே! அந்த அஸ்த்ரத்தால் ப்ரத்யும்னனின் தேர் எரிக்கப்பட்டது. மிக்க கொடிய அது அந்த ருக்மிணியின் மகனை எரிக்கவில்லை. அரச ச்ரேஷ்ட ஜனமேஜயனே! கொடியதாயிருந்தாலும் அக்னி அக்னியையே எரிக்கிறதில்லையல்லவா! மஹாபாஹு ருக்மிணி மகன் எரிக்கப்பட்ட தேரிலிருந்து வெளியில் வந்தான்.

பிறகு நாராயணனின் மஹாரதனை மகன் ப்ரத்யும்னன், தேரின்றி வில்லேந்தி ஆகாயத்தில் நின்று ஜயந்தனைக் குறித்து இந்த வார்த்தை சொன்னான், "மஹேந்த்ரன் மகனே! நீ விட்ட திவ்யாஸ்திரம் போன்று நூற்றுக்கணக்கானவற்றாலும் நான் கொல்லப்பட முடியாதவன். முயற்சி செய். நீ கற்றுக் கொண்ட வித்தை முழுதும் காட்டு. தேவமகனே! போரில் என்னை விட பராக்கிரமம் கொண்டவன் ஒருவனும் இல்லை. ஆயுதம் தரித்து ரதத்திலிருக்கும் உன்னைப் பார்த்து எனக்கு நடுக்கம் இருந்தது. உனது பலத்தையறிந்த நான் இப்போது பயப்படவில்லை.

இந்த பாரிஜாத மரம். உன் மனதால் நினைக்கப்படட்டும். இந்த மரம் உன் கைகளால் தொட இயலாது. எனது மாயா ரதம் உனது அஸ்த்ர தேஜஸால் எரிக்கப்பட்டது இது போன்று ஆயிரக்கணக்கான மாயாரதங்கள் ஸ்ருஷ்டிக்க என்னால் முடியும். இப்படிச் சொல்லப்பட்ட மஹாபலவான் ஜயந்தனும் தன்னாலேயே கடுந்தவத்தால் பெறப்பட்ட அஸ்த்ரத்தை விட்டான். மஹா வேகங்கொண்ட அந்த அஸ்த்ரத்தை ப்ரத்யும்னன் அம்புக் கூட்டத்தால் தடுத்தான். அந்த ஜயந்தன் வேறு நான்கு திவ்யாஸ்த்ரங்களை விட்டான்.

பாரத! ஜனமேஜயரே! பிறகு அந்த அஸ்த்ரங்கள் ருக்மிணி மகன் மஹாத்மா ப்ரத்யும்னனை எல்லாத் திக்குகளிலும் தடுத்தன. ஆகாயத்திலும் ஐந்தர்வது அஸ்த்ரம் தடுத்தது. தேவ ச்ரேஷ்டன் ஜயந்தன், பெரிய கொள்ளிகட்டை போன்ற பாணங்களையும் கொடிய அஸ்த்ரங்களையும் ப்ரத்யும்னனைக் குறித்து எல்லா பக்கங்களிலும் விட்டான். அந்த எல்லா அஸ்த்ரங்களையும் க்ருஷ்ணன் மகன் அப்போது வேறு கூரிய பாணங்களால் அழித்து பாணக் கூட்டங்களாலும் தடுத்தான். பிறகு மஹாத்மா ப்ரத்யும்னனது ஸ்திர தன்மையையும் வேகத்தையும் பார்த்து புண்யம் செய்த தேவர்களால் கோஷம் எழுப்பப்பட்டது.

ஜனமேஜயரே! வீரன் ஸாத்யகி கூரிய பாணத்தால் ப்ரவரனது அம்பறுத் துணியையும் கேடயத்தையும் கூட அறுத்தான். பிறகு அந்த ப்ரவரன் பேரிடி போல் முழங்கும், மஹேந்த்ரனால் கொடுக்கப்பட்ட அந்த மேலான பெரிய வேறொரு வில்லையெடுத்தான். அந்த விப்ரச்ரேஷ்ட வீரன் அப்போது அந்தப் பெரிய வில்லால் ஸூர்ய கிரணங்கள் போன்று பலவித அம்புகளை விடுத்தான். அளவற்ற பராக்ரமமுடைய ஸாத்யகியின் ஆச்சர்யமான வில்லையும் அறுத்தான். பாணங்களாலும் ஸாத்யகியை உடல் முழுதும் அடித்தான். ஜனமேஜயரே! பின்பு புத்திமான் ஸாத்யகி பாரத்தைத் தாங்கும் வேறொரு வில்லை எடுத்து போரில் ப்ரவரனையடித்தான். அவ்விருவரும் கூரிய பாணங்களால் ஒருவருக்கொருவர் கவசங்களையறுத்தனர். மர்மத்தைப் பிளக்கும் பாண முபஜ்சிகளால் உடலிலிருந்து மாம்சங்களைக் கிழித்துக் கொண்டனர். வீர ப்ரவரன் பிறகு மறுபடியும் எட்டு முனையுடைய அம்பால் ஸாத்யகியின் அம்பறுத்துணியை இரண்டாக அறுத்தான். மூன்று அம்புகளால் அவனையடித்தான். விப்ரப்ரவரன் வேறொரு அம்பறாத்தூணியை எடுக்க விரும்பும் அந்த ஸாத்யகியை [illegible] கதையால் அடித்தான். [illegible] அடிக்கப்பட்ட புத்திமான் ஸாத்யகி சிரித்துக் கொண்டே [illegible] சக்தியையும் எடுத்துக் கொண்டான் [illegible]

பிறகு [illegible] ஸாத்யகியை சக்திப்ரயோகத்தை தெரிந்து நூற்றுக்கணக்கான சரங்களோடே விடுத்தான். புத்திமான் ஜொலிக்கின்ற ஆகாயம் போன்ற சக்தியை ஸாத்யகிக்கு கொடுத்தான். அப்போது ப்ரவரன் அவனது சக்தியைப் பல பாணத்தால் முறித்தான். கைப்பிடியில் பாணத்தைத் தள்ளி முறித்தான். சிரித்து கொண்டு நேராகச் செல்லும் கூரிய பாணங்களால் அப்படியே தோலை (கேடயத்தை)ப் பிளந்தான்.

விப்ரப்ரவரன் சக்தி பாணத்தால் ஸாத்யகியை மார்பில் அடித்தான். முழங்கவும் செய்தான். அவனைக் கலங்கினவனுகத் தெரிந்து, அப்போது பாரிஜாதத்தை அபஹரிக்க விருப்பங்கொண்டு ப்ரவரன் கருடன் பக்கல் ரதத்துடன் இருந்தான். கருடன், ப்ரவரனை இறக்கை வேகத்தால் தூக்கியெறிந்தான். இரண்டு மைல் தூரம் தேருடன்யெறியப்பட்டு விழுந்தான். மூர்சையுமடைந்தான். ஜனமேஜயரே! அப்போது ஜயந்தன் சீக்ரமாகத் தேரிலிருந்து கீழே விழுந்த விப்ர ப்ரவரனை இளைப்பாற்றி, பிறகு தேரில் ஏற்றினன். ப்ரத்யும்னன், அடிக்கடி மூர்ச்சையடைந்து விழுகிற சிற்றப்பா ஸாத்யகியை இளைப்பாற்றித் தழுவிக் கொண்டான். மதுஸூதனன், க்ருஷ்ணன் இடது கையால் அவனை (ஸாத்யகியை)த் தடவினன். தொட்ட மாத்ரத்திலேயே (அவன்) களைப்பு நீங்கினவனுனன்.

பாரிஜாதத்தின் வலது பக்கத்திலும், இடது பக்கத்திலுமாக போரில் ஸமர்தர்களான, ப்ரத்யும்னன் ஸாத்யகி இருவரும் நின்றனர். ஜனமேஜயரே! வேகமாகச் செல்லும் ஒரே தேரில் (ஜயந்தனும், ப்ரவரனும்) மஹேந்த்ரனல் பரிஹரிக்கப்பட்டு வார்த்தை சொல்லப்பட்டனர். "கருடனுடைய ஸமீபத்தை ஒருவிதத்தாலும் அடையக்கூடாது. இந்த விநதை மகன் கருடன் பக்ஷிகளுள் பலவான் அரசனும் கூட". எனது வலது இடது பக்கங்களில் ஆயுதம் தரித்து இருவரும் நின்று போரிடும். என்னையே பாருங்கள். இப்படி சொல்லப்பட்ட இருவீரரும் பிறகு இந்த்ரனின் பக்கங்களிலிருந்து போர் புரியும் மஹேந்த்ர க்ருஷ்ணர்களைப் பார்த்தார்கள்.

பிறகு இந்த்ரன் பெரிய இடி ஒலியுடைய பாணங்களுடனும் பெரிய சிறந்த அஸ்த்ரங்களுடனும் கருடனை உடல் முழுதும் அடித்தான். அந்த சத்ரு நாசக கீர்த்தி வாய்ந்த வீரன் வைநதேயன். கருடன், அந்தப் பாணங்களை லக்ஷியம் செய்யாமல், இந்த்ரன் யானை ஐராவதத்திற்கு எதிராகச் சென்றான். ஜனமே ஜயராஜனே! வீரம் மிக்க, பலம் வாய்ந்த, மஹா ப்ராண சக்தியுடைய அணுக முடியாத அந்த இரண்டு யானை பறவைகளும், விசேஷ போர் புரிந்தனர். யானை அரச ஐராவதமும் பிளிறி ஸர்ப சத்ரு கருடனை கொம்புகளாலும் துதிக்கையாலும், தலையாலும் அப்போது பலமாக அடித்தது. அப்படியே பலம் மிக்க வைநதேயன் கூரிய நக ஈட்டிகளாலும், இறக்கை வீச்சுகளாலும் இந்த்ரன் யானையைச் செம்மையாக அடித்தான். யானை பக்ஷி இருவருக்கும் ஜகத்துக்கு வியப்பைத் தரவல்லதும் பார்பவருக்குப் பயத்தைக் கொடுக்கவல்லதுமான மிகப் பெரிய போர். ஒரு முஹூர்த்த

காலம் நடைபெற்றது. ஜனமேஜயனே! மஹா பலவான் கருடன் கூரிய நகங்கள் கொண்ட காலால் ஐராவதத்தைத் தலையிலடித்தான். ஜனமேஜயரே! செம்மையான அடியால் உடல் முழுதும் மிக்க வலியுண்டு பண்ணப்பட்ட ஐராவதம் ஸ்வர்கத்திலிருந்து இந்த ஜம்பூத்வபத்தில் (பூமியில்) மலை ச்ரேஷ்டமான பாரியாத்ரத்தில் விழுந்தது. மஹாபலவான் இந்த்ரன் விழும் ஐராவதத்தைக் கருணையாலும் நட்பாலும் முன் ப்ரதிஜ்ஞையாலும் விடவில்லை. ஜகத்காரணபூதனும், முடிவற்றவனும், புத்திமானும் மஹா பலவானுமான க்ருஷ்ணன் பாரிஜாத மரத்தையுடைய கருடனுடன் இந்த்ரனைப் பின் தொடர்ந்தான். வ்ருத்ராஸுரனைக் கொன்ற அந்த இந்த்ரன் மலை ச்ரேஷ்டமான பாரியாத்ரத்தில் நின்றான். ஐராவதம் களைப்பாறியதும் மறுபடியும் போர் மூண்டது.

ஜனமேஜயரே! இந்த்ரன் கேசவன் இருவருக்கும் நல்ல ஒளி வீசும் ரத்னங்களையுடைய ஸர்ப்பங்கள் போன்ற பாணங்களால் ஒருவருக்கொருவர் பெரிய போர் மூண்டது ஜனமேஜயரே! பிறகு வஜ்ராயுதன் இந்த்ரன் ஐராவத சத்ருவான கருடன் மேல் வஜ்ராயுதத்தையும் இடியையும் திரும்ப திரும்ப விடுத்தான். கொல்லப்பட முடியாதவன், பலவான்களுள் ச்ரேஷ்டனான பக்ஷிராஜன் அந்த வஜ்ராயுத இடி வீழ்ச்சிகளை ஸ்வசத்தியாலும் தபோ பலத்தாலும் பொறுத்துக் கொண்டான். கச்யப குமாரனான கருடன் ஸஹோதரன் இந்த்ரனுடைய இடியையும் வஜ்ராயுதத்தையும் ஸதா பொறுத்துக் கொண்டு ஒரோரு இறக்கையால் அடித்து விட்டான். ராஜனே! ஜனத்தலைவனே! ஜனமேஜயனே! கருடனால் ஆக்கரமிக்கப்பட்ட மலை நாற்புறமும் சக்தி குறைந்ததால் அழுங்கி பூமிக்குள் புதைந்தது. அந்தப் பர்வதமும் க்ருஷ்ணனிடம் கௌரவத்தால் ஓலமிட்டது. அதோக்ஷஜன் க்ருஷ்ணனும் பிறகு சிறிது மீதியிருக்கும் அந்த மலையைக் கடாக்ஷித்தான். பிறகு ஸர்வ ச்ருஷ்டிகர்த்தா லோக ரக்ஷகனான க்ருஷ்ண தேவன் அந்த மலையை விட்டுக் கருடனுடன் ஆகாயத்தில் நின்றான்.

அப்போது ப்ரதயும்னனிடம் சொன்னான்: "மஹாபாஹோ! ப்ரத்யும்ந இங்கிருந்து த்வாரகைக்குச் சென்று எனது தேஜோ பலத்தைக் கொண்டு தாருகனுடன் கூடிய தேரை அழைத்து வா. தாமதம் வேண்டாம். கௌரவம் கொடுப்பவனே! இந்த்ரனை ஜயித்து த்வாரகைக்கு நாளை வருவேன்'' என்று பலராமனும் உக்ரஸேனராஜாவும் சொல்லத்தக்கவர்கள். ஜனமேஜயனே! தர்மாத்மா ப்ரபு ப்ரத்யும்னனும், பிதாவிடம் "அப்படியே!" என்று சொல்லி

(த்வாரகை) சென்று உக்ரஸேன, பலராமர் இருவர்களிடமும் (க்ருஷ்ணன்) சொன்னபடி சொல்லி தாருகனுடன் கூடிய தேரிலேறி நொடிப்பொழுதுள் திரும்ப அந்த இடத்தை அடைந்தான்.

அத்யாயம்73 முற்றும்



## அத்யாயம் 74

### இரவில் போர் நிறுத்தி வில்வம் கங்கை ஜலத்தைக் கையில் ஏந்தி க்ருஷ்ணன் மஹாதேவனைத் துதித்தல். "வில்வோதகன்" என மஹாதேவனுக்கு நாமம் வரல் - பாரியாத்ர மலைக்கு வரமளித்தல் - அதன் பெருமை

வைசம்பாயனர் சொன்னார் : க்ருஷ்ணன் கருடனை விடுத்து அந்த ரதத்திலேறி ஐராவத வாகனன் தேவேந்த்ர ப்ரபுவிருக்கும் பாரியாத்ர மலையை அடைந்தான். மலைச்ரேஷ்டன் பாரியாத்ரம். எழுந்தருளும் க்ருஷ்ணனைப் பார்த்து உளுந்து எடையாகிப் பூமியில் புதைந்தது. ஜனமேஜயனே! வாஸுதேவன் க்ருஷ்ணனின் ப்ரியத்திற்காக மஹாத்மா க்ருஷ்ணனின் ப்ரபாவத்தையறிந்த மலை இவ்விதம் சிறிய அளவாகி அமுங்கிற்று. ஹ்ரிஷீகேசன் க்ருஷ்ணன். அந்த மலை விஷயத்தில் ப்ரீதியடைந்தான்.

குருகுல ஜனமேஜயரே! பிறகு போருக்காகப் புறப்படும் அச்சுதனை பாரிஜாதத்துடன் கூடின கருடன் பின் தொடர்ந்து சென்றான். மஹாபலம் வாய்ந்த சத்ருக்களை வெல்லவல்ல ப்ரத்யும்னன். ஸாத்யகி இருவரும் பாரிஜாத காவலுக்காகக் கருடன் மேலேறிச் சென்றனர். ராஜனே! பின்பு சூர்யன் மறைந்தான். இரவு துவங்கியது இங்கு (இந்த ஸமயம்) இந்த்ர க்ருஷ்ணர்களுக்கு மீண்டும் போர் மூண்டது. விஷ்ணு க்ருஷ்ணன் ஐராவத யானையை செம்மையாக அடிக்கப்பட்டதாகவும், சக்தியில்லாததாகவும் பார்த்து தேவேந்த்ரனைக் குறித்துச் சொன்னான். மஹாபாஹோ! அண்ணா! யானை ச்ரேஷ்டன் ஐராவதம் முன் கருடனால் அடிக்கப்பட்டவன் சக்தி குறைந்தவன். இரவும் வளர்கிறது. விரும்பினால் நாளைக் காலை இஷ்டப்படி ஆரம்பி" எனச் சொன்னான். ப்ரபு தேவராஜனும், "அப்படியே ஆகட்டும்" என க்ருஷ்ணனுக்குச் சொன்னான்.

ஜனச்ரேஷ்டா! ஜனமேஜயரே! தர்மாத்மா தேவராஜன் இந்த்ரன் காட்டைச் சுற்றிப் பர்வதம் அமைத்து புஷ்கரத்தின் பக்கத்தில் தங்கினான். குரு குலத்தோனே! ஜனத்தலைவனே! ஜனமேஜயனே! பிறகு ப்ரஹ்மா, கச்யப மஹர்ஷி,அதிதி எல்லா தேவர் முனிவர். ஸாத்யர், விச்வேதேவர், 'நாஸத்மியெள' எனும் அஸ்வினித்

தேவர், ஆதித்யர், ருத்ரர், வஸுக்கள், இவர் எல்லோரும் அங்கு வந்தனர். பாரத! ஜனமேஜயனே! நாராயணனும் புத்ரனுடனும், ஸாத்யகியுடனும் அழகிய பாரியாத்ர மலேயில் வஸித்தான். ஜனமேஜயராஜனே! பின்பு க்ருஷ்ணனிடம் பக்தியால் அந்த மலே உளுந்தளவுக்கு (அடங்கின) காரணத்தால் அதற்கு மஹாதேஜஸ்வி க்ருஷ்ணன் வரம் அருளினன். "பெரிய மலேயே! நீ 'சரணபாதன்' எனப் புகழ் பெற்றவன் ஆவாய். நீ புண்யவான் மங்களமானவன். உனது புண்யம் ஹிமவானின் பாதி புண்யத்திற்குச் சமம். மலேச்ரேஷ்டனே! மேருவுடன் போட்டியிட்டுப் பலவித ஆச்சர்யமான மிருகங்களுடன் கூடி இப்படியே பெருமை பொருந்தியவனுயிரு. பலவித வியக்கத்தக்க வ்ருக்ஷங்களுடன் கூடின உன்னேப் பார்க்கும் நான் ஸந்தோஷப்படுகிறேன். கேசவன் அந்த மலேக்கு அப்படி வரம் கொடுத்து, காளேக் கொடியோனே வணங்கி நதி ச்ரேஷ்டமான கங்கையை த்யானம் செய்தான்.

பாரத! பின்பு க்ருஷ்ணனுல் ஸ்மரிக்கப்பட்ட விஷ்ணுபத கங்கை அங்கு வந்தாள். பிறகு அதோக்ஷஜன் க்ருஷ்ணன் அவளேப் பூஜித்து ஸ்நானம் செய்து குறைவில்லா கோவிந்தன் நீரையும் வில்வத்தையும் ஏந்தி ஸர்வேஸ்வர ருத்ரதேவனே ஆவாஹனம் செய்தான். பிறகு மஹாதேவன் கணங்களுடனும் பார்வதியுடனும் வந்தான். அப்படியே கங்கை நீருக்கும் வில்வதளத்துக்கும் மேல் நின்முன். கேசவன் ஸர்வச்ருஷ்டி செய்பவனும் ஈசனுக்கீசனுன ஈச்வரனே பாரிஜாத புஷ்பங்களால் அர்ச்சித்தான், வார்த்தைகளால் துதி செய்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னுன்: 'தேவா! நீ ஓலமிடுவதாலும் அழுவதாலும் ருத்ரன் எல்லாரையும் விரட்டுதலால் நீ மேலான தெய்வம். (உனது) பக்தருள் பக்தனுகவும் பேரன்புடையோரில் பேரன்புடையவனுகவும் என்னேப் புகழுடன் சேர். ஈசனே! இப்போது உன்னேச் சரணடைகிறேன். க்ராமத்து ஜீவன்களுக்கும் வனத்திலுள்ள ஜீவன்களுக்கும் பசுபதியெனப் புகழ் பெற்ற தேவன். எல்லாம் ச்ருஷ்டிப்பவன். தேவதேவா! உனக்கு மேலானவன் ஒருவருமில்லே. தேவதேவா! ஜகத்பதி! தேவ வீரரின் சத்ருக்களேயழிப்பவன். மஹேஸ்வரர்களுக்கு ஈசன். நீர் ஆதி. ப்ரீதி கொடுப்பவன் ஆகையால் ஸர்வ சாஸ்த்ரார்த்த தத்வமறிந்த ஸாதுக்களான வித்வான்கள் உன்னே ஈசன், ஈச்வரன் எனச் சொல்கிருர்கள். அளவு கடந்த தீரனே! புலப்படாததும் அழிவில்லாததுமான உன்னிடமிருந்து ஜகத் உண்டாயிற்று.

ஆகையால் உன்னைப் பூதம் என்றும் பெருமை பொருந்திய எல்லா ஈஸ்வரர்களுக்கும் வள்ளல் என்றும் சொல்கின்றனர். ஜயிக்கப்பட்ட எல்லா தேவர்களாலும் அஸுரர்களாலும் எல்லாப் ப்ராணிகளாலும் 'ஈசனை' அபிஷேகம் செய்யப்பட்டுள்ளாய். அதனால் தேவதேவனை உன்னை எல்லோரும் மஹேஸ்வரன் என்றும் விஸ்வேஸ்வரன் என்றும் சொல்கிறார்கள். அளவுகடந்த வீர்யமுள்ளவனே! கீர்த்தி விரும்பும் தேவர்களால் ஸதா பூஜிக்கப்படுகிறாய். வரமருள்பவனே! மிக்க கீர்த்தி கொண்ட பகவானே! தேவதேவனே! ஸாதுக்களுக்கு வேண்டியவனே! எல்லா ஜீவன்களின் அந்தர்யாமியே! ஸ்வர்க்க தேவர்களுக் கெல்லாம் நாதனே! லோகத்தை நிலைக்கச் செய்பவனே! அளவிடமுடியாதவனே! தேவனே! மூவுலகும் உன்னால் நிலை பெறுகிறது. மறுபடி உன்னால் எல்லா உலகும் உத்பத்தி. அதனால் உனக்குத் "த்ரியம்பகன்" எனப் பெயர். சத்ருக்களை அடக்குவதால் "சர்வஹ:" மறுபடியும் மேலும் அடக்குவதால் அளவிட முடியாதவன் ஈஸ்வரன் எனும் பெயராலும் எங்கும் வ்யாபித் திருப்பதால்சங்கரன்" எனும் பெயராலும் மங்களத்தைச் செய்கிற சூர்யனைக் காட்டிலும் மிக்க தேஜஸ்ஸுடைய "ஈசானன்" எனும் பெயராலும் ஸாதுக்களால் சொல்லப்படுகிறாய்.

உன்னை நன்கு பூஜிக்கும் ஸாதுக்களுக்கு எப்போதும் மன அடக்கத்தைக் கொடுக்கிறாய். எல்லா சத்ருக்களையும் தண்டித்தடக்குகிறாய் ஆதலால் "சங்கரன்" ஆகவிருக்கிறாய். தர்மமறிந்த ஸாதுக்களால் அளவிடமுடியாத தேவனாகவும் எல்லோருக்கும் ஈசனாகவும் சொல்லப்படுகிறாய். அதிக வீர்யமுடையவனே! ஈசான தேவனே! முன்னர் தேவராஜனால் வஜ்ராயுதங்கொண்டு உமக்கும் செம்மையான அடி கொடுக்கப்பட்டது. உமது கழுத்திலுள்ள நீல நிறங்காரணமாக "நீலகண்டன்" எனப் புகழப்படுகிறாய்.

லிங்க அடையாளமாயுமுள்ளவன். ஸ்த்ரீபுருஷ அடையாள மாயுமுள்ளவன். உமையொடு கூடியவனே! நீ ஸ்தாவர ஜங்கம ஸ்வரூபி தத்வமறிந்த விப்ரர் குணங்களுடையவனாகச் சொல்கின்றனர். அப்படியே த்யானம் செய்யத் தக்க லோகமாதா அம்பிகையாகவும் சொல்கின்றனர். அந்த அம்பிகையை வேதங்கள் பாடுகின்றன. தத்வத்தை வெளிப்படுத்துபவள். யாகம் செய்வோருக்கு யஜ்ஞஸ்வரூபி. யோகிகளுக்கு எட்டாத ரூபமுடையவள். தேவா உன்னைப் போன்ற அத்யாச்சர்யமான பூதம் ஒருவருமில்லை. முன்னும் இப்போதும் வருங்காலத்தும்

இல்லே. நான். ப்ரஹ்மா. கபிலர். ஆதிசேஷன். ப்ரஹ்மாவின் அதிவீரரான புத்ரர்கள் இந்த எல்லோரும். தேவ தேவா உன்னிடமிருந்து உண்டானேம். இவ்விதம் ஸர்வேஸ்வரனே லோக காரணனை நீர் துதிக்கத்தக்கவர்".

இவ்விதம் ஸ்துதி செய்யப்பட்ட காளேக் கொடியோனும் பிறகு வலது கையை விரித்து நாராயணனுக்கு சொன்னர்: "தேவ ச்ரேஷ்டனே! உனக்கு நாடிய பொருள் கைகூடும். பாரிஜாதத்தை அபஹரித்து செல்வாய். மனதுக்கம் வேண்டாம். ப்ரபுவே! க்ருஷ்ண! மைந்நாக பர்வதத்தையடைந்து நீ தவம் செய்தாய். என்னுடைய வரத்தை நன்கு நினைத்துத் தைர்யங்கொள். நீ பிறரால் கொல்லப்படமாட்டாய். ஜயிக்க முடியாதவனுமாவாய். அப்படியே என்னைக் காட்டிலும் சிறந்த சூரனுமாவாய் என்று நான் சொன்னது அப்படியே ஆகும். வேறு விதம் இல்லே தேவர் தலேவனே! தர்மமறிந்தவனே. விஷ்ணே! உன்னல் செய்யப்பட்ட ஸ்துதியால். எவன் என்னைத் துதி செய்கிறனே அவன் போரில் ஜயமடைந்து. தர்மவானுகவும் ஆவான். தேவத்தலேவனே! பாபமற்றவனே! "வில்வோதகேஸ்வரன்" எனும் பெயர் எனக்கு உண்டாகும். நீ கேட்ட வரமும் ஸபலமாகும். ஜனர்த்தன! கேசவா! என்னிடம் பக்திமானன வித்வான். இங்கிருந்து. மூன்று நாள் உபவாஸமிருந்து விரும்பிய லோகங்களேயும் அடைவான். இந்தவிடத்தில் கங்கையும் 'அவிந்த்யை எனும் பெயருடையதாகும். அப்படியே மனிதர் ஸ்நானம் கங்கா ஸ்நானத்திற்கு ஸமமாகும். ஷட்புரம் எனும் தானவர் நகரத்தில் ஜனர்த்தன! மஹாபலவான்களான அஸுரர்கள். பராக்ரமத்துடன் பூமியின் கீழ் ப்ரதேசத்தில் இருக்கிறர்கள். தேவா! கோவிந்தா! இந்த அஸுரர்கள். ஜகத்துக்கு முள் போன்றவர்கள். துராத்மாக்கள். இந்தப் பெரிய மலேயில் மறைந்து வஸிக்கின்றனர். பாபமற்றவனே! கேசவனே! ப்ரஹ்மாவின் வரத்தால். தேவ தேவர்களாலும் கொல்லத் தகாதவர்கள். ஆதலால் மனித தேஹம் எடுத்த நீ இவர்களேக் கொல்.

"ஜகத்தலேவனே! ஜனமேஜயனே! மஹாதேவன் இவ்விதம் சொல்லி மஹாத்மா வாஸுதேவனேத் தழுவி அங்கேயே மறைந்தார். மனிதத் தலேவனே! ஜனமேஜயனே! அங்கிருந்து மஹாதேவன் சென்றதும் அவ்விரவு கழிந்து விடிந்ததும் மறுபடியும், மலேயைக் குறித்துச் சொன்னன்: "மலேச்ரேஷ்டனே! உன் கீழே பெரிய அஸுரர்கள் வஸிக்கின்றனர். முன் ப்ரஹ்மாவின் வரத்தால் தேவ தேவர்களால் கொல்லத் தகாதவர்கள். அவர்கள் மஹா பலவான்கள்

என்னுல் தடுக்கப்பட்டு வெளியேறவே மாட்டார்கள். என் கட்டளையால் வாசல் அடைக்கப்பட்டதும் அங்கேயே அழிவார்கள். மலையே! மஹாகிரியே! நான் உன்னுடன் நெருங்கியிருப்பேன். மிகக்கொடிய அஸுரர்களை அடக்கி வஸிப்பேன். மலைச்ரேஷ்டனே! உன் சிகரத்தில் ஏறி என் உருவத்தைப் பார்த்து ஆயிரம் கோதான பலத்தை சாஸ்வதமாக அடைவான். உன்னிடமிருந்து கற்களால் என் ப்ரதிமை செய்து பக்தியுடன் பணிவிடை செய்கிறவர்கள் எனது அழிவற்ற இடத்தை (பரமபதத்தை) அடைகிருர்கள்." வரந்தரும் க்ருஷ்ணன் பர்வதத்தை அனுக்ரஹம் செய்தார். அது முதல் அங்குத் தேவேசன் அச்சுதன் ஸாந்நித்யம் செய்கிறன். அப்பா! ஜனமேஜயனே! விஷ்ணு லோகத்தை விரும்பும் புண்யாத்மாக்கள், கற்களால் விஷ்ணு ப்ரதிமை செய்வித்துப் பணிவிடை செய்கின்றனர்.

அத்யாயம் 74 முற்றும்.



## அத்யாயம் 75

### இந்த்ரன், க்ருஷ்ணன் மறுயுத்தம்-கச்யபர் அதிதி வந்து ஸமாதானம் செய்தல்-திரும்ப எல்லோரும் ஸ்வர்க்கம் சென்று அதிதி சொல்படி அதிதி நாட்டுபெண்களுக்கு ஸன்மானஞ் செய்தல்-பாரிஜாதத்துடன் த்வாரகை வருகை -பாரிஜாத மஹிமை-ஸத்யபாமையின் புண்யக வ்ரதம்

வைசம்பாயனர் சொன்னுர் - ராஜனே! ஜனமேஜயனே! பிறகு க்ருஷ்ணன் சிறந்த ரதத்திலேறி, வில்லோதக தேவனை வணங்கிச் சென்றுன். தேரிலிருக்கும் மதுஸூதனன் புஷ்கரம் அருகில் எல்லாத் தேவகணங்களுடன் கௌரவிக்கப்பட்ட மஹேந்த்ரனை (போருக்கு) அழைத்தார். பிறகு ஸாதுக்களுக்கு எல்லா இஷ்டங்களையும் கொடுக்கும் இந்த்ரன் குதிரைகளைப் பூட்டிய சிறந்த தேரிலேறினன். பின்பு ஜயந்தனும் ஏறினன்.

ஜனமேஜயரே! குருநந்தன! பிறகு ரதத்திலிருக்கும் தேவர் இருவருக்கும் தெய்வ வசத்தால் பாரிஜாதத்திற்காக அப்போது போர் மூண்டது. சத்ரு ஸேனையைத் துன்புறுத்தும் க்ருஷ்ணன், போரில் பாணங்களாலும். நேராகப் பாயும் பாணக் கூட்டங்களாலும் தேவேந்த்ர ஸைன்யங்களை அழித்தான். ப்ரபோ! ஜனமேஜயனே! இருவீரரும் சக்தியுள்ளவர்களாயிருந்தும், க்ருஷ்ணனை மஹேந்தரன் பாணங்களால் அடிக்கவேயில்லை. ஜனமேஜயராஜனே! ஜனுர்த்தனன். மஹேந்த்ரனின் ஒவ்வொரு குதிரையையும், அஸ்த்ரங்களுடன்

கூடின கூரிய பத்துப் பாணங்களால் அடித்தான். ஜனமேஜயா! ராஜத்தலைவனே! அமரச்ரேஷ்ட தேவேந்த்ரனும், சைப்யன் முதலிய (க்ருஷ்ணனின்) குதிரைகளை அஸ்த்ரத்தால் மந்திரிக்கப்பட்ட கொடிய அம்புகளால் மூடி மறைத்தான். அந்த க்ருஷ்ணனும் ஆயிரம் பாணங்களால் ஐராவத யானையை மூடி மறைத்தான். மிக தேஜஸ்வியான இந்த்ரனும் க்ருஷ்ண வாகனமான கருடனை ஆயிரம் பாணங்களால் மறைத்தான். அந்தச் சத்ருக்களை வெல்லவல்ல மஹாத்மாக்களான, நாராயண தேவேந்தரர் இருவரும் அப்பகலில் பெரிய ரதங்கள் கொண்டு போர் புரிந்தனர்.

பாரதா! ஜனமேஜயனே ! பூமி முழுவதும் தண்ணீரிலிருக்கும் படகுபோல் ஒடுங்கிற்று. திசைகளின் தாபத்தால் நாற்புற திக்தேசங்களும் மறைக்கப்பட்டன. சிறந்த அரிசந்தன மரங்கள் நூற்றுக் கணக்காக விழுந்தன. தர்ம குணமுள்ள மனிதர்களும் பூமியின் மேல் விழுந்தனர். அரசனே! மனிதர் தலைவா! ஜனமேஜயா! இடிகளும் நூற்றுக்கணக்காக விழுந்தன. எல்லா நதிகளும், கரை மீறியோடின. காற்றுக்கள் நாற்புறமும் வீசின. ஒளியற்ற உத்பாதங்கள் ஆகாயத்திலிருந்து வீழ்ந்தன. ப்ராணிகளின் கூட்டம் அடிக்கடி தேரொலியால் மோஹமடைந்தன. ஜனமேஜயராஜனே! நீரிலும் நெருப்பு ஜ்வாலை வீசிற்று. ஆகாயத்தில் நாற்புறமும் க்ரஹங்கள் க்ரஹங்களுடன் போரிட்டன. ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் நக்ஷத்ரங்கள் நூற்றுக்கணக்கில் விழுந்தன. திக்கஜங்களும் பூமியில் யானைகளும் மிகக் கோபங் கொண்டன. கழுதை போன்ற சாம்பல் நிறமுடையனவும் கொள்ளிக் கட்டைகளையும் ரத்தத்தை பொழிகின்றனவுமான பேரொலி கொண்ட சிதறிய மேகங்களால் ஆகாயம் மூடப்பட்டது. ஜனமேஜயனே! நரச்ரேஷ்டனே! அப்போது போர் செய்யும் இரு தேவ வீரர்களைக்கண்டு, பூமி, ஸ்வர்க்கம், ஆகாயம் இவை தம் நிலையிலில்லை. முனிகணங்கள் ஜகத்தின் ஹிதத்தை விரும்பி மந்த்ரம் ஜபித்தனர். மஹாத்மாக்களாகிய ப்ராஹ்மணர்களும், வேகத்துடன் அம்மந்த்ரங்களில் நிலைபெற்றிருந்தனர்.

பிறகு மஹாதேஜஸ்வி ப்ரஹ்மா, கச்யபரைக் குறித்து வார்த்தை சொன்னர்: "நல்ல வர்தமுடையவனே! (எனது) மருமகள் (மாட்டுப்பெண்) அதிதியுடன் செல். பிள்ளைகளை இன்னும் (போரிடாமல்) தடு." நரச்ரேஷ்ட ஜனமேஜயா! அந்த முனிவர் அப்போது "அப்படியே" என்று கமலதேவனுக்குச் சொல்லி தேரிலேறிச் சென்று (புத்ரர்கள்) பக்கல் நின்றர். அதிதியுடனிருக்கும் கச்யபரைப் பார்த்து அச்சமயம், மஹாபலவான்கள் இருவரும்

தேர்களிலிருந்து பூமியில் இறங்கினர். சத்ருக்களை வெல்லவல்ல தர்ம தத்வமறிந்து எல்லா ப்ராணிகளின் ஹிதத்தில் நாட்டமுடைய அவ்விரு வீரரும் ஆயுதங்களைக் கீழே வைத்து பெற்றோரை வணங்கினர். அதிதி தேவி, அவ்விரு பிள்ளைகளையும் தன் இரு கைகளால் பிடித்து வார்த்தை சொன்னாள் : "உடன் பிறவாதவர் போல் இவ்விதம் ஒருவருக்கொருவர் கொல்ல ஏன் ஆசைப்படுகிறீர்கள். சிறிய விஷயத்திற்காகப் பெரிய போர் மூண்டது. எல்லாப்படியாலும் என் பிள்ளைகளுக்கு இது தகுதியல்லவென்று நினைக்கிறேன். ப்ரஜாபதியான பிதாவினதும் தாயினதுமான வார்த்தை கேட்கப்பட வேண்டுமானால் ஆயுதங்களை விலக்கி என் சொற்படி செய்யுங்கள்". மஹாபலவான்களான அவ்விரு தேவரும் "அப்படியே!" என்று சொல்லி ஸ்நாநம் செய்ய விரும்பி ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு கங்கைக்குச் சென்றனர். இந்த்ரன் சொன்னான் : "நீ லோக ச்ருஷ்டிகர்த்தாவான தலைவன். ராஜ்யம் முழுதுக்கும் உன்னால் நான் ராஜாவாக வைக்கப்பட்டேன். வைத்து (பின்னர்) எப்படி என்னை அவமதிக்கிறாய்? தாமரைக் கண்ணா! ஸஹோதரத்வத்தை ஒப்புக் கொண்டே மூத்த தன்மையை விலக்கி எப்படி அதை அழிக்க விரும்புகிறாய்?

ஜனமேயராஜனே! கங்கையில் ஸ்நாநம் செய்து, உறுதியான வ்ரதமுடைய மஹாத்மாக்கள் இருவரும் காச்யபர் அதிதியிருக்குமிடம் திரும்ப வந்து சேர்ந்தனர். தாமரைக்கண்ணுடைய அந்த இருவரும் பெற்றோர்களுடன் சேர்ந்த இடத்தை முனிவர் "ப்ரியஸங்கமனம்" எனப் பெயரிட்டுக் கூறினர். குருகுலநந்தன! ஜனமேஜயரே! பிறகு தர்ம வழியிலுள்ள தேவகணங்கள் எல்லாம் கூடினவிடத்தில் இந்த்ரனுக்கு க்ருஷ்ணன் வார்த்தையால் அபயம் கொடுத்தான். பிறகு எல்லாத் தேவர்களும் அவர்களுக்கே தக்க மிகச் சிறந்த விமானங்களில் பெருமையுடன் ஸ்வர்க்கம் சென்றனர்.

ஜனமேஜயராஜனே! கச்யபர், அதிதி, இந்த்ரன், ஜனார்த்தனன் எல்லோரும் ஒரே விமானத்திலேறி ஸ்வர்க்கம் சேர்ந்தனர். குருகுலத்தவனே ஜனமேஜய! எல்லா குணங்களும் பொருந்திய அழகிய இந்த்ரன் மாளிகையை அடைந்த தர்ம வழியிலுள்ள அவர்கள் ஸந்தோஷத்துடன் ஒரேயிடத்தில் வஸித்தனர். தர்மத்தில் ப்ரியமுடைய இந்த்ராணியும், எல்லா ப்ராணிகளின் நன்மையிலும் நோக்குடைய பத்னி (அதிதி) யுடன் கூடின மஹாத்மா கச்யபரை உபசரித்தாள். பிறகு அந்த இரவு கழிந்ததும், தர்ம தத்வமறிந்த

அதிதி தேவி எல்லா ப்ராணிகளின் ஹிதத்தில் நோக்குடையவள். ஹரியாம் க்ருஷ்ணனைப் பார்த்து வார்த்தை சொன்னாள்:"உபேந்த்ரனே! க்ருஷ்ண! த்வாரகைக்குச் செல். பாரிஜாதத்தையும் எடுத்துச் செல். மாட்டுப்பெண் (மருமகள்) (ஸத்யபாமையின்) ஹ்ருதயத்திலிருக்கும் புண்யம் எனும் வ்ரதத்தை நன்கு நடத்தி வை. புருஷச்ரேஷ்டா! க்ருஷ்ண! ஸத்யபாமையால் "புண்யக" வ்ரதம் நடத்தப்பட்டதும், இந்த வ்ருக்ஷம் (இங்கு) நந்தன வனத்தில் அது இருக்க வேண்டியவிடத்தில் திரும்ப உன்னால் வைக்கத் தக்கது". தர்ம குணங்கள் கொண்ட தேவமாதா புகழ் பெற்ற அதிதி தேவி க்ருஷ்ணனால் "இப்படியே ஆகட்டும்" என்று சொல்லப்பட்டாள்.

பிறகு ஜனார்த்தனன் மாதா பிதாக்களையும் இந்த்ராணியுடன் மஹேந்த்ரனையும் வணங்கி அபிவாதனம் செய்து பின்பு த்வாரகை நோக்கிப் புறப்பட்டான். குரு நந்தன ஜனமேஜயனே! தர்ம வழியில் நிற்கும் இந்த்ராணி க்ருஷ்ணனது எல்லா பார்யைகளின் பொருட்டு உபகாரங்களைக் கொடுத்தாள். நல்ல மனதுடைய இந்த்ராணிதேவி நானாவித ரகங்கள் கொண்ட சிறந்த எல்லா ரத்னங்களையும் ஸதா அழுக்கற்றதாகவிருக்கும் வஸ்த்ரங்களையும்மாதவனின் பதினாறாயிரம் பார்யைகளுக்கும் கொடுத்தாள். மஹாதேஜஸ்வி க்ருஷ்ணன் அவற்றையேற்றுக் கொண்டு த்வாரகைக்குச் சென்றான். ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் புண்யம் செய்த ப்ராணிகளால் நன்கு பூஜிக்கப்பட்ட தேஜஸ்வீ க்ருஷ்ணன் ஸாத்யகியுடனும், மகன் ப்ரத்யும்னனுடனும் ரைவத மலையையடைந்தான். அந்த க்ருஷ்ணன் அங்குச் சிறந்த பாரிஜாத வ்ருக்ஷத்தை நிறுத்தி, வாசல்களால் ப்ரகாசிக்கும் த்வாரகைக்கு ஸாத்யகியை அனுப்பினான். ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னான்: "பீமகுலத்தை மேன்மைப்படுத்த வந்தவனே! மஹாபாஹோ! ஸாத்யகீ! என்னால் மஹேந்த்ரன் மாளிகையிலிருந்து பாரிஜாதம் இங்குக் கொண்டு வரப்பட்டது என்று பீம குலத்தவருக்குத் தெரியப்படுத்து. இப்போது நான் பாரிஜாத மரத்தை த்வாரகைக்குள் எடுத்து வரப்போகிறேன். நகரில் மங்களகரமான சோபாலங்காரங்கள் செய்யப்படட்டும்".

ப்ரபோ! ஜனமேஜயனே! இப்படிச் சொல்லப்பட்ட ஸாத்யகி சென்று அப்படியே சொல்லி ஸாம்பன் முதலிய க்ருஷ்ணனன் பிள்ளைகளுடனும் நகர மக்களுடனும் திரும்பி வந்தான். பிறகு தேரோட்டிகளில் சிறந்த ப்ரத்யும்னன் பாரிஜாத மரத்தைக் கருடன் மேலேற்றி அழகிய த்வாரகையில் முன்னாக அப்போது புகுந்தான்.

ஜனமேஜயராஜனே! பிறகு க்ருஷ்ணன் சைப்யன் முதலியவர்களுடன் குதிரைகள் பூட்டப்பட்ட தேரிலேறிப் பின் தொடர்ந்தான். அவனுக்குப் பின்னர் ஸாத்யகி, சாம்பன் மற்ற வ்ருஷ்ணி குலத்தவரும் பல திறப்பட்ட வாகனங்களில் மஹாத்மா க்ருஷ்ணனின் அரிய செயலைக் கௌரவித்துக் கொண்டு மகிழ்ச்சி கொண்டவராய்ப் பின் தொடர்ந்து சென்றனர். யாதவர்களும் அப்படியே நகர மக்களும் ஸாத்யகியினிடமிருந்து (வ்ருத்தாந்தத்தை) விஸ்தாரமாகக் கேட்டு அளவுபடாத க்ருஷ்ணனின் அரிய செயலால் மிகுந்த ஆச்சர்ய மடைந்தனர்.

ஜனமேஜயராஜனே! அந்தத்திவ்ய புஷ்பங்களையுடைய வ்ருக்ஷத்தைப் பார்த்து த்வாரகாவாஸிகள் பெரிய மேன்மையைக் கண்டு ஸந்தோஷப்பட்டவராய் திருப்தி அடங்காது மேலும் மேலும் ஸதா அளவற்ற மகிழ்ச்சி கொண்டிருந்தனர். அத்புதமான எண்ணற்கரிய மதங்கொண்ட விளையாட்டுக்களால் சப்தமிடும் பறவைகளுடன் கூடிய அந்தப் பாரிஜாத மரத்தைப் பார்க்கும் வ்ருத்தர்களுக்கு மூப்பகன்றது (யௌவனம் மீண்டது). வனராஜ பாரிஜாதத்தின் மணத்தை முகர்ந்து நோயுற்றோர் நோயற்றோர். கண்ணிழந்தோர் நல்ல பார்வை பெற்றோர். பாரிஜாதத்தில் வஸிக்கும் வெள்ளைக் குயில்களின் இனிய குரலைக் கேட்டு த்வாரகா வாஸிகள் மகிழ்ந்த மனமுடையவரானோர். ஜனார்த்தனனையும் வணங்கினர். அந்த மரத்தின் அருகில் சென்ற மனிதர் நானாவித வாத்யங்களையும் இனிய கானங்களையும் கேட்டனர். மனிதர் தாம் மனதில் எண்ணின மணங்கள் எல்லாம் அப்போதே பாரிஜாதத்தில் பிறப்பதாக நுகர்ந்தனர்.

பிறகு யதுகுலதிலகன் அழகிய த்வாரகையில் புகுந்து மஹாத்மா வஸுதேவரையும் அப்படியே தாய் தேவகியையும் கண்டார். குருகுலாதிபதியான உக்ரஸேனனையும் தமையன் பலராமனையும் யாதவ வ்ருத்தர்களில் மரியாதைக்குரிய தேவர் போன்ற எல்லோரையும் முறைப்படி வணங்கி விடைபெற்று ஆதியந்தமற்ற பகவான் அச்சுதன் தன் மாளிகையை அடைந்தான். அந்த க்ருஷ்ணன் ச்ரேஷ்டமான பாரிஜாத மரத்தையெடுத்துக் கொண்டு ஸத்யபாமையின் மாளிகையை அடைந்தான். அந்த ஸத்யபாமாதேவி, மகிழ்ந்து உபேந்த்ரன் க்ருஷ்ணனை பூஜித்தாள். அந்த பாரிஜாத மஹாவ்ருக்ஷத்தையும் ஏற்றுக்கொண்டாள். பாரத ஜனமேஜயரே! அந்தப் பெரிய வ்ருக்ஷமும் வாஸுதேவன் ஸங்கல்பத்தால் சிறிதாக ஆகிறது. அந்தப் பெரிய ஆச்சர்யம் இங்கு உண்டாயிற்று. பாரதா! ஜனமேஜயனே! ஒரு ஸமயம்

(பெரிதாக) த்வாரகை முழுவதையும் மறைக்கிறது. ஒரு ஸமயம் கட்டைவிரல் அளவாகி கையால் தாங்கும்படி ஆகிறது. குருகுலதிலகா! ஜனமேஜயா! ஸத்யபாமை மனோரதத்தை அடைந்து ஆநந்தப்பட்டாள். "புண்யக" வ்ரதத்துக்காக வேண்டிய குருகுலத்தலைவா! ஜனமேஜயா! ஜம்பூத்வீபத்திலிருக்கும் வேண்டிய எல்லாம் பொருள்களும் மஹாத்மா க்ருஷ்ணனால் சேகரிக்கப்பட்டன. அப்போது உபேந்த்ரனும் வசீகரிக்கும் சக்தியுடையவனுமான அந்த ஜனார்த்தனன் ஸத்யபாமைக்கு உபேதேசிக்கப்பட்ட 'புண்யக' வ்ரதத்தில் தானம் பெறுவதற்காக எல்லா நற்குணங்களும் பொருந்திய நாரத முனிவரை நினைத்தார்.

அத்யாயம் 75 முற்றும்.



## அத்யாயம் 76

## ஸத்யபாமையின் புண்யகவ்ரதம்-க்ருஷ்ணன் நாரதருக்கு தானப்பொருள்-நிஷ்க்ரயம் கொடுத்து க்ருஷ்ணனை மீட்டல்- நாரதருக்கு க்ருஷ்ணன் வரம் அளித்தல்- பந்துக்களுக்குப் பாரிஜாத மரத்தைக் காட்டி ஸ்வர்க்கத்துக்கு திருப்புதல்

வைசம்பாயனர் சொன்னார் : குருகுலத்தவனே! பிறகு க்ருஷ்ணன் நினைத்த மாத்ரமே சொல்பவருள் சிறந்த செல்வர் நாரத முனிச்ரேஷ்டர் வந்து சேர்ந்தார். ராஜனே! ஜனமேஜயா! ஸ்ரீமான் வாஸுதேவன் முறைப்படி நாரதரைப் பூஜித்து தானங்கொள்வதற்காக முறைப்படி பக்தியுடன் வரித்தார். பாரத! பின்பு ஸமயம் வந்ததும் எல்லாம் ச்ருஷ்டித்தும் வியாபித்துமிருக்கும் தேவன் க்ருஷ்ணன் ப்ரிய ஸத்யபாமையுடன் ஸ்நாநம் செய்து வந்த மஹாமுனி நாரதரை மாலைகளாலும் வாஸனைப் பூச்சுக்களாலும் பூஜித்து எல்லோரும் விரும்பத்தக்க போஜனத்தை மகிழ்ச்சி கொண்ட உள்ளன்புடன் உண்பித்தார். ஸௌபாக்யவதி ஸத்யபாமா பிறகு க்ருஷ்ணன் கழுத்தில் பூமாலை அணிவித்து வனராஜனை பாரிஜாத மரத்தில் க்ருஷ்ணனைக் கட்டினாள்.

பிறகு தேவி ஸத்யபாமை அனுஜ்ஞை பெற்று நாதரதருக்குத் தாரை வார்த்துக் கொடுத்தாள். ஆயிரம் பசுக்கள் ஸ்வர்ணமலை, மணிகள், ரத்னங்கள், எள் கலந்த தான்யங்கள் இவையோடு தங்கம், வெள்ளி நாணயங்கள் கலந்து கொடுத்தாள். முனிச்ரேஷ்டர்

நாரதர் அந்த எல்லாவற்றையும் ஏற்று மீண்டும் உண்டு மிகமிக மகிழ்ச்சி கொண்டு கேசவனைத் குறித்துச் சொன்னார்: ஐயா! கேசவா! நீ என்னுடையவன். ஸத்யபாமையால் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்டவன். அத்தகைய நீ என் பின் வா. நான் எதை சொல்கிறேனோ அதைச் செய். மதுஸூதனை 'இது முதல் கார்யம்' என்று சொன்னான். ஜனார்த்தனன் க்ருஷ்ணன் செல்லும் நாரதரைப் பின் தொடர்ந்து சென்றான். பரிஹாஸத்தில் ஸமர்த்தரான நாரத முனிவர் பலவித பரிஹாஸங்கள் செய்து "க்ருஷ்ணா! நில், நான் போகிறேன்" என்று இவ்விதம் சொல்லி பிறகு இவனைக் குறித்துச் சொன்னார் : அப்பா உனக்கு ஈடான க்ரயமாக எனக்கு உன்னுடன் கூடிய பொன் நிறப் பசுவைக் கொடு. அத்துடன் எள் நிறைந்த பொன்னுடன் கூடிய மான் தோலையும் கொடு. இதில் இந்த ஈடு காளைக் கொடியோன் சிவபிரானால் தீர்மானிக்கப்பட்டு இருக்கிறது.

ஜனமேஜயராஜனே! ஹ்ருஷீகேசன் க்ருஷ்ணன் "அப்படியே" என்று சொல்லி அப்படியே செய்தான். அந்த மதுஸூதனன் சிரித்து முனிச்ரேஷ்டரைக் குறித்துச் சொன்னான் :"தர்மமறிந்தவரே! நாரதரே உமக்குவேண்டிய வரத்தைக் கேளும். தர்மமறிந்தவரே! அதை உமக்குக் கொடுப்பேன். எனக்கு உம்மிடம் பரம ப்ரீதியல்லவா!"

நாரதர் சொன்னார் : புராதனனே! விஷ்ணோ! மிக்க மதியுடையவனே! தாங்கள் எப்போதும் என்னிடம் ப்ரீதியுள்ளவராகவேயிருக்க வேண்டும். உமது அநுக்ரஹத்தால் உமது லோகத்தில் எனக்கு இருக்குமிடம் வேண்டும். நாராயணா! ஸாதுக்களுக்குக்கதிபதியே! நான் பிறப்பின்றியிருக்க வேண்டும். அப்படி ஜன்மம் ஏற்பட்டால் விப்ரனாயிருக்க வேண்டும்.

பாரத! ஜனமேஜயா! விஷ்ணுதேவன் "இப்படியே (நீர் விரும்பியபடி) ஆகட்டும்". என்று சொன்னார். பிறகு முனிச்ரேஷ்டர் புத்திமான் நாரதரும் மகிழ்ந்தார். குருகுலத்தோனே! ஜனமேஜயா! ஹரிக்கு ப்ரியமான ஸத்யபாமையால் ஒப்பற்ற தேஜஸ்வீ விஷ்ணுவின் பதினாறாயிரம் பெண்டிர் (புண்யக) வ்ரதத்துக்காக வரிக்கப்பட்டனர். ஜனமேஜயராஜாவே! ஹரிப்ரியையான ஸத்யபாமை முன்னர் இந்த்ராணியால் க்ருஷ்ணனுக்குக் கொடுக்கப்பட்ட பஹுமானத்தை, அவர்கள் ஒவ்வொருவருக்கும் கொடுத்தாள். குருநந்தன! பிறகு அப்போது பாரிஜாதம் அங்கிருந்து ப்ரஸித்தியடைந்தது. வாஸுதேவன் க்ருஷ்ணன். நியமனத்தால் மஹாத்மா நாரதரால் எல்லா கணங்களும் அழைக்கப்பட்டனர்.

மஹாத்மா கேசவனால் பாரிஜாதத்தின் மேன்மையை எலலோரும் கண்டனர். மஹாதேஜஸ்வி ஹரி க்ருஷ்ணன், த்ரௌபதி, குந்தி, சுபத்ரா இவர்களொடு பாண்டவர்களையும் வரவழைத்தான். குருகுலத்தவனே! பிள்ளையுடன் (சிசுபாலனுடன்) தாய் ச்ருதச்ரவை, பீஷ்மகன் அவன் பிள்ளைகள் ஸ்நேஹிதர் ஸம்பந்திகள், இவர்களையும் மற்றவர்களையும் வரவழைத்தான். ஜனமேஜயராஜனே! மஹாதேஜஸ்வி ஜனார்தனன் குந்தி மகன், பல்குனன் அர்ஜுனனுடன் அந்தப்புர பரிவாரத்துடன் ஸந்தோஷமாக இருந்தான். விசேஷ சோபையுடன் வஸித்தான்.

பிறகு கேசி வதம் செய்தவன், ஸர்வச்ருஷ்டிகர்த்தா, ஜனார்த்தனன் ஒரு வருஷம் கழிந்ததும் திரும்ப பாரிஜாதத்தை ஸ்வர்க்கத்தில் கொண்டு சேர்த்தான். அங்கு அளவிட முடியாத பராக்ரமன், புத்திமான், ப்ரபு க்ருஷ்ணன் இந்த்ரனுடன், தன் தாய் அதிதியையும், தந்தை கஸ்யபரையும் பார்த்தான். பிறகு தாய் அதிதி வணங்கின க்ருஷ்ணனைக் குறித்துச் சொன்னாள்: "தேவச்ரேஷ்டனே! ஜனார்த்தனா! உங்களுள் ஸஹோதர வாத்ஸல்யம் இப்படி ஸதா இருக்கட்டும். நீ இந்த என் மனோரதத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்". பிறகு ஸர்வாத்மகன் ஸ்ரீக்ருஷ்ணன், "அப்படியே" என்று சொன்னான்.

மஹாதேஜஸ்வி க்ருஷ்ணன் பெற்றோரிடம் விடைபெற்று, தேவேந்த்ரனை நோக்கி ஸமயோசிதமான இந்த வார்த்தை சொன்னான்: "கௌரவம் கொடுப்பவனே! தேவேந்த்ரா! மஹாத்மா மஹாதேவன் சிவனால் பூமியின் உள் ப்ரதேசத்தில் கொல்ல முடியாத அஸுரர்களைக் குறித்து சொல்லப்பட்டுள்ளேன்". ஆதலால் இன்று முதல் பத்து தினங்களுள், அங்கிருக்கும் அஸுர ச்ரேஷ்டர்களைக் கொல்வேன். ச்ரேஷ்டனான மஹாவீர ஜயந்தனும் அஸுரர்களைக் கொல்லும் விருப்பத்துடன் என்னுடனிருக்கட்டும். இதில் (இந்தப் போரில்) ஒருவன் மனித வடிவங்கொண்ட தேவன், மற்றொருவன் தேவகுமாரன். ப்ரஹ்மாவின் வரத்தால் கர்வங்கொண்ட அவர்கள் தேவர்களால் கொல்லத் தகாதவர்கள் அல்லவா! மனிதத் தன்மையடைந்த நம்மாலல்லவா கொல்லத் தக்கவர். ஜனமேஜயரே! பிறகு இந்த்ரன் ப்ரீதியடைந்து "அப்படியே!" என்று க்ருஷ்ணனிடம் சொன்னான். இரண்டு தேவர்களும், ஒருவருக்கொருவர் தழுவிக் கொண்டனர்.

அத்யாயம் 76 முற்றும்.



## அத்யாயம் 77

### புண்யகவ்ரதத்தின் விதி செப்புதல்

ஜனமேஜயர் சொன்னர் : விப்ரச்ரேஷ்டரே! வைசம்பாயனரே! எனக்கு புண்யக வ்ரதங்களின் உத்பத்தி சொல்ல வேண்டும். வ்யாஸ பகவான் அனுக்ரஹத்தால் எல்லாம் உம்மால் அறியப்பட்டதல்லவா! வைசம்பாயனர் சொன்னர் : "தர்மசீலரில் சிறந்தோனே! ஜனமேஜயராஜனே! முன்னர் உலகில் உமாதேவியால் சொல்லப்பட்ட புண்யக வ்ரத அனுஷ்டான முறையைக் கேளும்! எளிதில் எதையும் செய்து முடிக்கும் க்ருஷ்ணனுல் பாரிஜாதம் ஸ்வர்க்கத்திலிருந்து எடுத்துச் செல்லப்பட்டதும், முனி ச்ரேஷ்டர் புத்திமான் நாரதர் த்வாரகைக்கு வந்தார். பாபமற்றவரே! ராஜச்ரேஷ்டரே! ஜனமேஜயரே! மஹாதேவன் ஆஜ்ஞையால் தேவாஸுர யுத்தம் நடந்தது. கொடிய அறுபுர வதம் நிகழ்ந்தது. ராஜனே! க்ருஷ்ணனுடன் கூடியமர்ந்திருக்கும் தர்மஜ்ஞரில் சிறந்த நாரதமுனிவரை, பீஷ்மக புத்ரி ருக்மிணி வினவினுள். ராஜனே! அங்கு ஜாம்பவதி தேவி அழகிய ஸத்யபாமை காந்தார ராஜபுத்ரி யோகயுக்தா அப்படியே க்ருஷ்ணனின் மற்ற பத்னிகளும், தர்மத்தில் நோக்கும் தர்மத்தில் ஒழுக்கமும் பொருந்திய பதிவ்ரதைகளுமான க்ருஷ்ணனது மற்ற தேவிகளும் வந்து சேர்ந்தனர். ருக்மிணி சொன்னுள் : "தர்மசீலனும் தர்மஜ்ஞருமானேரில் சிறந்த நாரதமுனிவரே! நீர் புண்யக வ்ரதங்களின் உத்பத்தியை பாக்கியின்றி சொல்ல வேண்டும். பேசுவோரில் சிறந்தவரே! முறை அதன் பலன் அப்படியே, தானம் செய்ய வேண்டிய ஸமயம், அதை முடிக்கும் விதம் இவையெல்லாம் சொல்லவேண்டும். எங்களுக்கு (அதைக் கேட்பதில்) உத்ஸாஹம்.

நாரதர் சொன்னர் : "விப்ரராஜன் மகளே! தர்மமறிந்தவளே! பாபமற்றவளே! முன்னர் என்னுல் சொல்லப்பட்ட புண்யக வ்ரத விதியை ஸபத்னிகளுடன் கூடிக் கேள். ருக்மிணி தேவீ! பாவன வ்ரதங்களை அனுஷ்டிக்கும் உமாதேவி புண்யக வ்ரதத்தைச் செய்தாள். பிறகு வ்ரத முடிவில் அவளுடைய தோழியர் வரிக்கப்பட்டனர். ஜனமேஜயராஜனே! குருகுலதிலகே! எளிதில் எதையும் செய்யவல்ல தக்ஷனுடைய பெண்கள் அதிதி முதலிய எல்லாப் பெண்களும், உலகில் பதிவ்ரதையெனப் புகழ் பெற்ற, புலோமா புத்ரி இந்த்ராணி தேவி சந்த்ரனின் ப்ரிய பத்னி பதிவ்ரதை, மஹாபாக்யவதி ரோஹிணி தேவி (நக்ஷத்ரங்கள்) பூர்வ பல்குனி, ரேவதி சதபிஷக், மகம், இவர்களால் மஹாதேவி

பதிவ்ரதை உமா ஆராதிக்கப்பட்டாள். பார்த! ஜனமேஜயனே! கங்கை, ஸரஸ்வதி, வேணி, கோதாவரி, வைதரணி, கண்டகி மற்றும் அழகிய நதிகள் லோபாமுத்ரா ஜகததைத் தரிக்கப் பண்ணும், மற்ற பதிவ்ரதையான மங்களகரமான பெண்கள் எல்லோரும் வந்தனர். மங்களகரமான கிரி மலைபெண்டிர் அக்னிமகளிர், அக்னிக்கு ப்ரிய மஹிஷி ஸ்வாஹா தேவி, புகழ் படைத்த ஸாவித்ரி தேவி குபேரன் ப்ரியை ருததி தேவி, வருண பத்னி, யம பத்னி, வஸு பத்னிகள் ஹ்ரி, ஸ்ரீ, த்ருதி, கீர்த்தி, ஆசா, மேதா, ப்ரீதி, மதி, க்யாதி, ஸந்நீதி, தவச் செல்வ தேவிகள் எல்லா ப்ராணிகளின் ஹிதத்திலும் நோக்குடைய மற்றும் நல்ல வ்ரதங்களுடைய தேவிகள் ஆகிய அந்த எல்லாப் பெண்களுக்கும் அப்போது வ்ரத முடிவில் பார்வதிதேவி பூஜை செய்தாள்.

துடியிடையாளே! ருக்மிணீ! எள், ரத்ன மயமான எல்லா தான்யங்கள் கொண்ட மலையை, நானுவித ஆடை ஆபரணங்களுடன் கொடுத்தாள். பார்வதியால் கொடுக்கப்பட்ட அந்த பூஜையை ஏற்றுக் கொண்டு தவச்செல்வரான பதிவ்ரதைகள் அமர்ந்து விசித்ரமான கதைகளைப் பேசினர். பர்த்தாவைக் கடவுளாகக் கொண்டவளே! ருக்மிணி தேவீ! அவர்களுள் புண்யக வ்ரதத்தைப் பற்றிக் கதைகள் சொல்லப்பட்டன. பார்வதி தேவியும் புண்யக வ்ரத விதியைச் சொன்னுள்.

அந்த எல்லா பதிவ்ரதைகளின் அபிப்ராயப்படி ப்ரதிநிதியாக ஸோமன் புத்ரி அருந்ததி உமாதேவியை புண்யக வ்ரத விதியை வினவினுள். விதர்ப்ப புத்ரி ருக்மிணி தேவி! அப்போது எல்லா ப்ராணிகளின் ஹிதத்தில் நோக்குடைய உமாதேவி என் முன்னிலையில் அப்பத்னிகளின் ப்ரியத்திற்காகப் புண்யக வ்ரதங்களைப் பற்றிக் கூறினுள். மங்களகரமானவளே! ருக்மிணிதேவீ! அந்த ரத்னக் குவியல் மலை உமையால் எனக்குக் கொடுக்கப்பட்டது என்னுலும் ஏற்கப்பட்டு ப்ராஹ்மணர்களுக்கே கொடுக்கப்பட்டது. மங்களகரமானவளே! கல்யாணியே! ருக்மிணிதேவீ! உமாதேவி பதிவ்ரதை அருந்ததியை எதிர் நோக்கிச் சொன்னதைச் சொல்வேன். எல்லோருடனும் கூடிக் கேள். சுபே! ருக்மிணிதேவீ! புண்யக வ்ரதத்தின் முழு முறையை க்ரமப்படி ஒன்று விடாமல் என்னுல் காணப்பட்ட ப்ரகாரம் நீ கேட்பாயாக.

அத்யாயம் 77 முற்றும்.

## அத்யாயம் 78

## உமாதேவி பதிவ்ரத ஸ்த்ரீயின் மேன்மையைக் கூறி "புண்யக வ்ரத" நியமங்கள் விதித்தல்

உமாதேவி சொன்னாள் : அழகிய புன்சிரிப்புடைய அருந்ததி தேவீ! எனது பர்த்தாவின் அனுக்ரஹத்தால் எல்லாமறிந்தவளான எனக்கு முற்காலத்தில் சுபமான புண்யக வ்ரதம் உபதேசிக்கப்பட்டு அனுஷ்டிக்கப்பட்டது. அருந்ததி தேவீ! புண்யக வ்ரத விதி பழமையானது என்று மனதில் கொள்ளப்பட்டது. மஹாதேவன் அனுக்ரஹத்தால் என்னால் காணப்பட்டது. குற்றமற்றவளே! புத்திமான் பகவான் சிவபெருமானின் அனுமதியால் எல்லாப் புண்யக வ்ரதங்களையும் அனுஷ்டித்து வருகிறேன். பதிவ்ரத்யம், தர்மானுஷ்டானம், இவை இரண்டும் அவளுக்கு (புண்யக மனுஷ்டிப்பவளுக்கு) எப்போதும் குறைவுபடாமலிருக்கும். இந்த புண்யக விதி பழைய ரிஷிகளால் சொல்லப்பட்டுள்ளது.

மங்களகரமானவளே! அருந்ததீ! பதிவ்ரத்யம் அற்றவருக்கு தான உபவாஸங்களால் புனிதமான நற்பலன் கொடுக்கும். புண்யக வ்ரதங்களும் பலனற்றனவாக ஆகின்றன. ஒழுக்கம் கெட்ட பெண்களும் ஒழுங்கீனத்தால் பர்த்தாவை வஞ்சித்து புண்யக வ்ரத பலனை அனுபவிப்பதில்லை. நரகில் அழுந்துவர். பதியைத் தேவதையாகக் கொள்பவர் நல்லொழுக்கமுடையவர் பதிவ்ரத்ய நெறியில் நிற்பவர், ஸதா தர்மத்திலேயே நிலைத்திருப்பவர், பதியைத் தவிர வேறொன்றை எண்ணாதவர், இத்தகைய பெண்கள் உலகை நிலைக்கச் செய்கின்றனர். வாக் தோஷமில்லாதவர், உள்ளும் புறமும் மனோதிடமுடையவர், மங்களமான வ்ரதங்களையுடையவர், எப்போதும் நல்வார்த்தை பேசுபவர் இத்தகையவர் உயிரைத் தரிக்கிறார்களல்லவா? நோயுற்றவன், ஒழுக்கமற்றவன், எளியவன், இத்தகையவனைப் பர்த்தாயிருந்தாலும் பெண்களால் எப்படியும் விடத்தக்கவனல்லன். இந்தத் தர்மம் மிகப் பழையது.

மங்கள முகத்தவளே! அருந்ததீ! அகார்யங்களைச் செய்பவனையும், பதிதனையும், நிர்குணனையும் உள்ள பர்த்தாவையும் தன்னையும் பதிவ்ரதை பவக்கடலைத் தாண்டச் செய்கிறாள். மிகப் பழமையளே! அருந்ததீ! ஒழுக்கங் கெட்டவளுக்கு பாபக் கழிவு வழியில்லை. அவள் அழிந்தவளே! வாக்தோஷத்துக்கு ஸாதுக்களால் ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டுள்ளது. ஸத்யத்தைக் கடைப்பிடிப்பவளே! அருந்ததீ! நல்ல கதியை விரும்பும் பெண்ணால் வ்ரதமோ, உபவாஸமோ, எப்போதும் பர்த்தாவின் அனுமதியின் பேரிலேயே செய்ய வேண்டும்.

ஒழுக்கங்கெட்டால், அந்தப் பெண் ஆயிரங் கல்பங்களிலும், நல்ல கதியடையமாட்டாள். ஆயிரக்கணக்கான ம்ருக ஜன்மங்களில் அழுந்துகிறாள். புத்தி கெட்ட ஒழுக்கங் கெட்ட பெண் மனித ஜன்மமடைந்தாலும் சண்டாள குலத்தில் நாய் மாம்ஸம் திண்பவளாகப் பிறப்பாள். தவச்செல்வியே! அருந்ததீ! பெண்களுக்கு எப்போதும் பர்த்தாவே தெய்வம். (இது) ஸாதுக்களால் காணப்பட்டது. எவளிடத்தில் அவள் பர்த்தா ஸந்தோஷமடைகிறானோ, அந்தப் பெண்ணே தர்மானுஷ்டனமுள்ளவள். ஒழுங்கீனத்தில் குதூகலமுடைய, கெடுக்கப்பட்ட ஸ்த்ரீகளுக்கு நல்லுலகில்லை. பர்த்தாவிடத்திலேயே நல்லெண்ணத்துடன் மனது நிலைபெற்றிருக்கிற பெண்களுக்கு நல்லுலகுண்டு. சீலமுடையவளே! அருந்ததீ! மனோவாக்காயங்களால் புருஷனை மீறி நடக்காத பெண்களுக்குப் புண்ய பலமுண்டென்று, புண்யக வ்ரதங்களால் சொல்லப்பட்டுள்ளது.

ஸ்வர்க்கத்துக்கும் சோபை கொடுப்பவளே! (அருந்ததீ!) என் தவத்தால் அறியப்பட்ட புண்யக விதி முழுமையும் எல்லோருடன் கேட்பாயாக. ஹிதத்தில் உறுதியுடையவளே! அருந்ததீ! பதிவ்ரதை ஸ்த்ரீ அதிகாலை எழுந்து ஸ்நானம் செய்து, உபவாஸத்தின் பொருட்டும், வ்ரதத்தின் பொருட்டும் பதியை அனுமதி கேட்க வேண்டும். மாமியார், மாமனார் இருவரின் திருவடிகளையும் ச்ரேஷ்டனாகிய பர்த்தாவினுடைய திருவடிகளையும் வணங்க வேண்டும். தர்பத்துடனும், அக்ஷதையுடனும், செப்புப் பாத்ரத்தை நீர் சேர்த்து பசுவின் கொம்பைத் தருவையாக்கி, செப்புப் பாத்ரத்தை ப்ரதக்ஷிணமாக நீரில் நனைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு ஸ்நானம் செய்து சுத்தமான பர்த்தாவுக்கு அந்த ஜலத்தைக் கொடுக்க வேண்டும். பின்பு தனக்கும் தலையில் ப்ரோக்ஷிக்கச் செய்து கொள்ள வேண்டும். இந்த ஸ்நானம் மூவுலகு புண்ய தீர்த்த ஸ்நானமாகச் சொல்லப்படுகிறது. பெண்கள் திலகமே! (அருந்ததீ)! உபவாஸங்களிலும், வ்ரதங்களிலும் இந்த ஸ்நானம் செய்யத்தக்கது. இந்த ஸ்நானம் ஸ்த்ரீகளுக்கும் புருஷர்களுக்கும் பொதுவானது. அருந்ததீ! மஹாதேவர் தேஜஸ்ஸாலும் எனது தவத்தாலும் காணப்பட்டது. வேறு சில வ்ரதங்களுக்குப் போன்று முள் படுக்கையும், முள் ஆஸனங்களும் கூடாது. (தன்) கால்களைத் தானே அலம்பிக் கொள்ள வேண்டுமென விதிக்கப்பட்டுள்ளது. பதிவ்ரதை அருந்ததீ! கண்ணீர் விடுதல், கோபம், கலகம் செய்யப்பட்டால் பெண்களை உபவாஸத்திலிருந்து உடனே நழுவச் செய்கிறது. சந்த்ரன் குமாரீ! அருந்ததீ! உபவாஸத்திலும், வ்ரதத்திலும் எப்போதும் வெண்ணிற ஆடையே

ச்ரேஷ்டமானது. தனிப்பட்ட உள்ளாடையும், ச்ரேஷ்டமானது. வ்ரதத்திலும் உபவாஸத்திலும் புற்களால் பாதுகை செய்து கொள்ளத்தக்கது. உபவாஸத்திலும், வ்ரதத்திலும் இந்த விதியே விதிக்கப்பட்டுள்ளது. வ்ரத காலத்தும் உபவாஸ காலத்தும், மையிடுதல், மஞ்சள் பூச்சு, சந்தனப்பூச்சு, புஷ்பம் சூடுதல் இவை எப்போதும் விலக்க வேண்டும். பற்குச்சி உபயோகித்தல், சிரகால (பலகால்) ஸ்நானம், அழுக்குத் தேய்த்தல் இவை விலக்க வேண்டும். சுத்த கார்யங்கள் மண்ணால் செய்ய விதிக்கப்படுகிறது. வில்வப்பழம், த்ராக்ஷைப்பழம், நெல்லிக்கனி இவைகளாலும் மண்கலந்த ஜலத்தாலும் தலை சுத்தம் செய்தல் விதிக்கப்பட்டுள்ளது. அருந்ததீ! உடல், கால்கள் இவைகளில் எண்ணெய் தேய்த்துக் குளித்தல் விலக்கப்பட்ட நிலை ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டுள்ளது. மாடு, ஒட்டகம், கழுதை இவை கொண்டு ப்ரயாணம் விலக்கப்பட்டுள்ளது. (அப்படியே!) ஆடையில்லா ஸ்நானமும்,எப்போதும், வ்ரதத்திலும், உபவாஸத்திலும் விலக்கப்பட்டுள்ளது. சந்த்ரன் குமாரீ! அருந்ததீ! நதி ஜலமும், அருவி தீர்த்தமுமே ச்ரேஷ்டமானவை. முதலில் தாமரையுடன் கூடிய விஸ்தீர்ணமான மங்களகரமான தடாகத்திலாவது சென்று எப்போதும் எல்லாப்படியாலும் ஸ்நானம் ச்ரேஷ்டமானதல்லவா. இவை கிட்டாமல் போனால் ஸ்த்ரீ மறைவிடமிருந்து குட ஜலத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். புது குடங்கள் கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும். இந்த விதி மிகப் பழையது. சிர (பலதடவை) ஸ்நானம் செய்ய வேண்டியது. தவப் பலனை அடைவாள்.

அத்யாயம் 78 முற்றும்



## அத்யாயம் 79

### புண்யக வ்ரத ஸம்பந்த நியமங்கள்-தான வர்ணனை - புத்ர முதலிய வரங்களுக்கான வ்ரத நியம விதிகள்.

உமாதேவி சொன்னாள் : இந்த வ்ரத விதிமுழுவதாலும் பர்த்தாவைத் தெய்வமாகக் கொண்ட ஸ்த்ரீ அடக்கமுடையவளாய் ஒரு வருஷமாவது ஆறு மாதமாவது நடத்த வேண்டும். பதியோடொரு பதிவ்ரதா ஸ்த்ரீகளை வரிக்க வேண்டும். எனது தவநிலையால் இந்தச் சுபமான வ்ரத விதி என்னால் தானாகவே காணப்பட்டது. முலை வ்ரதமனுஷ்டானம் செய்யும் ஸ்த்ரீ எல்லாப் பெண்களுக்கும் நீர் வார்த்துத் தானம் செய்ய வேண்டும். அந்தப் பெண்களுக்குக் கால தேசம் அனுஸரித்து தானத்துக்கு (நிஷ்க்ரயம்) ப்ரதி பொருள் கொடுக்கவேண்டும். பிறகு மாதப் பின் பகுதி சுக்ல பக்ஷ

நவமி திதியில் தேவபூஜை செய்து வ்ரதத்தை முடிக்க வேண்டும். வ்ரதத்தின் ஸித்தியின் பொருட்டு ஆரம்பத்திலும், முடிவிலும் நிச்சயமாக அஹோராத்ரம் உபவாஸ வ்ரதம் செய்ய வேண்டும். அந்த வ்ரத முடிவு தினம் தனக்கும் பர்த்தாவுக்கும் க்ஷவரம் செய்து கொள்ள வேண்டும். (ஸ்த்ரீகளுக்கு நக மாத்ரம் செய்வித்துக் கொள்ள வேண்டும்) அத்தினம் வ்ரத முடிவு ஸ்நாநமும் வ்ரத முடிவு சடங்கும் செய்ய விதிக்கப்பட்டுள்ளது.

மங்களமே! அருந்ததீ! பிறகு கல்யாணம் போல் மங்கள ஸ்நாநம் விதிக்கப்பட்டுள்ளது. புண்ணியக வ்ரதம் முடிந்த பின் பூச்சூட்டலும் ஆடையாபரண அலங்காரமும் விதிக்கப்பட்டுள்ளது. பதிவ்ரதை மந்த்ரித்த குட ஜலத்தில் ஸ்நாநம் செய்து பதியின் திருவடிகளை வணங்கி மனதாலும் வாக்காலும் இந்த மந்த்ரம் சொல்ல வேண்டும். "ஜலதேவீ!" ரிஷிகளுக்கு வளர்ப்புத்தாய். ஆகாசத்தை ப்ரகாசப்படுத்துபவள். மங்களத்தைச் செய்பவள், தர்மத்தை வளர்ப்பவள், பொன் நிறத்தவள், ஒப்பில்லா மங்களமான ரஸத்தால் புனிதமாக்குபவள். இத்தகைய தேவீ, எனக்குக் கீர்த்தியைக் கொடுக்கட்டும்.

ஸர்வாங்க ஸுந்தரீ! அருந்ததீ! ஜலத்துக்கு ஏற்பட்ட இந்த மந்த்ரம் எல்லாவிடத்திலும் உபயோகப்படுவது. பெண்களுக்குப் பழமையாக விதிக்கப்பட்ட மந்த்ரங்கள் (இவை). என்னிடமிருந்து கேள் : "மங்களகரமானவள், குற்றமற்றவள், குணவதி, தர்மத்தோடிருப்பவள், ச்ரேஷ்டமான பர்த்தாவின் பணிவிடை செய்து அவனுடனிருப்பவள், மனோவாக்காயங்களாலும் தன் வசப்பட்ட உடலையுடையவளாகி, பர்த்தாவிக்குக் கோபத்தை யுண்டாக்காதவளாகவும் இருக்க வேண்டும். எப்போதும் ஸபத்னிகளுக்கு மேலானவள், மக்கட்பேறுடையவள், ஸௌபாக்யவதி, அழகிய ரூபமுடையவள், கைநிறைந்த தனமுடையவள், பிறருடைய சீர் குணத்தையே கூறுபவள். இத்தகையவளாக வேண்டும். தரித்ரமுடையவளாக ஆகக்கூடாது. எனது நாயகன் ப்ரிய முகமுடையவன், என்னை எதிர்பார்ப்பவன், எப்போதும் என்னிடம் அன்பு உடையவன், என்னிடமே மனதுடையவன், என்னையே கதியாகவுடையவன். இங்ஙனம் ஆகவேண்டும். சக்ரவாஹ பக்ஷி போன்று எங்களுக்குள் ப்ரீதியுண்டாகட்டும். மனதில் அப்ரீதியுண்டாகக் கூடாது. நல்ல விதமாகயிருக்க வேண்டும். பிதாவினதும், கணவனதும் ஆகிய இரண்டு குலங்களையும் பதி பக்தியால் ஜயித்துப் புனிதப்படுத்தும். ... விளங்கும் உத்தம பதிவ்ரதைகளான

மங்களகரமான பெண்கள் செல்லும் உலகை அடைவேனுகவும். பூமி, வாயு, ஜலம், ஆகாசம், அக்னி, அந்தர்யாமியான க்ஷேத்ரஜ்ஞன் (பரமாத்மா) ப்ரக்ருதி, மஹத்தத்வம், அஹங்காரம், இவைகள் எனக்குச் சாக்ஷியாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனர். இவர்கள் எனது நிச்சயமான இந்த வ்ரதத்தை நினைக்கக் கடவர்கள். ஸத்வம் முதலிய த்ரிகுணங்கள் கூடிய வினைப்பயன்கள் வித்துக்களாலான மனிதர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட இந்தச் சரீர வாழ்க்கை முறை (ஸ்ம்ருதிகளின்) நிர்மாணிக்கப்பட்டுள்ளது. த்ரிகுணங்கள் வினைப்பயன்கள் இவைகளுள் இருக்கும் இந்தத் தேவதைகள் எனது உறுதியான இந்த வ்ரதத்தில் எப்போதும் ஸாக்ஷியாயிருக்கட்டும். சந்த்ர சூர்யர், புண்ய ஸாக்ஷியாகிய யமன், எல்லாப் பத்து திசை பாலகர்களும், இந்த எனது ஆத்மாவும் எங்கும் உள்ள இவைகள் எனது வ்ரதத்தில் எப்போதும் ஸாக்ஷியாயிருக்கட்டும்.

வ்ரத ஆரம்ப முதல் இந்தப்பழைய மந்த்ரங்களால் எல்லா வ்ரத உபகரணங்களையும் மந்த்ரிப்பது பழமையாகச் சொல்லப்பட்டுள்ளது. சுபே! அருந்ததீ! பிறகு ஸ்நாநம் செய்து வஸ்த்ரங்களைத் தானே கத்தரித்துக் கணவனுக்குக் கொடுக்க வேண்டும். ஏதேனும் தடையால் தன்னல் கத்தரிக்கப்படாமல் போனல், வேறொரு புதிய வெண்ணிற சுத்தமான முக்ய வஸ்த்ரத்தைக் கொடுக்க வேண்டும். அந்த வஸ்த்ரத்துடன் தன்னல் கத்தரிக்கப்பட்ட நூல் கயிற்றையும் சேர்க்க வேண்டும்.

அழகிய இடையாளே! அருந்ததீ! பிறகு வைதிக, லௌகிக ஸமர்த்தரான, சுத்தமான, அடக்கமான விப்ரனைச் சக்திக்கேற்ப, பர்த்தாவுடன் உண்பிக்க வேண்டும். மஹா தபஸ்வியே! அருந்ததீ! விப்ரனுக்கு இரண்டு வஸ்த்ரம் கொடுக்கத்தக்கது. படுக்கை, ஆஸனம், க்ருஹம், தான்யம், பணியாள், பணிப்பெண், அலங்காரங்கள், மற்ற பொருளுடன் கலந்த ரத்ன மலைக் குவியல்கள், நானவர்ணங்கொண்ட ஆடைகள், யானை, குதிரைக் கூட்டங்கள், ஒரு பசு, எள், தான்யம் இவை சக்திக்கேற்ப கொடுக்க வேண்டும். உப்பு (குவியல்) போன்ற வெண்ணெய், வெல்லம், தேன், ஸ்வர்ணம் அப்படியே எல்லா வாஸனைப் பொருள்கள் த்ரவப்பொருள்கள், புஷ்பங்கள், வெள்ளி நாணயங்கள், எல்லாவித வஸ்த்ரங்கள், பழங்கள் சித்ரபடங்கள், மரப்ரதிமைகள், கற்ப்ரதிமைகள், தயிர், பால், நெய் குடங்கள், அருகம்புல்லுடன் சேர்த்தும், இன்னும் விரும்பும் பொருள்கள் எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும். பதிவ்ரதையே! அருந்ததீ!

எப்போதும் காலதேசத்துக்கேற்ப உனது செல்வத்துக்குத்தக குறைவோ! நிறைவோ! பர்த்தாவின் கருத்துக்கு ஒப்பக் கொடுக்க வேண்டும். எள் நிரம்பிய பாத்ரம் கொடுக்கத்தக்கது. மங்களமானவளே! அருந்ததீ! பர்த்தாவின் அப்ரியமாக (எதுவும்) கொடுக்க கூடாதல்லவா! கபில நிறப் பசுவும், வெண்கலப்பாத்ரமும் அவஸ்யம் கொடுக்கத் தக்கவை. ஸௌபாக்யவதியே! (அருந்ததீ) எள் வஸ்த்ரம் இவைகூடிய மான்தோல், கண்ணாடி, தர்ப்பாஸனம் அப்படியே மான்தோல் எல்லாம் கொடுக்கத்தக்கவை. குற்றமற்றவளே! ச்ரேஷ்ட நிறமுடையவளே! இவைகளைக் கொடுத்து, எல்லா விருப்பங்களையும் அடைகிறாள். இவள் ச்ரேஷ்டையானவள், மக்கட்பேறுடையவள், ஸௌபாக்யவதி, அழகி, கை நிறைந்தவள், செல்வம் மிக்கவள், நல்ல பார்வையுடையவள், நல்ல அழகிய குணவதிகளான பெண்களைப் பெறுவாள். பெண்கள் ஆச்சர்ய ஸௌபாக்யத்தையுடையவர்களாக ஆகின்றனர், முதன்மையர், மக்களுடையவர், செல்வம் நிறைந்தவர், எப்போதும் ஒழுக்கமுடையவர். அருந்ததீ! இந்த வ்ரதம் என்னாலேயே முதலில் செய்யப்பட்டது. அதனால் இந்தப் பூமியில் இது <u>உமாவ்ரதம்</u> என்றே ப்ரஸித்தி பெற்றது. குற்றமற்றவளே! (அருந்ததீ!) இதுதான் ஸ்த்ரீகளுக்குச் சிறந்த வ்ரதம், ஆதலால் (அவஸ்யம்) செய்ய வேண்டியது.

இந்த (வ்ரத) தானங்கள் கொடுத்து எல்லா விருப்பங்களையும் அடைகிறாள். அழகியவளே! அருந்ததீ! தேவதேவன் காளைக்கொடியோன் பரமசிவன். இந்த வ்ரதத்தைச் செய்விக்கச் செய்தவரேயல்லவா! என் ப்ரியத்திற்காக எல்லாம் செய்வித்தவராக முன்னர் என்னைப் பட்டாபிஷேகம் செய்வித்தார் [illegible] வ்ரத முடிவில் தினமும் ஆகாரம் கொடுக்கத் தக்கது. காலதேசத்துக்கு ஒத்த விருப்பங்கள் ஸ்த்ரீகளுக்கு அளிக்கத்தக்கவை. சிறந்த நிறமுள்ளவளே! அருந்ததீ! வ்ரத த்ரவ்யங்கள் ஒவ்வொருவருக்கும் தனியே கொடுக்கவேண்டும். ப்ராஹ்மணர்களுக்கோ அவர்கள் விருப்பப்படி, தக்ஷிணையொடு அன்னம் அளிக்கத்தக்கது. அந்த வ்ரதத்தில் பாயஸம் கொடுக்கத்தக்கது. இதைத்தவிர வேறொன்று விரும்பப்படுவதில்லை. இதில் ப்ராணி வதம் செய்யத்தக்கதில்லை. பழைய காலத்தில் வேதத்தில் சொல்லப்பட்டது.

சந்த்ரகுமாரீ! மங்களமானவளே! பிறகு <u>இரண்டாவது வ்ரதம்</u> சொல்வேன். மஹாதேவன் அனுக்ரஹத்தால் அனுபவத்தில் கண்டுள்ளேன். சுபே! அருந்ததீ! எல்லாப் பெண்களும், புத்ர பலனை அடைவார்கள். இது ஸாதுக்களால் சொல்லப்பட்டது.

ஆகையால் சிறிய பாத்ரத்துடன் கூடிய தீர்த்த கமண்டலங்களை (ஸாதுக்களைத்) தேடிக் கொடுக்கத்தக்கது. ஆனி, ஆடி இவை இரண்டும் சேர்ந்து வ்ரதத்துக்குச் சுபமான மாதங்கள். இந்த மாதங்களில் முன் சொல்லப்பட்ட முறை அனுஷ்டிக்க வேண்டும். இல்லாவிடில் தனி ஆனி மாதத்தில் மாத்ரம் தனி ஆடி மாதத்தில் மாத்ரமேயோ செய்து முடிக்கலாம். சிறந்த நிறமுடையவளே! அருந்ததீ! பிறகு (சேர்ந்து) இரண்டு மாதங்களுமோ அல்லது ஒரு மாதமோ (வ்ரதம்) முடிந்ததும், பானகம் நிறைந்த சிறிய பாத்ரம் சேர்ந்த கமண்டலங்களைத் தானம் செய்ய வேண்டும். சந்த்ரகாந்தியளே! பாபமற்றவளே! அருந்ததீ! நெய், பால், தயிர், தேன், ஜலம் இவற்றில் ஏதேனும் ஒன்றால் நிறைத்துக் கொடுக்கவேண்டும். ஞானத்தால் பெரியவன், நல்லொழுக்க முடையவன். மனதை அடக்கினவன், இத்தகைய ஒருவனுக்கு அவன் வேண்டுமளவு பாத்ரங்கள் கொடுக்க வேண்டும்.

வ்ரத ஸ்தரீ பெண் குழந்தை ஆசைப்பட்டால் ஸ்திரீகள் விரும்பும் பொருள்களை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். பெண்ணைப் பெறுவாள். ஸந்தேகமில்லை. பசுவோ, பொன்னோ, தக்ஷிணைக்கு விசேஷமாகச் சொல்லப்படுகிறது. அழகிய புன்சிரிப்பு டையவளே! அருந்ததீ! ப்ராஹ்மணனுக்கு ஆடை அவஸ்யம் கொடுக்க வேண்டும். புனித வ்ரதம் நடத்தும் ஸ்த்ரீ வ்ரதத்தில் பூணூல் தானம் செய்யவேண்டும். கற்ற பெரியோரால், இந்தச் சிறிய பாத்ர, கமண்டலங்கள் விதி சொல்லப்பட்டிருக்கிறது. ஸத்யம் பேசுபவளே! அருந்ததீ! அத்யந்த பாக்யமான யோகத்தால் தான் விரும்பும் பெண் ப்ரஜை, புருஷ ப்ரஜைக்கேற்ப, ஸங்கற்பம் செய்து கொண்டு முறைப்படியே ரோஹிணி முதலிய ஸ்த்ரீ லிங்க நக்ஷத்ரங்களிலும், புஷ்யம், ஹஸ்தம், திருவோணம் ஆகிய புல்லிங்க நக்ஷத்ரங்களிலும், வருஷ முடிவில் பர்த்தாவின் அனுமதி பேரில் புனித வ்ரத முடையவளாய் நன்கு நிறைந்த ஒரு வருஷ காலம், வ்ரத தர்மங்களை நடத்திக் கொண்டு (இறுதியில்) ப்ராஹ்மணர்களுக்குக் கமண்டலங்களையும், மற்றவையையும் தானம் செய்ய வேண்டும்.

ப்ராஹ்மணனுக்குத் தங்கப் பூணூல் பௌர்ணமி தினத்தில் கொடுக்கவேண்டும். காம்ய வ்ரதத்தை முடித்து, பூணூல் கமண்டலம் தக்ஷிணையுடன் கொடுத்தும் ஸ்த்ரீகளுக்கு வேண்டியதைக் கொடுத்தும், பதிவ்ரதை எல்லா விருப்பங்களையும் அடைகிறாள். ஸ்த்ரீ இவ்வாறு வ்ரதம் அனுஷ்டிக்கும் வரை

புது தான்யம் அல்லது புது பழம் எதுவும் சாப்பிடக்கூடாது. புஷ்பங்கள் சூட்டிக் கொள்ளக் கூடாது. தர்மமறிந்தவளே! ஒருவேளை ஆகாரங்கொண்டு புண்யக வ்ரதம் செய்ய வேண்டும். அப்படியே ப்ராஹ்மணனுக்கு அன்னதானம் செய்யத்தக்கது. அதற்குப் பிறகு பர்த்தாவுக்கும் கொடுக்கத்தக்கது. இவ்விதம் ஒரு வருஷகாலம் செய்து ரூபவதியாகவும் ஸௌபாக்யவதியாகவும் வைதவ்யமில்லாத வளாகவும் அப்படியே செல்வத்துக்குத் தலைவியாகவும், ஸ்த்ரீ ஆகிறாள். ஸ்த்ரீ வருஷ முழுவதும் கத்தரிக்காய் சாப்பிடக்கூடாது. அவள் புத்ர நாசத்தைக் காணமாட்டாள் என்பது அறியப்படட்டும். முயல், ம்ருக மாம்ஸம் எப்போதும் விலக்க வேண்டும். இந்த ஸ்த்ரீ மரணம் அடையமாட்டாள். பதியைத் தேவதையாக அடைவாள். சுரைக்காய், உத்பாதிகை (புழு பூச்சியடித்தவை) கலவைக்கீரை, தாமரைப் பூவின் கம்பிகள், அவைகளைப் பர்த்தாவின் சுகத்தை விரும்பும் ஸ்த்ரீ சாப்பிடக்கூடாது. (ஸ்த்ரீ) வருஷ முடிவில் ஒவ்வொரு காய்கறியாக ஆதரவோடு தக்ஷிணையோடு கூடத் தானம் செய்யவேண்டும். அவள் புத்ரவதியாகவும் முதன்மையானவளாகவும் ஆகிறாள். முதலிலிருந்தே தன் பாதங்களைத்தானே சுத்தம் செய்து கொள்ளும் ஸ்த்ரீ, எப்போதும் மேன்மையடைகிறாள். கோபமடைய மாட்டாள்.

தேவகாந்தியளே! அருந்ததீ! பதிவ்ரதையான ஸ்திரீ சூர்ய ஒளியுள்ள பகலில் போஜனம் கொண்டு ஜீவிக்க வேண்டும். இரவு போஜனம் விலக்கு. அந்த ஸ்த்ரீ தீர்க்காயுள்ள குழந்தைகளையுடையவள். ஸௌபாக்யவதி. ஸபத்னிகள் எல்லோரிலும் மேலானவள். இதில் ஸந்தேஹமில்லை. ஒரு வருஷம் முடிந்ததும், ஸ்வர்ணத்தாலான சிறந்த சூர்யப்ரதிமையை, ரூபவானை புகழ்பெற்ற ஏழை ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்யவேண்டும். வ்ரதம் முடித்தவள், பழங்கள் புஷ்பங்கள், பணியாரங்கள். சூர்யாஸ்தமனத்திற்கு முன்பு தானம் செய்யவேண்டும். வ்ரதம் நடத்தும் ஸ்த்ரீ சூர்யாஸ்தமனத்திற்குபின் உண்டால், சிறந்த நிறத்தவளே! அருந்ததீ! சந்த்ர நக்ஷத்ரங்களுக்கு நிவேதனம் செய்யப்பட்ட உணவுகளையும் தங்கமயமான அழகிய சந்த்ரன் நக்ஷத்ரங்கள், க்ரஹங்கள் இவைகளின் ப்ரதிமைகளையும், வஸ்த்ரங்களையும் ரூபவானை விப்ரனுக்குத் தானம் செய்ய வேண்டும். அவள் (வ்ரதம் செய்பவள்) சந்த்ரன் போன்ற குளிர்ந்த உடலுடையவள். தேவ காந்தியுடையவள், ஸௌபாக்யவதி போற்றும் ரூபமுடையவள், அழகியவள், புத்ரவதியாயும் ஆவார். பௌர்ணமியன்று சந்த்ரன் உதயமானதும் வ்ரத ஸ்த்ரீ தேவர்களுக்கு

குசாக்ஷதையுடன் அர்க்யம் கொடுக்கவேண்டும். தயிரோடு சேர்ந்த கோதுமை பலி (நிவேதனம்) கொடுக்கவேண்டும். எப்போதும் இவ்விதம் செய்பவள் எல்லா விருப்பங்களையும் அடைவள். பதிவ்ரதா ஸ்த்ரீ, மேகம் மூடிய நாளிலும் அல்லது மாசு இல்லா நாளிலும் சூர்யனைக் காணுமல் சாப்பிடாதவள், தான் விரும்பியவற்றையெல்லாம் அடைவாள். நல்ல மனமுடைய ஸ்த்ரீ சக்திக்கேற்ப ஸ்வர்ண தானம் விப்ரனுக்குச் செய்ய வேண்டும். ஸௌபாக்யவதி அழகுடையவள், தேவகாந்தியுடையவள் ஆவாள்.

அத்யாயம் 79 முற்றும்



## அத்யாயம் 80

## நானுவித வ்ரதங்களின் முறைகள்

பகவதி உமாதேவி சொன்னுள் :- அருந்ததீ! சுற்றிச் சுற்றி, புண்யகம், மற்ற வ்ரதங்களாலும் உடல் புனிதப்படத்தக்கது. இவைகளையும் பலன்களையும் சொல்வேன். க்ருஷ்ணுஷ்டமி திதியில் கிழங்கு, பழங்கள் உண்டு, ப்ராஹ்மணனுக்குத் தனது ஒருவேளை உணவைக் கொடுத்து பதியைத் தெய்வமாகக் கொண்டு, வெண்ணிற ஆடையுடுத்து, மங்களகரமான ஒழுக்கமுடைய வளாய், குரு தெய்வம் இவர்களைப் பூஜித்து இப்படி ஒரு வருஷ காலம் செய்து பிறகு ப்ராஹ்மணனுக்குப் பசுவின் வால் மயிர்க் கயிற்ருல் நன்கு செய்யப்பட்ட சாமரம், கொடி இவற்றோடு சிறந்த சாப்பாடு தக்ஷிணை இவற்றைச் சக்திக்கேற்பக் கொடுக்கவேண்டும்.

நல்லொழுக்கமுடையவளே! அருந்ததீ! பதியிடம் பக்தியுடைய அவளுக்கு சுருள்கள் கொண்ட முனை அழகிய பின் பாகம் வளர தொங்கும் கூந்தல் உண்டாகிறது. சிறந்த நிறத்தவளே! சிரஸ்ஸை ஸுகமாக வைக்க விரும்பும் ஸ்த்ரீ, கோமயத்தாலும், வில்வ பழத்தாலும் நெல்லிக்கனியாலும் செவிலித்தாய் உதவியால் தலை அழுக்கைப் போக்கிக்கொள்ளவேண்டும். எப்போதும் கோமூத்திரத்தைக் குடிக்கவேண்டும். தலை ஸ்நாநத்திற்குக் கோமூத்திரத்தை ஜலத்துடன் கலக்கவேண்டும். வைதவ்யமில்லாதவள், ஸௌபாக்யமுடையவள், ஜ்வரமில்லாதவள் ஆகிருள். தலை நோய்களால் இவள் தேஹம் பீடிக்கப்படுவதில்லை.

அழகிய புன்சிரிப்புடையவளே! அருந்ததீ! அழகிய நெற்றியை விரும்பும் பெண், ப்ரதமை திதியில் எப்போதும் ஒரு வேளை போஜனம் கொள்ளவேண்டும். ஒரு வருஷம் வரை பால் அன்னம் புசிக்க வேண்டும். பிறகு அழகிய வெள்ளி மயமான ஆடை ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்ய வேண்டும். அந்த ஸ்த்ரீ அழகிய இடையையும் நெற்றியையும் அடைகிறாள்.

பாபமற்றவளே! அழகிய புருவங்களை விரும்பும் பெண், த்விதீயை திதியில் காய் கறியோடு சேர்த்து சமைத்த அன்னத்தை ஒருவேளை புசிக்கவேண்டும். ஒரு வருஷமான பிறகு ப்ராஹ்மணனை ஆசி கூறச் செய்யவேண்டும். அவனுக்குப் பழுத்து அழகிய பழங்கள், உளுந்து உப்பு நிறைந்த ஸ்வர்ண பாத்ரம், நெய் நிறைந்த பாத்ரம், தானம் செய்ய வேண்டும்.

சுபே! அருந்ததீ! தனகு அழகிய காதுகளை விரும்பும் துடியிடை ஸ்த்ரீ ச்ரவண நக்ஷத்ரத்தன்று கோதுமை அன்னம் புசிக்க வேண்டும். ஒரு வருஷம் முடிந்த பிறகு தங்கதாலான காதுகளை பால் கலந்த நெய்யிலிட்டு விப்ரனுக்குத் தானம் செய்ய வேண்டும். வ்யாதியற்ற, நெற்றி வரை நீண்ட விகாரமில்லாத மூக்கை விரும்பும் ஸ்த்ரீ புஷ்பிக்கும் வரை எள்ளுச் செடிக்கு இடைவிடா உபசாரத்துடன் ஜலம் விட்டு எப்போதும் நனைக்க வேண்டும். அப்படிக் காப்பாற்றி அச்செடியிலிருந்து புஷ்பங்கள் எடுத்து நெய்யில் போட்டுத்தானம் செய்யவேண்டும்.

சந்த்ரகுமாரீ! அருந்ததீ! நல்ல கண்களை உடையவளாயிருக்க விரும்பும் ஸ்த்ரீ, பால் நெய் இடைவிடாது அருந்தி பிறகு வருஷ முடிவில் தாமரை இலைகளை அப்படியே நெய்தல் இலைகள் பாலில் வைக்க வேண்டும். பதிவ்ரதையே! அழகிய புன்சிரிப்புடையவளே! மிதக்கும் இலைகளை விப்ரனுக்குத் தானம் செய்ய வேண்டும். அதைக் கொடுத்து மான் விழியாள் ஆவாள்.
அழகிய உதடுகளை விரும்பும் தர்ம குணமுள்ள ஸ்த்ரீ, ஒரு வருஷம் மண் பாத்ரத்தில் நீர் அருந்த வேண்டும். நவமி திதியில் தான் யாசிக்காமல் (கிடைத்ததைக் கொண்டு) புசிக்க வேண்டும். பிறகு வருஷ முடிவில் பவழத்தைத் தானம் செய்ய வேண்டும். மங்களகரமானவளே! அருந்ததீ! அதனால் ஸ்த்ரீ கோவைப்பழம் போன்ற உதடுகளை உடையவளாகவே ஆவாள்.

ஸௌபாக்யவதீ! பிறகு நல்ல உடல், புத்ரன், தனம் அப்படியே பசுச்செல்வம் நிறைந்தவளாக ஆவாள். சேவாகாங்க்ஷியளே! அருந்ததீ! அழகிய ரூபமுடைய பற்களை

விரும்பும் ஸ்த்ரீ சுக்லாஷ்டமியில் இரண்டு வேளை சாப்பிடக் கூடாது. தர்மமறிந்தவளே! வருஷ முடிவில் பதிவ்ரதையான ஸ்த்ரீ வெள்ளியாலான பற்களை நல்ல குணமுள்ள பாலில் போட்டுத்தானம் செய்ய வேண்டும். பாபமற்றவளே! அருந்ததீ! அதனால் சுத்த ஸ்த்ரீ ஜாதி புஷ்பம் போன்ற பற்களை அடைகிறாள். ஸௌபாக்யத்தையும் புத்ர லாபத்தையும் அடைகிறாள்.

அழகிய முகத்தவளே! அருந்ததீ! முக முழுதும் அழகாகவிருக்க விரும்பும் ஸ்திரீ, பௌர்ணமியன்று ஸ்நாநம் செய்து மங்களமான சந்த்ரோதய ஸமயம் வந்ததும் அழகிய வ்ரத ஸ்த்ரீ, பாலில் சமைத்த கோதுமையைக் கொடுத்து, வருஷ முடிவில் வெள்ளியாலான மங்களரூபமுடைய சந்த்ரனை மலர்ந்த தாமரையில் வைத்து ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்து ஆசி கூறச் செய்ய வேண்டும். அந்தத் தானத்தால் மங்களமான ஸ்த்ரீ பூர்ண சந்த்ர முகத்தையுடையவள் ஆவாள். தேவ காந்தியுடையவளே! அருந்ததீ! நல்ல பனம் பழம் போன்ற ஸ்தனங்களை விரும்பும் ஸ்த்ரீ தசமி திதியில் மௌன வ்ரதத்துடன் எப்போதும் யாசிக்காமல் (கிடைத்ததைப்) புசிக்க வேண்டும். பிறகு வருஷ முடிவில் தங்கத்தாலான மங்களரூபமுடைய இரண்டு வில்வப் பழங்களை தக்ஷிணையுடன் மனமடக்கமுடைய ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்யவேண்டும். ஸௌபாக்யத்தையடைகிறாள். அப்படியே வெகு புத்ரர்களையும் அடைந்து அந்த ஸ்த்ரீ எப்போதும் உன்னதமான ஸ்தனங்களையுடையவள் ஆவாள்.

புண்யவதி! சுபே! அருந்ததீ! மெலிந்த வயிறு விரும்பும் ஸ்த்ரீ பஞ்சமி திதியில் தனிமையாக நீரில் ஆக்கிய அன்னத்தையே எப்போதும் புசிக்க வேண்டும். பிறகு வருஷ முடிவில் புஷ்பித்த ஜாதிக் கொடியைத் தக்ஷிணையுடன் மனவடக்கமுடைய ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்ய வேண்டும். மின்னிடையாளே! அருந்ததீ! அழகு பொருந்திய கைகளை விரும்பும் ஸ்த்ரீ குற்றமற்ற எல்லாவித காய்கறிகளாலும், துவாதசியன்று இவ்விதம் (முன் சொல்லியபடி) செய்ய வேண்டும். வருஷ முடிவில், தங்கத்தாமரையிலைகள் இரண்டு அழகான விப்ரனுக்கும் தானம் செய்ய வேண்டும். அப்படியே மங்களமான தாமரைப் புஷ்பங்களிரண்டையும் தானம் செய்யவேண்டும். நல்லொழுக்கமுடையவளே! அருந்ததீ! விசால பின்பாகத்தை விரும்பும் ஸ்த்ரீ, த்ரயோதசி திதியில் ஒரே வேளை யாசிக்காது (கிடைத்ததை) புசிக்க வேண்டும். ச்ரேஷ்டமான முகத்தவளே!

அருந்ததீ! வருஷ முடிவில் உப்புக் குவியலை ப்ரஹ்மாவின் முக ரூபத்தில் அமைத்துத் தானம் செய்ய வேண்டும். எப்போதும் அந்த ப்ரஹ்மாவின் முக வடிவம் கொண்ட தங்கப் பதுமையும் தானம் கொடுக்கத்தக்கது. அப்படியே தர்மமறிந்த ஸ்த்ரீ (வேறு ப்ராஹ்மண ஸ்த்ரீக்கு) கண்களில் மையிட வேண்டும். அழகியவளே! அருந்ததீ! சிறந்த ரத்னங்களையும், சிவப்பு வஸ்த்ரத்தையும் தானம் செய்ய வேண்டும். அதனால் ஸ்த்ரீ அழகிய பின் பாகத்தை யடைகிறாள்.

இனிய வாக்கை விரும்பும் ஸ்த்ரீ ஒரு வருஷமோ, ஒரு மாதமோ, உப்பை விலக்க வேண்டும். பிறகு உயர்ந்த இனிய வாக்கை விரும்பி ப்ராஹ்மணனுக்குத் தக்ஷிணையுடன் உப்பு தானம் செய்ய வேண்டும். தேவ நிறத்தவளே! அருந்ததீ! கிளியின் வாக்கைக் காட்டிலும் நூறு மடங்கு இனிமையான வாக்கை அடைவாள். சந்த்ரகுமாரி! சிறந்த இடையாளே! அருந்ததீ! மறைந்த மணிக்கட்டுடைய பாதங்களை விரும்பும் ஸ்த்ரீ ஷஷ்டி திதிதோறும் நீரில் ஆக்கிய அன்னம் புசிக்க வேண்டும். தபஸ்வியே! அருந்ததீ! எப்போதும் அக்னியையோ ப்ராஹ்மணனையோ காலால் தொடக்கூடாது. கால்பட்டால் அவனை வணங்கவேண்டும். பதிவ்ரதே! அருந்ததீ! பதியைத் தெய்வமாகக் கொண்ட தர்மமறிந்த இந்த நித்ய வ்ரதங்களுடன் கூடினவளான ஸ்த்ரீ காலால் கால் தேய்த்து அலம்பக் கூடாது. வெள்ளி ஆமைகள் இரண்டு செய்து, ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்ய வேண்டும். பாபமற்றவளே! ஊக்கமுடையவளே! அருந்ததீ! அவ்வாமைகளை வைத்து நல்ல ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்யவேண்டும். சந்த்ரகுமாரீ! இரண்டு தாமரைகளையும், கீழ் முகமாக வைத்து தங்கத்தால் அலங்கரித்து சிவப்பு நிறப் பொருள்களுடன் கலந்து விப்ரனுக்குத் தானம் கொடுக்கத்தக்கது.

தன் உடல் முழுதும் மனோஹரமாகவிருக்க விரும்பும் ஸ்த்ரீ ருஜஸ்வலா காலத்தில் பதியைத் தெய்வமாகக் கொண்ட ஸ்த்ரீ மூன்று இரவுகள் உபவாஸமிருக்க வேண்டும். ஆடி, ஐப்பசி, கார்த்திகை, மாசி மாத பௌர்ணிமை தினங்களில் மாதா, பிதா, அதிதி, குலதெய்வங்களையும் பூஜை செய்ய வேண்டும். பதியைத் தெய்வமாகக் கொண்ட ஸ்த்ரீ தினம்தோறும் நெய், உப்பு, தானம் [illegible] கொடுக்கட்டும். வீட்டை நன்கு சுத்தம் செய்யவும் வேண்டும். தர்மமறிந்தவளே! சுத்தமானவளே!. கௌரவமுள்ளவளே! [illegible] ஸ்த்ரீ வீட்டை மெழுகிச் சுத்தம் செய்து [illegible] சமைத்துப் பூஜா பலியன்னம்

கொடுத்தல் இரண்டும் செய்ய வேண்டும். துஷ்ட வார்த்தை சொல்லக்கூடாது. அழகியவளே! கீர்த்திவாய்ந்தவளே! அருந்ததீ! அந்த ஸ்த்ரீ ஏதேனும் ஒரு காய்கறி சாப்பிடவேண்டும். தேவதாபலி கொடுக்க வேண்டும். அஸத்யத்தை விலக்க வேண்டும்.

அத்யாயம் 80 முற்றும்.



## அத்யாயம் 81

### உமா மூலம் வ்ரத வர்ணனை முடிவு-நாரதர் மூலம் முக்கிய தேவதைகள் செய்த வ்ரதங்கள் வர்ணனை. க்ருஷ்ணன் பத்னிகள் செய்த வ்ரதங்கள்.

உமா தேவி சொன்னாள் : பதியைத் தெய்வமாகக் கொண்ட ஸ்த்ரீ, எப்போதும் நற்குணமுடைய பந்துக்களை விரும்ப வேண்டும். ஒவ்வொரு ஸப்தமி திதியிலும் ஒருவேளை ஆஹாரத்துடன் இருக்க வேண்டும். பிறகு ஒரு வருஷ முடிவில் தங்கத்தாலான வ்ருக்ஷம் தக்ஷிணையொடு ப்ராஹ்மணனுக்குக் கொடுக்க வேண்டும். நற்குண பந்துக்கள் உடையவள் ஆவாள். ச்ரேஷ்டையே! அருந்ததீ! ஸ்த்ரீ புங்க மரத்தடியில் தீபதானம் கொடுக்க வேண்டும். பிறகு ஒரு வருஷ முடிவில் ஸ்வர்ண தீபம் தானம் செய்யவேண்டும். சுபே! அருந்ததீ! அந்த ஸ்த்ரீ தன் காந்தியால், பர்த்தாவுக்கு ப்ரியமுள்ளவள் ஆகிறாள். அப்படியே புத்ரவதியும், அப்படியே ஸபத்னிகளுக்கு மேலானவளாயும், தீபம் போல் ப்ராசிக்கிறாள். தினந்தோறும் எல்லோரையும் உண்பித்த பின் மிச்சத்தை உண்ணும் ஸ்த்ரீ மனக்கவலையற்றவள் ஆவாள். துக்கங்கள் அவளுக்கு உண்டாகா. எப்போதும் பதியைத் தெய்வமாகக் கொண்டவள், எப்போதும் ஸத்ய தர்ம குணமுடையவள். எப்போதும் பரிசுத்தமானவள் கடுஞ் சொல் சொல்லாதவள். மாமனார் மாமியாருக்கு எப்போதும் பணிவிடை செய்பவள். எப்போதும் ஸத்ய தர்மகுணமுடைய பர்த்தாவைத் தெய்வமாகக் கொண்ட அந்த ஸ்த்ரீக்கு வ்ரதங்களால் என்ன பயன்? உபவாஸங்களால் என்ன பலன்?

அழகிய இடையுடைய பதிவ்ரதையே! அருந்ததீ! தெய்வ வசத்தால் பதிவ்ரதை விதவையானால், அவளுக்குச் சொல்லப்பட்டுள்ள பழமையான தர்மத்தைச் சொல்கிறேன்: சித்ரமாகவோ, மண்ணாலோ, பதிக்கு ப்ரதிமை செய்து அதற்கு எப்போதும் பூஜை செய்ய வேண்டும். ஸாதுக்களின் தர்மத்தை

நினைத்துப் பின்பற்ற வேண்டும். நல்ல வ்ரதமுடைய அவள், வ்ரதத்திலும், உபவாஸத்திலும், விசேஷமாக போஜனத்திலும், பதியின் ப்ரதிமையிடமிருந்து அனுமதி கேட்க வேண்டும். பதியின் மனதுக்கு விரோதமில்லாமல் நடந்தால், பதியினது லோகங்களை அடையவே செய்கிறாள். பதிவ்ரதை சாண்டில்யை போல் ஸூர்யனையொக்க எப்போதும் ப்ரகாசிக்கிறாள்.

இன்று முதல் எல்லா தேவ ஸ்த்ரீகளும் பழைய அழிவற்ற புண்யக விதியைக் காண்பார்கள். தர்மாத்மா நாரத முனிவரும் வ்ரதங்களினதும் உபவாஸங்களினதும் ஆகிய பழைய விதி முழுதையும் அறிவார். ச்ரேஷ்டயே! சந்த்ரகுமாரி! அருந்ததீ! நற்குணம் பொருந்திய நீயும் இந்த்ராணியும், அதிதியும் எப்போதும் புண்யக வ்ரதங்களினதும், மற்ற வ்ருதங்களினதும், ஆரம்பத்தில் பதிவ்ரதைகளால் புகழதக்கவர்களாக ஆவீர்கள். மஹாவிஷ்ணுவின் எல்லா அவதாரங்களிலும் அவன் பத்னிகள் மிகப் பழைய புண்யக விதியையும், உபவாஸ வ்ரத விதியையும், உள்ளபடியே முழுதும் இந்த லோகத்தில் எப்போதும் அறிவார்கள்.

எல்லாத் தர்மங்களுள்ளும் ஸ்த்ரீ தர்மங்களில் பதி பக்தி ஒழுக்கக் கேடில்லாமை, வாக்தோஷமில்லாமை இவை மிக்க விசேஷமாகக் கொண்டாடப்படுகின்றன. நாரதர் சொன்னார் : மஹாதேவி உமையால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தத் தவச்செல்விகள், பதிவ்ரதைகள் சிவ ப்ரியையான மஹாதேவி உமையை வணங்கி மகிழ்ந்து சென்றனர்.

ஒழுக்கத்தில் நிற்கும் அதிதி தேவி செய்த வ்ரதத்தைக் கேட்பாயாக: முன் சொல்லப்பட்ட உமா வ்ரத விதி முழுதும் அதிதியால் செய்யப்பட்டது. கச்யபர் பாரிஜாதத்தில் கட்டப்பட்டு எனக்குக் கொடுக்கப்பட்டார். பிறகு அந்த அதிதி செய்த வ்ரத தானம், ஸத்யபாமையால் கொடுக்கப்பட்டது. தர்மத்தில் நிலைபெற்ற ஸாவித்ரியால் அதே வ்ரத தானமும் கொடுக்கப்பட்டது. அந்த ஸாதனங்களோடுடனே கூடின இது (வ்ரதம்) உத்க்ருஷ்டமாகச் செய்யப்பட்டதும், ஸந்த்யா காலம் வந்ததும் அந்தந்த இடத்தில் பூஜை வந்தனம் ஜபம் (இவை) இரண்டு பங்கு பலன் என்று ஸ்ம்ருதி சொல்கிறது.

பதிவ்ரதையானவள் <u>ஸாவித்ரி வ்ரதத்தையும், அதிதி வ்ரதத்தையும்</u> செய்து புக்க குலத்தையும் தன் தந்தை குலத்தையும், தன்னையும் கடைத்தேற்றுவள். இந்த்ராணி, உமை செய்த அந்த வ்ரதத்தையே முறைப்படி செய்தாள். மிகச் சிறந்த சிவந்த

ஆடையையும், தக்ஷிணையுடன் கூடிய போஜனத்தையும் கொடுத்தாள். நான்காவது நாளில் புண்யக வ்ரதத்தின் பொருட்டுத் திரும்ப விதி சொல்லப்படுகிறது. அஹோராத்ரி உபவாஸமும், அப்படியே நூறு தீர்த்த கும்ப தானமும் கொடுக்கத்தக்கது.

கீர்த்தி செய்பவளே! ருக்மிணி தேவீ! அதே உமாவ்ரதம் தானம் கங்கா தேவியாலும் செய்யப்பட்டது. இதில் மாசி மாதம் சுக்ல பக்ஷத்தில் அதிகாலையில் தன் (கங்கை) ஜலத்திலோ, அந்ய ஜலத்திலோ, ஸ்நானம் செய்தல், விசேஷமாகச் சொல்லப்பட்டது. ஹரிப்ரியே! ருக்மிணீ! இந்த கங்காவ்ரதம் என்பது எல்லா விருப்பங்களையும் கொடுக்க வல்லது என்பது ஸ்ம்ருதி. ஹரி வல்லபே! ருக்மிணீ! கங்கா வ்ரதம் நடத்தும் தர்மமறிந்த ஸ்த்ரீ பதியின் குலம், பிதாகுலம், மாதாமஹகுலம் ஆகிய மூவேழு குலங்களைக் கரையேற்றுகிறாள். சுபே! ருக்மிணீ! கங்கா வ்ரதத்தில் ஆயிரம் தீர்த்த கும்பங்கள் கொடுக்கத் தக்கவை. அந்த வ்ரதம் எல்லா விருப்பங்களையும் கொடுக்கும். கஷ்டங்களைத் தாண்டுவிக்கும். இஷ்டங்களைப் பூர்த்தி செய்யும்.

ஹரி வல்லபே! ருக்மிணீ! பிறகு யமன் மனைவி யாமவ்ரதம் எனும் சுபமான வ்ரதத்தை நடத்தினாள். அந்த வ்ரதமோ முன் பனிக் காலத்தில் ஆகாயத்தில் (வெளியில்) செய்ய வேண்டும். சுபே! ருக்மிணீ ! ஸ்நானம் செய்து புனித ஒழுக்கமுடையவளாய், பதியை வணங்கி, ஆகாயத்தில் (வெளியில்) நின்று கொண்டு இந்த வாக்யங்களைச் சொல்ல வேண்டும் : "நான் பனியை முதுகில் தாங்கி 'யாமரத வ்ரதத்தை' அனுஷ்டிக்கிறேன். பதிவ்ரதையாகவும், ஜீவ புத்ரர்களையுடையவளாகவும், எல்லா பெண்களிலும் முதன்மையளாகவும் ஆகக்கடவேன். ஸபத்னிகளுக்கு மேலானவள், மரணம் அடையாதவள், பதியுடனும், புத்ரனுடனும் வெகு காலம் ஸுகமாக வாழ்பவள் ஆகக்கடவேன். பதி லோகத்தை யடைவேனாகவும், அப்படியே ஆனந்தமுடையவள், நல்ல ஆடையுடையவள், ஹிதமான கைகளையுடையவள் ஆகவும் ஆகக்கடவேன்." இவ்விதம் வ்ரதம் நடத்தி தேன், கறுப்பு எள், பாயஸம் இவைகளால் விப்ரனைப் போஜனம் செய்வித்து ஆசிகூறச் செய்யவேண்டும்.

தேவகாந்தியளே! ஹரிப்ரியே ! ருக்மிணீ! முன்னர் ருத்ர பத்னி மஹாதேவி உமையால் இப்படிச் சொல்லப்பட்ட வ்ரதங்கள், தேவ ஸ்த்ரீகளால் செய்யப்பட்டன. நான் சொல்கிறேன், உமாதேவியால் முன்னர் சொல்லப்பட்ட குணந்தரும் கல்யாண

குணங்கள் பொருந்திய புனிதமான மங்கள வ்ரதங்களை எனது தவப்பலன் கூடினவர்களாய் முழுதும் அப்படியே காண்பீர்கள்.

வைசம்பாயனர் சொன்னார் : ருக்மிணீ உமையின் வரதானத்தால் ஞானக்கண்கொண்டு வ்ரத முழுவதையும் கண்டு கண்ணும் கருத்துமாகச் செய்தாள். உமா வ்ரதத்தைப்போல் எல்லாம் செய்து அதிகமாக அப்படியே ரிஷப தானம், ரத்னமாலை தானம் அதனுடன் எல்லோரும் த்ருப்தியடையும் உணவு வகைகளையும் கொடுத்தாள். அப்படியே ஜாம்பவதி தேவி பழைய உமாவ்ரதத்தை நடத்தினாள். அவளோ அதனுடன் மனோஹரமான ரத்னத்தாலான வ்ருக்ஷத்தை அதிகமாகத் தானம் செய்தாள். பிறகு ஸத்யபாமையும் பழைய உமாவ்ரத தானத்தை அப்படியே கொடுத்தாள். அதனுடன் உமா வ்ரதத்தில் கொடுக்கப்பட்ட ஆடையும், அதிகமாக மஞ்சளாடையும் கொடுத்தாள். குலத்தை வளர்ப்பவரே! ஜனமேஜயரே! பிறகு ரோஹிணிதேவியாலும் பால்குனி தேவியாலும், மகாதேவியாலும் பழைமையில் அநேக வ்ரத தானங்கள் கொடுக்கப்பட்டனவல்லவா? குருகுலத்தவனே! சதபிஷக்தேவியும், புண்யக லக்ஷண வ்ரத தானங்களைச் செய்தாள். அதனால் நக்ஷத்ரங்களுள் முதன்மையையடைந்தாள்.

அத்யாயம் 81 முற்றும்.



## அத்யாயம் 82

## ஷட்புரவாஸி அஸுரர்களின்-சுருக்கம். அவர்களுக்குச் சிவன் ப்ரஹ்மா கொடுத்த வரங்கள்

ஜனமேஜயன் சொன்னான் : வைசம்பாயனரே! தர்மமறிந்தவரே! வ்யாஸர் சிஷ்யரே! தவச்செல்வரே! பாரிஜாத ஹரண ஸமயம் ஷட்புர விஷயம் சொல்லப்பட்டது. தவச்செல்வரே! அது பயங்கர அஸுரச்ரேஷ்டர்களின் இருப்பிடம். அவர்களின் வதத்தையும், முனிச்ரேஷ்டரே! விரிவாகச் சொல்லும்.

வைசம்பாயனர் சொன்னார் : வீர! ஜனமேஜயரே! எளிதில் எதையும் செய்யும் ருத்ரனால் த்ரிபுரம் அழிக்கப்பட்டபோது அங்குப் பல முக்ய அஸுரச்ரேஷ்டர் இருந்தனர். த்ரிபுரத்தில் வஸித்த அவர்கள் ருத்ரனின் அம்பின் அக்னியால் எரிக்கப்படவில்லை. அவர்கள் கிட்டத்தட்ட அறுபது லக்ஷம் பேர்கள். பந்துக்கள் வதத்தால் மிக்க துக்கங்கொண்ட அவர்கள் முன்னர் மஹரிஷி கணங்கள் இருப்பிடமான ஸாதுக்கள் விரும்பும் ஜம்புமார்க்கத்தில் தவம் புரிந்தனர். ராஜ ச்ரேஷ்ட! ஜனமேஜய!

அந்த வீரர்கள் ஸூர்யனுக்கு எதிர்முகமாயிருந்து வாயு பக்ஷணம் செய்து கொண்டு ப்ராஹ்மணரை ஸ்துதி செய்து நூறுயிரம் வருஷம் தவம் புரிந்தனர். அவர்களுள் ஒரு குழு அத்தி வ்ருக்ஷத்தையடைந்தது. அந்த வீரர் கடுந்தவம் செய்து கொண்டு அங்கு வஸித்தனர். முன்னர் சிலர் விளாமரத்தையடைந்து அங்கு வஸித்தனர். மற்றவர் ஸ்ருகால மரத்தையடைந்து அப்படியே கடுந்தவம் புரிந்தனர். குருகுலத்தவனே! ஜனமேஜயா! அஸுரபுத்ரர் ஆலமரத்தையடைந்து. ஆலமரத்தடியில் பரப்ரஹ்ம த்யானம் செய்துகொண்டு அப்படியே தவம் செய்தனர்.

ராஜனே! ஜனமேஜயா! தர்மாத்மாக்களில் சிறந்த ச்ருஷ்டிகர்த்தா தேவ ச்ருஷ்டி கர்த்தா பிதாமஹர் ப்ரஹ்மா அவர்களுக்கு வரம் தர வந்தார். ராஜனே! ஜனமேஜயா! பத்மத்தில் உதித்த ப்ரஹ்மாவால் "வரம் வேண்டுங்கள்" எனச் சொல்லப்பட்ட அவர்கள் முக்கண்ணனுகிய பரமசிவனைத் துவேஷிக்கிறவர்களாய் அந்த வரதானத்தை விரும்பவில்லை. குருகுலத்தவனே! பிறகு நாசமடைந்த பங்காளிக்குப் பதில் ஊறு செய்யவிரும்பிய அவர்களை நோக்கி, எல்லாமறிந்த ப்ரஹ்மா சொன்னர் : எல்லா ஜகத்தையும் ஆக்கவும் அழிக்கவும் வல்ல மஹாத்மா ருத்ரனுக்குப் பதில் ஊறு செய்ய எவன் சக்தன்? இந்த விஷயத்தில் உங்களுக்கு வீண் ச்ரமம் வேண்டாம்.

ராஜனே! ஜனமேஜயா! உமையொடு கூடிய சிவன் ஆதி மத்யம் அந்தமில்லாதவன். மஹேச்வரன் அவனிடம் பொறுமை கொண்டு அஸுரர்கள் ஸ்வர்க்கத்தில் வஸிக்க விரும்புகின்றனர். அந்தத் துராத்மாக்களான அஸுரர்கள் வரத்தை விரும்பவில்லை. பிறகு வணக்கத்துடன் கூடிய மற்ற அஸுரர்கள் வரத்தை விரும்பினர். வரம் விரும்பாத மிக்க துராத்மாக்களைப் பார்த்து ப்ரஹ்மா சொன்னர் : "அஸுரர்களே! ருத்ர க்ரோதத்தைத் தவிருங்கள். வீரர்களே! வரத்தைக் கேட்டுக் கொள்ளுங்கள்". அவர்கள் சொன்னர்கள் : ப்ரபோ! எல்லாத் தேவர்களாலும் கொல்லப்படாதவர்களாக ஆக வேண்டும். தேவனே! பூமிக்குக் கீழ் எங்களுக்கு ஆறு நகரங்கள் அமைக்கப்படட்டும். ப்ரபோ! அந்த ஆறு நகரமும் விரும்பும் எல்லாவற்றுலும் நிறைந்தனவாக இருக்கட்டும். நாங்களும் (அந்த) ஆறு நகரங்களுக்குச் சென்று ப்ரபுவே! ஸுகமாக வஸிப்போம். தபோநிதியே! ப்ரஹ்மாவே! எங்கள் பங்காளிகளைக் கொன்ற ருத்ரனிடமிருந்து எங்களுக்குப் பயம் உண்டாகக் கூடாது. த்ரிபுரம் அழிக்கப்பட்டதைக் கண்டு பயந்தவர்களாயிருக்கிறோம்" ப்ரஹ்மா [illegible]

தேவர்களாலும் சங்கரனாலும் கொல்லப்படாதவர்களாக ஆவீர்கள். ஸாதுக்களுக்கு ப்ரியர்களான நன்னெறி நிற்கும் விப்ரர்களைத் துன்புறுத்தாமலிருந்தால், எவ்விதமாவது மோஹத்தால் விப்ர துன்பம் செய்தீர்களானால் நாசம் அடைவீர்கள். ஜகத்துக்கே சிறந்த புகலிடம் விப்ரர்களல்லவா! ப்ராஹ்மணர்களுக்கு ஹிதமல்லாதது செய்கிறவர்கள், நாராயணனிடமிருந்து பயப்பட வேண்டும். பகவான் ஜனார்தனன் எல்லா ப்ராணிகளுக்கும் ஹிதம் நினைக்கிறான்.

ஜனமேஜயராஜனே! பிறகு ப்ரஹ்மாவால் விடைகொடுக்கப்பட்ட அவ்வஸுரர்கள் சென்றனர். தர்மானுஷ்டானமுள்ள ருத்ர பக்த அஸுரர்களுக்கு, த்ரிபுர நாசக ருத்ரன், தானே காட்சியளித்தார். ஸாதுக்களுக்கு புகலிடமான பகவான் வெள்ளை ரிஷபத்தின் மீதேறி உமையுடன் கூடிய ப்ரபு ஸோமதேவன் அஸுரர்களை நோக்கி இந்த வார்த்தை கூறினார் : அஸுரச்ரேஷ்டர்களே! கோபம், டம்பம், ஹிம்ஸை இவைகளை விலக்கி என்னையே ஆச்ரயித்த காரணத்தால் உங்களுக்கு நல்ல வரம் கொடுக்கிறேன். நல்ல கார்யங்களிலேயே நோக்குடைய விப்ர முனிகளுடன் சேர்ந்த நியமமுடையவர்களாய் இருக்கிறீர்களோ அவர்களுடன் ஸ்வர்க்கம் அடையுங்கள். உங்கள் நல்ல கார்யத்தால் நான் ப்ரீதி அடைந்தேன். இங்கேயே விளாமரத்தடியில் வஸிக்கும் ப்ரஹ்மமறிந்த தபஸ்விகள்காபித்திகாள் என்று சொல்லப்படுவர். அவர்களுக்கு எனது லோகம் கிடைக்கும். இங்கு ஒரு மாத முடிவோ, ஒரு பக்ஷ முடிவோ, வானப்ரஸ்த முறையில் பூஜை செய்யும் மனிதன், தவச்செல்வர்களே! அஸுர பக்தர்களே! ஆயிரம் வருஷம் செய்த தவத்தின் பலனை அடைவான். மூன்று இரவுகள் முறைப்படி தவம் செய்தால் விரும்பிய கதியை அடைகிறான். அர்க்க த்வீபத்தில் வஸிப்பவனுக்கு, அந்தப் பலன் இரண்டு மடங்காகும். வெளியிடங்களில் கிடையாது. உங்களுக்கு மங்களம். இந்த வரம் கொடுக்கிறேன். 'ச்வேதவாகனன்' வெள்ளை ரிஷப வாகனன்' என பெயருடைய என்னைப் பூஜிக்குமவன். எல்லாப் பாபங்களிலும் பயந்த மனதுடையவனாயினும், அவன் என்னிடத்தை அடைவான். அத்திமரத்தவர், ஆலமரத்தடியவர், விளாமரத்தவர், அப்படியே ஸ்ருகால மரத்தவர் இந்த உறுதி வ்ரதத்தையுடைய ப்ராஹ்மணர்களையும் ப்ரஹ்மவாதி முனிவர்களையும் விசேஷமாகப் பூஜிப்பவர்கள், எப்போதும் விரும்பிய கதியையடைவர்". "ஜம்பு மார்க்கம் போவேன். நான் ஜம்பு மார்க்கத்தில் வஸிக்கிறேன்". இப்படி ஸங்கல்பம் செய்கிறவனை கூட ருத்ர லோகத்தில் பெருமை அடைகிறான்.

அத்யாயம் 82 முற்றும்.

## அத்யாயம் 83

## ப்ரஹ்மதத்தன் யாகம், வஸுதேவன் தேவகி-வர்ணனை-அஸுரர்கள் ப்ரஹமதத்தனின் புத்ரிகளை அபஹரித்தல்-ப்ரத்யும்னன் மூலம் அவர்கள் ரக்ஷை. நாரதர் அஸுரர்கள் க்ஷத்ரியர்களை வசப்படுத்த முறை கூறுதல். க்ருஷ்ணன் வருகை

வைசம்பாயனர் சொன்னர் : ஜனமேஜயா! இதே ஸமயம் நான்கு வேதம் ஆறு அங்கங்கள் அறிந்த ப்ராஹ்மணன் யாஜ்ஞவல்க்யர் சீடன் தர்ம குணம் பொருந்தியவன் ப்ரஹ்மதத்தன் எனக் கீர்த்தி பெற்றவன். வாஜஸ்னேய ஸம்ஹிதையை அத்யயனம் செய்தவன். புத்திமான். வஸுதேவருக்கு அவனல் அச்வமேத யாகம் செய்யப்பட்டதும். அவன் ஒரு வருஷம் வ்ரத தீக்ஷையுடையவன். அனுபுரவாஸி ரிஷிகளால் அடையப்பட்ட 'ஆவர்த்தகை' யெனும் பெயருடைய நல்ல நதியின் மங்களமான கரையில் யாகம் செய்தான். குரு குலத்தவனே! அவன் மஹாத்மா வாஸுதேவனது நண்பன், உடன் படித்தவன், சிறந்த விப்ரன், உபாத்யாயன். க்ஷீர ஹோதா (பால் ஹோமம் செய்பவன்).

ப்ரபோ! ஜனமேஜயா! இந்த்ரன் ப்ரஹஸ்பதியை அடைவது போல வஸுதேவர் அனுபுர யஜமானனை அடைந்தவர். அந்த ப்ரஹ்மதத்தன். வஸுதேவருக்குச் செய்வித்த அச்வமேத யாகத்தில் மிகுந்த அன்னதானம். மிகுந்த தக்ஷிணை வழங்கப்பட்டது. உறுதி வ்ரதமுடைய மஹாத்மாக்களான முனி ச்ரேஷ்டர்கள் அந்த யாகம் நடத்திக் கொடுத்தனர். பாரத! ஜனமேஜயா! நான் (வைசம்பாயனர்) யாஜ்ஞவல்க்யர். ஸுமந்து, ஜைமினி உறுதி வ்ரதமுடைய ஜாபாலி, தேவலன் முதலிய ரிஷிகளும், புத்திமான் வஸுதேவரின், தக்க பெருமையுடன் கூடிய யாகத்தை அடைந்தனர். அந்த யாகத்தில் தர்ம நெறி கொண்ட தேவகி பூமியில் விரும்பும் பொருள்களை ஜகத் ஸ்ருஷ்டாவான வாஸுதேவன் பெருமையால் கொடுத்தாள்.

அந்த ஸத்ர யாகம் நடக்கும் போது. அனுபுர வாஸிகள், நிகும்பன் முதலிய வரத்தால் கர்வங்கொண்ட அஸுரர்கள் சேர்ந்து வந்து ப்ரஹ்மதத்தனைக் குறித்துச் சொன்னர்கள். "எங்களுக்கு யஜ்ஞ பாகம் கொடுக்கப்படட்டும்". நாங்கள் ஸோமபானம் பண்ணுவோம். எஜமானன் கன்னிகைகளை எங்களுக்குக் கொடுக்கட்டும். இந்த மஹாத்மா ப்ரஹ்மதத்தனுக்கு அநேக ருபவதிகளான பெண்கள் இருக்கின்றனர். அவர்களை வரவழைத்து எல்லா ப்ரகாரத்தாலும் அவர்கள் எங்களுக்குக் கொடுக்கக்கவர்.

விசேஷ ரத்னங்களையும் எங்களுக்குக் கொடுக்கட்டும். இல்லாவிட்டால், யாகம் செய்யக் கூடாது நாங்கள் கட்டளையிடுகிறோம். இதைக் கேட்டு ப்ரஹ்மதத்தன் அந்தப் பெரிய அஸுரர்களை நோக்கிச் சொன்னான் : "அஸுரச்ரேஷ்டர்களே! பழைமையில் அஸுரர்களுக்கு யஜ்ஞபாகம் விதிக்கப்படவில்லை. ஸத்ர யாகத்தில் உங்களுக்கு ஸோமபானம் கொடுக்க என்னால் எப்படி முடியும். இந்த விஷயத்தில் வேதபாஷ்யார்த்தத்தில் ஸமர்த்தர்களான முனி ச்ரேஷ்டர்களைக் கேளுங்கள். எனது பெண்கள் கொடுக்கத் தக்கவர்களாக மனதால் தீர்மானிக்கப் பட்டிருக்கின்றனர். யாகவேதி மேடையில் அவர்களுக்கு ஒத்தவர்களுக்கு கொடுக்கத் தக்கவர்கள். ஸந்தேகமில்லை. ரத்னங்களையோ நான் ஸமாதான முறையில் கொடுப்பேன். பலாத்காரத்தால் கொடுக்கவே மாட்டேன். நான் தேவகி புத்ரன் க்ருஷ்ணனை அண்டியிருக்கிறேன். நன்கு யோசியுங்கள். அனுபுரவாஸி பாவி நிகும்பன் முதலியோர் கோபங்கொண்டு யஜ்ஞ மண்டபத்தைக் கொள்ளையிட்டனர். அப்படியே அந்தக் கன்னிகைகளையும் அபஹரித்துச் சென்றனர்.

வஸுதேவர் நடந்த அதைப் பார்த்து, மஹாத்மா க்ருஷ்ணனையும், பலராமனையும் அப்படியே சுதனையும் த்யானித்தனர். பிறகு விஷயமறிந்த க்ருஷ்ணன், ப்ரத்யும்னனைப் பார்த்து இதைச் சொனனான்: "மகனே! ப்ரபுவே! சீக்கிரம் போ. மாயையால் கன்னிகா ரக்ஷணத்தைச் செய். நான் யாதவ சேனையுடன் அனுபுரம் செல்கிறேன். அப்போது பிதாவின் ஆஜ்ஞையைச் செய்பவனாய் அனுபுரம் சென்றான்.

மஹாபலவான் காமன் (ப்ரத்யும்னன்) ஒரு நிமிஷத்துக்குள் சென்று மஹாபலவானும் புத்திமானுமான அவன், அந்தப் பெண்களை மாயையால் (அஸுரரிடமிருந்து அபஹரித்தான். ருக்மிணி மகன் ப்ரத்யும்னன் மாயையாலாகிய வேறு பெண்களை ஸ்ருஷ்டித்து (பதிலாக) வைத்து விட்டான். தர்மாத்மா ப்ரத்யும்னன், பயப்படாதீர் என்று தேவகியிடம் சொன்னான். ஜனமேஜயராஜனே! பிறகு இந்த ப்ரஹ்மதத்தன் பெண்கள் அடைய முடியாதவர்கள். மாயையிலான பெண்களை அபஹரித்துக் கொண்டு அஸுரர் ஸந்தோஷமடைந்தவர்களாய், அனுபுரத்தில் புகுந்தனர். ஜனமேஜயராஜனே! ப்ரஹ்மதத்தன் யாகசாலையில் முறைப்படி யாக கர்மாக்கள் செய்யப்படுகின்றன. விசேஷமாகவும் பூர்ண குணமுடையதாகவும் அது ஆனது. பாரத! ஜனமேஜயா! இச்சமயம், புத்திமான் ப்ரஹ்மதத்தனால் ஸத்ர யாகத்துக்கு முன்னால்

அழைக்கப்பட்ட ராஜாக்கள் வந்தனர். பாரத! ஜராஸந்தன், தந்தவக்த்ரன், சிசுபாலன், பாண்டவர், துர்யோதனுதியர், கணங்களுடன் கூடிய மாளவ அரசர்கள், ருக்மி, ஆஹற்வ்ருதி, நீலன், தர்மன், அவந்தி! தேச ராஜாக்கள், விந்தன், அனுவிந்தன், சல்யன், சகுனி இன்னும் மற்ற உறுதி ஆயுதம் தாங்கிய மஹாத்மாக்களான வீர அரசர்கள் அனுபுரத்து அருகில் தங்கினுர்கள்.

குற்றமற்ற ஸ்ரீமான் நாரதமுனி இவர்களைப் பார்த்து க்ஷத்ரியர்களுக்கும், யாதவர்களுக்கும் சேர்க்கை உண்டாகும் என்று ஆலோசித்தார். இந்த யுத்தத்திற்கு நான் காரணம். ஆகையால் அதற்கான முயற்சிகளைச் செய்கிறேன்.இப்படி நன்கு ஆலோசித்துப் பிறகு நிகும்பன் வீட்டிற்குச் சென்றுர். நிகும்பனுலும் மற்ற தானவர்களாலும் பூஜிக்கப்பட்ட நாரதர் உட்கார்ந்தார். அந்த தர்மாத்மா நாரதர் நிகும்பனை நோக்கி இந்த வார்த்தை சொன்னுர்.யாதவர்களிடம் விரோதம் செய்து நீங்கள் எப்படி ஸுகமாக இருக்கிறீர்கள். ப்ரஹ்மதத்தனே விஷ்ணு ஆவான். அந்த ப்ரஹ்மதத்தனே ஹரியின் (க்ருஷ்ணனின்) பிதாவிற்குத் தோழன். புத்திமான் ப்ரஹ்மதத்தனது ஐந்நூறு மனைவிகள் வஸுதேவரின் மகன் க்ருஷ்ணனின் ப்ரியத்திற்காக (கைங்கர்யத்திற்காக) அழைக்கப்பட்டுள்ளனர்.

ப்ராஹ்மண ஸ்த்ரீகள் இரு நூறு, க்ஷத்ரிய ஸ்த்ரீகள் நூறு. வைச்ய ஸ்த்ரீகள் நூற்றென்று, சூத்ர ஸ்த்ரீகள் நூறே. புத்திமான் தர்மமறிந்தோரில் சிறந்த துர்வாஸமுனி, அந்த ஸ்த்ரீகளால் பணிவிடை செய்யப்பட்டார். புண்ய கர்மாவையுடைய அந்த முனியால் அந்த ஸ்த்ரீகளுக்கு வரம் அளிக்கப்பட்டது.

ஜனமேஜயராஜனே! புத்திமான் துர்வாஸர் வரதானத்தால் (ஒவ்வொரு ஸ்த்ரீக்கும்) ரூபத்தில் ஒப்பற்ற பிள்ளையும் ஒரு பெண்ணும். வீர! அஸுர! அந்த ஒவ்வொரு ஸ்த்ரீக்கும் பர்த்தாக்களுடன் படுக்கையில் சேரும் போதெல்லாம், திரும்பத் திரும்பப் பெண்களும் பிள்ளைகளும் உண்டாகும். அந்தச் சிறந்த பெண்களிடமிருந்து எல்லாப் புஷ்பங்களின் நறுமணமும் வீசும். எப்போதும் யௌவனத்தில் இருப்பர். எல்லோரும் பதிவ்ரதைகள். அஸுரனே! அந்தப் புத்திமான் துர்வாஸரின் வரதானத்தால் எல்லோரும், சங்கீதம், நாட்டியம், இவற்றின் குண தத்வத்தையறிகின்றனர். புத்ரர்களும் அழகிய ரூபமுடையவர்கள். அப்படியே சாஸ்த்ர அர்த்தங்களிலும் நிபுணர்கள். வரமுறையான முன் பழக்கத்தையொட்டி தங்கள் தங்கள் வர்ணுச்ரம தர்மங்களில் நிற்பவர்கள். ப்ரஹ்மதத்தனின் கன்னிகைகள், புத்திமானுனஅவனுல் பீமகுல முக்யர்களுக்கு அநேகமாகக் கொடுக்கப்பட்டு

விட்டார்கள். மீதியிருந்த நூறு பெண்கள், உன்னால் எடுத்து வரப்பட்டனரல்லவா? அதற்காக வீரனே! எல்லாப்படியாலும் யாதவர்களிடம் போர் புரிவாய். உதவிக்காக காரணங்காட்டி ராஜாக்களை உன் பக்ஷமாக்கிக்கொள். ப்ரஹ்மதத்தனின் (பெண் களையும்) பெண்களுக்காக நானாவித ரத்னங்களும் ராஜாக்களுக்குக் கொடுக்கப்படட்டும். மஹாத்மாக்களாகிய அந்த அரசர்களுக்கு விருந்து உபசாரமும் செய்யப்படட்டும். அரசர்கள் உன்னுடன் இணைவார்கள்". (நாரதர்) இப்படிச் சொன்னதும் அந்த அஸுரர் அப்படியே ஸந்தோஷத்துடன் செய்தனர். ஐந்நூறு பெண்களையும் நானாவித ரத்னங்களையும் அஸுர பக்தர்களிடம் அன்பு கொண்ட ராஜாக்கள் பங்கிட்டுக் கொண்டனர்.

ஒரு நிமிஷத்திற்குள் மஹாத்மா நாரதர் ராஜாக்களிடம் சென்று பாண்டவர்களுக்குப் பங்கு கொடுக்காமல் தடுத்தார். ஜனமேஜயராஜனே! அந்த ஸந்தோஷமடைந்த ராஜ ச்ரேஷ்டர்களால் அஸுரர் இப்படிச் சொல்லப்பட்டனர். "ஆகாய வழிச்செல்லும் எல்லா விருப்பங்கள் பூர்த்தியடைந்துள்ள உங்களால் முறைப்படி நாங்கள் உபசரிக்கப்பட்டுள்ளோம். இந்த அரசர் கூட்டம் உங்களுக்கு என்ன கொடுக்க வேண்டும். உங்கள் போன்ற திவ்ய வீரர்களால் இந்த ராஜகணம் முன்னமே கௌரவிக்கப் பட்டதல்லவா?" பிறகு தேவ சத்ரு நிகும்பன் அப்போது தைர்யத்துடன் அரசர்களின் உண்மையான பெருமையை விவரித்து அவர்களை நோக்கிக் கூறினான் : "ராஜச்ரேஷ்டர்களே! எங்களுக்குச் சத்ருக்களுடன் போர் மூளப்போகிறது. அங்கு எல்லா ப்ரகாரத்தாலும் உங்கள் உதவியை விரும்புகிறேன்". ப்ரபுவே! ஜனமேஜயா! நாரதரிடமிருந்து விஷயம் தெரிந்த பாண்டவ வீரர்கள் தவிர மற்ற [illegible] அரசர்கள் 'இப்படியே ஆகட்டும்' என்று அஸுரர்களை நோக்கிக் கூறினர். குருகுலத்தவனே! ஜனமேஜயா! அந்த க்ஷத்ரியர்கள் கூட போருக்கு ஆயத்தமாயினர். ப்ரஹ்மதத்தனையறிந்த பத்னிகளும் யஜ்ஞசாலையை அடைந்தனர். ப்ரபு க்ருஷ்ணனும் ஸேனையுடன் ஷட்புரத்தை யடைந்தான். ஜனமேஜய ராஜனே! மஹாதேவனது வார்த்தையை மனதில் தரித்து அப்போது த்வாரகையில் உக்ரஸேன ராஜனை வைத்து விட்டு நகர மக்களின் ஹிதத்தை விரும்பி வஸுதேவரால் தூண்டப்பட்ட ப்ரபு க்ருஷ்ணன், மிக்க மங்களகரமான யாகசாலைக்குச் சிறிது தூரத்தில் அந்த ஸேனையுடன் தங்கினார். ப்ரபு ஸ்ரீமான் க்ருஷ்ணன் அஸுரஸேனை, காவலைத் தகர்காமலிருக்கும் பொருட்டு ரக்ஷைக்காக அந்த ப்ரத்யும்னனைச் சுற்றி வரும்படி நியமித்தான்.

அத்யாயம் 83 முற்றும்

## அத்யாயம் 84

**க்ருஷ்ணன் யாதவ ஸேனையைப் போருக்குத் தயாரித்தல் தானவர் நகரை முற்றுகையிடுதல்-பட்டணம் ப்ரகாசிக்கப் பல ஏற்பாடுகள் ப்ரத்யும்னன் மூலம் செய்தல்-ஷட்புரத்துள் ப்ரவேசித்தல்-ப்ரஹ்மதத்தனுக்குச் சாந்தியளித்தல்**

வைசம்பாயனர் சொன்னார் : கௌரவவேங்கையே! சூர்ய உதயத்திற்கு முஹூர்த்த காலத்தில் ஜனங்கள் நன்கு விழித்துக் கொண்டபொழுது, க்ருஷ்ணன், பலராமன், ஸாத்வீகன், மூவரும், ருத்ரனால் வரங்கொடுக்கப்பட்ட ஆவர்த்தகையெனும் கங்கை ஜலத்தில் ஸ்நானம் செய்து தேவ ச்ரேஷ்டனை வில்வோதக ருத்ர தேவனை வணங்கி புனித ருத்ரனின் வார்த்தைப்படி போர் செய்ய விரும்பி அப்போது உடும்பு தோல் வீரக் கவசமிட்டு ஆயத்தமாகக் கருடன் மேல் ஏறினர். ஸாதுக்களுக்குப் புகலிடமான கௌரவம் கொடுக்கும் க்ருஷ்ணன், ஸேனையின் முன்னால் ஆகாயத்தில் ப்ரத்யும்னனை நிறுத்தி யாகசாலையின் காவலுக்காக பாண்டவர்களை நியமித்து, பாக்கி சேனையைக் குகை வாயிலில் நிறுத்தி, பகவான் ப்ரவரனையும் (இந்த்ரன் மகன்) ஜயந்தனையும் நினைத்தான்.

பாரதா! ஜனமேஜயா! பிறகு அந்த ப்ரவரனும் ஜயந்தனும் விரைந்து வந்தனர். அப்படி தாங்களாகவே க்ருஷ்ணனைப் பார்த்தனர். ப்ரத்யும்னனைப் போல அவ்விருவரும் ஆகாயத்திலேயே நிறுத்தி வைக்கப்பட்டனர். பிறகு, க்ருஷ்ணனின் ஆணையால் போர் முரசும் முழங்கிற்று. சங்கமும் முரச வாத்யங்களும் அப்படியே மற்ற வாத்யங்களும் ஒலித்தன. சாம்பனாலும் கதனாலும் மகர வ்யூஹம் அமைக்கப்பட்டது. ஸாரணர், உத்தவர், போஜன் அப்படியே வைதரணன், தர்மாத்மா அனாத்ருஷ்டி, ப்ருது, விப்ருது, க்ருதவர்மா, தம்ஷ்டான், சத்ருவுக்குத் தொல்லை கொடுக்கும் நிசக்ஷு, இவர்கள் ஸேனையின் முன் பாகத்தில் நின்றனர். பாரத! ஜனமேஜயா! தர்மாத்மா ஸனத்குமாரர், சாருதேஷ்ணன் இவர் இருவரும் அனிருத்தனுக்கு உதவியாக பின்பாக ஸேனையை ரக்ஷித்தனர். மீதி ரத கஜ துரக பதாதி கலந்த யாதவ ஸேனை வ்யூஹத்தின் நடுவில் வைக்கப்பட்டது. பாரத! ஜனமேஜயா! போரில் துர் மதங்கொண்ட அஸுரர்களும் பலவித ஆயுதங்களையேந்தி க்ரீடம், ஆபீடம், மகுடம், அங்கதம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டு, இடி ஒலி கொண்ட வேகமான கழுதை, யானை, முதலை, நீர் குரங்கு, நீர்யானை, எருமைக் கடா, ஒட்டகம், ஆமை முதலியன

பூட்டிய ரதங்களிலேறி ஷட்புரத்திலிருந்து வெளிவந்தனர். பலவித தூரியங்கள், சக்ரவாத்யம், மேக ஒலி சங்குகள் இவை முழங்கின. ஜனமேஜயராஜனே! போர் புரிய முன் வந்த அந்த அஸுரர் ஸேனைகளுக்கு முன்னால் நிகும்பன், தேவர் முன் இந்த்ரன் போல் நின்றான். பலத்தால் கர்வங்கொண்ட அந்த அஸுரர்கள் பலவித கோஷங்களை எழுப்பிக் கொண்டு மீண்டும் மீண்டும் துள்ளிக்கொண்டு பூமியையும் ஆகாயத்தையும் நிறைத்தனர். ஜனமேஜயா! ராஜாக்களின் ஸேனையும் அஸுரரது உதவிக்காகச் சேதிராஜனை முன்னிட்டு நிச்சயித்து ஆயத்தமாயிருந்தது. ஆண் புலியே! ஜனமேஜயா! துர்யோதனன் முதலான நூறு ஸஹோதரர்களும், சேதிராஜன் தலைமையை முன்னிட்டுக் கொண்டு கந்தர்வ நகரம் போன்ற தேர்களுடன் ஸித்தமாயிருந்தனர்.

வீரா! ஜனமேஜயா! அப்படியே த்ருபதனின் தேர்கள், க்ரூரமான சப்தத்தையுடையனவாயிருந்தன. ருக்மியும் ஆஹ்வ்ருதியும் மங்களமான பனைமரம் போன்ற விற்களை அசைத்துக்கொண்டு போரில் உறுதி கொண்டவராயிருந்தனர். சல்யன், சகுனி இருவரும் பகதத்த அரசனும், ஜராஸந்தனும், த்ரிகர்த்தனும், உத்தரனுடன் கூடிய விராடனும் போருக்கு ஆயத்தமானார்கள். நிகும்பன் முதலிய பெரிய வீர அஸுரர்கள், தேவர்களுடன் போரில் ஜயத்தை விரும்பிப் போர் செய்ய முயன்றனர்.

பிறகு நிகும்பன் பீமர்களுடைய பயங்கர தோற்றமுடைய ஸேனையைக் கொடிய விஷ ஸர்ப்பங்கள் போன்ற அம்புகளால் அடித்தான். யாதவ ஸேனாபதி அனாதிருஷ்டி அதைப் பொறுக்க முடியவில்லை. கல்லில் தீட்டிய அழகிய சிறகுகள் கொண்ட கோர அம்புக் கூட்டங்களால் திருப்பி அடித்தான். அஸுரத் தலைவனின் ரதம் காணப்படவில்லை. குதிரைகளும் காணப்படவில்லை. கொடியுமில்லை. நிகும்பனும் இல்லை. எல்லோரும் பாணத்தால் மறைக்கப்பட்டனர். பிறகு மாயாவிகளில் சிறந்த நிகும்ப வீரன், பீமத்தலைவன், அனாத்ருஷ்டியைச் சுற்றி ஸ்தம்பிக்கச் செய்தான். அனாத்ருஷ்டி வீரனை ஸ்தம்பிக்கச் செய்து, நிகும்ப வீரன், மாயாபலத்தைக் கொண்டு ஷட்புரகுகைக்கு அவனைக் கட்டியிழுத்துச் சென்றான். மாயாபலத்தை நன்கு கொண்ட நிகும்பனும் மறுபடியும் போரில் க்ருதவர்மா, சாருதேஷ்ணன், போஜன், வைதர்ணன், ஸனத்குமாரன், ருக்ஷன், அப்படியே நிசடன், உல்முகன் மற்றும் பல போஜர்களையும் ஸ்தம்பிக்கச் செய்து (குகைக்குக்) கொண்டு போனான்.

ஜனமேஜயராஜனே! கோர (வீர) யாதவர்களை ஷட்புரமெனும் குகைக்கு இழுத்துச் செல்லும் அந்த நிகும்பனின் மாயையால் மறைக்கப்பட்ட சீரம் காணப்படவில்லை. பீம குலத்தவரது அந்தப் பயங்கர யுத்தத்தைப் பார்த்துப் (சத்ருக்களுக்கு) பயத்தை வ்ருத்தி செய்யுக் கூடிய க்ருஷ்ணன் பலராமன், ஸத்யகன் கோபங்கொண்டனர். ப்ரதயும்னன், அப்படியே விசேஷமாகக் கோபங்கொண்டான். சத்ருக்களைக் கொல்லவல்ல சாம்பனும் அடக்கமுடியாத அனிருத்தனும் மற்றும் பல பீமர்களும் அப்படியே கோபங்கொண்டனர்.

ஜனமேஜயராஜனே! சார்ங்க(மெனும்) வில்லையுடைய க்ருஷ்ணன் சார்ங்கத்தை நாணேற்றி போர் புரியும் தானவர்கள் மேல் புற்கள் மேல் தீப்போல் பாணங்களை எய்தான். பகவான் ஸ்ரீக்ருஷ்ணனை அஸுரர்கள் பார்த்து, கால பாசத்தால் பிணிக்கப்பட்டவர்களாய் விளக்கு விட்டில் பூச்சிகள், எரியும் தீயை நோக்கி ஓடுவது போல் ஈஸ்வரன் க்ருஷ்ணனை நோக்கி ஓடினார்கள். சதக்னி, பரிகை, அக்னி போன்ற சூலம், ஜ்வாலை விட்டெரியும் பாஸ்வதம் இந்த ஆயுதங்களை விலக்கி விட்டு பர்வத சிகரங்கள், மரங்கள் கோரமான பெரிய கற்கள், மதங்கொண்ட யானைகள், ரதங்கள், குதிரைகள் இவைகளைத் தூக்கி வீசினர். ஜகத்துக்கு நன்மை புரியும் மஹாதேஜஸ்வீ பகவான் ஸ்ரீவிஷ்ணு, நாராயணனக்னியானவன் அஸுரரெல்லோரையும் பாணமாகிய ஜ்வாலையால் எரித்தான். அவர்கள் வீசியவற்றையெல்லாம் தீரனான காளையொருவன் சரத்கால மழையைப் பொறுப்பது போல் யாதவ காளையாகியவன் சத்ருக்களை வெல்லும் க்ருஷ்ணன் சரமழை பெய்தான். பர்ஜன்ய தேவன் பொழியும் மழையை, மணல் அணை தாங்காதது போல் நாராயணன் வில்லிலிருந்து வெளிப்பட்ட பாணங்களை அஸுரர்கள் தாங்கமுடியவில்லை.

பாரத! ஜனமேஜய! அஸுரச்ரேஷ்டர்கள் திறந்த வாயையுடைய ஸிம்ஹத்தின் எதிரில் காளைகள் போல் க்ருஷ்ணனின் முன்னால் நிற்கச் சக்தியற்றவர் ஆயினர். க்ருஷ்ணனால் அழிக்கப்படும் அஸுரர்கள் நாராயண பயத்தால் பீடிக்கப்பட்டு அப்போது உயிரில் ஆசை மேலீட்டால் ஆகாயத்தில் பறந்து சென்றனர். ப்ரபோ! ஜனமேஜயா! ஆகாயத்தையடைந்த அஸுரரை இந்த்ரன் மகன் ஜயந்தனும் அப்படியே ப்ரவரனும் ஜ்வாலை விட்டெரியும் தீப்போன்ற கொடிய அம்புகளால் அழித்தனர். அஸுரரின் தலைகள் மரங்களின்

உச்சிகளிலிருந்து விடப்பட்ட பனம் பழங்கள் போல் பூமியில் விழுந்தன. வீர! ஜனமேஜயா! அறுக்கப்பட்ட அஸுரரின் கைகள் யுக முடிவு காலத்தால் அழிக்கப்பட்ட ஐந்தலை நாகங்கள் போல் பூமியில் விழுந்தன. பிறகு ருக்மிணி புத்ரன் ப்ரத்யும்னன், தர்மாத்மா கதன், ஸாரணன், மகன் அநிருத்தன், சாம்பன் மற்றும் பலருடனும் ஒருசேர வந்து முன்னால் கொடிய நிகும்பன் மாயாமய குகையை ச்ருஷ்டித்து அக் குகையில் அடைத்தவரைத் தவிர மேலும் க்ஷத்ரிய கூட்டத்தை வெளிவர வழி தெரியாமல் அடைத்து வைப்பதற்கு வகை செய்தான்.

பாரத! ஜனமேஜயராஜனே! க்ருஷ்ணன் மகன் பலவான் ப்ரத்யும்னன் பின் போர் முன்னணியில் அங்குமிங்கும் துள்ளும் கர்ணனைப் பிடித்துக் கோரமான மாயக்குகையில் கோஷமிட்டுக் கொண்டு வைத்தான். துர்யோதனன் விராட ராஜன் த்ருபதன், சல்யன், நீலன், பீஷ்மன், ராஜா விந்தன், அனுவிந்தன், ஜராஸந்தன், த்ரிகர்த்தன், மஹா பலம் வாய்ந்த வாஸந்த்யர், த்ருஷ்டத்யும்னாதிகள், அஸ்த்ர ஸமர்த்தரான பாஞ்சாலர்கள், ஆஹ்வ்ருதி, மாமா ருக்மி, சிசுபாலன் பகதத்த ராஜா இவர்களையெல்லாம் நோக்கிச் சொன்னான். அரசர்களே! உங்களுடன் ஸம்பந்தத்தையும், பெருமையையும் மதிக்கிறேன். இந்தக் கோரரூப குகையில் உங்களை வைக்கிறேன். புத்திமான், சூலந்தரித்த வில்வோதக ஈஸ்வரனால் உன்னால் அவ்வரசர்கள் குகையில் வைக்கத்தக்கவர்கள் என்று நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். நிகும்பனால் சம்பரமாயையால் (குகையில்) வைக்கப்பட்ட எல்லா யாதவர்களையும் எல்லாப் படியாலும் விடுவிப்பேன்.

இவ்விதம் சொல்லப்பட்ட சேனாபதி ராஜா சிசுபாலனும் அந்த பீம அரசர்களையும் விசேஷமாக ப்ரத்யும்னனையும் அம்புகளால் அடித்தான். ருக்மிணியின் மகன் ப்ரத்யும்னன் வில்வோதகேஸ்வர தேவனை வணங்கி மஹாபலன் சிசுபால ராஜாவை கட்டுவதற்கு ஆரம்பித்தான். பிறகு கணத்தலைவன் நந்தி ஆயிரம் பாசங்களை யெடுத்து ருக்மிணி மகன் மஹாபலவான் ப்ரத்யும்னனுக்குச் சொன்னான். யது குலத்தவனே! வில்வோதகேஸ்வர தேவர் உனக்குச் சொன்னார், நான் உனக்குச் சொன்னபடி. எல்லாவற்றையும் இரவில் செய். யதுகுலத்தவனே! கன்னிகையின் பொருட்டு ரத்னங்களில் பேராசை கொண்ட இந்த அரசர்களைப் பாசங்களால் கட்டவும் விடவும் நீயே அதிகாரி. வீர! மஹாபாஹோ! நீ அஸுரர்களை மீதியில்லாமல் (அடியோடு) ஒழிக்கத்தக்கவன். இப்படியே ஜனார்தனனிடமும் சொல்லு. அந்த

ப்ரத்யும்னன், சிசுபாலன் பகதத்தன், ஆஹ்வ்ருதி ருக்மி மற்றும் எல்லா ராஜாக்களேயும் சிவஞல் கொடுக்கப்பட்ட பாசங்களால் நன்கு கட்டிஞன். சிறந்த வீர்யமுடைய ப்ரத்யும்னன் (அவர்களே) மாயை குகைக்கு எடுத்துச் சென்றுன். பிறகு ப்ரத்யும்னன் பெருமூச்சு விடும் பாம்புகளேப்போல் அவர்களேக் கட்டித் தன் மகன் அனிருத்தனேயும் காவலாக வைத்தான். யது குலத்து ப்ரத்யும்னன் ராஜாக்களின் ஸேஞபதிகள், க்ஷத்ரியர்கள், பொக்கிஷ அதிகாரிகள் யானே, குதிரை தேர் கூட்டங்கள் இவை எல்லாவற்றையும் கட்டிஞன். அப்படியே தன் வசமும் படுத்திஞன். ப்ரபோ! ஜனமேஜயா! பிறகு நிதானமாக அஸுரர்களேக் கொல்ல முற்பட்டான். ஆயத்தமாகிக் கொண்டே விப்ரச்ரேஷ்டன் ப்ரஹ்மதத்தனே நோக்கிச் சொன்ஞன். யாக கார்யம் பயமில்லாமல் நடக்கட்டும். த்விஜ ச்ரேஷ்ட தனஞ்ஜயன் அர்ஜுனன் இவன். தேவர் அஸுரர் நாகர் இவர்களிடமிருந்து அர்ஜுனனுக்குப் பயங்கிடையாது. இவனுக்கு மற்ற ஸஹோதரர் ரக்ஷகர். உனது பெண்கள் அஸுரர்களால் மனதால் கூட தொடப்படவில்லேயல்லவா! என்ஞல் யாகசாலேயில் மாயையால் வைக்கப்பட்டிருக்கிறுர்கள். பார்க்கப்படட்டும்.

அத்யாயம் 84 முற்றும்.



## அத்யாயம் 85

### நிகும்பாஸுரன் ஜயந்தஞல் தோற்கடிக்கப்பட்டு பிறகு க்ருஷ்ணனுடன் போரிடல்-நிகும்பனின் சரிதையை க்ருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறல். ஆகாஸவாணியின் கூற்றுல் நிகும்பன் சக்ரத்தால் வதமாகுதல்- ப்ரஹ்மதத்தனுக்கு ஷட்புரத்தைத் தானம் செய்து க்ருஷ்ணன் த்வாரகைக்கு போதல்

வைசம்பாயனர் சொன்ஞர் : ஜனமேஜயராஜனே! பிறகு ராஜாக்கள் தம்மைச் சேர்ந்தவருடன் அடைக்கப்பட்டதும் அஸுரர்களேயும் துக்கம் அடைந்தது. க்ருஷ்ணன் பலராமன் முதலிய போரில் மிக்க மதங்கொண்ட யாதவர்களால் நாற்புறமும் வதம் செய்யப்படுகிற அந்த அஸுர வீரர்கள் நாலாதிக்கிலும் ஓடினர். பிறகு அஸுர ச்ரேஷ்டன் நிகும்பன் கோபங்கொண்டு ஓடும் அவர்களேப் பார்த்துச் சொன்ஞன். ப்ரதிக்ஞையை மீறி மோகத்தால் கலங்கி பயப்படுகிறவர்களாய் ஏன் ஓடுகிறீர்கள். நிச்சயம் செய்த ப்ரதிக்ஞை நிறைவேருமல் போரில் பதில்

போரிட்டு பந்துக்களுக்குக் கடமை செய்யாமல் ஓடுகிற நீங்கள் எந்த லோகங்கள் போகிறீர்கள்? இவ்வுலகில் போரில் முரடர்களான சத்ருக்களை ஜயித்துப் பலம் அனுபவிக்கத்தக்கது. கொல்லப்பட்டாலுங் கூட சூரனால் ஸ்வர்க்கத்தில் ஸுகமாக வாழத்தக்கது. ஓடி வீட்டையடைந்து யார் முகத்தைக் பார்க்கப் போகிறீர்? மனைவிகளையும் பார்த்து என்ன சொல்வீர்கள்? சீ! சீ! வெட்கமில்லை உங்களுக்கு! ஜனமேஜயராஜனே! இப்படிச் சொல்லப்பட்ட அந்த அஸுரர்கள் வெட்கத்துடன் திரும்பினர். யாதவர்களுடன் இரட்டித்த வேகத்துடன் போர் செய்தனர்.

ஜனமேஜயராஜனே! நானாவித ஆயுதங்கள் கொண்டு போரில் வல்லவருடைய போர் விழவில் யாகசாலைக்கு வருகிறவர்களைத் தனஞ்ஜயன் கொல்கிறான். ராஜா தர்மபுத்ரரான யுதிஷ்டிரர் பீமன் நகுல ஸஹதேவ இரட்டையர்கள், இந்த்ரன் மகன் ஜயந்தன், விப்ர ச்ரேஷ்டன் ப்ரவரன் இவர்கள் எல்லோரும் ஆகாயத்தில் சென்ற அஸுரர்களைக் கொன்றனர். பிறகு அஸுரர் ரத்தமாகிற நீரால், நிலம் நிரம்பியது. அஸுரர் கேசமாகிற பாசியும் புல்லும் படர்ந்தது. சக்ரமாகிற ஆமை ரதமாகிற சுழி கொண்டது. யானையாகிற மலையால் சோபிக்கிறது. கொடி குந்த மரத்தால் நிறைந்தது. யுத்த வீரரின் கர்ஜனையாகிற கோஷமுடையது. கோவிந்தனாகிற மலையிலிருந்து உற்பத்தியாகிறது. பயந்தவர் மனதைக் கலக்கக் கூடியது. ரத்தத்தின் கொப்பளங்களாகிற நுரையையுடையது. கத்தியாகிற மீன்களையும் அலைகளையுமுடையது. இத்தகைய ரத்த நதி மழைக்கால நதிபோல வெள்ள மெடுத்தது.

நிகும்பனும் வ்ருத்தியடைகிற அந்த சத்ருக்களையும் கொல்லப்பட்ட தனது உதவி வீரர்களையும் பார்த்ததுமே துள்ளிக் குதித்தான். பாரத! ஜனமேஜயா! ஜயந்தனாலும் ப்ரவரனாலும் வஜ்ராயுதம் போன்ற பாணங்களால் தடுக்கப்பட்ட கொடிய போர் புரியும் நிகும்பன் பிறகு திரும்பி உதட்டைக் கடித்துக்கொண்டு அணுக முடியாதவனாய் ப்ரவரனையடித்தான். அந்த ப்ரவரன் பூமியில் விழுந்தான். இந்த்ரன் மகன் ஜயந்தன் பூமியில் விழுந்த அவனைக் கைகளால் அணைத்துக் கொண்டான். உயிருடன் இருப்பதாக அறிந்து அவனை விட்டுவிட்டு அஸுரனை (நிகும்பனை) நோக்கி ஓடினான். ஓடி நிகும்பனைக் கத்தியால் நன்கு வெட்டினான். அஸுரனும் ஜயந்தனைப் பரிகத்தால் நன்கு அடித்தான். இந்த்ரன் மகன் ஜயந்தன் போரில் நிகும்பனின் உடல் முழுவதும் புண்ணாக்குகிறான். புண்படுத்தப்பட்ட அந்த மஹா அஸுரன்,

அப்போது யோசித்தான். பந்துக்களைக் கொல்லும் விரோதி க்ருஷ்ணனுடன் போர் செய்ய வேண்டும். போரில் இந்த்ரன் மகனுடன் (போர் புரிந்து) என்ன புகழ் அடைவேன்? அந்த நிகும்பன் இப்படி நிச்சயித்து அங்கேயே மறைந்தான். போர் புரிய மஹாபலன் க்ருஷ்ணனிருக்குமிடம் சென்றான். அந்த நிகும்பனைப் பார்த்து பலாஸுரனைக் கொன்ற இந்த்ரன். ஐராவதத்தின் கழுத்தில் ஏறிப் போரைப் பார்க்கத் தேவதைகளுடன் வந்து ஸந்தோஷித்தான். அந்தத் தர்மாத்மா இந்த்ரன் "நன்று நன்று" என்று மகிழ்ந்து மகனை அணைத்தான். மயக்கம் நீங்கிய ப்ரவரனையும் அணைத்தான். போரில் (எவராலும்) ஜயிக்க முடியாத ஜயந்தன் இப்போரில் வெற்றி பெற்றதைப் பார்த்து இந்த்ரன் கட்டளையால் தேவதுந்துபி வாத்யங்கள் முழங்கின. பிறகு நிகும்பனும் யாகசாலைக்குச் சிறிது தூரத்தில் அர்ஜுனனுடனிருக்கும் போரில் வெல்ல முடியாத க்ருஷ்ணனைப் பார்த்தான். நிகும்பன் மிகப் பெரிய முழக்கம் செய்து மிகக் கொடிய பரிகாயுதத்தால் பக்ஷிராஜன், பலராமன், ஸாத்யகன் மூவரையும் அடித்தான்.

பாரத! ஜனமேஜயா! நாராயணன், அர்ஜுனன், பீமன், யுதிஷ்ட்ரன், நகுல ஸகதேவ இரட்டையர் க்ருஷ்ணன் மகன் சாம்பன், ப்ரத்யும்னன் எல்லோரிடமும் வீர்யவானும் விரைவில் எதையும் செய்யும் அஸுரன் நிகும்பன் மாயையால் போர் செய்தான். எல்லா ஆயுதங்களிலும் வல்ல எல்லோரும் இவனைக் (நிகும்பனை) காணவில்லை.

அந்த அஸுரனை எல்லோரும் பார்க்க இயலாதபோது ஹ்ரிஷீகேசன், ப்ரமதகணதலைவன் வில்வோதகேச்வர தேவனை த்யானம் செய்தான். பிறகு அவர்கள் எல்லோரும் மிக்க தேஜஸ்வீ வில்வோதகேச்வரருடைய பெருமையால் மாயாவிகளில் ச்ரேஷ்டன் நிகும்பனைப் பார்தனர். கைலாச சிகரம் போன்ற உருவமுடையவனும் விழுங்குகிறவன் போன்று (வாய்திறந்து) இருப்பவனும், பந்துக்களை நாசம் செய்த விரோதி க்ருஷ்ணனைப் போருக்கு அழைப்பவனுமான நிகும்பனையும் அவன் எய்த பரிகத்தையும் (ஸதா) ஆயத்தமாயுள்ள காண்டீவத்தை நாணேற்றி அர்ஜுனன் எதனையும் நாசம் செய்யும் பாணங்களால் அடிக்கடி அடித்தான். ஜனமேஜயராஜனே! அந்த அர்ஜுனனது கல்லில் தீட்டப்பட்ட அந்த அம்புகள், அந்த நிகும்பன் உடலிலும், பரிகத்திலும், பங்கமடைந்தவைகளாய் வளைந்து பூமியில் விழுந்தன. பாரத! ஜனமேஜயா! தநஞ்ஜயன் அஸ்த்ரத்தோடு (மந்த்ரத்தோடு)

கூடிய அந்த பாணங்கள் பலனற்றுப் போனதைப் பார்த்து கேசவனை நோக்கி இது என்ன வென்று கேட்டான்? தேவகீ புத்ரனே! க்ருஷ்ணனே! எனது வஜ்ராயுதம் போன்ற பாணங்கள் பர்வதங்களையும் பிளக்கின்றன. இது என்ன? இதில் (இங்குப் பயனற்றுப் போனதில்) எனக்குப் பெரிய ஆச்சர்யம்.

பாரத! ஜனமேஜய! பிறகு க்ருஷ்ணன் சிரித்துக்கொண்டே அந்த அர்ஜுனனுக்குச் சொன்னான். இந்த நிகும்பன் பெரிய பூதம். குந்திமகனே! விஸ்தாரமாகக் கேள். முன்னர் அணுக முடியாத தேவ சத்ருவான பெரிய அஸுரன் உத்தரகுரு ஸ்தலத்தையடைந்து நூறாயிரம் வருஷங்கள் தவம் செய்தான். பிறகு இவனைப் பகவான் சிவன் வரம் கேட்கச் சொன்னான். அவன் தேவர்களாலும், அஸுரர்களாலும் கொல்ல முடியாத மூன்று ரூபங்களைக் கேட்டான். எனக்கோ ப்ராஹ்மணர்களுக்கோ, விஷ்ணுவுக்கோ, அப்ரியம் செய்தால் விஷ்ணுவால் கொல்லத்தக்கவன் ஆவாய். வேறொருவரால் இல்லை. நானும், விஷ்ணுவும் ப்ராஹ்மணர்களுக்கு ஹிதம் செய்பவர். விப்ரர்களுக்கு மேலான புகலிடம் என்று காளைக் கொடியோன் மஹாதேவன் அந்த நிகும்பனுக்குச் சொன்னான்.

பாண்டு புத்ரனே! அர்ஜுனா! அத்தகைய இவன் மூன்று தேஹங் கொண்டவனாய் மிகக் கொடியவன். வரத்தால் மதங்கொண்டவன். பானுமதியை அபஹரிக்கும் போது அவனது ஒரு தேஹம் என்னால் அழிக்கப்பட்டது. துராத்மாவான இவனுடைய இந்த ஷட்புர தேஹம் அழிக்க முடியாதது. இவனுடைய தவத்துடன் கூடிய ஒரு தேஹம் (அஸுரத்தாய்) திதிக்குப் பணிவிடை செய்கிறது. இவனது மற்றொரு கொடிய தேஹமோ ஷட்புரத்தில் வஸிப்பது. இந்த நிகும்ப சரிதம் முழுதும் என்னால் சொல்லப்பட்டது. அர்ஜுனா இவன் வதத்தில் த்வரைப்படு. கதை பின்னர் ஆகும். இப்படி அவ்விருவரும் பேசிக்கொண்டிருக்கும் போதே போரில் வெல்வதற்கரிய அஸுரன் ஷட்புர குஹைக்குள் புகுந்தான்.

குரு குலோத்வஹனே! ஜனமேஜயா! அவனது கோரமான அடையமுடியாத அந்த ஷட்புர குஹையைத்தேடி பகவான் மதுஸூதனன் அதனுட் புகுந்தான். சந்த்ர சூர்ய ஒளி அற்றது, தன் தேஜஸால் ஒளி வீசுவது, விரும்பியபடி உஷ்ணம், சீதம் ஸுகமானது முதல் கடுமையானது வரை கொடுக்கக்கூடியது. ஜனமேஜயராஜனே! அங்குப் புகுந்து பகவான் க்ருஷ்ணன்

அடைபட்ட அரசர்களைப் பார்த்தான். கொடிய நிகும்பனுடன் போர் புரிந்தான். மஹாத்மா க்ருஷ்ணனின் அனுமதி பேரில் அப்போது பலராமன் முதலிய யாதவர்கள் பின் தொடர்ந்து புகுந்தனர். அப்படியே எல்லாப் பாண்டவரும் ஒன்று கூடிப் புகுந்தனர். க்ருஷ்ணனால் தூண்டப்பட்ட ப்ரத்யும்னன், முன்னர் நிகும்பனால் கட்டி அடைக்கப்பட்ட யாதவர்களை அழைத்து வந்தான். அந்த க்ருஷ்ணனோ போர் செய்தான்.

ப்ரத்யும்னனால் விடுவிக்கப்பட்ட அந்த யாதவர்கள் எல்லோரும் மன மகிழ்ச்சியுடன் நிகும்பன் வதத்தை விரும்பி ஜனார்தனன் இருந்த இடத்துக்கு வந்தனர். (ப்ரத்யும்னனால்) அடைக்கப்பட்ட அரசர்கள் ப்ரத்யும்னனைப் பார்த்து "மீண்டும் எங்களை விடுதலை செய்" என்று சொல்லினர். பிறகு கீர்த்தி வாய்ந்த வீரன் ப்ரத்யும்னன் அவர்களையும் விடுதலை செய்தான். அப்போது எல்லா அரச வீரர்களும் வெட்கத்தில் மூழ்கியவர்களாய் தலை குனிந்து சோபையிழந்து மௌனத்துடன் கீழ் நோக்கிய முகத்தினராயிருந்தனர். கோவிந்தன் பகவான் விஷ்ணு வெற்றியைக் குறித்து முயலும் தன் சத்ரு கொடிய நிகும்பனுடன் போர் புரிந்தான். ப்ரபோ ஜனமேஜயா! க்ருஷ்ணன் நிகும்பனால் பரிகம் கொண்டு செம்மையாக அடிக்கப்பட்டான். க்ருஷ்ணனாலும் நிகும்பன் கதைகொண்டு நன்றாக அடிக்கப்பட்டான். பலமான அடியால் மூர்ச்சித்த அவ்விருவரையும் தொல்லைப்பட்ட பாண்டவரையும், யாதவரையும் கண்டு முனிகணங்கள் க்ருஷ்ணனது ஹிதத்தை விரும்பி அங்கு ஜபம் செய்தனர். மஹாத்மா க்ருஷ்ணனை வேதத்தில் சொல்லப்பட்ட ஸ்தோத்ரங்களால் ஸ்துதிக்கவும் செய்தனர். பின்பு அப்போது பகவான் கேசவன் மூர்ச்சை தெளிந்தான். அஸுரனும் அப்படியே. திரும்பவும் அவ்விருவீரரும் போர்புரியத் தொடங்கினர். பாரத! ஜனமேஜயா! காளைகள் போலும் யானைகள் போலும் மோதிக்கொண்டு செந்நாய்கள் போல் கோபங்கொண்டு போரில் முனைந்தவராய் அடித்துக் கொண்டனர்.

ஜனமேஜயராஜனே! பின்பு அப்போது அசரீரி வாக்கு க்ருஷ்ணனைக் குறித்துச் சொல்லிற்று. தேவர்களுக்காகவும் ப்ராஹ்மணர்களுக்காகவும் முன் போன்று இந்த அஸுரனை சக்ராயுதத்தால் வதம் செய். பகவான் வில்வோதகேச்வர தேவன் க்ருஷ்ணனைக் குறித்துச் சொன்னார்.மஹாபலவானே! நீ மிக்க தர்மத்தையும் கீர்த்தியையும் அடைவாயாக. லோகநாதனும் ஸாதுக்களுக்குக் கதியுமான க்ருஷ்ணன் அப்படியே ஆகட்டும்

எனச் சொல்லி வணங்கி பிறகு அஸுரகுலத்தை அழிக்கவல்ல ஸுதர்சன சக்ரத்தை ப்ரயோகித்தான். நாராயணன் புஜத்தால் விடப்பட்ட அது நிகும்பனின் ச்ரேஷ்டமான குண்டலங்களுடன் கூடிய சூர்ய மண்டல காந்தியுடைய தலையை அறுத்தது. குண்டலங்களால் ப்ரகாசிக்கும் அவன் தலை மேகத்தால் மதங்கொண்ட மயில்போல் மலைச் சிகரத்திலிருந்தது தரையில் துள்ளி விழுந்தது. மனிதப்புலியே! ஜனமேஜயா! உலகத்தை நடுங்கச் செய்யும் அந்த நிகும்பன் கொல்லப்பட்டதும் வில்வோதகேச்வரரும் விபுவான தேவனும் மகிழ்ந்தான். சத்ரு நாசத்தில் இந்த்ரனால் ச்ருஷ்டிக்கப்பட்ட பூமாரியும் ஆகாயத்திலிருந்து பெய்தது. தேவதுந்துபி வாத்யங்களும் முழங்கின. உலக முழுதும் ஸந்தோஷித்தது. முனிவரும் விசேஷமாக மகிழ்ந்தனர்.

பகவான் ஸ்ரீக்ருஷ்ணனும் அஸுரப் பெண்களை நூற்றுக் கணக்கில் கொடுத்தார். க்ஷத்ரியர்களுக்கும் பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் திரும்பத் திரும்ப ஸமாராதானம் செய்து விசித்ர ரத்னங்களையும் மேலான ஆடைகளையும் கொடுத்தான். கதனுக்கு முன் தோன்றல் ப்ரீதியடைந்த ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்களுக்குக் குதிரைகள் பூட்டிய ஆறுயிரம் ரதங்கள் கொடுத்தான். பிறகு த்வாரகா நகரத்தையும் வ்ருத்தி செய்யும் ச்ரேஷ்டன் க்ருஷ்ணன் ப்ரஹ்மதத்த விப்ரனுக்கு மிக மேலான ஷட்புரத்தையே தானம் செய்தான். ஸத்ர யாகம் முடிந்ததும் அப்போது சங்கம், சக்ரம், கதை தரித்த மஹாபலன் ஸ்ரீக்ருஷ்ணன் அந்த அரசகணங்களையும், பாண்டவர்களையும் விடை கொடுத்தனுப்பி பிறகு வில்வோதகேச்வரருக்கு உத்ஸவம் செய்வித்தான். அப்போது மாம்ஸம், பருப்பு இவைகளையும் வ்யஞ்ஜனங்களையும் கூடிய பலவித அன்னங்களைக் கொடுத்தான்.

மற்போர் ப்ரியனும் மனதை அடக்கியவனுமான ஸ்ரீ க்ருஷ்ணன் மற்போரில் சிறந்த மல்வீரரைச் சண்டையிடச் செய்து நிறைய தனத்தையும் ஆடையையும் கொடுத்தான். மஹாபலவான் ஸ்ரீக்ருஷ்ணன் மாதா பிதாக்கள் யாதவர்கள் இவர்களுடன் கூடி ப்ரஹ்மதத்தனை வணங்கி (பின்) த்வாரகா நகரை அடைந்தான். அந்த வீரக்ருஷ்ணன் வழியில் ஜனங்களால் வணங்கப்பட்டு புஷ்ப (தோரண)ங்களால் அழகிய பாதைகளையுடைய மார்க்கமாய் ஸந்தோஷமும், புஷ்டியும் உள்ள ஜனங்களால் நிறைந்த அழகிய த்வாரகா நகரில் புகுந்தான்.

சக்ரபாணியின் ஷட்புரவதமாகிற வெற்றியைக் கேட்கிறவனும், படிக்கிறவனும் போரில் ஜயமடைவான். புத்ரனில்லாதவன் புத்ரனடைகிறுன். தனமில்லாதவன் தனத்தையடைகிறுன். ரோகிஷ்டன் ரோகத்திலிருந்து விடுபடுகிறுன். கட்டப்பட்டவனும் கட்டிலிருந்து விடுதலையடைகிறுன். பாரத! ஜனமேஜயரே! இந்தச் சரிதை படனம் கர்ப்பத்தை உண்டு பண்ணுவதாகவும் புத்ரனை உண்டு பண்ணுவதாகவும் சொல்லப்பட்டது. ச்ரார்தங்களில் நன்கு படிக்கப்பட்டு அழிவற்ற பலனைக் கொடுப்பதாகவும் கருதப்படுகிறது.

பாரத தேசத்தில் ப்ரஸித்தியுடைய தேவ ச்ரேஷ்டன் மஹாத்மா க்ருஷ்ணனது வெற்றியை இவ்வுலகில் ஸதா படிக்கிறவன் (நித்ய பாராயணம்) செய்பவன், வேதனையும் துக்கமுமில்லாமல் இங்கிருந்து (பின்) நல்ல கதியை அடைகிறுன்.

ரத்னங்கள் ஸ்வர்ணம் இவைகளால் பூஷணம் பூண்ட திருக்கரங்களையும், திருவடிகளையும் உடைய க்ருஷ்ணன் போற்றி! தூர்யனைக காட்டிலும் மேலான குணங்களுடைய க்ருஷ்ணன் போற்றி! நான்கு ஸமுத்ரங்களிலும் பள்ளி கொண்டிருக்கும் க்ருஷ்ணன் போற்றி! வாஸுதேவ, ப்ரத்யும்ன, சங்கர்ஷண அநிருத்த ரூபமாயிருக்கும் க்ருஷ்ணன் போற்றி! ஆயிரம் பெயருடையான் க்ருஷ்ணன் போற்றி! ஜகத்துக்கு அந்தர்யாமியாயிருக்கும் புருஷன் நாராயணனுகிற க்ருஷ்ணன் போற்றி!.

அத்யாயம் 85 முற்றும்.



## அத்யாயம் 86

### அந்தகாஸுரன் பிறப்பு-அவனது உபத்திரவம் ரிஷிகளுள் அவனது வதம் பற்றிய கவலை-நாரதர் மந்தார மாலையணிந்து அவனிடம் சென்று மந்தார வனத்தின் பெருமையைக் கூறுதல்.

ஜனமேஜயர் சொன்னுர் : முனிவருள் சிறந்தவரே! வைசம்பாயனரே! இந்த இனிய ஷட்புரவதம் கேட்கப்பட்டது. முன் சொல்லப்பட்ட அந்தக வதத்தை விரிவாகச் சொல்லும். சொல்வோரில் சிறந்தவரே! பானுமதியை அபஹரித்ததையும் அந்த நிகும்பன் வதத்தையும் விரிவாகச் சொல்லும். எனக்கு (கேட்க) மிக்க உத்ஸாஹம். வைசம்பாயனர் சொன்னுர் : முன்னர் புகழ்

வாய்ந்த விஷ்ணுவால் (திதியின்) அஸுர புத்ரர் கொல்லப்பட்டதும் திதிதேவி மரிசி புத்ரர் கச்யபரைத் தவத்தால் பூஜை செய்தாள். பாரத! ஜனமேஜய! கால உசிதமான தவம், முனியின் பணிவிடை, அப்படியே ஹிதகார்யங்கள் இனிமை இவற்ருல் மிக்க ஸந்தோஷமடைந்த தவச் செல்வர் கச்யபர் அவளேக் குறித்துச் சொன்ஞர் : "மங்களமானவளே! உன் விஷயத்தில் மகிழ்ச்சியடைந்தேன். நல்ல வ்ரதமுடையவளே! வரம் கேட்பாயாக்

திதி சொன்னள் : பகவானே! தர்மாத்மாக்களில் சிறந்தவரே! தேவர்களால் என் பிள்ளேகள் கொல்லப்பட்டனர். தேவர்களால் கொல்லமுடியாத அளவற்ற வீரமுடைய பிள்ளேயை விரும்புகிறேன். கச்யபர் சொன்ஞர் : தேவி! தக்ஷபுத்ரீ! தாமரைக் கண்ணி ! தேவதேவன் ருத்ரஞல் தவிர மற்ற தேவரால் கொல்ல முடியாத பிள்ளே உனக்கு உண்டாவான். இதில் ஒரு ஸந்தேஹமுமில்லே. அந்த ருத்ரனுக்கு நான் அதிகாரமுள்ளவனில்லேயல்லவா? ஆதலால் புத்ரனுடன் உனது ஆத்மா எல்லாப்படியாலும் ரக்ஷிக்கத் தக்கது.

பிறகு கச்யபர் அந்தத் தேவியை விரலால் வயிற்றில் தொட்டார். அவளும் புத்ரனேப் பெற்ருள். குருநந்தன! ஜனமேஜய! ஆயிரம் கைகள், ஆயிரம் தலேகள் அப்படியே இரண்டாயிரம் கண்கள், அப்படியே இரண்டாயிரம் கால்கள் உடையவனேப் பெற்ருள். பாரதா! அவன் குருடனில்லாவிட்டாலும், குருடனேப் போல் செல்கிருன். அதஞல் அங்கு வஸிப்பவர்கள், அவனே '<u>அந்தகன்</u>' எனப் பெயருடையவன் எனக் கூறினர். பாரத! ஜனமேஜயா! அந்த அந்தகன் கொல்லப்படத்தகாத வஞயிருக்கிறேன்' எனச் சொல்லி எல்லா லோகங்களேயும் துன்புறுத்துகிருன். எல்லாச் சிறந்த பொருள்களேயும், தன் பலங்கொண்டு அபஹரிக்கிருன். எல்லா உலகங்களுக்கும் பயங்கரஞன அந்த அந்தகன், மிகுந்த சக்தியுடையவஞய் தன் வீர்யத்தால் அப்ஸரஸ்கணங்களே அபஹரித்துத் தன்வீட்டில் வஸிக்கச் செய்தான். பாபத்தில் உறுதி கொண்ட அந்த அந்தகன், பிற மனேவி அபஹரித்தல், பிறர் சிறந்த பொருள்களேத் தனதாக்கிக் கொள்ளுதல், இவ்விரண்டையும் மோஹத்தால் எப்போதும் செய்தான்.

பாரத ஜனமேஜயா! எல்லோருக்கும் தொல்லே கொடுக்கும் அநேக அஸுர நண்பர்கள் உதவியுடன், மூவுலகையும் வெற்றி கொள்ள முயன்ருன்.

அதைக் கேட்டுப் பகவான் இந்த்ரன் தந்தை கச்யபரை நோக்கிச் சொன்னான் : "முனிச்ரேஷ்டரே! அந்தகனால் இத்தகைய செயல் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. ப்ரபுவே! பிறகு நாங்கள் செய்ய வேண்டியதைச் சொல்லும். முனிவரே! என்னால் இளையவனை (அவன் செயல்களை) எவ்விதம் பொறுக்க முடியும்? ப்ரபோ! (திதிக்குப்) ப்ரிய புத்ரனை நான் எப்படிக் கொல்வது? பிள்ளை கொல்லப்பட்டால் பூஜ்யையான அவள் (திதி) என்னிடம் கோபங்கொள்வாள்".

தேவேந்த்ரன், வார்த்தையைக் கேட்டு, பிறகு கச்யபமுனி சொன்னார் : " தேவேந்த்ரா! அவனைத் தடுப்பேன். எல்லா விதத்திலும் உனக்கு மங்களம் உண்டாகட்டும்". பாரத! ஜனமேஜயா! கச்யபரும் திதியுடன் வீரன் அந்தகனை மிக்க கஷ்டப்பட்டு மூவுலகு வெற்றியிலிருந்து தடுத்தார். துஷ்டாத்மா அந்தகன் தடுக்கப்பட்ட போதிலும், அந்தந்த உபாயங்களால் பலாத்கரித்து ஸ்வர்கத்தில் வாழும் அமரர்களைத் துன்புறுத்தவே செய்தான். துர்புத்தியுள்ள அந்தகன் நந்தன வ்ருக்ஷங்களையும், (வேறு) உத்யான வனங்களையும் அழித்தான். உச்சைச்ரஸின் தலையில் குட்டிக் குதிரைகளை ஸ்வர்க்கத்திலிருந்து பலாத்காரமாகக் கொண்டு வந்தான். பாரத! ஜனமேஜயா! வரத்தால் மதங்கொண்ட அந்தகன் திக்கஜங்களின் திவ்ய யானைக்குட்டிகளையும் கூட தேவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பலாத்காரமாக அபஹரிக்கிறான். தேவர்களுக்கு முள்ளான அந்த துஷ்டாத்மா அந்தகன் யாகங்களாலும் அப்படியே தவத்தாலும் தேவர்களைப் புஷ்டர்களாக்குபவர்களுக்குத் தடை செய்கிறான்.

ஜனமேஜயராஜனே! ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய மூன்று வர்ணங்களும் யாகத்துக்குத் தடை செய்யும் அந்தகனுடைய பயத்தால் யாகங்கள் செய்யவில்லை. அந்தகன் இஷ்டப்படி வாயு வீசுகிறான். அப்படியே அவன் இஷ்டப்படி சூர்யன் தபிக்கச் செய்கிறான். அப்படியே நக்ஷத்ரங்களுடன் கூடின சந்த்ரனும் ஒளி வீசுகிறான் அல்லது காணப்படுவதேயில்லை. ப்ரபோ! ஜனமேஜயா! மிக்க கொடிய பலத்தால் மதங்கொண்ட துர்புத்தி அந்தகனிடம், பயத்தால் ஆகாயத்தில் விமானங்கள் செல்வதில்லை. வீர குருகுலத்தவனே! ஜனமேஜயா! மிகக் கொடிய அந்தகனிடம் பயத்தால் உலக முழுதும் (ஓங்காரம் வஷட்காரம்) யாகயஜ்ஞங்களும் ஜபதபாதிகளும் இல்லாமலாயிற்று. பாரத! குருதேசம், வடக்குக் குரு தேசம், பத்ராஸ்வம், கேது மாலதேசம், ஜம்பூத்வீபம் முதலிய ப்ரதேசத்திலிருப்பவர்களையும் இந்தப் பாபி ஓடச் செய்தான்.

தேவர்களும் அணுக முடியாத அஸுரர்களும் அப்படியே ஸாமர்த்யமுடைய வேறு ப்ராணிகளும் எல்லா ப்ரகாரத்தாலும் அந்த அந்தகனேக் கௌரவித்தனர். தர்மாத்மாக்களில் சிறந்தவரே! அந்தகனல் தொல்லே கொடுக்கப்பட்ட ப்ரஹ்மவாதிகளான ரிஷிகளும் ஒன்று கூடி அந்தகனின் வதத்தைக் குறித்தே ஆலோசித்தனர்.

அவர்கள் மத்தியில் புத்திமான் ப்ரஹஸ்பதி பிறகு இதைச் சொன்னுர். 'இவனுக்குப் பரமசிவனிடமிருந்து தவிர எப்படியும் மரணம் கிடையாது. அப்படியே கச்யபரால் வரம் கொடுக்கப்படும் போதும் புத்திமானுன அவர் ருத்ரனிடமிருந்து காப்பாற்ற நான் சக்தியுள்ளவனில்லே என்று சொல்லப்பட்டது. எல்லா ப்ராணிகளேயும் அந்தகன் பீடிப்பதை ஸநாதனனுன சங்கரன் அறியும்படியான உபாயத்தை ஆலோசிப்போம். பகவான் ஜகத் ப்ரபு ஸாதுக்களுக்குப் புகலிடம். சங்கரன் விஷயம் தெரிந்து எல்லோரின் கண்ணீர் துடைப்பதை அவச்யம் செய்வான். ஸாதுக்கள் அஸத்துக்களிட மிருந்து காப்பாற்றத் தக்கவர்கள். ப்ராஹ்மணர்களோ விசேஷமாகக் காப்பாற்றத் தக்கவர் என்பது ஜகத்குரு தேவதேவன் சங்கரன் வ்ரதமல்லவா! நாம் எல்லோரும் அந்த விப்ரர் நாரதரை சரணமடைவோம். அந்த விஷயத்தில் அவர் உபாயத்தை அறிவார். பரமசிவனின் ஸ்நேஹிதரல்லவா அவர்". ப்ரஹஸ்பதியின் இந்த வார்த்தையைக் கேட்டுப் பிறகு எல்லா தவச்செல்வரும் அப்போது ஆகாயத்தில் வந்த தேவரிஷி ச்ரேஷ்டர் நாரதரைப் பார்த்தனர். நாரத முனிவரைக் கௌரவித்து முறைப்படி பூஜித்து "தேவரிஷியே! பகவானே! ப்ரஹ்மஜ்ஞானியே! சீக்ரம் கைலாசம் செல்லும். அந்தகன் வத விஷயத்தில் சங்கரனே விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும் என்று தம் ரக்ஷைக்காக நாரதரை வேண்டினர். நாரதரும் அவர்களுக்கு "அப்படியே ஆகுக" எனச் சொன்னுர்.

ரிஷிகள் சென்றதும் பிறகு செய்வதறிந்த வித்வான் நாரத முனிவர் கார்யத்தை மனதால் தீர விசாரித்து இவ்விதம் முடிவு கண்டார். பிறகு அந்த பகவான் நாரதமுனி, காளேக்கொடியோன் அழிவற்ற பரமசிவன் இருக்கும் மந்தாரவன நடுவிற்கு அவனேப் பார்க்க வந்தார். சூலபாணி பரமசிவனுக்கு வேண்டியவரான அந்த முனிச்ரேஷ்ட நாரதர் அங்கு அழகிய மந்தாரவனத்தில் ஓர் இரவு தங்கி காளேக்கொடியோன் அனுமதி பெற்று, திரும்ப ஸ்வர்க்கம் வந்து சேர்ந்தார்.

பாரத! ஜனமேஜயா! எல்லா நறுமணத்துக்கும் மேலான மணமுடைய மந்தார புஷ்பங்களால் நன்கு தொடுக்கப்பட்ட அந்த மாலையை அணிந்து, பிறகு ஜனமேஜய ராஜனே! அந்தப் புஷ்பங்களாலேயே தொடுக்கப்பட்ட மிக்க மணமுடைய ஸந்தான மாலையையும் கழுத்தில் நன்கு அணிந்து பலத்தால் கர்வியான அந்த துராத்மா அந்தகனிருக்குமிடம் வந்தார். அந்தகனும் அந்தச் சிறந்த நறுமணத்தை முகர்ந்து மேலான மணமுடைய ஸந்தானப் பூமாலையைப் பார்த்து, தவச்செல்வரே! மாமுனியே! இந்த ரம்யமான புஷ்ப ஜாதி எங்குக் கிடைக்கும்? மேலான நறுமணத்தையும் சுடர் நிறங்களையும் அடிக்கடி வளர்க்கிறது. ஸ்வர்க்கத்திலுள்ள ஸந்தான புஷ்பங்களை எல்லா விதத்திலும் மேம்பட்டிருக்கிறது. அந்த வ்ருக்ஷத்திற்கு உடையவன் யார்? முனியே! அதைக் கொண்டு வர இயலுமா? தேவதைகளுக்கு அதிதியே! நாங்கள் அனுக்ரஹிக்கத் தக்கவரானல் (இதற்கெல்லாம்) பதில் சொல்லும்.

பாரத! ஜனமேஜயா! மஹா தபோநிதியான அந்த முனிச்ரேஷ்டர் நாரதர் சிரித்துக் கொண்டே அந்தகனின் வலக்கையைப் பிடித்து அவனுக்குச் சொன்னர்: "வீரனே! பர்வத ச்ரேஷ்டமான மந்த்ரத்தில் தன்னிஷ்டப்படி இடம் மாறும் வனம் இருக்கிறது. அங்கு இவ்வித புஷ்பம் உண்டு. அப்பா! அது சூலபாணி பரமசிவனின் படைப்பு. அந்த வனத்தில் மஹாத்மா சூலபாணி பரமசிவனின் அனுமதியின்றி எவராலும் புக முடியாது. ப்ரமதகணங்கள் அவ்வனத்தைக் காவல் புரிகின்றன. அவர்கள் நானுவித ஆயுதங்கள் கொண்டவர், பயங்கரமானவர், அணுக முடியாதவர், எந்த ப்ராணியாலும் கொல்லப்பட முடியாதவர். மஹாதேவனுல் நன்கு ரக்ஷிக்கப்பட்டவர். மந்தார வ்ருக்ஷ ப்ரதேசத்தில் எல்லோரையும் காப்பாற்றும் ப்ரமதகணங்களுடன் கூடிய ஸர்வாத்மா பரமசிவன் பார்வதியுடன் எப்போதும் விசேஷமாக விளையாடுகிறுள். கச்யபர் குமாரனே! அந்தக! மூவுலகத் தலைவன் பரமேஸ்வரனை விசேஷ தவத்தால் பூஜை செய்து மந்தார புஷ்பங்களையடைய முடியும். மேலும் பரமசிவனுக்கு அதி ப்ரியமான அந்த மரங்கள், சிறந்த பெண்களையும், சிறந்த ரத்னங்களையும், மற்றும் விரும்பிய எல்லாவற்றையும் அவை கொடுக்கின்றன. அப்பா! ஒப்பற்ற வீரமுடையவனே! அங்குச் சூர்யனும், சந்த்ரனும் ஒளி வீசுவதில்லை. அது தானே ஒளி வீசும் மரங்களுடைய வனம். அது துக்கங்கள் நன்கு தவிர்க்கப்பட்டது. மஹாபலமுடைய அந்தகனே! அங்குப் பெரிய வ்ருக்ஷங்கள் வாஸனை வீசுகின்றன. மற்றவை நல்ல நீரை வெளி விடுகின்றன.

மற்றும் சில நறுமணம் வீசும் பலவித ஆடைகளை வெளிவிடுகின்றன. நாம் கடித்துண்பவை, விழுங்குபவை, குடிப்பவை, உறிஞ்சுபவை, நக்கி உட்கொள்பவை, அப்படியே நம் மனதால் விரும்பப்பட்ட பலவித உணவுகள், மரங்களிலிருந்து வெளிவருகின்றன. வீர அழகனே! அந்தகா! மந்தார வனத்தில் தாகம், பசி, வாட்டம், கவலை இவை இல்லையென்று நினைவில் கொள். அஸுர ச்ரேஷ்டனே! அந்த வனத்தின் குணங்கள் வர்ணிக்க நூறு வருஷங்களானாலும் முடியாது. அங்கு ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் பல மடங்கு மேலான குணங்கள் வளர்கின்றன. அங்கு ஒரு நாள் தங்கினவன் கூட இந்த்ர லோகத்துடன் பல லோகங்களையும் வெற்றி கொள்வானல்லவா? அது ஸ்வர்க்கத்துக்கும் ஸ்வர்க்கம், ஸுகத்துக்கெல்லாம் மேலான ஸுகம், உலகத்துக்கெல்லாம் அது ஒன்றேயென என் மனதில்படுகிறது.

அத்யாயம் 86 முற்றும்.



## அத்யாயம் 87

### அந்தகாஸுரன் பரமசிவனால் அழிதல்

வைசம்பாயனர் சொன்னார் : பாரத! ஜனமேஜயா! மஹா அஸுரன் அந்தகன் நாரத வசனத்தை நன்றாகக் கேட்டு மந்தர மலையை அடைய மனம் ஒருப்பட்டான். மஹாதேஜஸ்வி மஹா பலவான் அந்தகன், அஸுரர்களை அழைத்துக் கொண்டு அப்போது மஹாதேவன் இருப்பிடமான மந்த்ர மலையைக் கோபத்துடன் அடைந்தான்.

பெரிய மேகங்களால் மறைக்கப்பட்டது, சிறந்த ஓஷதிகள் நிறைந்தது, சித்த புருஷர்கள் நிறைந்தது. மஹரிஷி கணங்கள் வஸிப்பது. சந்தன, அகரு மரங்கள் நிரம்பியது. ஸால மரங்கள் மிகக் கொண்டது, கின்னரர் பாட்டுக்களால் பொலிவது. வெகு யானைக் கூட்டங்கள் கொண்டது. ஓரிடத்தில் காற்றால் அசையும் மலர்ந்த (பூக்கள், தழைகள் விரிந்த) மரங்கள் நடனமாடுவன போல் தோன்றுகிறது. உதிர்ந்த அழகிய தாதுப் பொருள்களால் மெழுகப்பட்டது போலிருக்கிறது, ஓரிடத்தில் பறவைகளின் இனிய ஒலிகளால் அந்த வண்டும் கானம் செய்வது போன்றது. இங்கும் அங்கும் அழகாக நடமாடும் அன்னப் பறவைகளால்

வ்யாபிக்கப்பட்டது. அஸுரர்களைக் கொல்லவல்ல மஹாபலம் வாய்ந்த எருமைகளாலும், சந்த்ரகிரணம் போன்ற நிர்மலமான ஸிம்ஹங்களாலும் அலங்கரிக்கப்பட்டது. அவ்வனம் ஸ்வர்ணக் குவியல் போலிருக்கிறது. சிறுத்தைகளாலும் நிறைந்தது. மான் கூட்டங்களால் வியாபிக்கப் பெற்றது.

இத்தகைய அழகிய ரூபமுடைய மந்த்ர மலையை நோக்கி பலத்தால் கர்வங்கொண்ட அஸுரன் சொன்னான்."பர்வதமே! பிதாவின் வரதானத்தால் நான் கொல்லப்பட முடியாதவன் என்று நீ அறிகிறாயல்லவா? சராசரத்துடன் கூடிய மூவுலகு முழுவதும் என் வசப்பட்டதாகவேயிருக்கிறது. என்னுடன் பதில் போர்புரிய எவனும் இச்சிப்பதேயில்லை. மஹாமலையே! உன் தாழ்வரையில் மிகச் சிறந்ததும் எல்லா விருப்பங்களையும் கொடுக்கவல்ல புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான பாரிஜாத வனமும் இருக்கிறது. உன்னுடன் கூடி, பின் பிறந்த அந்த வனத்தை அனுபவிக்கப் போகிறேன். அதன் இருப்பிடத்தை சொல். நீ கோபங் கொண்டு என்ன செய்வாய்? என் மனம் விரைகிறது. என்னால் துன்புறுத்தப்பட்ட உனக்கு ரக்ஷகனைக் காணவில்லை." அவனால் இப்படிச் சொல்லப்பட்ட அந்த மந்தர மலை அங்கேயே மறைந்தது. பிறகு வரதானத்தால் மதங்கொண்ட அந்தகன், மிக்க கோபங்கொண்டு பெரிய கோஷத்தையெழுப்பினான். இந்த வார்த்தை சொன்னான். "என்னால் யாசிக்கப்பட்ட நீ என்னைக் கௌரவிக்கவில்லை. ஆகையால் நான் உன்னைச் சூர்ணமாக்குகிறேன். பர்வதமே! எனது பலத்தைப் பார். இவ்விதம் சொல்லி வரதானத்தால் மதங்கொண்ட வீர அந்தகன் அந்த எல்லா அஸுரர்களுடன் பல யோஜனை தூரமுள்ள சிகரத்தைப் பிடுங்கி அதன் மற்ற சிகரங்களில் தேய்த்தான்.

மஹாகிரி மந்தர பர்வதம் எல்லா நதிக் கூட்டங்களும் மறைந்து தான் வருந்துவதைப் பகவான் ருத்ரன் அறிந்து அந்தப் பர்வதத்திற்கு அனுக்ரஹம் செய்தான். வீர! ஜனமேஜயா! விசித்ர காடுகளையுடைய மதங்கொண்ட யானை (மற்றும்) ம்ருகங்களையுடைய ஆகாயத்திலிருநது விழும் நதிக் கூட்டங்களால் வ்யாபிக்கப்பட்ட மலை, முன்போலவே ப்ரகாசிக்கிறது. பாரத ஜனமேஜயா! பிடுங்கி எறியப்பட்ட பயங்கரமான சிகரங்கள், மஹாதேவன் பெருமையால், அஸுரர்களையே அழிக்கின்றன. ஜனமேஜயராஜனே! மலைச் சிகரங்களைப் பிடுங்கி எறிந்து ஓடுகிற பெரிய அஸுரர்கள் அந்தந்த சிகரங்களாலேயே அழிக்கப்படுகிறார்கள். மலைத்தாழ்வாரங்களில்

வஸிக்கும் நல்லெண்ணமுடைய அஸுரர்கள் மந்தர மஹாகிரியின் சிகரங்களால் அழிக்கப்படவில்லை. பிறகு அந்தகன் . அப்போது அந்த (அஸுர) ஸேனையழிக்கப்பட்டதைப் பார்த்து அப்படியே கோபங்கொண்டு மிகப் பெரிய கோஷமெழுப்பி இப்படிச் சொன்னான். "மலையே! உன்னால் போரில் கபடமாகக் கொல்லப்பட்டோம். உன்னுடன் போரிட்டு என்ன பயன்? அந்த வனத்தையழைக்கிறேன். அது போருக்கு வரட்டும்.

அந்தகனால் இவ்விதம் சொல்லப்பட்டதும் மஹேஸ்வரதேவன் காளையுடன் சூலமேந்தி அந்தகனைக் கொல்லும் விருப்பத்துடன் வந்து சேர்ந்தான். பூத கணத்தலைவன் புத்திமான் முக்கண்ணன் பரமசிவன் ப்ரமதகணங்களும் அப்படியே பூதகணங்களும் சூழ வந்தான். பரமசிவன் கோபங்கொண்டதும் மூவுலகு முழுதும் மிக நடுங்கிற்று. பிறகு நதிகளும் கொதிக்கும் நீரை உடையனவாயினவாய் வெள்ள மெடுத்தெழுந்தன. ஜனமேஜயராஜனே! எல்லா திசைகளிலும் பரமசிவன் தேஜஸ்ஸால் அக்னி ஜ்வாலைகள் சென்றன. எல்லா க்ரஹங்களும் விபரீதங்களாய்ச் சண்டையிட்டன. குருகுலத்தவனே! அங்கு அச்சமயம் மலைகள் அசைந்தன. பிறகு மேகம் அக்னி மழை பொழிந்தது. சந்த்ரன் உஷ்ண கிரணங்கள் கொண்டவனானான். சூர்யன் குளிர்ந்த கிரணங்கள் கொண்டவனானான். ப்ரஹ்மவாதிகளான முனிவர் ப்ரஹ்மததை அறியவில்லை. பாபமற்றவனே! ஜனமேஜயா! பெண் குதிரைகள் பசுக்கன்றுகளையும், பசுக்கள் குதிரைக் குட்டிகளையும் ஈன்றன. மரங்களும் வெட்டப்படாமல் பூமியில் விழுந்து சாம்பலாக்கப்பட்டன. காளைகள் பசுக்களைத் துன்புறுத்தின. பசுக்களும் காளைகள் மேலேறின. ராக்ஷஸர்கள், யாதுதானர்கள், பிசாசர் எங்கும் எப்போதும் எல்லா விதத்தாலும் துன்புறுத்தினர். பகவான் மஹாதேவன் அப்படி விபரீதத்தைப் பார்த்து ஜ்வலிக்கும் அக்னி போன்ற காந்தியுடைய சூலத்தை வீசினார். பரமசிவனால் வீசப்பட்ட அந்தச் சூலம் அந்தகன் மார்பில் விழுந்தது. ஸாதுக்களுக்கு முள்ளான தாங்கமுடியாத கொடிய அந்தகனைச் சாம்பலாகவும் ஆக்கிற்று.

பிறகு தேவ கணங்களும் தவச் செல்வரான எல்லா முனிவரும் உலக சத்ரு கொல்லப்பட்டதும் சங்கரனைத் துதித்தனர். தேவதுந்துபி வாத்யங்கள் முழங்கின. புஷ்ப மழை பொழிந்தது. ஜனமேஜய ராஜனே! மூவுலகும் ஜ்வரம் நீங்கி நிம்மதியுடையதாகவும் ஆயிற்று. அப்போது தேவகந்தர்வர்

கானம் செய்தனர். அப்ஸரகணங்கள் நடனமாடினர். ப்ராஹ்மணர்களும் வேத மந்த்ரங்களை ஜபம் செய்தனர். யாகங்களையும் செய்தனர். க்ரஹங்கள் ஸ்வய தன்மையடைந்தன. நதிகள் முன் போல் ஓடின. ஜலத்தில் அக்னி ப்ரகாசிக்கவில்லை. எல்லா திசைகளும் தெளிந்தன. பர்வத ச்ரேஷ்டமான மந்த்ரம் திரும்பவும் ப்ரகாசித்தது. ஸம்பூர்ண தேஜஸ்ஸின் வளர்ச்சியால் மேலான சோபையுடன் கூடிற்று. உமையுடன் கூடின ப்ரபு பகவான் பரமசிவன் இந்த்ரன் முதலிய தேவர்களைப் பயமற்று முறைப்படி ஸஞ்சரிப்பவர்களாகச் செய்து பாரிஜாத வனத்தில் ரமித்திருந்தான்.

அத்யாயம் 87 முற்றும்.



## அத்யாயம் 88

### க்ருஷ்ணனோடு யாதவர்களும் அவரது பெண்டிரும் அப்ஸரஸ் ஸ்த்ரீகளும் சமுத்திரத்தில் ஜலக்ரீடை செய்த கோலாஹலத்தைக் கூறுதல்.

ஜனமேஜயர் சொன்னார் : முனிவரே! கேட்கத் தக்க இந்த அந்தக வதம் என்னால் கேட்கப்பட்டதல்லவா? புத்திமான் தேவன் சங்கரனால் மூவுலகுக்கும் அமைதி ஏற்படுத்தப்பட்டது. நிகும்பனின் இரண்டாவது தேஹம் சக்ரபாணி க்ருஷ்ணனால் எதற்காக எப்படி அழிக்கப்பட்டது. அதைத் தேவரீர் எனக்குச் சொல்ல வேண்டும்.

வைசம்பாயனர் சொன்னார்: பாபமற்றவனே! ராஜச்ரேஷ்டனே! ஜனமேஜயா! அளவற்ற தேஜஸ்ஸுடைய லோகநாதன் விஷ்ணுவின் சரித்ரம் உனக்குச் சொல்லப்பட வேண்டியதுதான். ஜனமேஜயராஜனே! த்வாரகையில் வஸிக்கும் ஒப்பற்ற தேஜஸ்ஸுடைய விஷ்ணுவிற்கு பிண்டாலக தீர்த்தத்தில் ஸமுத்ர யாத்ரை நேர்ந்தது. பாரத! ஜனமேஜயா! உக்ரஸேனனும் வஸுதேவனும் நகரத் தலைவர்களாக வைக்கப்பட்டனர். மீதியுள்ள எல்லோரும் வெளிக்கிளம்பினர். ஜனமே ஜயராஜனே! பலராமன் தனிக் கோஷ்டி. புத்திமான் லோகநாதன் ஜனார்தனன் தனிக் கோஷ்டி. அளவற்ற தேஜஸ்ஸுடைய அளவற்ற குமாரர்களின் கோஷ்டி தனித்தனி ஜனமேஜயராஜனே! அழகிய ரூபமுள்ள நன்கு அலங்கரிக்கப்பட்ட வ்ருஷ்ணி குலக் குமாரர்களுடன் தாஸிப்பெண்கள் ஆயிரக்கணக்கில் வெளியேறினர். .

வீர! ஜனமேஜயா! உறுதியான பராக்ரமமுடைய யது வீரர்களைக் கொண்டு (நிகும்பன் முதலிய) அஸுரர் வஸிக்குமிடத்தை (ஷட்புரத்தை) ஜயித்து த்வாரகையில் ஆயிரக்கணக்கில் வேசியர் வைக்கப்பட்டனர். அந்த விளையாட்டுப் பெண்கள் (வேசியர்) மஹாத்மாக்களான குமாரர்களுக்குப் பொதுவானவர். குணங்கள் காரணமாகவே விருப்பப்படி அனுபவிக்கத்தக்கவர். (அவர்கள்) ராஜாங்கத்தைச் சேர்ந்த வேசிப் பெண்கள். ப்ரபோ! ஜனமேஜயராஜனே! யாதவர்களுக்குள் ஸ்த்ரீ நிமித்தமாக விரோத உண்டாக வேண்டாமென புத்திமான் க்ருஷ்ணனால் இந்த ஏற்பாடு செய்யப்பட்டதல்லவா?

கீர்த்தி வாய்ந்த யது ச்ரேஷ்டன் பலராமன் அனுகூலையான ரேவதி ஒருத்தியுடன் சக்ரவாஹ பக்ஷிகள் போன்று இணைபிரியா பேரன்பு கொண்டு ரமித்தான். மதுபான மத்தனாய் துளசி மாலையால் அலங்கரிக்கப்பட்டு ரேவதியுடன் கூடிய பலராமன் ஸமுத்ர ஜலத்தில் விளையாடினான்.

இவற்றை எல்லாம் பார்க்கும் தாமரைக் கண்ணன் கோவிந்தன் விச்வரூபங் கொண்டு (எண்ணற்ற உருவங்கொண்டு) பதினாறாயிரம் பெண்களை ஜலத்தில் ரமிக்கச் செய்தான். இரவில் நாராயணனை க்ருஷ்ணனது ஸ்த்ரீகள் நான் ப்ரியை என்னுடனேயே கேசவன் ஜலத்தில் இருக்கிறான் என்று அவர்கள் எல்லோரும் நினைத்தார்கள். எல்லோரும் போக அடையாள வீடான உடலையுடையவர். எல்லோரும் போகத்தால் த்ருப்தி செய்யப்பட்டவர். அந்த எல்லாப் பெண்களும் கோவிந்தனிடத்தில் பஹுமானத்தால் உண்டான கர்வங் கொண்டனர். அப்போது தன்னிடம் அன்பு கொண்ட தோழியரிடம் நான் ப்ரியை, நானே ப்ரியை என்று மங்களமான நாராயண ஸ்த்ரீகள் எல்லோரும் தங்களைத் (தாமே) புகழ்ந்து கொண்டனர்.

அந்தத் தாமரைக் கண்ணிகளான நாராயண ஸ்த்ரீகள் ஸ்தனங்களிலும் உதடுகளிலும் இருக்கும் க்ருஷ்ணனின் நகங்கள் பற்கள் அடையாளங்களை முகக்கண்ணாடியில் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தனர். க்ருஷ்ணனின் ஸ்த்ரீகள் கண்களால் க்ருஷ்ணனின் முகார விந்தத்தைப் பருகிக் கொண்டே க்ருஷ்ணனின் திவ்ய சரிதையைப் பாடினர். ஜனமேஜய ராஜனே! க்ருஷ்ணனிடத்திலேயே அர்ப்பணம் செய்த மனதையும் பார்வையையுமுடைய அழகிய அந்த நாராயண ஸ்த்ரீகள் மிகவும் மனதைக் கவரக் கூடியவர்களாய், நாராயணனே க்ருஷ்ணன் என

ஒரே உறுதி கொண்டவராயிருந்தனர். நாராயணதேவனுல் த்ருப்தி செய்யப்படுகிற மனோரதத்தையுடைய அப்பெண்கள் ஒரேயிடத்தில் (க்ருஷ்ணனிடமே) அர்ப்பணம் செய்யப்பட்ட மனதையும், பார்வையையுமுடையவர்களாய் (ஒருவருக்கொருவர்) பொறுமைப்படவில்லை. அழகிய தோற்றமுடைய கேசவ மயமான மிச்சமின்றிப் பூர்ணமாக அவனது மிக்க ப்ரீதியில் வசிக்கும் அப்பெண்கள் எல்லோரும் கர்வங் கொண்ட தலைகளை வஹித்தனர். தன் வசப்பட்ட மனதையுடைய ஹரி க்ருஷ்ணன், அந்த எல்லாப் பெண்களுடனும் தெளிந்த ஸமுத்ர ஜலத்தில் விச்வரூப முறையில் விளையாடினுன். வாஸுதேவன் கட்டளையால் ஸமுத்ரம் எல்லா நறுமணமும் நிறைந்த உப்பற்ற சுத்தமான தண்ணீரை வஹித்தது.

க்ருஷ்ணன் பத்னிகளான ஸ்த்ரீகள் கணைக்காலளவு, முழங்கால் அளவு, துடையளவு அன்றி ஸ்தனங்கள் அளவு விரும்பிய நீரில் (நின்று) ஸமுத்ரத்தை நதிகள் போல் கேசவனை நீரால் நனைத்தனர். கோவிந்தனும் புஷ்பித்த கொடிகளை மேகம் போல் அந்தப் பெண்களை நனைத்தான். மான் விழி கொண்ட வேறு சில பெண்கள் க்ருஷ்ணனைக் கழுத்தில் கொண்டு "வீர! விழுகிறேன். என்னைப் பிடித்துக்கொள். சில ஸர்வாங்க ஸுந்தரிகளான பெண்கள் க்ரௌஞ்ச பக்ஷி, மயில், யானை போன்ற கட்டைகளாலாகிய தெப்பங்களைக் கொண்டு மிதந்து சென்றனர். அழகிய ஸமுத்ர ஜலத்தில் ஜனார்த்தனனை ஸந்தோஷப்படுத்துகிற ஸ்த்ரீகள் முதலை உருவங்கொண்ட தெப்பங்களாலும், சிலர் மீன் உருவங்கொண்ட தெப்பங்களாலும், சிலர் பலவித வடிவங் கொண்ட தெப்பங்களாலும் அப்படியே கும்பங்கள் போன்ற ஸ்தன கும்பங்களாலும் சிலர் மிதந்து சென்றனர். அந்த ஜலத்தில் ஸந்தோஷத்துடன் ருக்மிணியோடு ரமித்தான்.

க்ருஷ்ணன் எந்தெந்த விதத்தில் ரமிப்பனோ அதையே நாராயண ஸ்த்ரீகள் மகிழ்ச்சியுடன் செய்தனர். மெல்லிய ஆடையணிந்த பெண்களும் அப்படியே பிற தாமரைக் கண்ணிகளும் விளையாடிக் கொண்டே க்ருஷ்ணனுடன் ஜலக்ரீடை யாடினர். எந்தெந்த பெண்ணுக்கு எந்தெந்த மனோபாவம் உண்டோ அந்தந்த பெண்ணை அந்தந்த மனோபாவத்துடனேயே உள் கலந்து எண்ண மறிந்து விசாரிக்கும் கேசவன் தன் வசப்படுத்தினுன். இந்த்ரியங்களுக்கு நியாமகன், ஆதிபகவான் க்ருஷ்ணன் தேச காலத்தை அனுஸரித்து ப்ரியைகளுக்கு வசப்பட்டவன் (நியாமயன்)

ஆனான். அந்தப் பெண்கள் தங்கள் குலத்துக்கு ஒத்திருக்கும் ஜனார்த்தனனை நம்முடைய குலத்துக்கும் சீலத்துக்கும் ஸமமான யோக்யதையுடையவன் என எண்ணினர். அப்போது தாக்ஷிண்ய குணமுடையவனும், புன்சிரிப்புடன் பேசுகிறவனுமான க்ருஷ்ணனைப் பார்வைகள் விரும்பினர். பக்தியினால் கௌரவிக்கவும் செய்தனர். யாதவ குமாரர்களின் கோஷ்டிகள் தனி. நற்குணத்துக்கு இருப்பிடமான வீரர்கள் ஸ்த்ரீ கணங்களுடன் ஸமுத்ர ஜலத்தை ப்ரகாசமாக அலங்கரித்தனர்.

ஜனமேஜயராஜனே! ஸங்கீத முறை ந்ருத்ய முறையறிந்தவர்களும் ரூபலாவண்யத்துடனும் வசீகரிப்பவருமான பெண்களின் வசம், அந்தக் குமாரர்கள் தாக்ஷிண்யப்பட்டிருந்தனர். உத்தமப் பெண்களின் இனிமையான பாட்டுக்களையும் அப்படியே நல்ல அபிநயங்களையும் தூரிய வாத்யங்களையும் கேட்டுக் கொண்டு யதுச்ரேஷ்டர்கள் மோஹமடைந்தனர். பிறகு க்ருஷ்ணன் விச்வரூப காரணங்கொண்டு "பஞ்ச சூடா" என்பவளையும் குபேரனுடையவும் தேவேந்த்ரனுடையவும் ஆன அப்ஸரஸ் ஸ்த்ரீகளை வரவழைத்தான். அளவிடப்பட முடியாத ஸ்வரூபமுடைய ஜகத் ப்ரபு க்ருஷ்ணன் அஞ்சலி செய்து வணங்கின அந்த ஸ்த்ரீகளை எழுப்பி நல் வார்த்தைகள் சொன்னான். சிறந்த பெண்களே! கூச்சப்படாமல் க்ரீடா பெண்களாகப் போய்ச் சேருங்கள். யாதவர்களை ரமிக்கச் செய்யுங்கள். ரஹஸ்யத்தில் ஆடல் பாடல்களால் எல்லா குண விசேஷங்களைக் காண்பியுங்கள். அப்படியே அபிநயத்துடன் கூட பலவித வாத்யங்களையும் இசைத்துக் காட்டுங்கள். இவ்விதம் செய்யப்பட்டதும் உங்களுக்கு மனதால் விரும்பப்படும் மேன்மைகளைச் செய்வேன். நீங்கள் எல்லோரும் பாக்கியின்றி என் சரீரத்துக்கு ஸமனானவர்கள். அப்போது அந்த எல்லா அப்ஸரஸ் ஸ்த்ரீகளான க்ரீடா பெண்கள் விஷ்ணுவின் ஆக்ஞையைத் தலையால் ஏற்று யாதவர்களிடம் சேர்ந்தனர்.

பாபமற்றவனே! அவர்கள் அங்குப் புகுந்த மாத்ரமே அந்த மஹா ஸமுத்ரம் ஆகாயத்தில் மின்னலால் மேகக்கூட்டம் போல் அவர்களால் ப்ரகாசப்படுத்தப்பட்டது. அவர்கள் பிறகு ஜலத்தில் பூமியில் நிற்பது போல் நின்று பாடினார்கள். வாத்யங்கள் இசைக்கவும் செய்தனர். அந்தப் பெண்கள் ஸ்வர்க்கத்தில் போல் அபிநயமும் நன்கு செய்தனர். நீண்ட கண்களுடைய அந்தப் பெண்கள் திவ்ய மணங்கொண்ட மாலை ஆடைகளாலும், ஹாஸ்யங்களாலும் யாதவர்கள் மனதை அபஹரித்தனர். அப்பெண்கள் பார்வை,

முகஜ்ஜாடைகள், ஹாஸ்யங்கள், விளையாட்டுக் கோபங்கள், மனதுக்கு அனுகூலமான இனியனவான இவைகளால் யாதவர்கள் மனங்களை வசப்படுத்தினர். மதுபானமத்தர்களான யாதவர்கள் தம் தோள்களை மேலே ஆகாயத்தில் காற்றில் வீசி வீசி அந்தச் சிறந்த அப்ஸரஸ் ஸ்த்ரீகளைக் கௌரவித்தனர். ப்ரபு க்ருஷ்ணனும் எல்லா பதினாயிரம் பெண்களுடனும் ஸந்தோஷங் கொண்டவனாய் அவர்களது ப்ரீதிக்காக ஆகாயத்தில் விளையாடினான்.

அந்த யாதவ வீரர்கள் அளவற்ற தேஜஸ்வீ க்ருஷ்ணனது ஸ்வபாவத்தையறிந்து ஆச்சர்யமடையவில்லை. மிக்க பெருமையடைந்தனர்.பாரத! ஜனமேஜயா! சத்ருவைத் துன்புறுத்துபவனே! சில யாதவர் ரைவத மலைக்குப் போய் திரும்புகின்றனர். சிலர் வீட்டுக்குச் சென்று திரும்பினர். மற்றவர் விரும்பிய வனங்களுக்குச் சென்று திரும்பினர். அப்போது ஒப்பற்ற தேஜஸ்வீ லோகநாதன் விஷ்ணுவின் கட்டளையால் குடிக்கத் தகாத ஸாகரம் 'குடிக்கத்தக்க நீருடையதாயிற்று. தாமரைக்கண்ணிப் பெண்கள் ஜலத்தில் ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக் கொண்டு தரையில் ஓடுவது போலவே ஓடினர். அப்படியே நீரில் முழுகவும் செய்தனர். அவர்கள் மனதால் நினைத்ததும் பக்ஷ்ய போஜ்யங்களும்பானங்களும் அப்படியே சோஷ்யமும் லேஹ்யமும் பலவிதமாக உண்டாயின. அந்த ஸ்த்ரீகள் வாடா மாலை தரித்து குற்றமற்ற யாதவர்களை ஸ்வர்க்கத்தில் தேவக்ரீடையை அனுஸரித்து ரஹஸ்யத்தில் ரமிக்கச் செய்தனர். ஜயிக்கப்படாத அந்தகரும் வ்ருஷ்ணிகளும் (ஆகிய யாதவர்கள்) ஸாயங்காலம் ஸ்நாநம் பூச்சு இவைகளால் மகிழ்ந்து வீடு போன்ற படகுகளில் விளையாடினர்.

குருகுலத்தவனே! ஜனமேஜயா! நீண்டவைகளும் நான்கு கோணங்களுடையவைகளும், வட்டமானவைகளும் ஸ்வஸ்திக் வடிவங் கொண்டவைகளுமான மாடிகள் விச்வகர்மாவால் படகுகளில் செய்யப்பட்டன. கைலாசமலை, மேருமலை, நானாவித பறவைகள், ஓநாய்கள் இவை உருவங் கொண்டு கற்பனை செய்து அமைக்கப்பட்ட படுகுகள், வைடூர்ய தோரணங்கள் அழகிய ரத்ன வரிசைகள், சந்த்ரகாந்த சூர்யகாந்த கற்கள் மயமான அழகிய நூற்றுக் கணக்கான தோரண வரிசைகள் இவைகளால் அழகிய படகுகள் விளையாட்டுக்காகச் செய்யப்பட்ட கருடன் உருவங்கள் அழகிய பொன் மயக் க்ரௌஞ்ச பறவைகளின் உருவங்கள், கிளி உருவங்கள்,யானை உருவங்கள் அப்படியே வேறு பல உருவங்களில் அமைக்கப்பட்ட படகுகள்

இவையெல்லாம் படகோட்டிகளால் கைக்கொண்டு செலுத்தப்பட்டு. பொன் போலப் பிரகாசிக்கும் அப்படகுகள் பேரலைகளுள்ள ஸமுத்திர நீரை பிரகாசப்படுத்தின. ஸாயங்கால சூர்ய கிரணங்களாலும் ப்ரயாண ஸாதன வெண்ணிற படகுகளாலும் அப்படியே பெரிய கப்பல்களாலும் ஸமுத்தரம் மிக நன்றாக சோபித்தது. யாதவர்களின் இந்தப் படகுகள் ஆகாயத்தில் செல்லும் கந்தர்வ நகரங்கள் போல ஸமுத்தர ஜலத்தில் இங்குமங்கும் திரிந்தன.

பாரத! ஜனமேஜயா! படகுகளில் விச்வகர்மவால் முழுதும் நந்தனவனம் போலவே அமைக்கப்பட்டது. உத்யானங்கள், ஸபை. விருக்ஷங்கள், ஓடைகள், தேர்கள் இவை போன்ற சிற்பங்கள் முழுவதும் அமைக்கப்பட்டன. வீரா! ஜனமேஜயா! ஸ்வர்க்கம் போன்ற மற்ற படகுகளில் ஸ்வர்க்கம் போன்ற சிற்பங்கள் விச்வகர்மாவால் நாராயணனின் ஆஜ்ஞைபடி சிறியவையாக அமைக்கப்பட்டன. அதி தேஜஸ்ஸுடைய யாதவர்களுக்கு வனத்துப் பக்ஷிகள் மிக்க மனோஹரமாயும், இனிமையாயும், ஸுகமாயும் கூவின. அப்போது தேவலோகத்தில் பிறந்த வெள்ளைக் குயில்கள் யாதவர் விருப்பப்படி இனிமையாகவும் பல விதமாகவும் கூவின. சந்த்ர கிரணம் போன்ற ஸுகமான மேல் மாடிகளில் மயில்கள் பிற மயில் கூட்டங்களால் சூழப்பட்டு இனிய குரலுடன் நடனமாடின. ப்ரயாண ஸாதனமான படகுகளின் எல்லாக் கொடிகளும் பக்ஷிகணங்களுடன் கூடியிருந்தன. பூமாலைகளில் பொருந்தி வசிக்கும் வண்டுகளால் கானம் செய்யப்பட்டது. நாராயணன் கட்டளையால் மரங்களும் ருதுக்களும் ஆகாயத்திலிருந்து அழகிய உருவமுடைய புஷ்பங்களை சொரிந்தன.

விளையாட்டு ஶ்ரமத்தைப் போக்கடிக்கும் சந்தனக் குளிர்ச்சி கொண்ட எல்லா புஷ்பங்களின் மகரந்தத்தோடு கலந்த ஸுகமான மனோஹரமான காற்று வீசிற்று. ஜனமேஜய பூபதியே! க்ரீடிக்கும் பீம குல யாதவருக்கு விருப்பப்படி ஶீதோஷ்ணம் வாஸுதேவன் ப்ராஸாதத்தால் உண்டானது. சக்ரபாணி கீர்த்தியால் பசி, தாகம், வாட்டம், கவலை, துக்கம் இவை பீம குலயாதவர் அப்போது அடையவில்லை. அதி தேஜஸ்ஸுடைய பீம குல யாதவரின் ஸமுத்தர விளையாட்டுகள் ஆடல் பாடல் விளங்குவனவாகவும் நிறுத்தப்படாமல் தொடர்ந்து முழங்கும் வாத்யங்களையுடையன வாகவும் ஆயின. க்ருஷ்ணனால் ரக்ஷிக்கப்பட்ட இந்த்ரன் போன்ற யாதவர் நீர் நிறைந்த சமுத்ரத்தை பஹுயோஜனை தூரம் தடுத்து

விளையாடினர். ப்ரயாண ஸாதன படகுகள் மஹாத்மா நாராயண தேவனது பரிவாரத்துக்கு தக்கவையாக விச்வகர்மாவால் செய்யப்பபட்டது ராஜனே! அதி தேஜஸ்வீ க்ருஷ்ணனின் ப்ரயாணப் படகில் மூவுலகத்துச் சிறந்த எல்லா ரத்னங்களும் அமைக்கப்பட்டன. பாரத! பொன்னால் அலங்கரிக்கப்பட்டு ரத்ன வைடூர்யங்களால் அழகிய அந்த சிறந்த வாஸஸ்தலங்களும் ஸ்த்ரீகளுக்குத் தனிதனி அமைக்கப்பட்டன. ஸ்வர்கத்தில் வஸிக்கும் பறவைகளால் அடையப்பட்டனவும் எல்லா நறுமணங்களும் பொருந்தினவும் எல்லா ருது புஷ்பங்களும் பொருந்தினவுமான வாஸஸ்தலங்கள் மங்களகரமான யாதவர்களால் அனுபவிக்கப்பட்டன.

88 அத்யாயம் முற்றும்



## அத்யாயம் 89

## ஜலக்கீரிடை கோலாஹலத்தின் தொடர்ச்சி

வைசம்பாயனர் சொன்னர் : பலராமன் சந்தனச் சேறு பூசப்பெற்று, மதுபான மத்தனாய் சிவந்த கண்கள், நீண்டகைகள், அழகிய நடை, மிகுந்த சோபையுடன் ரேவதியையடைந்து விளையாடினான். பலராமன் நீலமேகம் போன்ற ஆடையணிந்து சந்த்ரகிரண வெண்ணிறம் கொண்டு மதுபானத்தால் கலங்கின கண்களுடன் மேக நடுவில் பூர்ண சந்த்ர பகவான் போல் ப்ரகாசித்தான். இடது காதில் மட்டும் அழகிய குண்டல காந்தியுடையவனும், மனோஹரமான தாமரையாலான (மற்றைய) காதணியுடையவனுமான அவன் ப்ரியை ரேவதியால் அழகாகப் பார்க்கப்பட்டு, புன்சிரிப்பு கொண்டு கோணல் பார்வையுடன் ஸந்தோஷப்பட்டான்.

பிறகு கம்ஸன், நிகும்பன் இவர்களுக்கு சத்ருவான க்ருஷ்ணனின் கட்டளையால் அழகிய ரூபமுடைய அந்த அப்ஸரஸுக் கூட்டம் ரேவதியைப் பார்ப்பதற்குப் பெருமையால் ஸ்வர்க்கம் போன்ற ஸமுத்திர கரையை ஸந்தோஷத்துடன் அடைந்தது. அங்கு அழகு பொருந்திய சிறந்த உடலமைப்புடைய அப்ஸர ஸ்திரீகள் அந்த ரேவதியையும் பலராமனையும் வணங்கி வாத்ய இசைக்குத் தக்கபடி நாற்புறமும் நடனமாடினர் நன்கு பாடினர். ரேவதியின் கட்டளையால் இந்த யாதவர் களுக்குப் ப்ரியமாகவும் கருத்தமைந்ததாகவும், அந்தப் பலராமனுக்கு மனதுக்கு ஸுகமாகவும் அபிநயம் செய்தனர்.

மங்கள மய அங்கங்களுடைய அந்த ஸ்ரேஷ்டமான அப்ஸர ஸ்த்ரீகள் அந்த (வ்ரஜ) தேச பாஷை, உருவம் வேஷம் உடையவர்களாய் கைத்தாலமிட்டு எளிய விளையாட்டுடன் கூடிய ராஸக்ரீடையைச் சிரித்துக் கொண்டு செய்தனர். பிறகு ஸங்கர்ஷணனுக்கும் அதோக்ஷஜனை க்ருஷ்ணனுக்கும் ப்ரியமான மங்களங்களை நன்கு கானம் செய்தனர்.

கம்ஸன், ப்ரலம்பன் இவர்களது வதமும் அப்படியே மற்களத்தில் சானூர வதமும், ஜராசந்தன் வதமும் யசோதையால் ப்ரஸித்தியாக்கப்பட்ட தாமோதர சரித கீர்த்தியும், அவ்விதமே அரிஷ்டன், தேனுகன் வதமும் வ்ரஜவாசமும், சகடாஸுரன்,பூதனை வதமும் யமவார்ஜுன (மருதமர) வீழ்ச்சியும், குட்டிகளுடன் ஸ்ரீவத்ஸ ஓநாய்களின் ச்ருஷ்டியும் துராத்மா நாகராஜன் காளியன் மடுவில் க்ருஷ்ணனால் அடக்கப்பட்டதும், சங்க மடுவில் க்ருஷ்ணன் தாமரை நீலோத்பல புஷ்பங்கள் பறித்ததும், பசுக்களுக்காக ஜனார்த்தனன் க்ருஷ்ணன் கோவர்தன மலையைக் தூக்கினதும், வாசனைப் பூச்சுக்கள் செய்யும் கூனியைக் க்ருஷ்ணன் கூன் நீக்கியதும், பிறவியற்ற குற்றமற்ற க்ருஷ்ணன் தன்னை சிறிய (வாமன) உருவமாக்கியதும், உருவத்தைப் பெரிதாக்கியதும், சேனைப் விமான அழித்ததும், கலப்பை ஆயுதம் கொண்டதும், முராஸுரவதமும் மஹிஷி ஸப்யை விவாகத்தில் பலவான்களான ராஜாக்களைத் தேரில் கட்டியதும் ஸுபத்ரா தேவியைக் கடத்தலில் அர்ஜுனன் வெற்றிக்குதவியதும் ஆகிய அநேக கதைகளையும், ஜனமேஜய ராஜனே! பலராமன், க்ருஷ்ணன் இருவருக்கும் ஸந்தோஷமுண்டு பண்ணுமவைகளையும், ப்ரீதி பண்ணும் பிற கதைகளையும் அப்ஸர ஸ்த்ரீகள் பாடி ஆடினர்.

மதுபான மத்தன் சிறந்த சோபையுடைய பலராமன் கைத்தாளம் போட்டு பார்யை ரேவதி தேவியுடன் இனிமையாய் சேர்ந்து பாடினான். பாடுகிற அந்த பலராமனைப் பார்த்து மஹாத்மா மதுஸூதனனும் ஸந்தோஷம் கொண்டவனானான். புத்திமான் க்ருஷ்ணன் பலராமனுக்கு சந்தோஷம் உண்டாக ஸத்யபாமையுடன் கூட பாடினான். பிறகு ஸமுத்திர யாத்ரைக்காக வந்த பூலோக வீரன் அர்ஜுனனும் சிறந்த ..ங்க அழகுடைய ஸுபத்ரையுடன் க்ருஷ்ணனும் கூடப் பாடினான். ராஜனே புத்திமான் கதன், சாரணன், ப்ரத்யும்னன், சாம்பன், ஸாத்யகி, ஸத்யபாமையின் பிள்ளை சிறந்த வீரன் பானு, மிக்க அழகிய ரூபமுடைய சாருதேஷ்ணன் பலராமனின் மிக்க வீரமுடைய இருவர் நிஷ்டன்,உல்முகன் இவர்களும் பாடினர். ராஜகுமாரனே!

சிறந்த புகழ் பெற்றவனே! ஜனமேஜய ராஜனே! பீம குல முக்யஸ்தர்களும் பிறர் அக்ரூரர், ஸேனாதிபதி சங்கு முதலியோரும் பாடினர். க்ருஷ்ணன் பெருமையால் அந்தப் படகு, பாடுகிற பீம குல முக்யஸ்தர்களால் நிறைந்து நிறைந்து பெருகிற்று. வீரா! ராஜபுத்ரனே! ஜனமேஜயா! ராஸக்ரீடையில் மிக ஈடுபாடு நிரம்பப் பாடும் தேவ சோபையுடைய யாதவ வீரர்களால் உலகம் ஸந்தோஷமுடையதாயிற்று பாபங்களும் கழிந்தன. பிறகு முரனுக்குச் சத்ருவான க்ருஷ்ணனின் ப்ரியத்திற்காக தேவ விருந்தினரான நாதமுனியும் ஜடையால் மறைக்கப்பட்ட பகுதி தேகமுடையவராய் யது ஸ்ரேஷ்டர்கள் நடுவில் பாடினர்.

ராஜகுமாரனே! ஜனமேஜயா! அளவிட முடியாத சங்கீதத தலைவர் நாரதரும் நடுவில் சென்று அங்க அசைவோடு ஆடிப் பாடினர். ஸத்யபாமை, கேசவன், அர்ஜுனன், ஸுபத்ரை, பலராமன், ரேவதி இவர்களெல்லோரையும் நோக்கி நோக்கிப் புத்திமான் நாரதர் சிரித்தார். பரிஹஸிப்பதில் ஸமர்த்தரான புத்திமான் நாரதர் செயல்களைப் போன்றே செய்வதாலும், சிரிப்பது போன்றே சிரிப்பதாலும் விளையாடுதலைப் போன்றே விளையாடுதலாலும் மற்றவைகளாலும் அந்தந்த உபயங்களால் மிக்க தைர்யமுடைய அவர்களைச் சிரிக்கச் செய்தார். நாரத பகவான் க்ருஷ்ணனின் வேடிக்கைக்காக வார்த்தையை சிறிதே கவனித்து (குறைத்துகொண்டு) ஸ்வரங்கள் அதிஸ்வரங்கள் கொண்டு இனிய நாதங்களை எழுப்பினார் ஹாஸ்யம் வருமிடத்தில் ஸந்தோஷத்தால் புன்சிரிப்புடன் விசேஷமாகவும் சிரித்தார்.

ராஜகுமாரனே! ஜனமேஜயா! அங்கே அப்ஸரஸ் பெண்கள் க்ருஷ்ணன் கட்டளையால் ஒரே மாதிரியானவையும் அதிசயமானவையுமான ரத்னங்களையும், உலகில் சிறந்த அழகிய ஆடைகளையும் நாரதருக்குக் கொடுத்தனர். க்ருஷ்ணனின் இங்கிதத்தையும், காலத்தையும் அறிந்த அப் பெண்கள் ஸ்வர்க்கத்தில் உண்டான புஷ்ப மாலைகளையும் எல்லா ருதுக்களிலும் உண்டாகக்கூடிய புஷ்பங்களையும் அப்போது வரவழைத்து கொடுத்தனர். பிறகு ராஸக்ரீடை முடிவில் அளவிட முடியாத பெருமை பொருந்திய க்ருஷ்ணன் பகவான் மஹாமுனி நாரதரைக் கைப்பிடித்து ஸத்யபாமையையும், அர்ஜுனனையும் (அணைத்து) பிடித்துக் கொண்டு ஸமுத்ரத்தில் குதித்தான். பிறகு அளவற்ற பராக்ரமமுடைய மிக்க சோபை வாய்ந்த க்ருஷ்ணன் புன்சிரிப்புடன் ஸாத்யகியிடம் சொன்னான் : நீங்கள் எல்லோரும் இரண்டு பாகமாகப் பிரிந்து, தங்கள் தங்கள்

ஸ்த்ரீகளுடன் இந்த ஜலத்தில் சீக்கிரம் குதியுங்கள். ரேவதியுடன் பலராமன் ஒரு பாதி பாகத்துக்குத் தலைவனாயிருக்கட்டும், என் பிள்ளைகளும் பீம குலத்தவரும் மீதி பாதிக்கு. பிறகு பலராமன் பிள்ளைகளும், பீமர்களில் பாதியரும் ஸமுத்ர ஜலத்தில் என் பக்ஷத்தில் இருக்கட்டும்.

பிறகு க்ருஷ்ணன் புன்சிரிப்புடன் கைகூப்பிக் கொண்டிருக்கும் ஸமுத்ரத்தைப் பார்த்து கட்டளையிட்டான், நறுமண நீர் கொண்டு விஸ்வாஸமுடன் நிறைந்த நீருடன் அப்படியே முதலைகளற்று இருப்பாய். உனது கரை ஸ்தலம் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டு அழகியதாய் நடக்க ஸுகமாய் ஆகட்டும் ஜனங்களுக்கு மனோநுகூலமான அவற்றையெல்லாம் கொடு. என் ப்ரபாவத்தால் அறிவாய். பிறகு குடிக்கத்தகாத நீ குடிக்கத்தக்கவனாவாய். எல்லா ஜனங்கள் மனதுக்கும் அனுகூலனாவாய். உன்னிடம் உள்ள மீன்கள் வைடூர்யம், முத்து, ரத்னம்,தங்கம் இவைகளால் விசித்ரமாகவும் அழகிய ரூபமுடையனவாகவும் ஆகட்டும். நறுமணமுள்ள, மிக ம்ருதுவான ரஸங்களையுடைய வண்டுகள் மொய்க்கும் சிவப்பு நிறம் பொருந்திய மனோஹரமான தாமரைகளையும், நீலோத்பலங்களையும், நீ தரிப்பாயாக. ஜலத்தில் மைரேயம், மாத்வீகம், ஸுரா, ஆஸவம்,முதலிய பான வகைகள் நிரம்பிய குடங்களை ஸ்தாபித்து வைப்பாயாக. பீம குல யாதவர் குடிக்க ஸ்வர்ண பாத்ரங்களை (பூஜித்து) கொடு. ஸமுத்ரமே! புஷ்பக் கூட்டங்களால் வாஸனை ஊட்டப் பெற்ற குளிர்ந்த நீர் கொண்டு ஆயத்தமாயிரு. ஸ்த்ரீகளுடன் கூடிய யாதவர்களுக்குக் குறையில்லாதபடி முயற்சி செய்.

ராஜனே! பகவான் ஸ்ரீக்ருஷ்ணன் இவ்விதம் ஸமுத்ரத்திடம் சொல்லி, அர்ஜுனனுடன் விளையாடினான். க்ருஷ்ணனது முகக் குறிப்பையறிந்த ஸத்யபாமை முதலில் நாரதரை ஜலத்தால் நனைத்தாள். பிறகு மதம் நீங்கிய அழகிய தேஹம் உடைய பலராமன் மனோஹரமான ரேவதியின் அழகிய கையை (தன்) கையால் பிடித்து விளையாடிக் கொண்டு ஜலத்தில் குதித்தான். பீம குல முக்யரான க்ருஷ்ண குமாரர் சிவந்த வஸ்திரங்களையுடையவராய் ஸுராபானத்தால் கலங்கிய கண்களுடன் விளையாட்டில் உத்ஸாஹம் கொண்டு மிக்க ஸந்தோஷமுடையவராய் பலராமனுக்குப் பின்னர் ஸமுத்திரத்தில் குதித்தனர். மிருதுயுள்ள பீமகுல நிஷதன் உல்முகன் முதலிய யாதவர்கள் விளையாட்டில் ப்ரியமுடையவராய் க்ருஷ்ணனிடம்

வந்து சேர்ந்தனர். அவர்கள் விசித்ர ஆடை அணி கொண்டவர். மதம் மிக்கவர். ஸந்தான புஷ்பத்தாலான மாலையணிந்த கழுத்தினர். வீர்யமுடையவர் செய்யப்பட்ட அழகிய அடையாளமுடையவர். பூச்சு பூசிய உடலுடையவர். ஜல பாத்ரம் கொண்ட கையினர். பிறகு அந்த வேஷத்துக்குத் தக்க மனோஹரமான ஸ்வரத்துடன் கூடிய பாடல்களைப் பாடுகின்றனர்.

பின்பு க்ருஷ்ணனின் கட்டளையால் ஸ்வர்க்க வாஸிகளான அப்ஸரஸ்களுடன் நூற்றுக் கணக்கான பணிப்பெண்கள் ப்ரியமான கோஷ வாத்தியங்களையும் நானாவித ஸ்வரத்துடன் கூடிய ஜலதரங்கம் போன்ற ஜலவாத்யங்களையும் இசைத்தனர். ஸதா யுவதிகளான அந்த அப்ஸரஸ் ஸ்த்ரீகள் காமத்திலேயே நோக்கங் கொண்டவர். ஆகாச கங்கா ஜல வாத்ய மறிந்தவர். ஜலவாத்யங்களையும் வாசித்தனர். மகிழ்ந்து வாத்யத்துக்கு ஒத்துப் பாடவும் செய்தனர். அழகிய முகமுடைய தேவப் பெண்கள் தாமரை மொட்டு போன்ற நீண்ட கண்களுடையவர். சூர்யனால் அலர்த்தப்பட்ட தாமரைப் பூக்களின் சோபையை அபஹரித்தனர். ஜனமேஜயராஜனே! பூர்ண சந்திரன், ஸ்த்ரீகளின் முக சந்திரன் இவைகளால் ஸமுத்திரம் நூறு மடங்கு சோபித்தது. அது அதிர்ஷ்ட வசத்தாலோ தெய்வ ஸங்கல்பத்தாலோ ஆயிரம் சந்திரன்களால் வியாபிக்கபட்ட ஆகாயம் போல் பிரகாசித்தது.

ஜனமேஜய ராஜனே! மின்னல் போன்ற ஸ்த்ரீகளின் காந்தியால் அழகிய ஸமுத்திரமாகிய மேகம் ஆகாயத்தில் மின்னலால் பிளக்கப்பட்டு ப்ரகாசிக்கும் நீருண்ட மேகம் போல் ப்ரகாசித்தது. செய்யப்பட்ட அழகிய அடையாளங்கள் கொண்ட நாராயனனும் நாரதருடன் செய்யப்பட்ட அழகிய கக்ஷி அடையாளங்கள் கொண்ட பலராமனையும் அவன் கக்ஷிகளையும் ஜலத்தால் நனைத்தான். பலராமனும் மதுஸூதனனின் கக்ஷியையும் நனைத்தான். அப்போது தன் மேனி நிறத்தால் கர்வங் கொண்ட மதுபான மத்தனான பலராமன் பத்னிகளும் க்ருஷ்ணன் பத்னிகளும் மகிழ்ந்தவர்களாய் கையிலிருந்து வீசப்பட்ட நீர் யந்திரங்களால் பீச்சாங் குழல்களால்) நனைத்தனர். பீம குலத்தவர் காமத்தையும் மதத்தையுங் கொண்டு சிறிது சிவந்த கண்களுடன் ஜல வீச்சால் நனைந்து ஸ்த்ரீகளுக்கு முன் முரட்டு புருஷராகி வெகுகாலம் விளையாட்டை நிறுத்தவேயில்லை. சக்ரபாணியான க்ருஷ்ணன் அவர்கள் கட்டு மீறியதை ஆலோசித்து, அர்ஜுனனுடனும், நாரதருடனும் கூடி. தானும் ஜல வாத்ய சப்தங்களிலிருந்து விலகி அவர்களைத் தடுத்தான்.

க்ருஷ்ணனின் குறிப்பறிந்த பீம குலத்தவர் உறுதியான அகங்காரம் கொண்டவராயினும் ஜலக்ரீடையிலிருந்து விலகினர். அப்படியே ப்ரியர்களுக்கு ஆனந்தம் கொடுக்கும் அவரவர் பத்னிகளும் திருப்தியடைந்தவர்களாய் நிற்காமல் நடனமாடினர். பிறகு நாட்டியம் முடிந்ததும் புத்திமான் பகவான் க்ருஷ்ணன் ஜலக்ரீடையைவிட்டு விலகினான். நீரிலிருந்து கரையேறி முனிச்ரேஷ்டர் நாரதருக்கு அனுகூலமான பூச்சுக்களைக் கொடுத்து தானும் கொண்டான். பின்பு சீக்கிரம் க்ருஷ்ணன் கரையேறினதைப் பார்த்து அளவிடமுடியாத அந்த பீமர் விலகினர். பிறகு சுத்த தேஹத்தினராய் க்ருஷ்ணன் கட்டளையால் பானங்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றனர். ஸ்தானம் வயக்ரமம், பந்துத்வம் (அங்கு) அப்போது அமர்ந்து வீரர்கள் த்ருப்தியுடன் அன்னங்களைப் புசித்தனர். பானங்களேயும் தேவையானபடி குடித்தனர். பக்குவம் செய்யப்பட்ட மாம்ஸங்கள் புளிக்கும் பழங்கள் மிகுந்த புளிப்புடைய மாதுளம் பழங்கள் சூலத்தால் குத்தி வாட்டப்பட்ட மாம்ஸ துண்டங்கள் இவைகளேயெல்லாம் சுத்தமான சமையல்காரர் அங்கு கொண்டு வந்தனர். சூலத்தால் குத்தப்பட்ட இள எருமை மாம்ஸ துண்டுகள், காய்ச்சின நெய்யில் பொரித்த மாம்ஸங்கள், புளியங்காய் நெல்லிக்காய்களால் ஆக்கபட்ட துவையல்கள் முதலியவற்றை சமையல்காரர் இவர்கள் சொல்படி இவர்களுக்கு கொண்டு வந்தனர்.

சமையல் தலேவன் சொற்படி க்ரமமாக பக்வம் செய்யப்பட்ட ம்ருக மாம்ஸங்களேயும் புளிமாங்காய் இவை கொண்டு பக்வம் செய்யப்பட்ட நாலுவித கலப்பன்னங்களேயும் இவர்களுக்குக் கொண்டு வந்தனர். நெய் கலந்த மாம்ஸ பாகங்களேயும் துண்டங்களேயும், உப்பு தூவப்பட்டவைகளேயும் மிளகு பொடி கலந்தவைகளேயும் கொடுத்தனர்.

பார்க்க அழகிய கிழங்குகள் புளிப்பு மாதுளே, இனிப்பு மாதுளே வகைகளுடன் பெருங்காயம் மஞ்சள் வ்யஞ்ஜனங்களுடன் கீரை வகைகள் பானவகைகளேயும் அளவிட முடியாத யாதவர் உட்கொண்டனர். காரஸாமான்கள் சேர்க்கப்பட்டு ஈட்டியால் வாட்டியும் நெய் புளிரஸம், எண்ணெய் இவைகளில் நனேத்தும் உள்ள பக்ஷிகளேயும் இதர மாம்ஸங்களேயும் உண்டு, மைரேயம், மாத்வீகம், ஸுரா ஆஸவம் முதலிய இந்தப் பானங்களே ப்ரியைகளால் சூழப்பட்டுக் குடித்தனர். வெண்ணிற பக்ஷ்யங்கள்,செந்நிறமுள்ளவை, நறுமணமுள்ளவை, உப்பு சேர்த்தவை பால் பக்வமானவை இப்படி நாலுவித கடித்துண்ணும் பக்ஷ்யங்களே உண்டனர்.

ஜனமேஜயராஜனே! உத்தவர், போஜர் முதலிய வீரர்கள் மதுபானம் செய்யாதவர் பலவித காய்கனிகள், பருப்புகள், தயிர், பால் முதலிய பானங்கள் நல்ல அன்னங்கள் இவைகளை சந்தோஷத்தோடு உண்டனர். அப்படியே பலவித நல்ல மணமுள்ள பாயஸங்கள், சர்க்கரை சேர்த்த பால் இவற்றை பருகினர். பல வித பழங்களையும் உண்டனர். பீம குல முக்கியரான அந்த வீரர்கள் திருப்தியடைந்தனர். திரும்பவும் பெண்களுடன், பெண்களால் ஆரம்பிக்கப்பட்ட மனோஹரமான இனிய பாடல்களை மகிழ்ச்சியுடன் பாடினர். பின்பு மிக மகிழ்ந்த பகவான் க்ருஷ்ணன் அவ்விரவில் பல ராகங்கள் சேர்ந்த சாலிக்ய பாட்டைப் பாடக் கட்டளையிட்டான். அதைத்தான் காந்தர்வ கானமெனச் சொல்கின்றனர்.

ஜனமேஜயராஜனே! பின்பு நாரதரும் ஆறு ஸ்வரங்களின் சேர்க்கையாகிய ஷாடவராகங்களை வாசிக்கும் வீணையைக் கையிலெடுத்தார். க்ருஷ்ணன், தானும் ஹல்லீசகம் என்னும் நாட்டிய கீதம் (பதங்களை) பாடினான். அர்ஜுனன் புல்லாங்குழல் வாசித்தான். ஸ்ரேஷ்டமான அப்ஸரஸ் ஸ்த்ரீகள் எல்லோரும் ம்ருதங்க வாத்யங்களையும் பிற வாத்யங்களையும் மிக மகிழ்ச்சியுடன் வாசித்தனர். பிறகு நாட்டிய முடிவில் அபிநய அர்த்த தத்வமறிந்த ரம்பை எழுந்தாள். அழகிய உடலமைப்புள்ள அந்த ரம்பையால் அபிநயம் பிடிக்கப்பட்டதும் பலராமனும், ஜனார்த்தனனும் மிக மகிழ்ந்தனர். பின்பு அழகிய நீண்ட கண்களுடைய ஊர்வசி, ஹேமா மிச்ரகேசி, திலோத்தமை இவர்களும் அன்யர்களும் க்ருஷ்ணனின் ப்ரியத்திற்காகப் பாடினார்கள். அப்படியே கருத்துக்குப் பொருத்தமானதும் இனிய விருப்பங்களை தெரிவிப்பதுமான அபிநயத்தையும் செய்தனர்.

ஜனமேஜயராஜனே அந்தச் சிறந்த அப்ஸரஸ்ஸ்த்ரீகள் க்ருஷ்ணனிடத்திலும் ப்ரியங்கொண்ட சித்தமுடையவர். ஸங்கீதம், ந்ருத்யம், அபிநயம், இவைகளின் மேன்மையால் ஸந்தோஷப்படுத்தப்பட்ட க்ருஷ்ணனால் தாம்பூலம் கொடுத்துக் கௌரவிக்கப்பட்டது. அவர்களும் அப்படியே கௌரவித்தனர். வீரர்கள் நறுமணங்கொண்ட தேவலோக பழங்களும், சாலுக்ய காந்தர்வமெனும் தேவலோக பாட்டும் பூமியிலே மனிதரை அனுக்ரஹிக்கும் பொருட்டு க்ருஷ்ணரின் இச்சையால் கொண்டு வரப்பட்டது. க்ருஷ்ணனின் பெருமையால் (ருக்மிணி) பிள்ளை ப்ரத்யும்னன் இனிய சாலுக்ய காந்தர்வத்தையும் அதனுடன் சேர்ந்த தாம்பூலத்தையும் ரஸித்து அனுபவித்தான். இந்திரனுக்கு ஸமானமான ஐவர்களால் மனிதர்களுக்கு எப்போதும் இஷ்டமான சாலுக்ய

காந்தர்வம் அனுபவிக்கப்பட்டது. மங்களமானது. வ்ருத்திகரமானது. மன்னு புகழ் பெற்றது. சுபமானது. கீர்த்தி வாய்ந்தது. புண்யமானது. புஷ்டியையும் வளர்ச்சியையும் கொடுக்கவல்லது. பெருங்கீர்த்தி வாய்ந்த நாராயணனுக்கு ப்ரியமானது ஜயத்தைக் கொடுக்கவல்லது. தர்மபாரத்தை வஹிக்கவல்லது. கானம் செய்யப்பட்டால் துஸ்வப்னத்தை அழிக்கவல்லது. நரஸ்ரேஷ்டன் கேட்டுத் தேவலோகமடைந்து பாபத்தை அடியோடு போக்குகிறான். நாலு யுகம் வாழ்ந்த பெரும் புகழ் பெற்ற ரேவதராஜனும் ப்ரஹ்ம லோகத்தில் சாலுக்ய காந்தர்வத்தைக் கேட்டு ஆயிரம் நாளை ஒருநாளாக நினைத்தான்.

ராஜனே! பிறகு ஸூகுமாரஜாதி, காந்தர்வஜாதி அப்படியே மற்ற ஜாதிகளும் ஒரு தீபத்திலிருந்து நூறு தீபங்கள் போல் கானப் பிரிவுகள் ஆரம்பமாகின்றன க்ருஷ்ணனும், நாரதரும் பீமகுல முக்யர்களான ப்ருத்யும்னன் முதலானோருடன் அறிந்து அனுபவித்தான். இதை (கானத்தை) அந்த தேவலோகத்தில் உண்மையாக அறிவார்கள். இந்தப் பூலோக ஜனங்களோ இருப்பதைப் பெயர் மாத்திரம் அறிவார்கள். நதி ஜலம் கலக்கும் ஸமுத்ரம் போலவும், குணத்தைக் கொண்டோ, பயனைக்கொண்டோ மலையை அறிவது போலவும் அறிகின்றனர். சாலுக்யத்தின் மூர்ச்சனை விதிகளை தவமில்லாமல் அறிய முடியாது. ராஜனே! ஆறு ஸ்வரங்கள் கொண்ட (ஷாடவ) ராகங்களிலும் ஒரு பகுதி மாத்ரம் மனிதரால் கானம் செய்யவல்லது. ஸூகுமார ஜாதி கானத்தை -ஜன லேசம் என்று சொல்லப்படும் நிலையை மனிதர்கள் மிக்க சிரமப்பட்டு அடைகிறார்கள். சாலுக்ய காந்தர்வ குண உத்பத்தியில், தேவ கந்தர்வ மஹரிஷி கூட்டங்கள் நிலையை அடைகின்றனர் என்று தெரிந்து கொள்.

இவ்விதம் ராஜனே! பீம ஸ்ரேஷ்ட மகானுபாவர் பூலோகத்திற்கு அனுக்ரஹமிருப்பதாலேயே இந்த சாலுக்யம் மனுஷ்யர்களுக்குக் கொடுக்கப்பட்டது. தேவர்களால் கானம் செய்யத்தக்க சாலுக்யம் (இவ்வுலகில்) ப்ரசித்தியடைந்தது. பீம முதலானவர், வ்ருத்தர், பாலர்கள் எல்லோரும் பிறந்த நாள் உத்ஸவங்களில் இந்த கானம் செய்து விளையாடுகின்றனர். அவ்வவ்விடங்களில் முதலில் "பஸர்" இதைக் கொண்டாடினர். மற்ற உகைத்தோறும் அந்தந்த விடங்களில் கௌரவிக்கின்றனர். யாதவ தர்மத்தையறிந்த யாதவ வீரர்கள், தர்ம விதியையறிந்து கௌரவித்தனர். ப்ரீதியே காரணம் வயதல்ல. நல்ல எண்ணங்கள் ப்ரீதியைக் காரணமாகக் கொண்டனவல்லவா? அந்த யாதவர்கள் ப்ரீதியை முன்னிட்டுத்தானே புத்ரர்களுடன்

மித்ரர் போலிருந்தனர். எல்லோரும் க்ருஷ்ணனுல் விடை கொடுத்தனுப்பப்பட்டனர். மிக மகிழ்ச்சியடைந்த அப்ஸரஸ் கூட்டங்கள் ஸந்தோஷமடைந்த க்ருஷ்ணனுக்கு வணக்கம் செய்து ஸ்வர்கம் சென்றனர். தேவலோகக் கூட்டம் ஸந்தோஷித்திருந்தது.

அத்யாயம் 89 முற்றும்.



## அத்யாயம் 90

### நிகும்பனேடு கடும் போர் செய்தல்-முடிவில் நிகும்பன் அழிதல் -பானுமதியை ஸஹதேவனுக்கு மணஞ்செய்து கொடுத்தல்.

வைசம்பாயனர் சொன்னர்- ராஜனே! புண்யம் செய்த யாதவர்கள், விளையாடிக் கொண்டிருக்கும் ஸமயம் பார்த்து துர்புத்தியுடைய அணுக முடியாத தேவ சத்ரு நிகும்ப அஸுரன் (இரண்டாவது தேஹம்) பானு என்பவனின் பெண் பானுமதியைத் தன் அழிவில் ஆசைப்பட்டு அபஹரித்தான். ஜனமேஜயராஜனே! மாயாவி நிகும்பன் யாதவர் பெண்களை மயக்கி, மறைந்திருந்து முன் விரோதத்தை மனதில் கொண்டு பானுமதியை அபஹரித்தான். வீரனே! ஜனமேஜயா! தன் ப்ராதா வஜ்ரநாபனுடைய பெண் ப்ரபாவதி என்பவள் ப்ரத்யும்னனுல் அபஹரிக்கப்பட்டாள். அப்படியே வஜ்ரநாபனும் கொல்லப்பட்டான். அந்த ஸமயமறிந்த அஸுரக் கீழ்மகன், பானு காட்டில் வஸிக்கும் ஸமயம் அணுக முடியாத தற்காப்பில்லா அந்தப்புரத்திலிருந்த பானுமதியை அபஹரித்தான்.

போரில் ஜயிப்பவனே! ஜனமேஜயா! அந்தக் கன்னிகை அபஹரிக்கப்பட்டு அழும்போது கன்யாபுரத்தில் பெரும் சப்தம் திடீரென எழுந்தது. அப்போது பானுவின் கன்யாபுரத்தில் துன்பக் கூக்குரலை கேட்டு, வஸுதேவர், ஆஹுகராகிய இருவீரரும் கவசம் பூண்டு ஆயத்தராய் வெளிவந்தனர். அவ்விருவரும் அபஹாரம் செய்யும் அஸுரனை கண்ணுக்குப் புலமாவது போல் காணவில்லை. அப்படியே ஆயத்தராய் மஹாபலசாலி க்ருஷ்ணன் இருக்கும் இடம் சென்றனர். சத்ருவை அழிக்கும் க்ருஷ்ணன் விஷயத்தைக் கேட்டு அர்ஜுனனுடன் கூட நாக சத்ருவான கருடனுகிய தன் விமானத்தில் ஏறினன். "நீ தேரிலேறி என் பின் வா" என்று மகரக்கொடியோன் ப்ரத்யும்னனுக்கு கட்டளையிட்டு, கச்யப புத்ரனை கருடனை "த்வரைப்படு" என வீரன் க்ருஷ்ணன்

கட்டளையிட்டான். "வஜ்ரம்" எனும் நகரும் நெருங்க வந்து கொண்டிருந்தது. போரில் ஜயிக்க முடியாத நிகும்பனை சத்ருக்களைத் துன்புறுத்தும் மஹாத்மாக்களான அர்ஜுன க்ருஷ்ணர்கள் அடைந்தனர். ஜனமேஜயராஜனே! மாயாவிகளில் சிறந்த மஹாதேஜஸ்வி ப்ரத்யும்னனும் நிகும்பனிருக்குமிடம் அடைந்தான். பிறகு நிகும்பனும் அவர்களைப் பார்த்துத் தன்னை மூன்றுக்கிக் கொண்டான். தேவர்களுக்கு ஸமமான நிகும்பன் சிரித்துக் கொண்டே பல முட்களால் கனமான கதாயுதங்களால் அவர்கள் எல்லோருடனும் போர் செய்தான்.

ராஜனே! இடது கையால் கன்னி பானுமதியைப் பிடித்துக்கொண்டு மறுபடியும் வலது கையால் கதை கொண்டடித்தான். ராஜ ஸ்ரேஷ்டனே! பெண் பானுமதியைக் கருதி அர்ஜுன க்ருஷ்ணர்களும், ப்ரத்யும்னனும் மஹா அஸுரனை நிகும்பனைத் தயவின்றி முரட்டுத்தனமாய் அடிக்கவில்லை. ராஜனே! அந்த சத்ருவை அழிக்கவல்ல அணுக முடியாத அந்த மஹாத்மாக்களான இரண்டு க்ருஷ்ணர்களும் (அர்ஜுன க்ருஷ்ணர்களும்) ப்ரத்யும்னனும் மிக்க தயையால் பீடிக்கப்பட்டு பெருமூச்சு விட்டனர். போரில் எல்லா முறையிலும் ஸமர்த்தனை, வில்லாளிகளில் சிறந்த அர்ஜுனன் (ஸர்ப்ப, ஒட்டக) முறைப்படி (வளைந்து செல்லும்) அஸுரனை, அம்பு வரிசையால் அடித்தான். ஜனமேஜயராஜனே! அந்த மூவரும் விற்கலையாலும், யுக்தியாலும் சாண் நீளமுள்ள அம்புகளை எய்து பலதரப்பட்ட அஸுரர்களை போரில் அடித்தனர்.பிறகு அந்த நிகும்பன் அஸுரமாயையால் பெண்(டு) பெண்ணோடு அங்கேயே மறைந்தான். அந்த மாயையை எவரும் அறியவில்லை. அப்போது அந்த நிகும்பனை க்ருஷ்ணனை முதலிய மூவரும் பின் தொடர்ந்து சென்றனர்.

பிறகு மஹா அஸுரன் பக்ஷைக் குருவியாக இருந்தான். பிறகு வீர அர்ஜுனன் திரும்பவும் பெண்ணை ரக்ஷித்துக் கொண்டு மர்மத்தைப் பிளக்கும் சாண் நீள பாணங்களால் நிகும்பனையடித்தான். சத்ருக்களைத் துன்புறுத்தும் அந்த மஹா அஸுரன் அந்த மூன்று வீரர்களால் பின் தொடரப்பட்டு ஏழு தவீபங்களுடைய இந்த பூமி முழுவதையும் சுற்றித் திரிந்தான். அந்த மஹா அஸுரன் கோகர்ண மலை மேல் கங்கைக் கரையில் ரமணிய திட்டில் பெண்ணுடன் கீழே விழுந்தான். பாரத! தேவர்களும் அஸுரர்களும் தவஞ்செய்ய விரும்பும் மஹா தேவனின் தேஜஸால் அழிக்கப்பட்ட கோகர்ண மலையைத்

தூண்டுவதில்லே. இந்த ஸந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி போரில் வெல்ல முடியாத வேகமான பராக்கமமுடைய பீம குல ப்ரத்யும்னன் பெண்ணேப் பிடித்துக் கொண்டான். ஜனமேஜயராஜனே! க்ருஷ்ணார்ஜுனர்களால் கூரிய பாணங்கள் கொண்டு துன்புறுத்தப்பட்ட அந்த நிகும்பாஸுரன் வடக்கு கோகர்ண மலேயை விட்டு தெற்குத் திசையில் சென்றான். அப்போது கருடன் மேலேறிய க்ருஷ்ணார்ஜுனர்கள் பின் சென்றனர். அப்போது அஸுரன் பந்துக்கள் இருப்பிடமான ஷட்புரத்துக்குள் புகுந்தான். க்ருஷ்ணார்ஜுன வீரர் அந்த இரவில் அந்தக் குகை வாசலில் தங்கி இருந்தனர்.

ப்ரத்யும்னனும் க்ருஷ்ணரால் கட்டளேயிடப்பட்டு உள்ளம் மிக மகிழ்ந்து பானுமதியை த்வாரகைப் பட்டணம் கொண்டு சேர்த்தான். கொண்டு சேர்த்த பின் வீரன் ப்ரத்யும்னன், அஸுரர் நிறைந்த ஷட்புரத்திற்கு வந்தான். குகை வாசலில் பயங்கர வீரமுடைய க்ருஷ்ணார்ஜுனர்களேப் பார்த்தான். நிகும்ப வதத்தை விரும்பிய மஹா பலவான்கள் க்ருஷ்ணார்ஜுனர் ஷட்புர வாயிலே ஆக்ரமித்து தாக்கினர். அதன் பின் மஹா பலவான் பயங்கர வீரமுடைய நிகும்பன் அந்த குகையிலிருந்து போர் செய்யக் கிளம்பினான். ஜனமேஜயராஜனே! அந்த குகையிலிருந்து வெளிக் கிளம்பும் அந்த நிகும்பனின் வழியை காண்டீவத்திலிருந்து விடப்பட்ட அம்புகளால் அர்ஜுனன் நாற்புறமும் தடுத்தான். பலவான்களில் சிறந்த அந்த நிகும்பன் பல முட்களுடைய கொடிய கதாயுதத்தைத் தூக்கி அர்ஜுனனே கிட்டித் தலேயில் அடித்தான். பிறகு அர்ஜுனன் காணமல் வந்த அஸுரனல் தலேயில் அடிக்கப்பட்டு மூர்ச்சையடைந்தான். ரத்தம் வாந்தி செய்தான். அந்த அஸுரன் கர்வங் கொண்டு சிரித்து மாயாவிகளில் சிறந்தவனாய் கிழக்கு நோக்கியிருக்கும் வீர ப்ரத்யும்னனேத் தலேயில் அடித்தான். பிறகு காணப்படாமல் தலேயில் அடிக்கப்பட்ட ப்ரத்யும்னன் மூர்ச்சையடைந்தான்.

செம்மையாக அடிக்கப்பட்டு மூர்ச்சையடைந்த அவ்விருவரையும் பார்த்து கதனுக்கு முன் பிறந்த கோபம் மிக்க கோவிந்தன் கௌமோதகி எனும் தன் கதையை நன்கு உயர்த்தி நிகும்பனே நோக்கி ஓடினன். அணுக முடியாத அவ்விருவரும் கர்ஜித்துக் கொண்டு ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டனர். அப்போது ஐராவதத்தின் மேலேறிய இந்திரன் ஸர்வ தேவ கணங்களுடன் கூட அந்தப் பெரிய தேவாஸுர யுத்தத்தைப் பார்த்தனன். சத்ருக்களேத் துன்புறுத்தும் க்ருஷ்ணன், தேவர்களேப்

பார்த்து, விசித்ர போர்களால் தேவர்களின் ஹிதத்தை விரும்பி அஸுரனைக் கொல்ல விரும்பினான். போரில் சிறந்த தோள் வலிமை கொண்ட கேசவன் கௌமோதகி கதையை எளிதாக சுழற்றிக் கொண்டு விசித்ர மண்டலங்களை (சுழற்சிகளை)க் காட்டினான். அஸுர முக்யன் நிகும்பனும் அப்படியே அந்த பல முட்கொண்ட தன் கதையைப் பயிற்சியால் சுழற்றிக் கொண்டு சுற்று நடை போட்டான். காளை போல் கத்தலிட்டும், யானை போல் பிளிறியும், செந்நாய்கள் போல் கோபங் கொண்டு ஸமயம் பார்த்து இருவரும் போர் புரிந்தனர். வீரனே! நிகும்பனும் மிகக் கொடிய முழக்கம் எழுப்பி தெளிவான எட்டு மணிகள் கொண்ட கதையால் க்ருஷ்ணனை அடித்தான்.

பாரத! க்ருஷ்ணனும் அப்போதே பெரிய கதையைச் சுழற்றி நிகும்பன் தலையில் விழச் செய்தான். புத்திமான், ஜகத்குரு, விஷ்ணு, க்ருஷ்ணன் ஒரு முஹூர்த்த காலம் கோமேதகி எனும் கதையைத் தொங்க விட்டுக் கொண்டு நின்றான். பிறகு மூர்ச்சையடைந்து கீழே விழுந்தான். ராஜனே! அப்போது மஹாத்மா வாஸுதேவன் அவ்விதமானதும், அச்சமயம் ஜகத்தில் எல்லோரும் ஆஹா! ஆஹா! என்று கூவலாயினர். தேவேந்த்ரன் அம்ருதம் கலந்த நறுமணமுடைய குளிர்ந்த ஆகாய கங்கை ஜலத்தால் தானே க்ருஷ்ணன் மேல் தெளித்தான். நிச்சயம் தேவ ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணன் தன் இச்சையாலேயே அவ்விதம் (மூர்ச்சையாக) செய்தான். மஹாத்மா விஷ்ணுவைப் போரில் மூர்ச்சையடைச் செய்ய யார் சக்தன் ஆவான்?

பாரத! சத்ருவை நாசம் செய்யும் க்ருஷ்ணன் மூர்ச்சை தெளிந்து சக்ரத்தை உயர்த்தி ஏற்றுக் கொள் என்று துராத்மா அஸுரனை நோக்கிச் சொன்னான். அணுக முடியாத அதிமாயாவி நிகும்பனும் அந்த சரீரத்தை விட்டு மேலே கிளம்பினன். அதைக் கேசவன் அறியவில்லை. ப்ரபோ! ஜனமேஜயா! இவன் மரணமடையப் போகிறனா? அல்லது மரணம் அடைந்தே விட்டானா என்று நினைத்து வீரன் ஜனார்த்தனன் வீரனின் தர்மத்தை நினைத்து மேற்கொண்டு அடிக்கவில்லை. பிறகு ப்ரத்யும்னனும் அர்ஜுனனும் மன உறுதி கொண்டு வந்தனர். நிகும்ப வதத்தில் உறுதியுடையவராகி நாராயணன் பக்கல் நின்றனர். மாயாவி ப்ரத்யும்னனும் விஷயம் தெரிந்து க்ருஷ்ணனைப் பார்த்துச் சொன்னான். அப்பா! இங்கு நிகும்பனில்லை. மிக்க கெட்ட புத்தியுள்ள அவன் எங்கோ சென்று விட்டான். ப்ரத்யும்னன் இப்படிச் சொன்னதும் அந்த (மாயா) உடல் அழிந்து விட்டது

பிறகு ப்ரபு பகவான் க்ருஷ்ணன் அர்ஜுனனுடன் சிரித்தான். ஜனமேஜய ராஜனே! அப்போது ஒரு கோடி நிகும்ப வீரர்கள் பூமியிலும் ஆகாயத்திலும் நாற்புறமும்காணப்பட்டனர். அப்படியே ஜனமேஜயா! சத்ரு நாசக க்ருஷ்ணனையும், அர்ஜுனனையும், வீர ப்ரத்யும்னனையும் ஆயிரக்கணக்காகவே கண்டனர். அது ஆச்சர்யமாகவிருந்தது. சில மஹா அஸுரர்கள் அர்ஜுனன் வில்லையும் மற்றும் சிலர் அவனது கைகளையும் மேலும் சிலர் அவனது பாதங்களையும் பிடித்தனர். இவ்விதம் அந்த வீர அர்ஜுனனைப் பிடித்துக் கொண்டு அந்த அஸுரர்கள் ஆகாயத்தில் சென்றனர். அப்போது கோடிக்கணக்கான அர்ஜுனர் பிடிக்கப்பட்டவரானர். சத்ரு நாசகரான பார்த்தனைத் தவிர இரண்டு வீரர்கள் நிகும்பனைப் பாணங்களால் துண்டித்தும் முடிவைக் காணவில்லை.

பாரத! இரண்டாகத் துண்டிக்கப்பட்ட ஒவ்வொரு நிகும்ப துண்டமும் இரண்டாக ஆயின. திவ்யஞானம் உடைய க்ருஷ்ண பகவானும் அப்போது ஆலோசித்துப் பார்த்தான். மதுஸூதன பகவான் அர்ஜுனனை அபஹரித்த, எல்லா மாயையையும் ச்ருஷ்டிக்கும் நிகும்பனை உண்மையாகக் கண்டு பிடித்தான். நடந்ததையும், நடக்கப் போவதையும் முக்காலமும் அறிந்த அஸுர நாசகன் விஷ்ணு, க்ருஷ்ணன் எல்லோரும் பார்த்து கொண்டிருக்கும் போதே சக்ரத்தால் நிகும்பன் தலையை அறுத்தான். பாரதா! ஜனமேஜயராஜனே! தலை அறுப்புண்டதும் அந்த அஸுர முக்யனான நிகும்பன் அர்ஜுனனை விட்டுவிட்டு வேரறுபட்ட மரம்போல் கீழே விழுந்தான். கௌரவம் கொடுக்கும் ஜனமேஜயா! ஆகாயத்தையடைந்து கீழே விழும் அர்ஜுனனை, க்ருஷ்ணனது கட்டளையால் ப்ரத்யும்னன் ஆகாயத்திலேயே பிடித்துக் கொண்டான். நிகும்பன் பூமியில் விழுந்ததும், அர்ஜுனனை சமாதானப்படுத்தி, அர்ஜுனன் இஷ்டப்படி செய்யவல்ல தேவன் க்ருஷ்ணன் த்வாரகைக்குச் சென்றான். தசார்ஹ குலத்தலைவனை யது நந்தன் க்ருஷ்ணன் சந்தோஷமடைந்தவனாய் த்வாரகையைச் சேர்ந்து மஹாத்மா நாரதரையும் வணங்கினான்.

பிறகு மஹா தேஜஸ்வி நாரதர் பானு யாதவனை நோக்கி சொன்னர்: பீம குலதிலகனே! பானுவே! நீ வருத்தப்படாதே. ரைவத உத்யான வனத்தில் விளையாடுகிற பானுமதியால் துர்வாஸ ரிஷி கோபமூட்டப்பட்டார். அந்த முனி பிறகு உன் பெண்ணைச் சபித்தார். கன்னிப் பெண் பானுமதி அஸாதரணமான சேஷ்டையால் நீ சத்ரு கையில் பிடிபட்டு போவாய் என்று;

உன் பெண் பொருட்டு. ரிஷிகளுடன் அவர் என்னால் வேண்டப்பட்டார். முனியே! தர்மவான்களில் சிறந்தவரே! தர்மமறிந்தவரே! குற்றமற்ற வ்ரத முடையவரே! இந்த குழந்தைப் பெண்ணை ஏன் சபித்து விட்டீர்? இவள் விஷயத்தில் அனுக்ரஹம் செய்ய வேண்டும். நாங்கள் வேண்டிக் கொள்கிறோம் என்றும். பீமகுலத்தவனே! எங்களால் இப்படி வேண்டப்பட்ட தூர்வாஸரும் ஒரு முஹூர்த்த காலம் கீழ் நோக்கிய முகத்தையுடையவராய். க்ருபை கொண்டு சொன்னார். 'நான் எது சொன்னேனோ அது அப்படியே! அது மாறாது. அவஸ்யம் சத்ரு கையில் போயே தீருவாள். சந்தேகமில்லை. தர்மத்தால் கெடுக்கப்படாமல் பர்த்தாவையடைவாள். வெகு புத்ரர்களையும் நிறைந்த செல்வத்தையும் உடையவளாய். சௌபாக்யவதியாய் ஆவாள்.எப்போதும் நறுமணம் வீசிக் கொண்டும் குமரிப் பெண்ணாகவும் இருப்பாள். இந்த அபஹரித்த துக்கத்தை திரும்பத் திரும்ப நினைக்க மாட்டாள்.

வீரனே! பானுவே! பானுமதி ஸஹதேவனுக்கு மணம் செய்து கொடுக்கப்படட்டும். அவன் பாண்டு புத்ரன். தர்மசீலன். ஸ்ரத்தையுடையவன். சூரனும் கூட. பிறகு தர்மாதமா பானு நாரத முனியின் வார்த்தையை நினைவில் கொண்டு பானுமதியை சக்ரபாணி க்ருஷ்ணனால் சொல்லி வரவழைக்கப்பட்ட ஸஹதேவனுக்கு நிச்சயித்தான். அப்போது கல்யாணம் நடந்தது. பார்யை பானுமதியுடன் ஸஹதேவன் ஊர் திரும்பிச் சென்றான். ஸ்ரீக்ருஷ்ணனது இந்த வெற்றியை ச்ரத்தையுடன் படிக்கிறவனும் கேட்கிறவனும் எல்லா கார்யங்களிலும் வெற்றியடைவான்

அத்யாயம் 90 முற்றும்.



## அத்யாயம் 91

### வஜ்ரநாபன் பெற்ற வரங்கள்-நாட்டியக்கார பத்ரநாமன் பெற்ற வரங்கள்-தேவேந்ரன் ஹம்ஸ பறவையை வஜ்ரநாபன் மகள் ப்ரபாவதியிடம் தூதாக அனுப்புதல்

ஜனமேஜயர் சொன்னார் : தர்மவான்களில் ஸ்ரேஷ்டரே! முனிவரே! வைசம்பாயன மஹாமுனிவரே! பானுமதி அபஹரணம். கேசவனின் வெற்றி. சாலுக்ய கந்தர்வரின் (தேவலோகத்திலிருந்து) வரவழைப்பு. மிக்க தேஜஸ்விகளான வ்ருஷ்ணிகளின் திவ்ய

ஸமுத்தர க்ரீடை எல்லாவற்றையும் கேட்டேன். மிக்க ஆச்சர்யம். முனிவரே! நிகும்ப வதத்தைச் சொல்லும் போது வஜ்ரநாப வதம் செய்யப்பட்டதல்லவா? அதைத் தங்களது அனுக்ரஹத்தால் கேட்க எனக்குக் குதூகலமாயிருக்கிறது.

வைசம்பாயனர் சொன்னார்: பாரத! ஜனமேஜயராஜனே! வஜ்ரநாபன் வதத்தையும், சாம்பன், ப்ரத்யும்னன் இருவர்ஜயத்தையும் உனக்குச் சொல்வேன். ஜனமேஜயராஜனே! வஜ்ரநாபன் எனும், போரில் வெற்றி நிச்சயமுடைய மஹா அஸுரன், மேருவின் தாழ்வரையில் தவம் செய்தான். மஹா தேஜஸ்வீ லோக பிதாமஹன் ப்ரஹ்மா, அவன் தவத்தால் ஸந்தோஷப்பட்டு, மிக மகிழ்ந்து வரம் கேட்டு கொள்ளும்படி கூறினார். அந்த அஸுர ஸ்ரேஷ்டன், வஜ்ரநாபன் தேவர்களால் கொல்லப்படாமலிருத்தலே வேண்டினான். எல்லா ரத்னங்களும், மங்களமான வஜ்ரபுரம் எனும் நகரமும் வேண்டினான்.

பாரத! ஜனமேஜயராஜனே! வாயுவுக்கும் கூட இஷ்டப்படி நகரில் உட்புக முடியாது. கவலையில்லாமல் எல்லா விருப்பங்களின் உத்பத்தி. ஜனமேஜயா! அந்த அளவிடப்பட முடியாத நகரத்தின் நாற்புறமும் நூற்றுக் கணக்கான முக்கிய கிளை நகரங்களின் தொகுதியும் வரம் கேட்டான். பாரத! அவன் வர தானத்தால் அது அப்படியே ஆயிற்று. வஜ்ரநாப மஹா அஸுரன் அந்த வஜ்ர நகரில் வஸித்தான். ஜனமேஜயராஜனே! தேவ சத்ருக்களான அஸுரர்கள் வரம் கேட்டபடி அவனைச் சூழ்ந்து இனிய முக்ய நகரங்களிலும்,வஜ்ரபுரத்திலும் ஸந்தோஷத்துடனும் புஷ்டியுடனும் மிக மகிழ்ச்சி கொண்டு கோடிக் கணக்கில் வஸித்தனர். பிறகு தனக்கும், நகரத்துக்கும் வரம் பெற்ற கர்வத்தால் துஷ்டாத்மா வஜ்ரநாபன் உலகைத் துன்புறுத்த முற்பட்டான்.

ஜனமேஜயராஜனே! தேவலோகம் சென்று மஹேந்த்ரனிடம் சொன்னான் : 'தேவேந்த்ரா! நான் மூவுலகுக்கும் ஈசனாயிருக்க விரும்புகிறேன். தேவகணத் தலைவனே! இல்லாவிடில் என்னுடன் போர் புரி. உலகு முழுதும் கச்யப புத்ரராகிய மஹாத்மாக்களுக்கு பொதுவானதல்லவா? குருகுலத்தவனே! அந்த ஸுரஸ்ரேஷ்டன் மஹேந்த்ரன் தேவேந்தரன், ப்ரஹஸ்பதியுடன் ஆலோசித்து வஜ்ரநாபனைக் குறித்துச் சொன்னான்: 'குழந்தாய், நம்முடைய பிதா கச்யப முனிவர் ஸத்ர யாகத்தில் தீக்ஷையுடனிருக்கிறார். அந்த யாகம் முடிந்ததும் ந்யாயப்படி செய்கிறேன்.பிறகு அந்த அஸுரன் சென்று பிதா கச்யபரிடம் சொன்னான்.

பின்பு கச்யபர், தேவராஜன் இந்த்ரனல் சொல்லப்பட்டபடி சொன்னர்: 'ஸத்ர யாகம் முடிந்ததும் நியாயம் உண்டாகும்படி செய்வேன். மகனே! நீ போ. வஜ்ரபுரத்தில் மனத் திருப்தியுடன் இரு'. இப்படி சொல்லப்பட்டதும் வஜ்ரநாபன் தன் நகருக்கே போய்ச் சேர்ந்தான். மஹேந்த்ர தேவனே வாயில்களால் விளங்கும் த்வாரகா நகரை யடைந்தான். த்வாரகை சென்று தேவேந்த்ரன் மறைந்து நின்று வாஸுதேவனிடம் வஜ்ரநாபன் வ்ருத்தாந்தத்தைச் சொன்னன். ஜனார்த்தனன் இந்த்ரனுக்குப் பதில் சொன்னன். 'இந்த்ரதேவனே! வஸுதேவரின் அஸ்வமேதயாகம் நடக்க போகிறது. அது முடிந்ததும் வஜ்ரநாபனே வீழ்த்துவேன். ஸாதுக்களுக்கு கதியே! பர்போ! இந்த்ரனே! அங்கு வஜ்ரபுரம் ப்ரவேசிப்பதில் உபாயத்தை ஆலோசிப்போம். அங்கு எளிதில் உட்புகுதல் வாயுவுக்குக் கூட இல்லை. பாரதா! வஸுதேவரின் அஸ்வமேத யாகம் ஆரம்பமானதும், க்ருஷ்ணனல் பஹுமானம் செய்யப்பட்ட தேவராஜன் இந்த்ரன் அங்கு யாகத்திற்குச் சென்றன். அந்த யாகம் நடக்கும் போது தேவஸ்ரேஷ்டரும் வீரருமான தேவேந்திரன், அச்சுதன் இருவரும் வஜ்ரபுரம் புகுவது பற்றி ஆலோசித்தனர். அங்கு யாகம் நடக்கும் ஸமயம், பத்ரநாமன் எனும் நாட்டியக்காரன் நல்ல நடனத்தால் மஹரிஷிகளை ஸந்தோஷப்படுத்தினன். முனிஸ்ரேஷ்டர்கள் அந்த நாட்டியக்கார பத்ரநாமனே, தன்னிஷ்டம் போல் வரம் கேட்கச் சொன்னர்கள். தேவ ஈச்வரன் போன்ற அந்த நாட்டியக்காரன், தேவேந்த்ரன், க்ருஷ்ணன், இருவரின் அபிப்ராயப்படி ஸமயோசிதமாக தானே பேசி (1) அஸ்வமேத யாகத்திற்கு வந்துள்ள அந்த முனிஸ்ரேஷ்டர்களை வணங்கி வரம் வேண்டினன்.

நாட்டியக்காரன் வரம் வேண்டினன்: 'முனிஸ்ரேஷ்டர்களே! எல்லா த்விஜர்களுக்கும், நான் அழைக்கத் தக்கவனாக ஆக வேண்டும். இந்த ஏழு த்வீபங்கள் கொண்ட பூமி முழுதும் ஸஞ்சரிக்க வேண்டும். ஆகாயத்தில் ஸஞ்சரிக்க மேன்மை சக்தி வேண்டும். ஸ்தாவர, ஜங்கம எல்லா பூதங்களாலும் கொல்லத் தகாதவன் ஆக வேண்டும். இசைக் கருவிகளுடன் கூடி மூப்பு நோயற்று இறந்தகால, நிகழ்கால, எதிர்காலமெனும் முக்காலங்களிலும் யாரார் வேஷத்துடன் புகுவேனே அத்தகையவர் ஆக வேண்டும். எல்லா முனிவரும் மற்றவரும் என் விஷயத்தில் எப்போதும் ஸந்தோஷப்பட வேண்டும்.' ஜனமே ஜயராஜனே! 'இவ்விதம் இருக்கட்டும்' என்று வரம் கொடுக்கப்பட்ட தேவரை யொத்த அந்த நடன் ஏழு த்வீபங்கள் கொண்ட பூமியைச் சுற்றி வருகிறன்.

அஸுரோத்தமர் நகரங்கள், உத்தரகுருதேசம் அப்படியே பத்ராஸவ தேசம், கேதுமாலதேசம், காலாம்ரத்வீபம் இவற்றைச் சுற்றி வருகிறான். வரம் பெற்ற போக வீரனை மஹா நடன் எல்லாப் பர்வங்களிலும் யாதவர்களால் அலங்கரிக்கப்பட்ட த்வாரகைக்கு வருகிறன்.

பிறகு, தேவர் தலைவன் இந்த்ர பகவான் தேவ லோக வாஸிகளான ஹம்ஸபறவைகளைக் குறித்து ஸாத்வீகமாகச் சொன்னன்: 'நீங்கள் காச்யபரிடமிருந்து தோன்றிய தேவ பக்ஷிகள். எனக்கு ஸஹோதரர்கள். அப்படியே புண்யாத்மாக்களான தேவர்களுக்கு விமானங்களைச் சுமப்பவர்கள். தேவர்களுக்குச் சத்ரு வதத்துடன் கூடிய கார்யம் செய்ய வேண்டியிருக்கிறது ; அது செய்யத்தக்கது. எவ்வகையிலும் இந்த ரஹஸ்யம் வெளியிடத்தக்கதல்ல. தேவதைகளின் கட்டளையைச் செய்கிற உங்களுக்கு கொடிய தண்டனை வராது. ஹம்ஸ ஸ்ரேஷ்டர்களே! உங்களுக்கு எங்கும் தடுக்கப்படாத போக்கு. அந்யரால் ப்ரவேசிக்க முடியாத வஜ்ரநாபனின் சிறந்த நகருக்கு இங்கிருந்து சென்று அந்தப்புர தடாகங்களில் ஸஞ்சரியுங்கள். உங்களுக்கு தக்கதல்லவா? அந்த வஜ்ரநாபனுக்கு மூவுலகிலும் சிறந்த மங்களகரமான கன்யா ரத்னம் இருக்கிறது. ப்ரபையுடன் கூடிய சந்த்ர கிரணம் போல் ப்ராபவதி எனப் பெயர் பெற்றவள் அவள். அந்த அழகிய முகமுடைய அவள் தாயார் ஹைமவதியால் மஹாதேவியிடமிருந்து வரதான மூலம் அடையப்பட்டாள் என்று எங்களால் கேட்கப்பட்டது. பதிவ்ரதையான அந்தக் கன்யை பந்துக்களால் ஸ்வயம்வரையாக வைக்கப்பட்டுள்ளாள். ஹம்ஸங்களே! மங்களகரமான அவள் தன்னிஷ்டப்படி கணவனைத் தேர்ந்தெடுப்பாள்.

ஆதலால் மஹாத்மா ப்ரத்யும்னனின் குலம், ரூபம், சீலம், வயது முதலியவைக்கேற்ற நல்ல குணங்கள் உங்களால் சொல்லத்தக்கவை. அந்தப் பதிவ்ரதை வஜ்ரநாபனின் பெண் எப்போது மனம் பொருந்தியவளாவாளோ அப்போது அவளிடமிருந்து தூது வார்த்தை அடக்கமாகக் கொண்டு வரத்தக்கது. அப்படியே அங்கிருந்து ப்ரத்யும்னனிடம் கொண்டு சேர்க்க வேண்டும். தக்க காலத்தில் எனக்கு ஹிதமானது. உங்கள் ஸ்வய புத்தியால் செய்யத் தக்கது. ப்ரபாவதியின் நேத்ரமும், முகமும் மலரும்படி உங்களால் செய்யத் தக்கது. அவளுடைய மனது ப்ரத்யும்னனிடம் பதியும்படி அவனுடைய குணங்களை சொல்ல வேண்டும். ஒவ்வொரு நாள் ஸமாசாரமும் எனக்கு

எல்லாப்படியாலும் அனுப்பத்தக்கது. த்வாரகையிலுள்ள எனது இளைய ஸஹோதரன் க்ருஷ்ணனுக்கும் அனுப்பத்தக்கது. ஆத்ம ஞானமுள்ள ப்ரபு ப்ரத்யும்னன் மிக அழகிய வஜ்ரநாபன் மகளை மனமொன்றி ஏற்கும் வரை ப்ரயத்னம் செய்யத்தக்கது. ப்ரஹ்ம வரத்தால் கர்வங் கொண்ட அவ்வஸுரன் தேவர்களால் கொல்லபட முடியாதவன். ப்ரத்யும்னன் முதலிய தேவபுத்ரர்களால் தான் போரில் அழிக்கத் தக்கவன். அஸுர வஜ்ரநாபன் வேஷங் கொண்ட வரம் பெற்ற நடனும், ப்ரத்யும்னன் முதலிய யாதவர்களும் வஜ்ரநாபனை அழிப்பவர்களாகச் செல்வார்கள். எங்களுக்கு ப்ரியம் செய்யும் விருப்பத்தால் இந்த எல்லாமும், மற்ற எல்லாமும் தக்க காலத்தில் நீங்கள் செய்ய வேண்டும். வஜ்ரநாபனுக்கு ப்ரியமான அந்த இடத்தில் வஜ்ரபுரத்தில், ஹம்ஸங்களே! தேவர்களுக்கு எப்படியும் எல்லா விதத்திலும் புகுவது முடியாது.

அத்யாயம் 91 முற்றும்.



## அத்யாயம் 92

### ஹம்ஸங்கள் வஜ்ரநகரம் சேர்தல்-ப்ரபாவதி, சுசிமுகீ என்ற ஹம்ஸத்தைத் தோழியாகக் கொள்ளள்-அது ப்ரத்யும்னனைப் பற்றி கூறுதல்-வஜ்ரநாபனிடம் நடனைப் பற்றித் தெரிவித்தல்-ஹம்ஸங்கள் துவாரகை திரும்புதல் ப்ரத்யும்னன் நடனுகை நடித்தல்.

வைசம்பாயனர் சொன்னுர் : ஜனமேஜயராஜனே! அந்த ஹம்ஸங்கள் இந்த்ரன் வார்த்தையைக் கேட்டு வஜ்ரபுரம் சேர்ந்தன. ஜனமேஜயராஜனே! அவைகளுக்கு அங்குச் செல்வது முன் பழக்கப்பட்டதல்லவா! வீர ஜனமேஜயா! அந்தப் பக்ஷிகள் ஸ்பர்சத்துக்கு மிருதுவான தாமரைகளாலும் நீலோத்பலங்களாலும் சூழப்பட்ட இனிய தடாகங்களில் இறங்கின. அந்த ஹம்ஸங்கள் அபூர்வ ஸம்ஸ்க்ருத பாஷை பேசுகிறவைகளாய் இனிய குரலுடன் பாடி முன்னரே அங்கிருந்து பழக்கப்பட்ட அவை ஆஸ்சர்யத்தை விளைவிக்கின்றன. ஜனமே ஜயராஜனே! ஸ்வர்க்க வாஸிகளான அவை அந்தப்புர அனுபவத்துக்குரிய நடவாவிகளில் ஸஞ்சரித்தன. வஜ்ரநாபனால் பார்க்கப்பட்டன ஜனமேஜயராஜனே! ஹம்ஸங்கள் இனிமையாகப் பாடின வஜ்ரநாப அஸுரன் அந்த

ஹம்ஸங்களை நோக்கி இந்த வார்த்தைகள் சொன்னான் : நீங்கள் இனிய பேச்சுடையவர்கள், ஸ்வர்க நித்ய வாஸிகள். இங்கு எங்கள் உத்ஸவ ஸமயம் நீங்கள் அறியும் போது அவஸ்யம் வரவேண்டும். ஸ்வர்கவாஸிகளான உங்களால் இங்குக் கூச்சமின்றி வரவேண்டும். பாரத! வஜ்ரநாபனால் அவ்விதம் கூறப்பட்ட அந்தப் பக்ஷிகள் 'அப்படியே' என்று சொல்லி அஸுரத் தலைவன் இருப்பிடத்தை யடைந்தன. அந்தப் பக்ஷிகளும் தேவ கார்யத்தை உத்தேசித்து அஸுரனுடன் பழக்கப்படுத்திக் கொண்டன. மனிதப பேச்சுடையவர்களாய் பலவித கதைகளை சொல்லின.

எல்லா மங்களத்துக்கும் பங்குடைய கச்யப வம்ஸத்தில் பிறந்த அஸுரப் பெண்கள் பொருத்தமான கதைகளைக் கேட்டு விசேஷமாக ரமித்தனர். பிறகு ஸஞ்சரிக்கும் ஹம்ஸங்கள் அழகிய புன்சிரிப்புடைய மிகச் சிறந்த வஜ்ரநாபன் பெண் ப்ராபவதியை அப்போது பார்த்தன. ஹம்ஸங்கள் பின்பு அந்த அழகிய புன்சிரிப்புடைய ப்ரபாவதியைப் பழக்கபடுத்திக் கொண்டன. அப்போது அஸுர ராஜனின் பெண் சுசிமுகீ எனும் ஹம்ஸத்தைத் தோழியாக்கிக் கொண்டாள். ஹம்ஸத் தோழி ஒரு சமயம் ஸ்ரேஷ்டையான வஜ்ரநாபன் பெண், நம்பிகை கொண்ட ப்ரபாவதி ஸகியை பல கதைகளையுடைய தன் இனிய வார்தைகளால் வினவினாள் 'ப்ரபாவதி தேவி உன்னை ரூப, சீல, குணங்களால் த்ரிலோக ஸுந்தரியாக நான் அறிகிறேன். உன்னிடம் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

அடக்கமுடையவளே! அழகிய புன்சிரிப்படையவளே! உனது யௌவனம் வீணே கழிகிறது. கழிந்து போனது மீளுவதில்லை. ஓடிச் செல்லும் நீரின் ப்ரவாகம் போல். தேவீ! சோபனே! பெண்களுக்கு இவ்வுலகில் காமானுபவத்துக்கு ஸமமான இன்பம் இல்லையல்லவா? இந்த உண்மையை உனக்குச் சொல்கிறேன். ஸர்வாங்க ஸுந்தரீ! நீ பிதாவால் ஸ்வயம்வரத்தில் வைக்கப்பட்டாய். தேவ அஸுர குலங்களில் பிறந்த எவர்களையும் வரிக்கிறாயில்லை.

சுபே! அழகிய ப்ருஷ்டபாகமுள்ளவளே! உன்னால் நிராகரிக்கப்பட்டவர்கள் வெட்கப்பட்டவர்களாய் போகிறார்கள். தேவீ! ரூபம் சௌர்யம் குணங்கள் கூடி, குலத்துக்கேற்றவர், குலப்பெருமைக்கேற்றவர்களை விரும்புகிறாயில்லை. ஸுபே! ஸர்வாங்கஸுந்தரீ! ருக்மிணியின் மகன் ப்ரத்யும்னன் உன்னிடம் ஏன் வருவான்? மூவுலகிலும் ரூபத்தாலும் குலத்தாலும் அவனுக்கு ஒப்பு இல்லை. குணங்களாலும் சௌர்யத்தாலும் மிக மேம்பட்டவன்.

அழகிய பின்பாகமுடையவளே! அந்த மஹாபலன் ப்ரத்யும்னன் தேவர்களுள் சிறந்தவன், அஸுரர்களிலும் சிறந்தவன், மனிதர்களிலும் தர்மஸ்வரூபியான மனிதன். அவனைப் பார்த்து பெண்களின் மனம் பசுக்களின் பருத்த முலைக்காம்புகள் போலும் நதிகளின் நீர்பெருக்கு போலும் உருகிபோடும். முகத்தைப் பூர்ண சந்திரனுடனும் கண்களைத் தாமரையுடனும் நடையை ஸிம்ஹத்துடனும் உவமைப் படுத்துவது விரும்புகிறேனில்லை. சுபே! சிறந்தவளே! பெரும் சக்தி வாய்ந்த விஷ்ணுவால் ஜலத்தின் ஸாரத்தை தொகுத்து அங்கமில்லாதவனை அங்கமுடையவனாகச் செய்து புத்ரனைப் பிறப்பிக்கப்பட்டவன். பால்யத்தில் சம்பராஸுரனால் அபஹரிக்கப்பட்டு அந்தபாவி ஸம்பராஸுரன் அழிக்கப்பட்டான். எல்லா மாயையையும் கற்று அவற்றால் அடையப்பட்டவன். ஒழுக்கம் கெடுக்கப்பட்டவனில்லை.

பெரிய பின்பக்கம் உடையவளே! மூவுலகிலும் நீ மனதால் கல்பிக்கும் எல்லாக் குணங்களும் ப்ரத்யும்னனிடம் உள்ளன. காந்தியால் அக்னி போன்றவன் க்ஷமையால் பூமி போன்றவன், தேஜஸால் சூர்யன் போன்றவன். காம்பீர்யத்தால் சமுத்திரம் போன்றவன்." அழகிய ப்ரபாவதி, சுசீமுகி ஹம்ஸத் தோழியை நோக்கி இவ்விதம் சொன்னாள் : "ப்ரியே! மனித உலகில் இருக்கும் விஷ்ணு என் பிதாவும் புத்திமான் நாரதற்கும் சொல்லி என்னால் அடிக்கடி கேட்கப்பட்டுள்ளேன். கௌரவமளிப்பவளே! பாபமற்றவளே! அஸுரர்களுக்கு சத்ருவான அவன் (விஷ்ணு) எப்போதும் தவிர்க்கத் தக்கவனல்லவா? கிளை நகரங்களில் வசிக்கும் அஸுர குலங்கள் அவனால் ஜ்வலிக்கும் சக்ரம், சார்ங்கம், கதை இவை கொண்டு தஹிக்கப்பட்டனவல்லவா? இந்த விஷயங்கள் அஸுர ராஜா வஜ்ரநாபனால் சொல்லப்படுகின்றனவல்லவா?

அழகிய புன்சிரிப்புடையவளே! தன்னுடைய நாயகன் குலம் பிதாவின் குலத்தைக் காட்டிலும் ச்ரேஷ்டமானதாக இருக்க வேண்டும் என்று எல்லாப் பெண்களுக்குமே மனோரதமில்லையா. இங்கு அவனது (ப்ரத்யும்னனது) வருகை பற்றி உபாயம் இருக்குமேயானால், எனக்குப் பெரிய அனுக்ரஹமாகும். எனது குலமும் புனிதமாக்கப் பட்டதாகும். இனிமைப் பேச்சுடையவளே! வ்ருஷ்ணிகுல மகன் ப்ரத்யும்னன் என் கணவனாகும்படி வேண்டப்பட்ட நீ அது காரியகரமாகும் வழியைச் சொல்." ஹரி விஷ்ணு அஸுரர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணும் விசேஷ விரோதி என்று அஸுர மூதாட்டியார் சொல்லிக் கேட்டிருக்கிறேன்.

ப்ரத்யும்னனின் பிறபபும் அவனுல் அந்தப் பலவான் யமன் போன்ற சம்பராஸுரன் கொல்லப்பட்டதும் முன்னரே என்னுல் கேட்கப்பட்டது. சிறந்தவளே! சுசிமுகீ! ப்ரத்யும்னன் எப்போதும் என் மனதில் இருக்கிறுன். அவனுடன் எனது ஸந்திப்புக்கு வழி தெரியவில்லே. மதிப்புக்குரிய தோழீ! உனக்கு நான் அடிமை. தூதாக உன்னே அனுப்புகிறேன். எனக்கு அவனுடன் சேர்வதற்கு உபாயம் சொல். நீ ஸமர்த்தையாயிருக்கிருய். பிறகு அவளே ஸமாதானப்படுத்தி சிரித்துக் கொண்டு தோழி சுசிமுகீ இந்த வார்த்தை சொன்னுள்: "அழகிய புன்சிரிப்புடையவளே! ப்ரபாவதீ! நான் உனது தூதியாக அங்குச் செல்வேன். அழகிய சிரிப்புடையவளே! உனது மிகுந்த பக்தியை (அவனிடம்) சொல்வேன். அழகிய பின்பாகமுடையவளே! உன் பக்கல் அவன் வரும்படி செய்வேன். ஸாக்ஷாத் அநங்கன் (ப்ரத்யும்னனுடன்) இஷ்ட பூர்த்தியானவள் ஆவாய். ப்ரகாசமான கண்ணியே! இந்த எனது வார்த்தையை எப்போதும் நினேவில் வைத்துக்கொள். நீண்ட கண்ணியே! எனது கதை சொல்லும் திறமையைப் பிதாவிடம் சொல். தேவீ! அங்கு (பிதாவிடம்) எனக்கு ஹிதமானதை நன்ருகச் செய்வாய்.

இப்படி சொல்லப்பட்ட அந்த ப்ரபாவதி சுசிமுகீ சொன்னதை அப்படியே செய்தாள். அஸுரராஜா வஜ்ரநாபனும் அந்தபுரத்தில் அப்போது ஹம்ஸியைப் பார்த்து வினவினுன்: "உனது கதாப்ரவசன ஸாமர்த்யம் ப்ரபாவதியால் நன்கு விளக்கப்பட்டது. ச்ரேஷ்டையே! சுசிமுகீ! உத்தம சரித சாரத்தைச் சொல். உலகில் பிறரால் இதற்கு முன் பார்க்கப்படாத ஆச்சர்யம் தக்கது, தகாதது உன்னுல் பார்க்கப்பட்டது. என்ன?

நரச்ரேஷ்ட ஜனமேஜயா! அந்த ஹம்ஸி அஸுர ராஜா மஹாதேஜஸ்வீ வஜ்ரநாபனிடம் நேரில் அழைத்துச் சொல்லிற்று. அஸுரச்ரேஷ்டனே! ஆச்சர்ய கார்யங்கள் செய்யும் நல்ல மனதுடைய பதிவ்ரதை சாண்டிலி என்பவள் என்னுல் பார்க்கப்பட்டாள். அவள் எல்லா ப்ராணிகளின் ஹிதத்தில் ப்ரியமுடையவள். நல்ல மனதுள்ளவளும் கூட. சைலி புத்ரி சாண்டில்யைக்கு மங்களமான தோழி (ஒருத்தி). அவளுக்குக் கௌஸல்யை எனப் பெயர். அங்கு ஒரு நடனேயும் கூடப் பார்த்தேன். அவன் ரிஷிகளால் வரம் கொடுக்கபட்டவன். மங்களமானவன். இஷ்டரூபம் தரிக்க வல்லவனும் கூட. மூவுலகிலும் எப்போதும் ஒரே மாதிரி ப்ரியத்துடன் அனுபவிக்கத் தக்கவன். குற்றமற்ற வீர! அவன் உத்தர குரு தேசத்துக்கும் காலாம்ர த்வீபத்துக்கும், பத்ர, அஸ்வ, கேதுமாலா,

இன்னும் மற்றவைகளுக்கும் செல்கிறன். அவன் தேவ கந்தர்வ கானங்களையும் பலவித ந்ருத்யங்களையும் அறிகிறன். எல்லா விதத்திலும் தேவர்களையும் வியப்பிக்கிறன்.

வஜ்ரநாபன் சொன்னன்: ஹம்ஸீ! மஹாத்மாக்களாகிய ஸித்த சாரணர் சமயத்தில் விஸ்தாரமாக (நடனைக்) குறித்துச் சொன்னது என்னுலும் கேட்கப்பட்டது. பக்ஷிஸ்ரேஷ்டையே! எல்லா விதத்திலும் வரம் பெற்ற நடன் விஷயத்தில் எனக்கு மிக்க உத்ஸாஹம் இருக்கிறது. (எனது) பெரும் புகழ் நடன் வரையில்லை. ஹம்ஸீ சொன்னள்: மஹா அஸுரா! அந்த நடன் ஏழு த்வீபங்களில் ஸஞ்சரிக்கிறன். குணவான்களான ஜனங்களைக் கேட்டு எல்லாப் படியாலும் அவர்களுக்கு நல்ல காரியங்களைச் செய்பவன். வீர! மஹா அஸுரா! உன்னிடம் உண்டான நல்ல குணங்களைக் கேட்டானுயின் அப்போது அவன் உனது நகருக்கு வந்தவனுகத் தெரிந்து கொள்.

வஜ்ரநாபன் சொன்னன்: சுபே! பக்ஷிஸ்ரேஷ்டையே! ஹம்ஸீ! அந்த நடன் என்னிடம் வருமாறு உபாயம் செய்யபடட்டும். உனக்கு மங்களம். வஜ்ரநாபனுல் தன் கார்யார்த்தமாக அனுப்பப்பட்ட அந்த ஹம்ஸங்கள் அந்த எல்லா விஷயத்தையும் தேவேந்த்ரனுக்கும். க்ருஷ்ணனுக்கும் தெரிவித்தன. க்ருஷ்ணனுல் அந்தக் கார்யத்தில் ப்ரத்யும்னன் சேர்க்கப்பட்டான். ப்ராபாவதியுடன் சேர்வதிலும் அப்படியே வஜ்ரநாபன் வதத்திலும் சேர்க்கப்பட்டான்.

பாரத! ஜனமேஜயா! ஹரி க்ருஷ்ணன் தெய்வீக மாயையைக் கொண்டு ப்ரத்யும்னனை நடனுகச் செய்து பீம குலத்தவர்களை நடவேஷத்துடன அனுப்பினுன். ப்ரத்யும்னன் நடத்தலைவனுகவும், சாம்பனை விதூஷகனுவும், கதனை பக்க பாடகனுகவும் அப்படியே மாறுவேடத்தில் மற்ற பீம குலத்தவர்களையும் அனுப்பினுன். பணிப்பெண்களை அந்த நாட்ய வாத்யங்களுக்கு தக்க நடிகைளாகவும் அப்படியே பத்ரனையும், பத்ரனுக்கு அத்தகைய ஸஹாய நடர்களையும் அனுப்பினுன். அந்த மஹாரதர்கள் ப்ரத்யும்னனுக்கான விமானத்தில் ஏறி அளவற்ற தேஜஸ்விகளாய் தேவகார்யத்துக்காகச் சென்றனர். ஒவ்வொருவருக்கும் ரூப ஸமமான பல புருஷர்களும், தம் ரூபங்களால் பெண்களுக்கு ஸமமானவர்களும் ஆக அந்த எல்லா நர ச்ரேஷ்டர்களும் செய்யப்பட்டனர். அவர்கள், பிறகு அஸுரர்கள் நிறைந்த 'ஸுபுரம்' எனும் பெயருடைய வஜ்ரபுரத்தின் கீழே நகரமான உத்தம நகரை அடைந்தனர்.

அத்யாயம் 92 முற்றும்.

## அத்யாயம் 93

### நடர்களுக்கு வரவேற்பு-அவர்கள் திறமை காட்டிப் பாராட்டும், பரிசும் பெறுதல்-தோழி ஹம்ஸி ப்ராபாவதியிடம் ப்ரத்யும்னன் சந்திப்பைப் பற்றிக் கூறுதல்-ப்ரத்யும்னன் வண்டாக மாறிப் பூமாலையில் மறைந்து கொள்ளல்-ப்ரபாவதியின் சந்த்ரோபாலம்பணம்

வைசம்பாயனர் சொன்னர்: பிறகு ஸுபுரவாஸிகளான அஸுரர்களுக்கு வஜ்ரநாபராஜன் "வந்த நடர்களுக்குச் சிறந்த இருப்பிடம் கொடுக்கப்படட்டும் எனக் கட்டளேயிட்டான். அவர்களுக்கு அதிதி பூஜை செய்யப்படட்டும் வெகு ரத்னங்களும் விசித்ர ஆடைகளும் காணிக்கையாக கொடுக்கப்படட்டும். இவையெல்லாம் ஜனங்களுக்கு த்ருப்திகரமாகவும் ஸுகமாகவும் அளிக்கப்படட்டும்". தலேவன் கட்டளேப்படி அப்படியே எல்லாப்படியாலும் செய்தனர். முன் கேட்கப்பட்ட நடன் வந்தான். உத்ஸாஹத்தை விளேவித்தான். பின்பு அஸுரர்கள் நடனுக்கு மிக்க மகிழ்ச்சியுடன் ஸத்காரம் செய்தனர். பிறகு மேன்மேலும் ரத்னங்களேயும் பிறவற்றையும் மிக அதிகமாக கொடுத்தனர். பிறகு அந்த வரம் பெற்ற நடன் அப்படி நடித்தான். ஸுபுர நகரில் உள்ள ஜனங்களுக்கு மேலான மகிழ்ச்சியைக் கொடுத்தான். ராக்ஷஸராஜன் ராவணன் வதத்தில் இச்சையால் அளவிட முடியாப் பெருமை வாய்ந்த விஷ்ணுவின் ஜன்ம கதையாகிற இராமாயண மஹாகாவ்யம் நடிக்கப்பட்டது.

பாபமற்றவனே! ஜனமேஜயா! ரோமபாதர், தசரதர், ரிஷ்யஸ்ருங்க மஹாமுனி இவர்களேயும் பணிப்பெண்களுடன் கூடிய சாந்தையையும் எல்லோரையும் வரவழைத்தான். பாரத! ராம, லக்ஷ்மண, சத்ருக்னன், பரதனும் ரிஷ்யஸ்ருங்கர் சாந்தையையும் அந்த ரூபம் கொண்ட நடர்களால் வேஷம் தரிக்கப்பட்டது அச்சுதா! ஜனமேஜயராஜனே! அந்த ராமன் காலத்தில் ஜீவித்திருந்த வ்ருத்த அஸுரர் ஆச்சர்யமடைந்து ரூப ஸாம்யத்தை மற்றவர்களுக்கு சொன்னர்கள். அவர்களின் வேஷம், அபிநயம், நடிக்கும் திறனேயும் நடன ஆரம்பத்தையும் பார்த்து எல்லா அஸுரர்களும் ஆச்சர்யமடைந்தனர். அந்த அஸுரர் நாட்ய விஷயத்தில் ஈடுபட்டவர்களாய் மிகுந்த ஸந்தோஷத்தால் அடிக்கடி எழுந்தெழுந்து கோஷித்தனர். மகிழ்ந்து வஸ்த்ரங்கள், மஹோஹர ஸ்வர்ண வைடூர்ய மாலேகள் இவைகளே பரிசளித்தனர். மற்ற ஜனங்களால் தனித்தனிப் பொருள்கள் கொடுக்கப்பட்டும் அந்த நடர்கள் அஸுரர்களேயும், முனிவர்களேயும்

கோத்ரங்களையும் முன்னோர்களையும் துதித்து நன்றி கூறினர். ஜனமேஜயராஜனே! கிளை நகர வாஸிகளால் திவ்ய ரூபமுடைய நடர்களின் வரவு வஜ்ரநாபனுக்குத் தெரிவிக்கப்பட்டது. பாரத! முன்னரே நடர் விஷயம் கேட்ட அஸுர ராஜன் ஸந்தோஷமடைந்து, 'இந்த நடன் வஜ்ரபுரத்துக்கு அழைத்து வரப்படட்டும்' என்று ஆள் அனுப்பினான். அஸுர ராஜன் வார்த்தை கேட்டு கிளை நகர வாஸிகளால் நடவேஷங் கொண்ட யாதவர்கள் வஜ்ரபுரத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

பிறகு விஸ்வகர்மாவால் நன்கு அமைக்கப்பட்ட நல்ல இருப்பிடமும் கொடுக்கப்பட்டது. மேலும் விரும்பிய எல்லாம் நூறு மடங்கு அதிகமாகவே கொடுக்கப்பட்டது. பிறகு மஹா அஸுரன் வஜ்ரநாபன் பரமசிவனுக்கு உத்ஸவம் ஏற்பாடு செய்தான். ஸந்தோஷமாக அழகிய படைவீடும் அமைத்தான். பின்பு மஹாபலவான் வஜ்ரநாபன் ஏராளமான ரத்னங்களைக் கொடுத்து நன்கு இளைப்பாறிய நடர்களை நடித்துக் காட்டுவதற்குக் கட்டளையிட்டான். ஜனமேஜயராஜனே! அந்தப்புர ஸ்த்ரீகளைக் கண்ணால் பார்க்கும் படியான மறைவிடத்தில் வைத்து தலைவனான தானும் பந்துக்களுடன் கூட பார்ப்பதற்கு உட்கார்ந்தான். பயங்கர கார்யம் செய்யக்கூடிய பீமகுலத்தவர்களும் அலங்காரம் செய்து கொண்டு நடிக்கும் வேஷம் தரித்து நடிக்க ஆரம்பித்தனர். பிறகு ஜாலர்தாளம், புல்லாங்குழல், ம்ருதங்கம் துந்துபி முதலிய இசைக் கருவிகளையும் வீணை முதலிய தந்தி வாத்யங்களையும் இசைத்தனர். பின்பு மனது, காது இவைகளுக்கு சுகமளிக்கும் தேவ காந்தாரம் எனப்படும் கானம்ருதமான சாலிக்ய இசையை பீமகுல யாதவப் பெண்கள் பாடினர். காந்தாரம் எனும் ராகத் தொகுதியையும், கங்காவதரணம் எனும் விசேஷ ராகத்தையும் இனிய ஆஸாரிதம், விருத்தம் எனும் ராகங்களையும் ஸுஸ்வரத்துடன் பாடினர்.

பாரத! லயம், தாளம், ஸமமாகவுடைய சுபமான கங்காவதரண ராகத்தைக் கேட்டு அஸுரர்கள் எழுந்தெழுந்து ஸந்தோஷப்பட்டனர். கார்யத்திற்காக நடவேஷம் பூண்ட வீரச்செல்வமுடைய ப்ரத்யும்னனும், கதனும், சாம்பனும் பேரி வாத்யம் வாசித்தனர். பேரி வாத்ய முடிவில் ருக்மிணி மகன் ப்ரத்யும்னன் கங்காவதரண ராகத்தில் அமைந்த ச்லோகத்தைச் சிறந்த அபிநயத்துடன் பாடினான். பிறகு ராவண வேஷத்துடன் சூரனும் ரம்பா வேஷத்துடன் மனோவதியும், 'ரம்பாபிஸாரன்' எனும் குபேர ஸம்பந்தமான நாடகத்தை நடத்தினர். ப்ரத்யும்னன் நளகூபரனாகவும், சாம்பன் அவனது விதூஷகனாகவும்

நடித்தனர். யாதவ குமாரர்களால் மாயை உதவி கொண்டு கைலாச பர்வதமும் காட்டப்பட்டது. கோபங்கொண்ட நளகூபரன் துராத்மா ராவணனுக்குச் சாபம் கொடுத்தான். நளகூபனுல் ரம்பையும் ஸமாதானப்படுத்தப்பட்டாள். மஹாத்மா ஸர்வக்ஞனை நாரத முனியின் கீர்த்தியை ப்ரகாசப்படுத்தும் நாடகத்தின் இந்தப் பகுதியில் யதுகுல வீரர்கள் நடித்தனர்.

அதி தேஜஸ்விகளான பீம குலத்தவரின் கால் அசைவாலும் நாட்டியத்தாலும் அப்படியே அபிநயத்தாலும் அஸுர வீரர்கள் ஸந்தோஷித்து ஸ்தோத்திரம் செய்தனர். அந்த அஸுரர்கள் முக்ய ஆடைகளையும் ரத்னங்களையும், ஆபரணங்களையும், வைடூர்யம் ரத்னம் இவை பதித்த பதக்கங்கள் கொண்ட ஹாரங்களையும் கொடுத்தனர். விசித்ர விமானங்கள் ஆகாயத்தில் செல்லும் ரதங்கள், தேவலோக யானைகள் வம்சத்தில் தோன்றிய ஆகாயத்தில் செல்லும் யானைகள், திவ்யமான குளிர்ந்த ரஸமுடைய சந்தனங்கள், வாஸனை மிக்க பெரிய அசுருக்கள், நினைத்த மாத்ரத்தில் எல்லா விருப்பங்களைத் தரவல்ல உதாரமான சிந்தாமணிகள் இவைகளை அந்தந்த ஸமயங்களில் அஸுரர் பரிசளித்தனர். ஜனமேஜயராஜனே! புருஷ ச்ரேஷ்டனே! அஸுர முக்யர்களின் ஸ்த்ரீகள் அப்படியே நிரம்ப ரத்னங்கள் (நன் கொடையால்) தாம் இல்லாதவராயினர்.

பிறகு ப்ரபாவதியின் தோழி ஹம்ஸி ப்ரபாவதிக்குச் சொன்னாள்: "பாபமற்றவளே! பீம யாதவர்களால் ரக்ஷிக்கப்படும் அழகிய த்வாரகைக்குச் சென்றேன். கண் அழகியே! தனிமையில் ப்ரத்யும்னன் என்னால் காணப்பட்டான். அழகிய புன்சிரிப்புடையவளே! அவனிடம் உனது பக்தியும் சொல்லப்பட்டது. தாமரைக்கண்ணியே! மகிழ்ச்சி கொண்ட அவனால் இன்று மாலை ப்ரதோஷ சமயம் உன்னுடன் சந்திப்புக்கு கார்யமும் நிச்சயிக்கப்பட்டது. ஆதலால் அழகிய பின்பாகமுடையவளே! இப்போது உனக்கு ப்ரியமான ஸந்திப்பு உண்டாகும். பீம குலத்துதித்த யாதவர் நமக்கு வேண்டியவரிடம் பொய் பேசமாட்டார்கள்." பின்பு மகிழ்ச்சி கொண்ட ப்ரபாவதி, அந்த ஹம்ஸியை நோக்கி இந்த வார்த்தை சொன்னாள்: "என்னிருப்பிடத்தில் வசிக்கிறவள் நீ. ஸுந்தரீ! இன்று இங்கேயே படுத்துறங்கு. பாமினியே! உன்னுடன் கூடி நான் கேசவன் மகன் ப்ரத்யும்னனை இவ்விடத்தில் பார்க்க விரும்புகிறேன். உன்னுடன் பயமில்லாமல் இருப்பேன்". ஹம்ஸியும் தாமரைக்கண்ணி தோழி ப்ரபாவதியைப் பார்த்து "அப்படியே" என்று சொன்னாள்.

அந்தப் பக்ஷி ப்ராபாவதியுடன் கூடி மாடிக்கு ஏறினாள். ப்ரபாவதி விச்வகர்மாவால் அமைக்கப்பட்ட மாடியின் மேல் பாகத்தில் ப்ரத்யும்னனின் வரவுக்கேற்ற நல்ல ஏற்பாட்டைச் சீக்ரமாகச் செய்தாள். அந்த ஏற்பாடு செய்யப்பட்டதும் வாயுபோல் வேகமாகச் செல்லும் ஹம்ஸி ப்ரபாவதியிடம் உத்தரவு பெற்று ப்ரத்யும்னனை அழைத்து வரச் சென்றாள். அழகிய புன்சிரிப்புடைய ஹம்ஸி சென்று நடவேஷம் கொண்ட ப்ரத்யும்னனிடம் சொன்னாள் : "பகவானே! அந்த சமயம் இன்றிரவு இருக்கிறது. காமன் ப்ரத்யும்னன் அவளிடம் "அப்படியே" என்று சொன்னான். பிறகு அந்தப் பறவை திரும்பிச் சென்றது. பின்பு திரும்பி வந்த அந்த ஹம்ஸி ப்ரபாவதியிடம் சொன்னாள். "நீண்ட கண்களையுடையவளே! இந்த ருக்மிணி மகன் ப்ரத்யும்னன் வருகிறான். அமைதியாயிரு". சத்ருவைத் துன்புறுத்தும் வீரன் மனவடக்கமுள்ள ப்ரத்யும்னன், வண்டுகள் மொய்க்கும் நறுமணமுடைய பூமாலை எடுத்துச் செல்லப்படுவதைப் பார்த்தான். எல்லாம் அறிந்த புகழ் பெற்ற ப்ரத்யும்னன் அப்போது வண்டாக மாறி ப்ரபாவதிக்காக எடுத்துச் செல்லப்படும் பூமாலையில் மறைந்து கொண்டான். வண்டுகளுடன் கூடிய அந்த மாலை அவளிடத்துக்குச் சேர்க்கப்பட்டது. வண்டுகள் மொய்க்கும் அது ஸ்த்ரீகளால் ப்ரபாவதி அருகில் எடுத்துச் செல்லப்பட்டது.

ஜனமேஜய ராஜனே! ப்ரபாவதி அருகில் மாலை வைக்கப்பட்டது. ப்ரியமானவனே! ஜனமேஜயா! மாலைப்போது வந்ததும் அந்த நிஜ வண்டுகள் (வெளியே) சென்றன. துணை வண்டுகள் நீங்கியதும் அந்த வீரன் பீமகுல திலகன் ப்ரத்யும்னன் ப்ரபாவதியின் காது புஷ்பத்தில் மெதுவாக மறைந்து கொண்டான். பிறகு அந்த சொல்வோரில் சிறந்த அந்த ப்ரபாவதி அதி மனோஹரமான பூர்ண சந்த்ரனைப் பார்த்து ஹம்ஸியிடம் சொன்னாள் : "ஸகீ! தோழி எனது அங்கங்கள் தஹிக்கின்றன. முகமும் மிக வாடுகிறது. ஹ்ருதயமோ எதிர்பார்த்து வருந்துகிறது. மருந்தில்லாத என்ன வ்யாதி இது? இந்தப் பூர்ண சந்திரன் புதிதாக உதிக்கிறான். ப்ரியமானவன், குளிர்ந்த கிரணங்கள் கொண்டவன், எதிர்பார்த்து வருந்துவதை இரண்டு மடங்காக்குகிறான். சேர்க்கையை அபஹரிக்கிறான். என்னால் முன் பார்க்கப்படாதவன். கேட்ட மாத்ரமே விரும்பப்பட்டவன். அங்கங்களிலிருந்து தீப்புகை கிளம்புகிறது. என்ன ஸ்த்ரீ ஸ்வபாவம்! சீ ! சீ ! இதைச் சுடு. என் புத்தியால் இப்படி கற்பனை செய்கிறேன். எனது ப்ரியன் ப்ரத்யும்னன் வரானேயாகில் அவனுக்கே யான். நான் குமுதவதி (மணமின்றி மரணமடைந்தபடி) சென்ற வழியை நானும் அடைவேன்.

அவனேயே மனதில் கொண்ட நான் மன்மத ஸர்ப்பத்தால் கடிக்கப்பட்டுள்ளேன். ஹா! ஹா! இயற்கையாகவே குளிர்ந்த குணமுடைய ஜகத்தை மகிழச் செய்யும் சுகமான சந்த்ர கிரணங்கள் என் தேஹத்தைத் தஹிக்கின்றன. இயற்கையில் குளிர்ந்த நாஞவித பூமணங்கொண்ட வாயு இப்போது எனது அழகிய தேஹத்தைக் காட்டுத் தீப்போல் எரிக்கிறது. எனது (வீண்) எண்ணத்தால் பரிபவம் அடைந்த சக்தியற்ற மனது நிலேத்திருப்பதில்லே. ஆகையால் அதைத் திடப்படுத்திகொள்ள சங்கல்பித்துக் கொள்வேன். மனேதைர்யமற்றிருக்கிறேன். மோஹமடைகிறேன். எனது ஹ்ருதயத்தில் பெரிய நடுக்கம். எனது கண்கள் சுழலுகின்றன. ஹா! நான் நிச்சயம் மரணமடைவேன்.

அத்யாயம் 93 முற்றும்.



## அத்யாயம் 94

### ப்ரத்யும்னன் ப்ரபாவதியுடன் இன்புறுதல்-பீம குலயாதவர் தமது கார்யு ஸித்திக்காக நடவேஷத்துடன் வியாபித்தல்-வஜ்ரநாபன் உடன் பிறந்தோன் ஸநஸனின் இரு பெண்கள் சந்த்ரவதி குணவதி-அவர்கள் முறையே யதுகுல கதனேயும் சாம்பனேயும் மணத்தல்

வைசம்பாயனர் சொன்ஞர் : க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னன் "இந்தப் பெண் எல்லாப் படியாலும் என்ஞல் ஆக்ரமிக்கப்பட்டாள்" என்று அறிந்து மன மகிழ்ந்து ஹம்ஸியிடம் இதைச் சொன்ஞன்: வண்டுகளுடன் வண்டாக மாறிப் பூமாலேயில் மறைந்து இங்கு அசுர புத்ரி ப்ரபாவதியையடைந்தவஞக வந்திருக்கும் என்னே அறிந்துகொள். ப்ரபாவதிக்கு இணங்கினவஞக இருக்கிறேன். என்னிடம் இஷ்டப்படியிருக்கலாம். இப்படிச் சொல்லி அழகிய ரூபமுடைய ப்ரத்யும்னன் தன் சுயரூபத்தைக் காட்டிஞன். புத்திமாஞன அவன் சோபையால் அந்த மேல் மாடி ப்ரகாசப்படுத்தப்பட்டது. சந்த்ரனிடம் பிறந்த சோபையும் குறைக்கப்பட்டது. அவனேக் கண்டு ப்ரபாவதிக்குக் காமக்கடல், பூர்ணிமை சந்த்ரோதயத்தின் போது கடல் போல் பொங்கிற்று. தாமரைக் கண்ணி ! ப்ரபாவதி அப்போது வெட்கத்துடன் கீழ் நோக்கிய முகத்தினளாய் சிறிது சிறிது குறுக்குப் பார்வையுடன் நின்ருள். பிறகு அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த அழகிய பெண்ணே கையால் மோவாயைத் தொட்டு மயிர்கூச்செறிந்தவஞய் சொன்ஞன் : "அழகிய முகத்தவளே!

பூர்ணசந்த்ரனொத்த காந்தி கொண்ட முகத்தைக் கீழ் நோக்கி நூற்றுக் கணக்கான மனோரதங்களால் அடையப்பட்ட என்னுடன் சிறிதேனும் பேசுகிறுயில்லே ஏன்? பயந்தவளே! உனது முகக்காந்தியை மறைக்காதே. பயம் விடப்படட்டும். அடிமையான நான் நன்கு அனுக்ரஹிக்கப்படட்டும். பயந்தவளே! (நீ இப்படி இருக்க) இது ஸமயமில்லே. பயத்தை விடு. நான் அஞ்சலி செய்து யாசிக்கிறேன். இச்சமயம் நான் செய்ய வேண்டியதைச் சொல்லு. ரூபத்தால் ஒப்பற்ற நீ பதிவ்ரதை. தேச காலத்துக்குத்தக்க காந்தர்வ விவாஹத்தால் எனக்கு அனுக்ரஹம் செய்.

பிறகு பீம குலத்த வீர ப்ரத்யும்னன் ஆசமனம் செய்து மந்த்ரங்களேச் சொல்லி ரத்னங்களிலிருக்கும் அக்னியில், ஸமயத்தில் ஹோமம் செய்தான். பிறகு மேலான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட அவளது கையை பிடித்து ரத்னத்திலிருக்கும் ஹோமாக்னியை வலம் வந்தான். பிறகு ஜகத்துக்கு ஸுபாஸுப ஸாக்ஷியான அந்தத் தேஜஸ்வி அக்னி பகவான் அச்சுதன் மகன் ப்ரத்யும்னனேக் கௌரவித்து நன்கு ஜ்வலித்தான். யதுகுல வீரன் ப்ரத்யும்னன் விப்ரருக்குத் தக்ஷிணே மனதில் உத்தேசித்து வாசலில் இருக்கும் ஹம்ஸியை நோக்கிச் சொன்னுன்: 'பக்ஷியே! இங்கிருந்து எங்களுக்குக் காவல் புரி'. அந்த ஹம்ஸி வணங்கியது. ப்ரத்யும்னன் வலக் கையால் ப்ரபாவதியைப் பிடித்து உத்தம சயனத்துக்கு அழைத்துச் சென்றுன். ப்ரத்யும்னன் இவளேத் தொடையில் உட்கார வைத்து திரும்பத் திரும்பச் சாந்தப்படுத்தி தன் முகக் காற்றுல் மணம்பெறச் செய்து மெதுவாக கன்னத்தில் முத்தமிட்டான். பிறகு வண்டு போல் ப்ரபாவதியின் முக பத்மத்தைப் பானம் செய்தான்.

இன்ப ஸமர்த்தனுன ப்ரத்யும்னன் முறைப்படி அழகிய பின்பாகமுடைய ப்ரபாவதியை அணேத்துக் கொண்டான். க்ருஷ்ணன் மகன் இன்பச் செயலில் வல்லவன். ப்ரபு ப்ரத்யும்னன் ரஹஸ்யத்தில் ப்ரபாவதியுடன் ரமித்தான். அவளுக்கு ப்ரியமி ல்லாத கார்யம் செய்யவில்லே. அவன் ப்ரபாவதியுடன் ரமித்து வஸித்தான். அருணேதய காலத்தில் ப்ரத்யும்னன் நடர்களிருக்கு மிடம் அடைந்தான். (அவனே அனுப்ப) இஷ்டமில்லாத ப்ரபாவதியால் தான் கஷ்டப்பட்டு அழகிய ரூபமுள்ள அந்த ப்ரியை ப்ரபாவதியையே மனதில் அமைத்துக் கொண்டு இந்த்ர கேசவர் வார்த்தையை எதிர்பார்த்து அந்தப் பீமகுல யாதவர் தமது கார்யத்திற்காக நட வேஷத்துடன் வ்யாபித்தனர். அந்த

மஹாத்மாக்கள் ரஹஸ்யத்தை நன்கு காப்பதில் கருத்துடையவராய் மூவுலக வெற்றியின் குறித்து வஜ்ரநாபனின் முயற்சியை எதிர்பார்த்து இருந்தனர். ஜனமேஜயராஜனே! மூவுலக வெற்றியின் பொருட்டு முயலும் தர்ம வழியில் செல்லும் மஹாத்மாக்களாகிய எல்லா தேவாஸுரர்களுக்கும் கச்ய முனிவரின் ஸத்ர யாகம் வரை அவர்களுள் விரோதமில்லை. புத்திமான்கள் இவ்விதம் ஸமயத்தை எதிர்பார்த்து வசித்திருக்கும்போது எல்லா ப்ராணிகளுக்கும் இனிய வர்ஷா காலம் வந்தது. மனோவேகமுடைய ஹம்ஸங்கள் மஹாத்மாக்களாகிய குமார்களின் செய்தியை இந்தர கேசவர் இருவருக்கும் இரவும் பகலும் தெரிவிக்கின்றன. ஹம்ஸங்களால் நன்கு காக்கப்பட்ட மஹாதேஜஸ்வீ ப்ரத்யும்னன் தனக்கொத்த ரூபமுடைய ப்ரபாவதியுடன் ஒவ்வொரு இரவிலும் ரமித்தான்.

ஜனமேஜய ராஜனே! இந்த்ரன் கட்டளைப்படி வஸிக்கும் அந்த ஹம்ஸங்களால் வஜ்ரபுரம் வ்யாபிக்கப்பட்டது. (முடிவு) காலத்தால் மயக்கப்பட்ட அந்த அசுரர்கள் நடர்களையும் ஹம்சங்களையும் (உண்மையில்) அறியவில்லை. ஜனமேஜய ராஜனே! ஹம்ச கூட்டங்களால் ரக்ஷிக்கப்பட்ட ருக்மிணி புத்ரன் வீர ப்ரத்யும்னன் ப்ரபாவதியின் வீட்டில் பகலிலும் மறைந்திருக்கிறன். குருகுலத்தவனே! நடர்கள் விடுதியில் ப்ரத்யும்னனின், ப்ரதிபிம்பம், மாயையால் காணப்படுகிறது. தேஹப் பகுதியால் இவன் ப்ரபாவதியை ரமித்தான். நட மஹாத்மாக்களின் அடக்கம், வணக்கம், ஒழுக்கம், விளையாட்டு. ஸாமர்த்யம், நடத்தை கல்வித்திறன் இவைகளைப் பார்த்து அசுரர்கள் ஆசைப்படுகின்றனர். அந்த யாதவப் பெண்களின் ரூபம் ஸ்ருங்கார சேஷ்டை, மணம், இனிய பேச்சு, பெருந்தன்மை இவைகளை அசுர ஸ்த்ரீகள் ஆசைப்பட்டனர். வஜ்ரநாபன் உடன் பிறந்தவன் 'ஸநஸன' என்ற பெயர் பெற்றவன்.

ஜனமேஜயராஜனே! அவனுக்கு நல்ல ரூபம் குணங்கள் கூடிய இரு பெண்கள். ஒருத்தி 'சந்த்ரவதி' மற்றவள் 'குணவதி'. அவ்விருவரும் ப்ரபாவதி வீட்டிற்குப் போகிறவரல்லவா?அவர்கள் இன்பத்தில் மூழ்கியிருக்கும் ப்ரபாவதியைப் பார்த்தனர். நம்பிக்கைக்குரிய பதிவ்ரதையான அவளைக் கேட்கவும் செய்தனர். அந்த ப்ரபாவதி சொன்னாள் : 'என்னால் பயிலப்பட்ட வித்தை ஒன்று இருக்கிறது. அது தேவனாயினும் அசுரனாயினும் விரும்பிய கணவனை வசப்படுத்தி உடனே சீக்ரம் அழைத்து வருகிறது. ஸௌபாக்யத்தையும் கொடுக்கிறது.

அத்தகைய நான் புத்திமானான இனிய தேவ புத்ரனுடன் ரமிக்கிறேன். மிகவும் ப்ரியமான எனது ப்ரத்யும்னன் என் பெருமையால் காணப்படட்டும். அவர்கள் ப்ரத்யும்னனின் ரூப யௌவன செல்வத்தைக் கண்டு வியந்தனர். அழகிய புன்சிரிப்புடைய சிறந்த மடந்தை ப்ரபாவதி ஸஹோதரிகளைக் குறித்து மறுபடியும் சமயோசிதமான இந்த வார்த்தையைச் சொன்னாள். தேவர் எப்போதும் தர்மத்தில் ஊன்றியவர். மஹா அசுரர் டம்ப ஒழுக்கமுடையவர். தேவர் தவத்தில் விருப்பமுடையவர். மஹா அசுரர் சுகத்தையே விரும்புவர். தேவர் சத்யத்தில் எப்போதும் நிலை நிற்பவர். மஹா அசுரர்களோ அசத்யத்தில். எங்குத் தர்மம், தவம், சத்யம் இருக்கிறதோ அங்கு வெற்றி நிச்சயம். நான் பதி வித்யையைக் கொடுக்கிறேன். தேவபுத்ரர்கள் வரிக்கப்படட்டும். என் பெருமையால் தகுந்தவர்களை உடனேயே அடைவீர்கள். மகிழ்ந்த ஸஹோதரிகளும் கண்ணழகி ப்ரபாவதியைக் குறித்து 'அப்படியே' என்று சொன்னார்கள். பதியைக் கௌரவிக்கும் ப்ரபாவதி அந்தக் கார்யத்தைக் குறித்து ப்ரத்யும்னனைக் கேட்டாள்.

நல்ல ரூபமுடையவரும் போரில் சூரரும் ஆகிய சிறிய தகப்பனார் கதனையும் வீர சாம்பனையும் பற்றிச் சொன்னான். ப்ரபாவதி சொன்னாள் : 'முன்னாள், மிகுந்த சந்தோஷமடைந்த தூர்வாஸ மகரிஷியால் வித்யை, மந்த்ரம், ஸௌபாக்யம் எப்போதும் கன்யையாயிருக்கும் தன்மையும் எனக்குக் கொடுக்கப்பட்டது. தேவர், அசுரர், யக்ஷர் இவர்களுள் எவனை நினைக்கிறாயோ அவன் உனக்குப் பதியாவான்' என்றும் சொன்னார். என்னாலும் இந்த வீரன் (ப்ரத்யும்னன்) விரும்பப்பட்டான். ஆகையால் இந்த வித்யையால் நாயகன் சேர்க்கை (கிட்டும்). பிறகு மகிழ்ந்து அவ்விருவரும் ஸஹோதரி முகமாக அந்த வித்யையை க்ரஹித்துக் கொண்டனர். அந்த மங்களகரமான அவ்விருவரும் வித்யையை பயின்று கதனையும் ஸாம்பனையும் த்யானித்தனர். அந்த பீம குலதிலகர் இருவரும் ப்ரத்யும்னனுடன் நுழைந்தனர். ராஜனே! சத்ருக்களை வெல்லும் வீரர், ஸாதுக்களுக்கு ப்ரியமானவர். அவ்விருவரும் மாயாவி ப்ரத்யும்னனுடன் மாயையால் மறைந்து, காந்தர்வ விவாஹ முறையில் மந்த்ர பூர்வமாக கதன் - சந்த்ரவதியையும், ஸாம்பன்- குணவதியையும் கைப்பிடித்தனர். அப்போது இந்த்ர கேசவர்களின் அனுமதியை எதிர்பார்த்து அந்த யது ச்ரேஷ்டர் அசுர கன்யைகளுடன் ரமித்தனர்.

அத்யாயம் 94 முற்றும்.

## அத்யாயம் 95

## வர்ஷாகால வருணனை-சந்த்ர வம்சத்தில் க்ருஷ்ணன் அவதரித்தல்-அவனுக்கு மாட்டுப் பெண்ணுக (மருமகளாக) ப்ரபாவதி ஆகிய பெருமையைப் ப்ரத்யும்னன் கூறுதல்

வைசம்பாயனர் சொன்னர் :- வர்ஷா காலத்தில் மேகக் கூட்டங்கள் நிறைந்த ஆகாயத்தைப் பார்த்து அப்போது பூர்ண சந்த்ரன் போன்ற முகமுடைய ப்ரத்யும்னன் அழகிய நீண்ட கண்களுடைய ப்ரபாவதியிடம் சொன்னன்: அழகிய நெருங்கின தொடையுடையவளே! சிறந்த உடலமைப்புள்ளவளே! ஸுந்தரீ! ப்ரபாவதி! அழகிய கிரணங்களுடைய உன்முகம் போன்ற சந்த்ரன் உன் கூந்தல் போன்ற மேகங்களால் காணப்படுகிறதில்லை.

சிறந்த அங்கங்களுடையவளே! அழகிய புருவத்தினளே! மேகத்திலிருக்கும் மின்னல் ஸ்வர்ணபரணம் பூண்ட உன் போல் காணப்படுகிறது. கர்ஜிக்கிற மேகங்களும் உனது முத்து மாலை போன்ற நீர்த்தாரைகளைப் பெய்கின்றன. அழகிய புருவத்தினளே! மேக ப்ரதேசங்களில் கொக்கு வரிசைகள் உனது பல் வரிசைகள் போல் விளங்குகின்றன. ப்ரபாவகத்தால் கலங்கி, மூழ்கின தாமரைகளையுடைய நீர் நிலைகள் சோபையற்றிருக்கின்றன. காற்றுக்கு வசப்பட்டு பின்னப்பட்ட கொக்கு வரிசைகளையுடைய இந்த ஓடும் மேகங்கள் ஒன்றுக்கொன்று கொல்ல முற்பட்டு மோதும், நிர்மலமான வெண்தநதங்களையுடைய காட்டு யானைகள் போல் இருக்கின்றன. உடலழகியே! ப்ரியே! ஆகாசத்துக்கு ஆபரணமாயமைந்த மூவர்ண வானவில்லைப் பார். உனது முகத்திலுள்ள கடைக்கண் போல் செய்யப்பட்டுள்ளது. மேகங்களும் காம ஜனங்களுக்கு மகிழ்ச்சியூட்டுகின்றன.

அழகிய பின்பாகமுடையவளே! கர்ஜிக்கும் மேகங்களைப் பார்த்து மயில்கள் மகிழ்ந்து (தம்) அடர்ந்த தோகைகளை விரித்து இனிய அழகுடன் நடனமாடுகின்றன. மற்ற மயில் கூட்டங்கள் சந்த்ர வெண்மையான மாடிகளில் மிக அழகிய நடன சோபையை ஒரு முஹூர்த்த காலம் கொடுத்து மேல் மாடிகளில் குதித்து விளங்குகின்றன பார். அழகிய தேகமுடைய மயில்கள் மரங்களின் உச்சியில் ஒரு முஹூர்த்த காலம் சூடாமணி போல் அமர்ந்து, பின்னர் கீழ் புது புற்களையுடைய பூமியை அடைகின்றன. மழை தாரைகளிலிருந்து வெளிக்கிளம்பிய சந்தனச் சேற்றின் குளிர்ச்சியுடைய சுகமான காற்று கதம்ப ஸரஜ, அர்ஜுன, புஷ்பங்களிலிருந்து உண்டான மன்மத பந்துவான வாசனையைச்

சுமந்து கொண்டு வீசுகிறது. உடலழகியே! காற்று இன்ப ச்ரமத்து வியர்வையைப் போக்கக் காரணமாகவும் புது (குளிர்) நீரை சுமந்து வர காரணமாகவும் இல்லாமலிருந்தால் வர்ஷா காலம் எனக்கு ப்ரியமாகயிருக்காது. இவ்விதம் ப்ரியர் சேர்க்கையின் இன்ப நுகர் முடிவில் இன்ப ச்ரமத்து வியர்வையைப் போக்கும் நறுமணம் வீசும் காற்றைக் காட்டிலும் உலகில் மேலான இன்பம் வேறில்லை.

உடலழகியே! மஹா நதிகளின் மணல் திட்டுக்கள், தண்ணீரால் மூடப்பட்டதைப் பார்த்து ஹம்ஸங்கள் ஸாரஸ, க்ரௌஞ்ச பறவைகளுடன் கூட மகிழ்ந்து ஸ்ரமம் நீங்கி மானஸரஸ் வாஸத்தில் ஆசை கொண்டன. நீண்ட கண்ணழகீ! ஸாரச சக்ரவாக பறவைகளுடன் ஹம்சங்கள் சென்றதும் நதிகளும் தடாகங்களும் சோபையிழந்தன போல் ப்ரகாசிக்கவில்லை. அந்தச் சிறந்த காலத்தையறிந்த நித்ராதேவி மேலான அழகிய ரூபமுடைய ஸ்ரீதேவியை வணங்கி விஷ்ணுவின். போகத்துக்கே உரிய ஆதிசேஷன் மேல் சயனித்திருக்கும் இந்த்ரன் தம்பி மங்களமான ஜகன்னாதனை அடைந்தாள். தாமரையொத்த விசாலக்கண்ணியே! க்ருஷ்ண பகவான் உறங்கும் போது தாமரை போல் சுத்த வெண்ணிறமுடைய சந்த்ரன் மேகமாகிய வஸ்த்ரத்தால் மறைக்கப்பட்டு க்ருஷ்ணனின் முகச் ஜோதிபோல் காட்டுகிறான். எல்லா ருதுக்களும் க்ருஷ்ணனிடம் அனுக்ரஹம் விரும்பி கதம்ப அர்ஜுன, நிப, கேதக புஷ்பக் கொத்து வரிசைகளையும் வேறு புஷ்ப கொத்துகளையும் க்ருஷ்ணனுக்கு ஸமர்ப்பிக்கின்றன. நிச்சயம் வண்டுகளால் பானம் செய்யப்படும் புஷ்பங்களையும், வ்ருக்ஷங்களையும் விஷம் பூசிய வாயுடைய பாம்புகளும் கூட சஞ்சரித்துக் கொண்டு தொடுகின்றன. அவை ஜனங்களுக்கு மிக்க ஆச்சர்யத்தை விளைவிக்கின்றன.

உனது அழகிய முகம், ஸ்தனம், தொடை இவைகளைக் கண்(டு) (நேரில் அனுபவிக்க) ஜலத்தால் ஸ்படிக ஸமானமான மேகக் கூட்டங்கள் கொண்ட ஆகாயம் பெரிய தொட்டியிலிருந்து தண்ணீர் கொட்டுவது போல் விடாது மழை பெய்து கீழே இறங்குகிறது. நீர் கனத்துக் தொங்கும் மேகக் கூட்டங்களை இழுத்துச் செல்லும் காற்று மேகங்களைக் கொண்டு மற்ற மேகங்களைப் போரிடச் செய்கிறது போலும். ஆட்சி செய்யும் சக்ரவர்த்தி வனத்திலுள்ள வீர்யத்தால் மதங்கொண்ட காட்டு யானைகளை தன் யானைகளைக் கொண்டு போரிடச் செய்வது போல் தோன்றிற்று. மேகங்களை விரும்பும் சிறந்த ஸாதக பக்ஷிகளுக்கு

மகிழ்ச்சியளிக்கும் சுத்தமான பூமி ஸ்பர்சமில்லாத காற்றினுல் நறு மணங்கொண்ட மழை ஜலத்தை மேகங்கள் விடுகின்றன. பதினுறு கால்கள் கொண்ட தவளேகள் தம் துணேகளுடன் கூட்டமாகவிருந்து சப்திக்கின்றன. சத்யம், தர்மம் இவை ப்ரியமாகக் கொண்ட ப்ராஹ்மணர் குழு நல்ல சிஷ்யர்களால் சூழப்பட்டுக் கானம் செய்யும் ருக் வேதம் போல் தோன்றிற்று. வர்ஷா காலத்திலுண்டான பெரிய குணம் இது. முன் கேட்கப்படாத மேக கர்ஜனேயால் பயந்த ஸ்த்ரீகளுக்குப் படுக்கை ஸமயமில்லாமலே (ப்ரியர்கள்) ஆலிங்கனம் செய்து கொண்டு மகிழ்ச்சியை வளர்க்கின்றனர். மழை காலத்துக்கு என் பொருட்டு இது ஒரு தோஷம். அழகில் உதாரகுணத்தையும் நல்ல நிறத்தையுமுடைய ஒழுக்கமுள்ளவளே! உன் முகத்தையொத்த சந்த்ரன் நெருங்கிய மேகத்தால் மறைக்கப்பட்டவனுய் காணப்படுவதில்லே (எங்கும் ஒரே இருள்). பயந்தவளே! உலகுக்கு மேலான விளக்காகிய சந்த்ரன் மேகத்துள்ளிருந்து வெளியில் காணப்படும்போது ஜனங்கள் தூர தேசத்திலிருந்து திரும்பி வந்த பந்துக்களேப் போல் பார்த்து மகிழ்கிருர்கள்.

பயந்தவளே! ப்ரியனே விட்டுப் பிரிந்த பெண்களுக்குப் புலம்புதலுக்கு ஸாக்ஷியான சந்த்ரன் பார்க்கப்படும் போது தூரதேசம் சென்ற பர்த்தாவுடைய ப்ரியைகளுக்குப் பர்த்தாவைப் பார்த்தாற்போல் நேத்ரானந்தகரனுய் ஆகிருன் என்று அறிகிறேன். பர்த்தாவுடன் கூடியவருக்கு ஆனந்தகரனுயும் அவனே விட்டுப் பிரிந்தவருக்கு காட்டுத் தீப் போலவும் சந்த்ரனும் அதே உருவத்துடன் ப்ரியனுகவும் அப்ரியனுகவும் காணப்படுகிருன். உன்னுடைய பிதாவின் நகரில் சந்த்ரனில்லாமலேயே சந்த்ர கிரண வெண் சோபை (ப்ரபாவதியின் சோபை) இருக்கிறது. ஆதலால் சந்த்ரனின் குணுகுணங்களே நான் அறிகிறேனில்லை. அதனுல் அதைப் பற்றிப் பேசுகிறேன். சந்த்ரன் பற்பல புண்யதவத்தால் அடையாத ப்ராஹ்மண ராஜ்யம் (வாழ்ந்து ஹோமங்கள் செய்யும் இடத்தை) அடைந்தான். பர்வகாலத்தில் ப்ராஹ்மணர்கள் பவமான சாம கானத்தால் சோமனே (சந்த்ரனே)த் துதித்துப் பாடுகின்றனர்.

ஸோமன் (சந்த்ரன்) புதனின் பிதா. மேலான வீர்ய கார்யங்கள் புரியும் அரசன் "புரூரவஸ்" என்பான். புதனின் மகன். ப்ராணுக் னியாகத் துதிக்கப்படும் ருத்ர ஸ்வரூபியான சந்த்ரன் மறைந்த அக்னியை அரணிக் கட்டையிலிருந்து பிறப்பித்தான். உடலழகியே! மஹாத்மா சந்த்ரன் முன்னுள் சிறந்த ஊர்வசியை விரும்பினுன். அம்ருதமயமான தேஹமுடைய அவன்

கடுந்தவமுடைய முனி ச்ரேஷ்டர்களால்'அப்படியே' பருகப்பட்டான். மறுபடியும் புத்திமான் அரசன் ஒருவன் குசப்புற்களின் முனைகளால் அக்னியில் யாகம் செய்தான். ஸ்வர்க்கத்தில் கௌரவிக்கப்படுகிறன். அவன் வம்சத்தில் "ஆயுவும், நகுஷனும்" உதித்தனர். அந்த வீர நகுஷனும் தேவேந்த்ர பதவியை அடைந்தான். அந்த சந்த்ர வம்சத்தில் தேவாதி தேவன் ஜகந்நாயகன் பகவான் ஹரி விஷ்ணு இந்த வம்சத்தில் பிறந்தான். தேவகார்ய காரணமாகப் பீமகுல வீரன் க்ருஷ்ணனுகை அவதரித்தான். அழகிய புருவத்தினளே! அந்த சந்த்ரன் தக்ஷனுடைய பெண்களின் பதியாக வரிக்கப்பட்டான். பிறகு இவன் வம்ஸத்தில் சந்த்ர வம்ச விளக்கு மஹாத்மா வஸு எனும் அரசன் உதித்தான். இந்த்ரனையொத்த ப்ரபாவமுள்ள அவன் தன் செயல்களால் சக்ரவர்த்தியானுன். சந்த்ர வம்ச முக்யனுன யது ராஜனும் பூமியில் ராஜாதி ராஜனுகை ஆனுன். அந்த அரசனின் குலத்தில் தேவராஜனையொத்த போஜகுல வீரர்கள் பிறந்தனர். தாமரைக் கண்ணீ! அந்த வம்சத்தில் வஞ்சனை செய்பவன், நாஸ்திகன், சோம்பன், ச்ரத்தையில்லாதவன், இத்தகையவர் எவரும் இல்லை. தாமரையொத்த விசாலக்கண்ணீ! நற்குணகளஞ்சியமான சிறந்த நீ அத்தகைய வம்சத்துக்கு மாட்டுபெண். மல்லிகை மொட்டொத்த பற்களின் முனையுடையவளே! ஸாதுக்களுக்கு ப்ரியனுன அந்த ஈசன் க்ருஷ்ணனுக்கு வணக்கம் செய். தேவீ! ப்ரஹ்மாவுக்குப் பிறப்பிடமான உலகுக்கு ஆதாரமான தேவர்களுக்கும் ஆதாரமான பக்ஷிராஜனைக் கொடியாகக் கொண்ட இத்தகைய உனது மாமனுர் க்ருஷ்ணனுக்கு வணக்கம் செய்.

அத்யாயம் 95 முற்றும்.



## அத்யாயம் 96

### கஸ்யபர் வஜ்ரநாபனுக்குப் புத்திமதி கூறுதல்-ப்ரபாவதி, சந்திரவதி, குணவதி மூவர்க்கும் பிள்ளைப்பேறு- வஜ்ரநாபன் அப்பிள்ளைகளைக் கொல்லச் சூழ்ச்சி செய்தல் மூன்று பத்னிகளும் தம் கணவன்மார் கையில் வாளைக் கொடுத்துப் போரிடச் செய்தல்-கணவன்மார் மூவரும் அப்படியே போரிடல்-ப்ரத்யும்னன் பல அசுரர்களையழித்தல்.

வைசம்பாயனர் சொன்னுர் :- அதிதேஜஸ்வீ கச்யப முனிவரின் ஸத்ர யாக முடிவில் தேவாஸுரர்கள் தங்களிடங்களையடைந்தனர்.

வஜ்ரநாபனும் ஸத்ர யாக முடிவில் மூவுலக வெற்றியை விரும்பி கச்யபரிடம் சென்றான். பிறகு கச்யபர் அவனை நோக்கிச் சொன்னார். "குழந்தாய்! வஜ்ரநாப! நீ அறிந்து கொள்.எனது வார்த்தை கேட்கப்பட வேண்டுமேயானால் தன் ஜனங்களால் சூழப்பட்டு வஜ்ரபுரத்தில் வசி. இந்த்ரன் தவத்தால் மிக மேம்பட்டவன். இயற்கையிலேயும் சக்தி வாய்ந்தவன். ப்ராஹ்மண பக்தன். செய்ந்நன்றியுடையவன். மூத்தவன், நற்குணங்களால் மிகச் சிறந்தவன், உலக முழுதிற்கும் ராஜா, ஸத்பாத்ரம், ஸாதுக்களுக்குப் புகலிடம், உலக ராஜ்யத்தை அடைந்தவன். அவன் எல்லா ப்ராணிகளின் ஹிதத்தில் கருத்துடையவன். வஜ்ரநாப! உன்னால் அவனை ஜயிக்கவே முடியாது. நிச்சயமாகக் கொல்லப்படுவாய். பாம்பைக் காலால் மிதிப்பவன் போல் சீக்ரமே நாசமடைவாய். பாரத! கால பாசத்தால் கட்டப்பட்ட வஜ்நாபனும் அந்த வார்த்தையை ஏற்றுக் கொள்ளவில்லை. இறக்க விரும்புபவன் மருந்தைப் போல் அந்த துர்மதி அணுகமுடியாத வஜ்ரநாபன் லோக பிதா கச்யபரை வணங்கி மூவுலக வெற்றிப் போர் ஆரம்பத்தில் புத்தியைச் செலுத்தினான்.

ஜனமேஜயராஜனே! பந்து வீரர்களையும், மிகப் பல நண்பர்களையும் அழைத்துக் கூட்டி ஜயத்தை விரும்பி முதலில் சுவர்க்கத்துக்குச் சென்றான். இச்சமயம் மஹாபலமுடைய க்ருஷ்ண இந்த்ர தேவர்கள் வஜ்ரநாப வதத்தைப் குறித்து ஹம்ஸங்களை அனுப்பினார்கள். மஹாத்மாக்கள் மஹாபலமுடைய யாதவ முக்யர்கள் ஒன்றுகூடி, ஆலோசித்து, அவ்விதம் (கொல்லும்) வகையில்) புத்தியைச் செலுத்தினார்கள். இப்போது ப்ரத்யும்னனால் வஜ்ரநாபன் கொல்லப்பட வேண்டியவன். ஸந்தேகமில்லை. வஜ்ரநாபன், அவன் தம்பி இவ்விருவரின் பெண்கள், எல்லா விருத்தியுள்ள நல்லெண்ணம் கொண்டவர். நம்மிடம் பக்தி யுடைய பார்யைகள், அவர்கள் எல்லோரும் கர்ப்பிணிகள். ப்ரஸவகாலமும் ஸமீபத்தில் வரக்கூடியதாயிருக்கிறது. பின்னர் என் செய்வது? இந்த விஷயத்தை நன்கு ஆலோசித்து மஹா பலவான்கள் யாதவர்கள் அப்போது எல்லாவற்றையும் இந்த்ர கேசவர்களுக்கு பொருள்பட சொல்ல வேண்டும் எனத் தீர்மானித் தார்கள். ப்ரபோ! ஜனமேஜயா! ஹம்ஸங்களால் சென்று இந்த்ர கேசவ தேவரிருவருக்கும் உள்ளபடி சொல்லப்பட்டது. அவர்களாலும் ஹம்ஸங்கள் (பதில்) சொல்லி அனுப்பப்பட்டன. பயம் வேண்டாம் உங்களுக்கு அழகிய ரூபம், சிறந்த குணங்களுடைய புத்ரர்கள் உண்டாவார்கள். குற்றமற்ற அவர்கள் எல்லா வேதங்களையும் அங்கங்களுடன் கர்ப்பத்திலிருந்தே அறிவார்கள்.

அப்படியே வருங்காலம் கற்கவேண்டிய எல்லாவற்றையும் பலவித அஸ்த்ரங்களையும் அறிவார்கள். உடனேயே யுவாக்களாகவும், நல்ல பண்டிதர்களாகவும் ஆவார்கள். ப்ரபோ! ஜனமேஜயா! இப்படி சொல்லப்பட்ட ஹம்ஸங்கள் மறுபடியும் வஜ்ரபுரம் சென்று இந்த்ர கேசவர் வார்த்தையைப் பீமர்களுக்குச் சொல்லின. அப்போது ப்ரபாவதி பிதாவையொத்த குழந்தையைப் பெற்றாள். உடனே யௌவனம் வந்தடைந்தது. ஸர்வஜ்ஞத்வமும் அடைந்தது.

ஜனமேஜயராஜனே! சந்த்ரவதிதேவி ஒரு மாஸத்திலேயே பிதாவையொத்த சந்த்ர ப்ரபன் எனும் குழந்தையைப் பெற்றாள். பாரத! உடனே யௌவனமும் ஸர்வக்ஞத்வமும் அடையப்பட்டன. குற்றமற்ற குணவதியும் குணவான் எனும் புத்ரனைப் பெற்றாள். பிறகு யுவர்களான இருவரும் உடனே எல்லா சாஸ்த்ரங்களிலும் வல்லவராகவும் போரில் சமர்த்தராகவும் இந்த்ர கேசவ அனுக்ரஹத்தால் ஆனார்கள். வீர ஜனமேஜயா! அந்த யதுகுல திலகர் மூன்று யுவாக்களும் இந்த்ர கேசவர் விருப்பத்தில் மேல் மாடியில் வளர்கிறவராய் காணப்பட்டனர். ஆகாயத்தில் காவல் புரியும் பரபரப்படைந்த அஸுரர்களால் ஸ்வர்க்க வெற்றி விரும்பும் வீர வஜ்ரநாபனுக்கு இந்த மூன்று யுவர்கள் தெரிவிக்கப்பட்டனர். அஸுரபதி மஹா அஸுரன் வஜ்ரநாபன் "என் வீட்டைக் கேவலப்படுத்தும் இவர்கள் மூவரும் நான் கொல்லும் பொருட்டு கொண்டு வரப்படட்டும்" என்று சொன்னான்.

குருகுலத்தை விளங்கச் செய்பவனே! ஜனமேஜயா! பிறகு புத்திமானான அசுர ச்ரேஷ்டனால் ஸேனை த்வரையாகக் கட்டளையிடப்பட்டது. எல்லா திசைகளிலும் ஸேனை சூழ்ந்து கொண்டது. பிடிக்கப்படட்டும் சீக்ரம் கொல்லப்படட்டும் எனும் வார்த்தைகளை ஆங்காங்கு சத்ருக்களைப்பற்றியும் அஸுரேந்த்ரன் வஜ்ரநாபன் கட்டளையால் கூறினர். அதைக் கேட்டு துக்கமடைந்த அந்த மூன்று யுவர்களின் தாய்மார்கள் புத்ரரிடம் அன்பால் அழுதனர். ப்ரத்யும்னன் அழுகிற அவர்களை நோக்கிச் சிரித்துக் கொண்டு சொன்னான் :- நாங்கள் உயிரோடிருக்கும் போது எவ்விதத்திலும் பயப்பட வேண்டாம். அஸுரர்கள் எங்களை என்ன செய்ய முடியும்? எல்லா விதத்தாலும் உங்களுக்கு மங்களம் உண்டாகுக! பிறகு ப்ரத்யும்னன் கலங்கியிருக்கும் ப்ரபாவதியை நோக்கிச் சொன்னான். உன் பிதா கதைக் கையனாய் இருக்கிறார். உன் சிறு தகப்பன்மாரும் அப்படியேயிருக்கின்றனர். தேவீ! உன்னுடைய சஹோதரர் பந்துக்கள் எல்லோரும் அப்படியே!

உன் பொருட்டு இந்த எல்லோரும் எல்லாவிதத்திலும் எங்களால் பூஜிக்கவும் கௌரவிக்கவும் தக்கவரல்லவா! சஹோதரிகளே வினவு. உனக்கு மங்களம். இந்த சமயம் மிகக் கொடியதல்லவா? (எதிர் நோக்கி வரும்) மரணத்தைப் பொருட்படுத்தாமல் போர் புரிவோருக்கு வெற்றி நிச்சயம். இந்த அசுர ச்ரேஷ்டர் முதலியோர் எங்களைக் கொல்ல விரும்பி போர் புரிவர். (தேர்ச்) சக்கரங்களின் இடையில் அகப்பட்டிருக்கும் எங்களால் என்ன செய்யத் தக்கது.

ப்ரபாவதி அழுது கொண்டு தலையில் கை கூப்பி, முழங்கால் தாழ்த்தி வணங்கி ப்ரத்யும்னனை நோக்கிச் சொன்னாள் :- யது ச்ரேஷ்டனே! சத்ருவை அடக்குபவனே! ஆயுதத்தையெடு, தன்னைக் காத்துக் கொள். உயிருடனிருந்து புத்ரர்களையும் மனைவியையும் காண்பாய். சத்ருவை அடக்குபவனே! நரச்ரேஷ்டனே! பூஜ்யையான ருக்மிணி தேவியையும் அநிருத்தனையும் நினைத்து இந்தக் துக்கத்திலிருந்து விடுவித்துக் கொள். (போரிட்டு வெற்றி தேடு) புத்திமான் துர்வாஸ முனிவரால் வைதவ்யமில்லாமல் ஜீவ புத்ரையாய் மகிழ்ந்திருப்பாய் என்று எனக்கு வரம் கொடுக்கப்பட்டுள்ளது. உபேந்த்ரன் புத்ரனே! சூர்ய அக்னி இவையொத்த தேஜஸ்ஸுடைய முனிவரின் அந்த வார்த்தை வேறாக ஆகாது. மனோதைர்யமுடைய ச்ரேஷ்டையான ப்ரபாவதி சிறந்த வாளை நல்ல ப்ரார்த்தனையுடன் எடுத்து 'வெற்றி பெறுவாயாக' என ப்ரத்யும்னனிடம் கொடுத்தாள். பக்தியுடன் கூடிய பார்யையினால் தலையால் வணங்கிக் கொடுத்த அந்த வாளை அந்த தர்மாத்மா ப்ரத்யும்னன் மகிழ்ந்த மனதுடன் எடுத்துக் கொண்டான். சந்த்ரவதியும் பர்த்தா கதனுக்கு மகிழ்ச்சியுடன் வாளைக் கொடுத்தாள். குணவதியும் மஹாத்மா சாம்பனுக்கு அப்போது வாளைக் கொடுத்தாள்.

ப்ரபு ப்ரத்யும்னன் தன்னை வணங்கின ஹம்ஸ கேதுவினிடம் பிறகு சொன்னான் :- இங்கேயே சாம்பனுடனும் யாதவர்களுடனும் கூடி யுத்தம் செய். சத்ருவை அடக்குகிறவனே! நான் ஆகாயத்தில் எல்லாத் திக்குகளிலும் போர் புரிவேன் என்று சொல்லி மாயாவிகளில் சிறந்த ப்ரத்யும்னன் மாயையால் தேர் அமைத்தான். குருகுலத்தவனே! மஹாத்மா ப்ரத்யும்னன் ஆயிரம் தலையுடைய எல்லா ஸர்ப்ப ச்ரேஷ்டங்களிலும் சிறந்த மிக மிகப் பெரிய விரித்த படங்கள் கூடிய ஆதிசேஷனைத் தேரோட்டியாகக் கொண்டு ப்ரபாவதியை சந்தோஷிப்பித்து, அந்த மேலான ரதத்திலேறி அசுர சேனைகளில் வைக்கோலில் நெருப்பு போல் சஞ்சரித்தான். பாம்பு விஷமுடைய அர்த்த சந்த்ரன் போன்ற பிளப்பதும் அடிப்பதுமான பாணங்களால் அசுரர்களைத்

துன்புறுத்தினான். அசுரர்களும் மேலான உறுதி கொண்டு போரில் வெறியுடன் தாமரைக் கண்ணன் ப்ரத்யும்னனை இங்குமங்கும் பாணங்களால் அடித்தனர். ப்ரத்யும்னன் சில அசுரரின் ஆபரணம் பூண்ட கைகளைத் துண்டித்தான். சிலரின் குண்டலங்கள் கொண்ட தலைகளையும் துண்டித்தான். மிக்க தேஜஸ்வீ ப்ரத்யும்னனால் வாள்களை கொண்டு துண்டிக்கப்பட்ட அசுரரின் தலைகளாலும் பல்வேறு உடல்களாலும் பூமி நிறைந்தது. தேவ கணங்களுடன் போரில் வெற்றி பெறும் தேவேந்த்ரன், பீம யாதவர்கள் அசுரர்களோடு போரிடுதலைக் களிப்புடன் கண்டான். அந்த கதனையும், சாம்பனையும் நோக்கி (போர் புரிய) ஓடின எல்லா அசுரரும் சமுத்ரத்தில் ஜல ஜந்துக்கள் போல் நசித்தனர். தேவராஜன் இந்த்ரன் அப்போது அசாதாரணப் போரைக் கண்டு தன் தேரைக் கதனுக்கனுப்பினான். நல்ல வர்ச்சஸாயுடைய (தன் தேரோட்டி) மாதலி புத்ரனைத் தேரோட்டியாகவும் நியமித்தான். சாம்பனுக்கு (தன்) ஐராவத யானையை அனுப்பினான்.

இந்த்ரன் ப்ரத்யும்னனுக்கு ஜயந்தனை உதவியாக அளித்தான். ஐராவதத்தைச் செலுத்த ப்ரவரனை நியமித்தான். சிறந்த கார்யங்களில் முறையறிந்த இந்த்ரன் அளவிட முடியா, பராக்ரமமுடைய வீரரான தேவகுமாரன் ஜயந்தன் விப்ரனாகிய ப்ரவரனையும், மாதலி மகன், ஐராவத யானை இவர்களை, லோக ச்ருஷ்டி கர்த்தா ப்ரஹ்மாவின் அனுமதி கொண்டு அப்போது அனுப்பி வைத்தான். இந்தத் துர்மதி யாதவர்களால் கொல்லத் தக்கவன். தவம் நசித்தது என்று எல்லா ப்ராணிகளும் எல்லா விடத்திலும் இஷ்டப்படி சொல்கின்றன. மஹாபலர் ப்ரத்யும்னனும் ஜயந்தனும் மாடியை அடைந்து பராக்ரமத்துடன் சரக் கூட்டங்களால் அசுரர்களை அழித்தனர்.

அப்போது தடுக்க முடியாத போரில், வெல்ல முடியாத ப்ரத்யும்னன், கதனை நோக்கிச் சொன்னான்:- க்ருஷ்ணன் தம்பீ! இந்தத் தேர் உனக்கு இந்த்ரனால் அனுப்பப்பட்டுள்ளது. இந்த்ரன் சாரதி மாதலி மகனை மஹாபலவான் இவன் உன் தேரோட்டி. ப்ரவரனால் செலுத்தப்பட்ட ஐராவத யானையும் சாம்பனுக்கு அனுப்பப்பட்டுள்ளது. த்வாரகையில் இன்று ருத்ரனுக்குப் பூஜை. அச்சுதன் தம்பீ! அது நடந்ததும் மஹாபலன் ஹ்ருஷீகேசன் நாளை வருவான். அவன் கட்டளையால் சுவர்கக லோக வெற்றியைக் குறித்துப் புறப்பாடு செய்த பாபி வஜ்ரநாபனைப் பந்துக்களுடன் வதம் செய்வோம். உபாயம் செய்வேன். இவன் புத்ரனுடன் கூடிய இந்த்ரனை ஜயிக்கப் போவதில்லை. ஜாக்ரதை

செய்யத் தக்கது என்பது எனது அபிப்ராயம். அறிவாளிகளான மனிதரால் எல்லா உபாயங்களாலும் ரக்ஷிக்கப்பட வேண்டிய ஸ்தானம் காக்கத் தக்கது. உலகில் தன் க்ஷேத்ரத்தைக் கேவலப்படுத்துவது மரணத்தைக் காட்டிலும் கொடியது. மஹாபலன் ப்ரத்யும்னன், கதன், சாம்பன் இருவருக்கும் இவ்விதம் சொல்லித் திவ்யரூபம் தோற்றுவிக்கும் மாயையால் கோடி ப்ரத்யும்னனைத் தோற்றுவித்தான். அசுரரால் பிறப்பிக்கப்பட்ட அணுக முடியாத இருளையழித்தான். சத்ருக்களை அழிக்கவல்ல அந்த ப்ரத்யும்னனைப் பார்த்துத் தேவராஜன் இந்த்ரன் சந்தோஷப்பட்டான். எல்லா ப்ராணிகளும் எல்லா சத்ருக்களிடத்தும் ப்ரத்யும்னனைப் பார்த்தனர். (ப்ராணிகளின்) அந்தராத்மாவில் இருக்கும் க்ஷேத்ரக்ஞனைப் போல் அவனை அறிந்தனர். இவ்விதம் போர் புரியும் ப்ரத்யும்னனுக்கு இரவு கழிந்தது. மிகத் தேஜஸ்வி ப்ரத்யும்னனால் அசுரர்களின் மூன்றில் ஒரு பங்கு அழிக்கப்பட்டது. ப்ரத்யும்னன் போர்க் களத்தில் அசுரருடன் போர் முடித்ததும் ஜயந்தனால் கங்கா தீர்த்தத்தில் ஸந்த்யோபாசனம் செய்யப்பட்டது. மஹாபலன் ஜயந்தன் போர் முடிந்ததும், ப்ரத்யும்னன் ஆகாய கங்கை ஜலத்தில் ஸந்த்யோபாஸனம் செய்தான்.

அத்யாயம் 96 முற்றும்.



## அத்யாயம் 97

வஜ்ரநாபனுடன் ப்ரதயும்னன் கடும்போர் புரிதல் இருவரும் மயக்கமடைதல்-பின் சக்ராயுதத்தால் ப்ரத்யும்னன் வஜ்ரநாபனைக் கொல்லுதல்-கதன், சாம்பன் இருவரும் அசுரர்களையழித்தல்-சுநாபன் மரணம் வஜ்ரநாபனின் ராஜ்யம் நான்கு பங்காக்கப்படல்-பின் அனைவரும் த்வாரகையடைதல்.

வைசம்பாயனர் சொன்னார் :- பிறகு உலகுக்கெல்லாம் நேத்ரமான சூர்யன் உதித்து ஒரு முஹூர்த்தமானதும் தேவன் க்ருஷ்ண பகவான் ஸர்ப்ப சத்ரு கருடனோடு வந்து சேர்ந்தார். குருகுலத்தவனே! ஜனமேஜயா! ஹம்ஸம், வாயு, மனது இவைகளைக் காட்டிலும் வெகு வேகமாகச் செல்லும் கருடன் ஆகாயத்தில் இந்த்ரன் பக்கல் நின்றான். ஹரி, க்ருஷ்ணன், இந்த்ரன் அருகில் முறைப்படி கூடி அசுரர்களுக்குப் பயத்தை வளர்க்கும் பாஞ்ஜசன்யத்தைச் சப்தித்தான். அந்தச் சப்தத்தைக் கேட்டு

சத்ரு வீரர்களையழிக்கும் ப்ரத்யும்னன் அங்கு வந்தான். கேசவனுல் 'வஜ்ரநாபனைக் கொல் சீக்ரம்' என்று சொல்லப்பட்டான். மறுபடியும், கருடன் மேல் ஏறிச் செல் 'எனச் சொல்லப்பட்டான். அந்த வீர ப்ரத்யும்னன் ஸுரச்ரேஷ்டர்களான இந்த்ர கேசவரை வணங்கி அப்படியே செய்தான்.

பாரத! வீர! ஜனமேஜயராஜனே! அவன் மனே வேகங்கொண்ட கருடன் மேல் மஹா த்வந்த யுத்தம் செய்யும் வஜ்ரநாபன் பக்கல் சென்றுன். இது எதிரிக்கெதிர் அணித்து நின்று செய்வது. பிறகு எல்லா அஸ்த்ரங்களையும் அறிந்த குற்றமற்ற வீரன் ப்ரத்யும்னன் கருடன் மேலேறி போர்க்களத்தில் உறுதியாக நின்ற வஜ்ரநாபனுக்குத் தொல்லை கொடுத்தான். கருடன் மேலுள்ள மஹாத்மா க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னனுல் வீர வஜ்ரநாபன் மார்பில் கதை சொண்டடிக் கப்பட்டான். அவனுல் அடிக்கப்பட்ட அசுர வீரன் மயக்கமடைந்து அதிகமாக ரத்தத்தைக் கக்கினுன். உயிரிழந்தவன் போல் சுழன்றுன்.

போரில் வெல்ல முடியாத க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னன், பிறகு 'களைப்பாறிக் கொள்!' என்று வஜ்ரநாபனைக் குறித்துச் சொன்னுன். தெளிவடைந்த அந்த வீர வஜ்ரநாபன் ப்ரத்யும்னனைக் குறித்து இந்த வார்த்தை சொன்னுன் : "மஹா பலமுள்ள யாதவ! நல்லது எனது எதிரியான நீ வீர்யத்தால் போற்றத்தக்கவன். இது திருப்பியடிக்கும் சமயம் உறுதியாக நில்". இவ்விதம் சொல்லி நூற்றுக்கணக்கான மேகங்களையொத்த பெரிய இடி முழக்கம் செய்து மணியுடன் பல முட்களுடைய கதையை வீசினுன். ஜனமேஜய ராஜனே! அந்தக் கதையால் நெற்றியில் அடிக்கப்பட்ட ப்ரத்யும்னன் மிகுந்த ரத்தத்தைச் கக்கிக் கொண்டு மயக்கமடைந்தான். சத்ரு நாசகனான க்ருஷ்ணன் அந்த ப்ரத்யும்னனைப் பார்த்து மகனை இளைப்பாற்றும் ஜலத்தில் பிறந்த பாஞ்சஜன்ய சங்கை ஊதினுன். அந்தப் பாஞ்சஜன்ய ஒலியால் இளைப்பாறிய மஹாபலன் ப்ரத்யும்னனைப் பார்த்து உலக மக்கள் மகிழ்ந்தனர். இந்த்ர கேசவர் விசேஷமாக மகிழ்ந்தனர். பாரத! க்ருஷ்ணன் அபிப்ராயத்தால் அசுர குல கூட்டத்தை அழிக்கும் சக்ரம் ப்ரத்யும்னன் கையை அடைந்தது. பாரத! அச்சுதன் மகன் ப்ரத்யும்னன் தேவதேவன் மஹாத்மா க்ருஷ்ணனை வணங்கி வஜ்ரநாபன் அழிவைக் கருதிச் சக்ரத்தை ப்ரயோகித்தான். அப்போது நாராயணன் மகன் ப்ரத்யும்னனுல் விடப்பட்ட அந்தச் சக்ரம் அசுரர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த வஜ்ரநாபன் உடலிலிருந்து தலையை அறுத்தது. கதன் தன்னை மாடிமேல்

போர்க்களத்தில் கொல்ல முயற்சி செய்யும் போர் மதங்கொண்ட பயங்கர ஸூநாபனைக் கொன்றான். சத்ருவைத் துன்புறுத்தும் சாம்பன் போர்கள் நடுவிலிருக்கும் அசுரர்களைக் கூரிய பாணங்களால் யம லோகத்துக்கு அனுப்பினான். மஹாஸுர வீர வஜ்ரநாபன் கொல்லப்பட்டதும், வீர நிகும்பனும் நாராயணனிடம் பிடிக்கப்பட்டவனாய் ஷட்புரத்துக்குச் சென்றான். அப்போது தேவ சத்ரு மஹா அசுர வஜ்ரநாபன் கொல்லப்பட்டதும், இந்த்ர கேசவ மஹாத்மாக்கள் வஜ்ரபுரத்தில் இறங்கினார். தேவ ச்ரேஷ்டர் பயத்தால் நடுங்கும் பால வ்ருத்தர்களை சமாதானப்படுத்தினார். துக்கத்தையும் அடக்கினார்.

ஜனமேஜய ராஜனே! ப்ரஹஸ்பதி கொள்கையைப் பின்பற்றும் மஹாத்மாக்கள் மஹாபலர் இந்த்ர கேசவர் அப்போதைய நிலைமையையும், வருங்கால நிலைமையையும் ஆலோசித்து வஜ்ரநாபனின் அந்த ராஜ்யத்தை நான்காகப் பிரித்தனர். ஜயந்தனின் மகன் விஜயனுக்கு அதை நான்கில் ஒரு பங்கு, ருக்மிணி மகன் ப்ரத்யும்னன் மகனுக்கு ஒரு பங்கு, கதன் மகன் சந்த்ர ப்ரபனுக்கு ஒரு பங்கு, சாம்பன் மகன் குணவானுக்கு ஒரு பங்கு. ஜனமேஜயராஜனே! ஆயிரக்கணக்கான கிளை நகரங்கள் பரந்த இடம் வஜ்ரபுரத்துக்கு ஒப்பானது. அவை நாலு கோடி கிராமங்களுக்கு அதிகமானவை. அந்த இடத்தை மிக மகிழ்ந்த இந்த்ர கேசவர் நான்கு பாகங்களாகச் செய்தனர். வீர! ஜனமேஜயா! இந்த்ர கேசவ வீரர்கள் கம்பிளிகள், வஸ்த்ரங்கள், மான் தோல்கள் பல வகை ரத்னங்கள் இவைகளையும் நான்காகப் பிரித்தனர்.

ராஜனே! பிறகு அந்த வீரராஜாக்கள் இந்த்ரன் கட்டளையால் கங்கா ஜலத்தால் தேவ துந்துபி வாத்யம் முழங்க அபிஷேகம் பண்ணப்பட்டனர். மஹாத்மாக்களான இந்த்ரன் வம்சத்தினர் குணத்தாலும், தாய் குணத்தாலும், புத்திமான் விஜயனுக்கு ஆகாச கமனம் ப்ரசித்தமாயிருந்தது. இந்த்ர பகவான் அபிஷேகம் செய்து ஜயந்தனை நோக்கிச் சொன்னான் : "வீர! போரில் வெற்றி பெற்ற இந்த அரசர்கள், உன்னால் ரக்ஷிக்கத்தக்கவர்கள். பாபமற்றவனே! இங்கு எனக்கு வம்சத்தை வளர்ப்பவன் ஒருவன், கேசவனுக்கு மூவர். என் கட்டளையால் எல்லா ப்ராணிகளாலும் கொல்லப்படாதவர்களாய் இருப்பர். ஆகாயத்திலும் (இவர்களுக்கு) போக்கு வரவு சாத்யமாகும். ஸ்வர்க்கத்துக்கும் பீமர்களால் ரக்ஷிக்கப்படும் த்வாரகைக்கும் போகவர சாத்யம். திக்கஜ புத்ரர்களாகிய யானைகளையும் உச்சைச்ரவஸ்ஸின் வம்சக்

குதிரைகளேயும், விசுவகர்மாவால் செய்யப்பட்ட ரதங்களேயும், இவர்களுக்கு விருப்பப்படி கொடு. பீம குலத்த கத சாம்பர்கள் பீமர்களால் ரக்ஷிக்கப்படும் த்வாரகாபுரியை ஆகாய வழியால் அடையப்படட்டும். பிள்ளேகளேப் பார்ப்பதற்கு இஷ்டப்படி வரட்டும். தேவராஜன் இந்த்ர பகவான் இப்படி சொல்லி சுவர்க்கத்துக்குச் சென்முன். கேசவ பகவானும் த்வாரகைக்குச் சென்முன்.

மிக்க பலம் வாய்ந்த கதன், ப்ரத்யும்னன், சாம்பன் மூவரும் அங்கு ஆறு மாசம் வசித்து ராஜ்யம் நிலே பெற்றதும் த்வாரகைக்குச் சென்றனர். தேவரையொத்தவனே! ஜனமேஜயா! மேருவின் வடக்குப் பக்கத்தில் அந்த ராஜ்யங்கள் இன்று இருக்கின்றன. உலகமுள்ளவரை இருக்கும். ப்ரபோ! ஜனமேஜயா! உலக்கை யுத்தம் முடிந்ததும், யாதவர்கள் சுவர்க்கம் சென்ற பின் அந்த ப்ரத்யும்னன் கத சாம்பர்கள் வஜ்ரபுரத்துக்குச் சென்றனர். ஜனமேஜயராஜனே! அங்கு வசித்து தங்களுடைய புண்ய கர்மாக்களாலும் போக கர்த்தா ஸ்ரீக்ருஷ்ணன் அனுக்ரஹத்தாலும் திரும்ப ஸ்வர்க்கம் செல்வார்கள்.

ஜனமேஜயராஜனே! இந்த ப்ரத்யும்னனின் பெருமை என்னுல் உனக்குச் சொல்லப்பட்டது. புண்யம், கீர்த்தி, ஆயுள் வர்த்தனம், சத்ரு நாசனம், புத்ர பௌத்ர வ்ருத்தி, ஆரோக்யம், ஸம்பத்து, தனஸம்பத்து வ்ருத்தி, பரந்த கீர்த்தி இவை வ்யாச பகவான் சொல்படி உண்டாகும்.

அத்யாயம் 97 முற்றும்.



## அத்யாயம் 98

### துவாரகை அலங்கரிக்கப்படல்-விசுவகர்மாவினுல் மிகச்சிறப்புற நிர்மாணிக்கப்படல்-க்ருஷ்ணனின் தேவியர்களுக்கு மாளிகைகள் அமைத்தல் செய்குன்றுகள், நதிகள், குளம், வனம், உபவனம் இவைகளால் அமைக்கப்படல்

வைசம்பாயனர் சொன்னுர் :- பிறகு க்ருஷ்ணன் கருடன் மேலிருந்து நாற்புறமும் ஒலிக்கும் தேவர்கள் இருப்பிடம் போன்ற த்வாரகா நகரைப் பார்த்தார். மணிமய மலேகளேயும், யந்த்ரங்களேயும் அப்படியே விளேயாட்டிடங்களேயும் முக்ய உத்யான வனங்களேயும், கொடுங்கைகளேக் கொண்ட நாற்புற மதில்களேயும்

பார்த்தான். தேவகி மகன் க்ருஷ்ணன் நகரையடைந்ததும் அப்போது தேவராஜன் இந்த்ரன் விச்வகர்மாவை அழைத்து இவ்விதம் சொன்னான். "சில்பிகளில் சிறந்தவனே! தேவ ச்ரேஷ்டனே! என் ப்ரியம் செய்ய விரும்பினால் க்ருஷ்ணனின் ப்ரியத்துக்காக த்வாரகையை மறுபடியும் நூற்றுக்கணக்கான உத்யானங்கள் நிறைந்ததாகவும் மனோஹரமாகவும் ஸ்வர்க்கத்தை யொத்ததாகவும் என் நகரைப் போலவே செய்வாயாக. இம் மூவுலகிலும் சிறந்ததை நீ காண்பதையெல்லாம் சீக்ரம் அவைகளை த்வாரகையில் கொண்டு சேர். மஹாபலவான் க்ருஷ்ணன் எல்லா தேவ கார்யங்களிலும் எப்போதும் ஆயத்தமாயிருக்கிறான். கொடிய போர்களைச் செய்து முடிக்கிறான்.

பிறகு விச்வகர்மா அந்த நகரையடைந்து இந்த்ரனது அமராவதி நகர் போல் நாற்புறமும் அலங்கரித்தான். யாதவர் தலைவன் கருட வாஹனன் க்ருஷ்ணன் விச்வகர்மவால் செய்யப்பட்ட அந்த நகரைத் திவ்யமான பாவுங்களால் அலங்கரிக்கப்பட்டதாகப் பார்த்தான். விச்வரூபி எல்லா ஸம்பத்தும் நிறைந்த நாராயணன் அந்த த்வாரகையைப் பார்த்து மகிழ்ந்து உள்ளே புக ஆரம்பித்தான். அந்த யாதவ க்ருஷ்ணன் விச்வகர்மாவால் அலங்கரிக்கப்பட்ட த்வாரகையில் பார்வையையும் மனதையும் கவரும் அழகிய மரத் தொகுதிகளைக் கண்டான். தாமரைத் தொகுதிகளால் நிறைந்த ஹம்ஸங்கள் பழகும் நீருடையனவும் கங்கை ஸிந்து நதிகள் போன்றனவுமான அகழிகளால் ஆழப்பட்டன. மேட்டுப் பூமியில் அமைக்கப்பட்ட சூர்ய ஒளியுடைய தங்கமயமான ஜ்வலிக்கும் ப்ரகாரத்தால் மேக வரிசையால் ஆகாசம் போல் விளங்கினது.

இத்தகைய த்வாரகையைக் கண்டான். இந்த்ரன் 'நந்தன' வனம் போன்றும் குபேரனது 'சைத்ரரத' வனம் போன்றும் உள்ள உத்யான வனங்களால் அழகாக அமைக்கப்பட்டுள்ள த்வாரகை மேகங்களால் ஆகாயம் போல் விளங்கியது. த்வாரகைக்குக் கிழக்கு திக்கில் அழகிய தாழ்வரைகள், குகைகள், சதுர முற்றங்கள், ஸ்வர்ண ரத்ன தோரணங்கள் இவை கொண்டு ரைவதக மலை சோலையுடையதாயிருக்கிறது. தெற்குத் திக்கில் ஐந்து நிறங்கொண்ட லதாவேஷ்ட மலை ப்ரகாசிக்கிறது. அழகிய புஷ்பங்களுடைய பெரிய காடுகளுடன். இந்த்ர த்வஜம் போன்ற 'ஸுகக்ஷ' எனும் வெள்ளி மலை மேற்கு திக்கில் உள்ளது. ஜனேச ஜயராஜ! ச்ரேஷ்ட! மந்த்ர மலை போன்ற வெண்ணிற 'வேணுமான்' எனும் மலை வடக்கு திக்கை மிக அதிகமாக ப்ரகாசப்படுத்துகிறது.

ரைவதக மலையைச் சுற்றி நாற்புறமும் 'சித்ரகம்' 'பஞ்சவர்ணம்' 'பாஞ்சஜன்யம்' 'ஸர்வர்தகம்' எனும் நான்கு பெரிய வனங்களிருக்கின்றன. தெற்கிலுள்ள லதாவேஷ்ட மலையைச் சுற்றி மேரு ப்ரபவனம், பானுவனம், புஷ்பகம் எனும் பெரிய வனங்களிருக்கின்றன. மேற்கு திக்கில் ஸுகக்ஷண மலையைச் சுற்றி அக்ஷகம், பிஜகம், மந்தார வ்ருக்ஷங்கள் கொண்ட மந்தாரம், அலரி வ்ருக்ஷங்கள் இருக்கும் ஸதாவர்த்தம் இவ்வனங்கள் இருக்கின்றன. வடக்கில் வேணுமான் மலையைச் சுற்றி சைத்ர ரதம், நந்தனம், ரமணம், பாவனம் எனும் நான்கு வனங்கள் உள்ளன. பாரத! ஜனமேஜயா! கிழக்கு திக்கில் வைடூர்ய நிறங்கொண்ட இலைகளையுடைய ஜல புஷ்பங்களால் அழகிய தாமரை மந்தாகினி நதி ப்ரகாசிக்கிறது. அங்கு விச்வகர்மாவால் ஏவப்பட்டுக் கேசவனுக்கு ப்ரியத்தை விரும்பும் பல தேவ கந்தர்வர்களால் தாழ்வரைகள் அலங்கரிக்கப்பட்டன.

புண்ய தீர்த்தமுடைய மஹாநதி மந்தாகினி ஐம்பது முகங்களுடன் த்வாரகையைப் புனிதப்படுத்திக் கொண்டு புகுந்தது அளவிட முடியாதது. மிக சிறந்தது. ஆழமான அகழிகளை யுடையது. சிறந்த மதில்கள் கொண்டது. வெண்ணிற சுண்ணப் பூச்சுடையது. நூற்றுவரைக் கொல்லும் கூர்மையான யந்த்ரங்களுடையது. நூற்றுவரைக் கொல்லும் தங்க சாளரங்களால் விளங்குவது. இரும்பாலாகிய பெரிய சக்ரங்களோடு கூடியது. இத்தகைய த்வாரகா நகரைப் பார்த்தான். தேவ நகரில் போல் சிறு மணிகள் கொண்ட உயர்த்திய கொடிகளுள்ள எண்ணூறாயிரம் ரதங்கள் த்வாரகையில் இருந்தன. [illegible] போலுள்ள [illegible] [illegible] போலுள்ள நீளம் இரண்டு மடங்கு சுற்றுப் புறமுடையதாகவிருந்த த்வாரகையைப் பார்த்தான். [illegible] வழி கொண்ட பெரிய ரத வீதி. பதினாறு பெரிய [illegible] வழிகள், இவ்விதம் மார்க்கங்களால் சூழப்பட்டது. [illegible] [illegible] அமைக்கப்பட்டவை. இத்தகைய த்வாரகையைப் பார்த்தான். இந்நகரில் ஸ்த்ரீகளும் [illegible] [illegible] வ்ருஷ்ணி [illegible] பற்றிக் கேட்டாயோ! [illegible] [illegible] உத்தமமான மார்க்கங்கள். ஏழு பெரிய போக்கு வழிகள் இத்தகைய த்வாரகையைப் பார்த்தான். அங்கு [illegible] [illegible] புகழ்பெற்ற யாதவர்களின் அந்த மிகச் ச்ரேஷ்டமான த்வாரகையில் பலதரப்பட்ட மார்க்கங்கள் அமைக்கப்பட்டன. பிறகு தேவகீ மகன் க்ருஷ்ணன் மனிதர் மகிழும் தங்கமய ரத்னப் படிக்கட்டுகளுடன் கூடிய வீடுகளைப் பார்த்து மகிழ்ந்தான். வெள்ளை வெளேரென உச்சிகளையுடையன.

தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டன. ரத்னமய தாழ்வரைகள், குகைகள், சிகரங்கள் கொண்ட விசித்ர பர்வதங்கள் போல் உள்ளன. ஐந்து நல்ல வர்ணங்கள் கொண்டவை. பூ மழைபோன்ற சோபை. மேக (இடி) போன்ற சப்தமுடைய பல்வேறு உருவமுள்ள மலை போன்றன. காட்டுத் தீ போன்ற ஒளி வீசுவன. சந்த்ர சூர்யர்களுக்கு அதிகமான கிரணங்களால் ஆகாயத்தைத் தொடுவன போன்றன. விச்வகர்மாவால் செய்யப்பட்டன. இத்தகைய வீடுகள் கொண்ட த்வாரகை காணப்பட்டது. மிக்க புண்யம் பண்ணின யாதவர்களால் விளங்குகிறது. அங்குள்ள உத்யான வனங்களால் மேகங்கள் சூழ்ந்த ஆகாயம் போல் த்வாரகை காணப்பட்டது. ஸாக்ஷாத் விச்வகர்மாவாலேயே பகவான் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு மாளிகை அமைக்கப்பட்டது. நாலு யோஜனை நீளம் அவ்வளவே அகலம். அளவிட முடியாப் பெருஞ் செல்வம் படைத்தது. உயர்ந்த மலைகள் போன்ற மாடிகளோடு கூடியது. அத்தகைய மாளிகையை இந்த்ரனால் தூண்டப்பட்ட விச்வகர்மா செய்தான்.

ருக்மிணி தேவிக்குச் சிறந்த மாளிகை விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்டது. தங்க ஒளி வீசும் மாடிகள் கொண்டது. எல்லா ப்ராணிகளுக்கும் மனோஹரமானது. மேரு சிகரம் போன்று உயர்ந்த ஸ்வர்ண மய உச்சியையுடையது. ஸத்யபாமை மாளிகை மிக வெளுப்பானது. விசித்ரமான ரத்னப் படிக்கட்டுகளுடையது. அது மிகுந்த சௌக்ய வாச வசதி கொண்டதென எல்லோரும் அறிவர். சுத்தமான சூர்ய ஒளியுடைய கொடிகளால் அலங்கரிக்கப்பட்டது. பிறகு ஜாம்பவதியின் முக்ய மாளிகை எல்லா ப்ரதேசங்களிலும் தனித் தனி அழகு வாய்ந்தது. பெரிய கொடிகள் நாலு திக்கிலும் உள்ளன. அங்குள்ள எல்லாவற்றையும் வேறொரு ஸூர்யன் போல் பிரகாசித்து அவமதித்தது.

பரத ச்ரேஷ்ட! உதய சூர்ய வர்ண சோபையுடையது. ருக்மிணி சத்யபாமை மாளிகைகளுக்கு இடையேயுள்ளது. விச்வகர்மாவால் திவ்யமாக அமைக்கப் பெற்றது. கைலாஸ சிகரத்தையொத்தது. நாற்புறமும் தங்கம் போன்ற ஒளி வீசுவது. அக்னி ஜ்வாலை போன்ற ப்ரகாசமுள்ளது. ஸமுத்ரத்தை யொத்தது மேரு எனப் பெயர் பெற்றது. அந்த மாளிகையில் காந்தார அரசன் குல விளக்கு காந்தாரி கேசவனால் அமர்த்தப்பட்டாள். ஸுபீமை என்பவளின் மாளிகை "பத்மகூடம்" எனப் பெயர் பெற்றது. பத்மவர்ணம் பெரிய சோபை மிக மனோஹரமான காந்தி, பெரிய சிகரம் இவைகளையுடையது.

ராஜச்ரேஷ்டனே! ஜனமேஜயா! லக்ஷ்மணை எனும் தேவியின் மாளிகை விரும்பும் எல்லா குணங்களுடன் சேர்ந்தது. சூர்ய காந்தியுடையது. க்ருஷ்ணனால் அவளுக்கென நிர்மாணிக்கப்பட்டது. பாரத! வைடூர்ய ரத்னத்தின் காந்தி பச்சை நிறம். தேவ ரிஷிகணங்களால் கௌரவிக்கப்பட்டது. எல்லா ப்ராணிகளும் அதை மிகச்ரேஷ்டமானதாகவே நினைக்கின்றன. அது எல்லா மாளிகைகளுக்கும் அணி போன்றது. அந்த மாளிகையை க்ருஷ்ணன் மஹிஷி மித்ரவிந்தையுடையது என்று அறிவார்கள். விச்வகர்மாவால் செய்யப்பட்ட மிகச் சிறந்த மாளிகை மிக மிக அழகியது. மலை போல் நிற்கிறது. எல்லாத் தேவர்களாலும் கொண்டாடப்பட்டது. கேதுமான் எனப் பெயர் பெற்றது. அந்த மாளிகை க்ருஷ்ணன் மஹிஷி ஸுவார்த்தையுடையது.

மிக முக்யமான மாளிகை விச்வகர்மா தானே செய்தான். ஒரு யோஜனை அகல நீளம் எல்லா ரத்னங்களும் பொருந்தியது. மங்களகரமானது. விரஜை எனப்படும். நல்ல ஒளி மிக்க அது. மஹாத்மா கேசவனின் பூஜா க்ருஹமாக அமைந்தது. அதில் எல்லாக் கொடிகளும் தங்க தண்டங்கள் உடையன. நன்கு அமைக்கப்பட்டன. க்ருஷ்ணன் மாளிகையில் வழிகாட்டும் கொடிகளும் இருந்தன. அங்கேயே திவ்ய ரத்னக் கூட்டங்களும் அமைக்கப்பெற்றன. யது ஸிம்ஹ க்ருஷ்ணனால் 'வைஜயந்தம்' எனும் பெரிய மலை எடுத்து வரப்பட்டு ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. 'இந்த்ரத்யும்னம்' எனும் தடாகத்தின் பக்கலில் ஹம்ஸகூடமலையின் உலகப் புகழ் பெற்ற சிகரம் நூறு யோஜனை உயரம், பாதி யோஜனை நீளம். இந்நகர் பெரிய யானைகள் இவைகளையுடையது. அளவற்ற தேஜஸ்வீ க்ருஷ்ணனால் அதுவும் எல்லா ப்ராணிகளும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே எடுத்து வரப்பட்டது. சூர்ய மண்டல் வரை உயர்ந்த மேரு சிகரம். ஸ்வர்ண மயம், திவ்யம். மூன்று உலகிலும் புகழ் பெற்றது. எல்லா மூலிகைகளும் கூடியது. ஒளி வீசுவது. மிக உயர்ந்தது. அதுவும் களைந்து கொண்டு வரப்பட்டது. விச்வகர்மா இதைக் கொண்டு வந்தான். இந்த்ரன் கட்டளையால் கார்யத்திற்காக விச்வகர்மா அதைக் (மேரு சிகரத்தை) கொண்டு வந்தான். அங்கு பாரிஜாத வ்ருக்ஷமும் கேசவனால் தன்னாலேயே கொண்டு வரப்பட்டது. பாரிஜாதம் மரம் எடுத்துப் போகும்போது அந்த உத்தம வ்ருக்ஷத்தைக் காவல் புரியும் தேவர்களுக்கும் க்ருஷ்ணனுக்கும் போர் மூண்டது. அந்த வ்ருக்ஷத்தில் நூற்றுக்கணக்கான தாமரைகள் பூத்தன. த்வாரகை சுவர்ண விமானங்கள் உடையது. சிறந்த புஷ்ப பழங்களுடைய [illegible] எல்லாம் க்ருஷ்ணனுக்காக, புஷ்கரணிகளும்

தடாகங்களும் உள. அவை தாமரையுள்ள ஜலங்கொண்டவை. சிறந்த வாசனையுடைய நீலோத்பலங்களையுடையவை. ரத்னங்கள் பதித்த சுவர்ணமய ஓடங்கள் உள. அந்தச் சிறந்த குளங்களின் கரைகளைச் சாலம், கதம்பம், ரௌஹிணம் முதலிய நூற்றுக்கணக்கான கிளைகள் கொண்ட மரங்கள் சோபிக்கச் செய்கின்றன. மேரு மலை மரங்கள், ஹிமய மலை மரங்கள், யதுகுல சிம்ஹம் க்ருஷ்ணனுக்காக விச்வகர்மாவால் எடுத்து வரப்பட்டன. காடுகளின் இடையில் எல்லா ருதுக்களிலும் பலன் கொடுக்கும், ரத்தச்சிவப்பு, மஞ்சள், அந்திச் சிவப்பு, வெள்ளை நிற புஷ்பங்களுடைய மரங்கள் உள. அந்தச் சிறந்த நகரில் சமமான கரைகளையும் ஜலத்தையுமுடைய நதிகள், உள் மடுக்கள், மணத்திட்டுகளுடன் கூடியவை. புஷ்பங்கள் நிறைந்த நீருடையனவும், பல்வேறு மரக்கொடிகளுடையனவும் பொன்னிற மணல் திட்டுக்களுடை யனவுமான வேறு நதிகளும் இருந்தன. அந்நகரில் எப்போதும் மதங்கொண்ட குயில்களுடனும் மதங்கொண்ட மயில் கூட்டங்களுடனும் கூடிய மரங்கள் உள்ளன. அந்நகரிலேயே யானைக் கூட்டங்கள், அப்படியே கொக்குகளும், மஹிஷங்களும் உள்ளன. பன்றி, ம்ருகங்கள், பறவைகள் வசிக்கின்றன. அந்த அழகிய பட்டிணத்தில் மிக உயர்ந்த தங்கமய ப்ராகாரம் விச்வகர்மாவால் தெளிவாக அமைக்கப்பட்டது. அந்நகர் சுற்றிலும் பர்வதம் போல் மிக அழகாகவிருந்தது. அந்தந்தப் பெரிய மலைகளும், நதிகளும், குளங்களும், வனங்களும், உபவனங்களும் அமைக்கப்பட்டுள்ளன.

அத்யாயம் 98 முற்றும்



## அத்யாயம் 99

### த்வாரகையில் க்ருஷ்ணன் மாளிகையின் சிறப்பு க்ருஷ்ணன் அதனுட்புகுதல்–பாரிஜாத வ்ருக்ஷத்தை நட்டுவைத்தல்– பதினாறாயிரம் பெண்களைக் கௌரவித்தல்.

வைசம்பாயனர் சொன்னார் :- காளைக் கண்ணன் க்ருஷ்ணன் இவ்விதம் த்வாரகையைப் பார்த்துக் கொண்டு போய் தன் மாளிகையைப் பார்த்தான். ரத்ன ஸ்தம்பங்கள் நூறாயிரம் கோடி ரத்னம், பவளம், வெள்ளி, அக்னி ஜ்வாலை ஒளி வீசும் தோரணங்கள், அங்கங்கு ப்ரகாசமுள்ள சித்ரமான தங்கத் திண்ணைகள், ஸ்படிகத் தூண்கள் அநேகம். விஸ்தாரமானது.

எங்கும் ஸ்வர்ண மயம். இத்தகையது ஸ்ரீக்ருஷ்ணன் திருக்கோயில். தாமரைகள் நிறைந்த நீர் கொண்டவை, சிவப்பு நறுமணமுள்ள உற்பலங்கள் உடையவை, ரத்னம் ஸ்வர்ணம் போன்று ஒளி வீசுபவை, மணிப் படிக்கட்டுகள் விளங்குபவை. மதங்கொண்ட மயில்களுடன் கூடினவை. எப்போதும் மதங்கொண்ட குயில்கள் உள்ளவை, மலர்ந்த தாமரையுடையவை. இத்தகைய தடாகங்கள் மிகச் சிறந்தவை பல. அந்த மாளிகைக்கு விச்வகர்மாவால் செய்யப்பட்ட மலை மதிள். அது நூறு முழம் உயரமுடையது. அகழி சூழ்ந்தது. அந்த மாளிகை விச்வகர்மாவால் வ்ருஷ்ணி சிம்ஹம் க்ருஷ்ணனுக்காகவே அமைக்கப்பட்டது. மஹேந்திர மலை போன்றது. அந்த மாளிகை நாற்புறமும் அரை யோஜனை விஸ்தீர்ணமுள்ளது.

பிறகு கருடன் தலை மேல் நின்று சத்ருக்களுக்கு (பயத்தால்) மயிர்கூச்செறியும் அந்த வெண்மையான (பாஞ்சஜன்ய) சங்கத்தை ப்ரீதனாய் ஊதினான். அந்த சங்கின் ஒலியால் ஸமுத்ரம் மிகக் கலங்கிற்று. ஆகாய முழுதும் ஒலித்தது. அப்போது ஆச்சர்யமாயிருந்தது. குகுரர், அந்தகர் முதலிய யாதவர்கள் பாஞ்சஜன்ய சப்தத்தைக் கேட்டு கருடனின் தர்சனத்தாலும் கவலை நீங்கியவர்கள் ஆனார்கள். சங்கசக்ர கதாபாணியாய் கருடன் மேல் வீற்றிருக்கும் சூர்யனைப் போன்ற தேஜஸ்ஸுடைய க்ருஷ்ணனைப் பார்த்து நகர மக்கள் மகிழ்ந்தனர். பிறகு வாத்ய கோஷமும் பேரிகளின் பெரு முழக்கம் எல்லா நகர வாசிகளின் சிம்ஹ நாதங்களும் உண்டாயின. பிறகு மதுஸூதனனைப் பார்த்து ப்ரீதி கொண்ட தாசார்ஹர்களும் எல்லா குகுர அந்தகர்களும் சேர்ந்து வந்தனர். வாசுதேவன் க்ருஷ்ணனை முன்னிட்டுச் சங்கவாத்ய சப்தங்களுடன் உக்ரஸேன ராஜா வசுதேவர் மாளிகைகளுக்குச் சென்றனன். தேவகி, ரோஹிணி, யசோதை உக்ரஸேன ராஜா பத்னிகள் எல்லோரும் தங்கள் தங்கள் வீடுகளில் ஆனந்தத்துடன் உபசரிந்தனர்.

பிறகு க்ருஷ்ணன் கருடனுடன் தன் திருமாளிகையை அடைந்தான். ஹரி க்ருஷ்ணன் தேவர்கள் பின் தொடர நினைத்த தேசங்களில் ஸஞ்சரித்தான். யதுகுல திலகன் யாதவ ரிஷபன் க்ருஷ்ணன் தன் திருமாளிகை வாசலில் இறங்கி யாதவர்களை முறைப்படி கௌரவித்தான். பலராமன், உக்ரஸேனன், கதன், அக்ரூரன், ப்ரத்யும்னன் முதலியோரால் கௌரவிக்கப்பட்ட சௌரி க்ருஷ்ணன் மணி பர்வதத்தை எடுத்துக் கொண்டு மாளிகையில் புகுந்தான். ருக்மிணி மகன் ப்ரத்யும்னனும் இந்த்ரனுக்கு ப்ரியமான

அந்தச் சிறந்த பாரிஜாத மரத்தை மாளிகையில் அடைவித்தான். அந்த வீரர்கள் பாரிஜாதத்தின் மஹிமையால், தமது தேஹ பந்துக்களை ஒருவருக்கொருவர் தேவர்களாகப் பார்த்தார்கள். பிறகு அந்த ஜனங்கள் சந்தோஷித்தனர். மகிழ்ந்த அந்த யாதவ ச்ரேஷ்டர்களால் ஸ்துதிக்கப்படுகிற ஸ்ரீமான் கோவிந்தன் விச்வகர்மாவால் அமைக்கப்பட்ட (தன்) மாளிகையில் புகுந்தான். வ்ருஷ்ணிகளுடன் கூடின அளவிட முடியாத ஸ்வரூபமுள்ள அச்சுதன் பிறகு அந்த சிகரத்துடனுள்ள மணி பர்வதத்தை அந்தப்புர நடுவில் வைத்தான்.

சத்ருக்களை வெல்லும் க்ருஷ்ணன் முன் பூஜிக்கப்பட்ட பூஜிக்கத்தக்க வ்ருக்ஷ ச்ரேஷ்ட திவ்ய பாரிஜாதத்தை தனது விருப்பமுள்ள இடத்தில் வைத்தான். சத்ருக்களை ஜயிக்கும் கேசவன், பிறகு அந்தப் பந்துக்களை விடை கொடுத்தனுப்பி நரகாசுரனால் சேர்த்து வைக்கப்பட்ட பதினாறாயிரம் பெண்களைக் கௌரவித்தான். ஆடையாபரணங்கள் திவ்ய ஹாரங்கள், பணிப் பெண்கள், செல்வக் குவியல்கள் சந்த்ர கிரணம் போல் ஒளி மிக்க ரத்னங்கள் இவைகளால் கௌரவித்தான். தேவகி, ரோஹிணி, ரேவதீ, உக்ரஸேனன், வசுதேவர் இவர்களால் அந்தப் பெண்கள் முன்னாலேயே கௌரவிக்கப்பட்டனர். அப்போது ஸத்யபாமை ஸௌபாக்யத்தால் ஸ்த்ரீகளுள் மேலானவளாயிருந்தாள். பீஷ்மகன் பெண் ருக்மிணியோ குடும்பத் தலைவியாயிருந்தாள். க்ருஷ்ணன் அந்தப் பெண்களுக்குத் தரத்துக்குத் தக்க மாளிகைகளையும், அரண்மனைச் சிகரங்களையும் சிறந்த ஸன்மானங்களையும் ஏற்பாடு செய்தான்.

அத்யாயம் 99 முற்றும்



## அத்யாயம் 100

## வெற்றியைப் பறைசாற்றி அனைவரையும் பஹுமானித்தல்

வைசம்பாயனர் சொன்னார் :- பிறகு க்ருஷ்ணன் கருடனை நன்கு கௌரவித்துப் பஹுமானித்து நண்பன் போல் அருகிலழைத்து தன் வீட்டுக்குச் செல்ல விடை கொடுத்தான். பஹுமானித்து விடை கொடுக்கப்பட்ட இந்த ஆகாயசாரியான பக்ஷி கருடன் ஜனார்த்தனனை வணங்கி இஷ்டப்படி ஆகாயத்தில் கிளம்பினான். அந்தக் கருடன் முதலைகளுக்கிருப்பிடமான சமுத்ரத்தை இறக்கைக் காற்றால் கலக்கி மிக்க வேகத்துடன் கிழக்கு

சமுத்ரத்தை அடைந்தான். "கார்யாகாலத்தில் அழைக்கத் தக்கவனீ என்று கருடன் சொல்லிச் சென்றதும் க்ருஷ்ணன் வ்ருத்தரான பிதா வஸுதேவரைப் பார்த்தான். உக்ரஸேன ராஜனேயும், பலதேவன், ஸாத்யகி, குரு, காசி தேசத்து ஸாந்தீபினீ, ப்ரஹ்ம கார்க்யர் அப்படியே மற்ற வ்ருஷ்ணி வ்ருத்தர்கள், தாஸார்ஹர், போஜ, அந்தகர் ஆகிய எல்லோரையும் வீர்யத்தால் அடையப்பட்ட சிறந்த ரத்னங்களால் கௌரவித்தான்.

"எல்லா ப்ரஹ்ம த்வேஷிகளும் கொல்லப்பட்டனர். எல்லா அந்தக வ்ருஷ்ணிகளும் மேன்மையாக விளங்குகின்றனர். இந்தக் குறைவற்ற மதுஸூதனன் போரிலிருந்து (வெற்றியுடன்) திரும்பியுள்ளான்." என்று நன்கு கௌரவிக்கப்பட்ட அழகிய குண்டலமணிந்த பறைசாற்றும் புருஷன் த்வாரகையில் நாற்சந்திகளில் பறை சாற்றினன். ஜனார்த்தனன் வினயத்துடன் ஸாந்தீபினியை முதலில் வணங்கி பிறகு வ்ருஷ்ணி குலத்தரசனை உக்ரஸேனனே வணங்கினன். அப்படியே நீர் ததும்பும் கண்களுடைய ஆனந்தம் பூரித்த மனதுடைய பிதாவை க்ருஷ்ணன் பலராமனோடு வணங்கினன். அதோக்ஷஜன் க்ருஷ்ணன் அப்படியே மற்றவர்களேயும் முறைப்படி கௌரவித்து எல்லா தாசார்ஹர்களுக்கும் அபிவாதனம் செய்தான். பிறகு க்ருஷ்ணன் முதலானோர் எல்லா ரத்ன மயமான திவ்ய ஆசனங்களிலும் அமர்ந்தனர். பின்பு பணியாட்களால் நரகாசுரனிடமிருந்து கொண்டு வரப்பட்ட குறைவற்ற அந்தச் செல்வத்தை க்ருஷ்ணன் கட்டளேயால் சேவகர்கள் அதே சபைக்குக் கொண்டு சேர்த்தனர். யது ச்ரேஷ்டன் ஜனார்த்தனன் பிறகு எல்லா தாசார்ஹர்களேயும் துந்துபி சப்தத்தால் கௌரவித்து பஹுமானம் செய்தான். அந்த எல்லா தாசார்ஹர்களும் ரத்ன பவழத் தோரணமுடைய ஆசனங்களமைக்கப் பெற்ற அந்த அழகிய சபையில் புகுந்தனர். பரதச்ரேஷ்ட! பிறகு எல்லாச் செல்வமும் குணமும் நிரம்பிய அந்த சபை புருஷசிம்ஹங்களான யாதவர்களால் நாற்புறமும் சூழப்பட்டு மிக அதிக சோபையுடன் ஸிம்ஹங்களால் மலேக் குகை போல் ப்ரகாசித்தது. பலராமனுடன் கோவிந்தன் போஜ வ்ருஷ்ணிகளால் கௌரவிக்கப்பட்டு உக்ரஸேனனே முன்னிட்டு, தங்கத்தாலான பெரிய ஆசனத்தில் அமர்ந்தான். புருஷோத்தமன் க்ருஷ்ணன் அங்கு அமர்ந்த யது ச்ரேஷ்ட வீரர்களேயும் ப்ரீதி வயதுக்குத் தக்கபடி அழைத்துச் சொன்னன்.

அத்யாயம் 100 முற்றும்

## அத்யாயம் 101

### தேவகியின் பெண் மாயை ஏகாநம்சாவின் பெருமை கூறல்-நாரதர் க்ருஷ்ணனின் பால லீலைகளோடு அவன் செய்த வீரச் செயல்களை முற்றும் கூறுதல்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னான் : "புண்ய புகழ் வாய்ந்த உங்கள் தவம், பலம், த்யானம் மூன்றாலும், சாபத்தாலும் பாவி பூமி புத்ரன் நரகாசுரன் கொல்லப்பட்டான். மறைத்து வைக்கப்பட்ட உத்தம கன்னிகைகளின் அந்தப்புரம் கட்டிலிருந்து விடுவிக்கப்பட்டது. மணி பர்வதத்தைக் களைந்தெடுத்த இந்தச் சிகரமும் கொண்டு வரப்பட்டது. இந்தப் பெரிய தனக் குவியல் எனது பணியாட்களால் கொண்டு வரப்பட்டது. இந்த எல்லாப் பொருள்களுக்கும் நீங்கள் தலைவர்கள்" என்று அவர்களுக்குச் சொல்லி முடித்தான்.

க்ருஷ்ணனது அந்த வார்த்தையைக் கேட்டு போஜர், வ்ருஷ்ணிகள், அந்தகர் மயிர்க்கூச்செறிந்து மகிழ்ந்தனர். பிறகு அந்த வீரர்கள் கை கூப்பி க்ருஷ்ணனைப் பூஜித்து இவனைக் குறித்துச் சொன்னார்கள். "மஹாபாஹோ! தேவகீ மகனே உன்னிடம் இது ஆச்சர்யமில்லை. தேவர்களாலும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்து தான் சம்பாதித்த ரத்னங்களாலும், சுகங்களாலும் தன் ஜனங்களைப் பாராட்டுகிறாய். பிறகு எல்லா யாதவர்களுடையவும், உக்ரசேனருடையவும் ப்ரீதி கொண்டு க்ருஷ்ணனைப் பார்க்கும் ஆசையால் வந்து சேர்ந்தனர். தேவகியுடன் சேர்ந்த ஏழு தேவியரும் சுப முகமுடைய ரோஹிணி தேவியும் அமர்ந்திருக்கும் தோள் வலிமை கொண்ட ராமனையும் க்ருஷ்ணனையும் கண்டனர். அந்த பலராம கேசவர்களும் எழுந்திருந்து முதலில் ரோஹிணியை அபிவாதனம் செய்து தேவகீ தேவியையும் அபிவாதனம் செய்தனர். அந்தத் தேவகீ பலராமன், காளைக் கண்ணன் அவ்விரு புத்ரர்களாலும், சூர்யனாலும், வருணனாலும் வணங்கப்பட்ட தேவமாதா அதிதி போல ப்ரகாசித்தாள். பிறகு 'ஏகாநம்சா' என்று சொல்லப்படும் ப்ரிய ரூபமுடைய அந்தத் தேவகியின் பெண் நரச்ரேஷ்டர்களான ராம க்ருஷ்ணர்களை அடைந்தாள். தேவதேவன் புருஷோத்தமன் க்ருஷ்ணன் ஒரு க்ஷண முஹூர்த்த காலத்தில் அவதாரம் செய்தான். இவள் (மாயை ஏகாநம்சா) பொருட்டு இனத்தோடு கூடிய கம்ஸனைக் கொன்றான். க்ருஷ்ணன் கட்டளைப்படி அந்த கன்னிகை ஏகாநம்சா அந்த வ்ருஷ்ணிகள் வீட்டில் குழந்தை போல் போற்றப்பட்டு வளர்ந்தாள்

ஜனங்களால் ஏகாநம்சை யெனச் சொல்லப்படும் அணுக முடியாத அந்த யோக கன்னிகை கேசவனை ரக்ஷிப்பதற்காக உண்டானவள். அவளை நல்ல மனதுடைய யாதவர்களும் பூஜிக்கின்றனர். அவளால் திவ்ய புருஷன் க்ருஷ்ணன் தெய்வம் போல் காப்பாற்றப்பட்டான். மாதவன் அவளிடம் வந்து சஹோதரியாகிய அவளை ப்ரியமான தோழியைப் போல் அவளது வலக்கை முனையால் வரவேற்றான். மஹாபலம் பொருந்திய பலராமனும் அழகிய தங்கையாகிய அவளை அணைத்து உச்சி மோந்து அவளது இடக்கையால் வரவேற்றான். ஸ்வர்ணத் தாமரை பொருந்திய கையுடைய லக்ஷ்மி போன்ற சஹோதரியை அந்த மற்ற பெண்கள் பலராம க்ருஷ்ணர் மத்தியில் பார்த்தனர். அக்ஷதைப் பெரு மழையாலும், பலவித மங்கள புஷ்பங்களாலும், பொரிகளாலும் இரைத்து தங்கள் வீடு சென்றனர்.

பிறகு எல்லா யாதவர்களும் ஜனார்த்தனனைக் கௌரவித்து அவனால் செய்யப்பட்ட ஆச்சர்யங்களை எல்லாம் புகழ்ந்து கொண்டு ப்ரீதியுடன் பக்கத்தில் அமர்ந்தனர். நகர மக்களுக்கு ப்ரீதியை வளர்க்கும் பெருங்கீர்த்தி வாய்ந்த தோள் வலிமை கொண்ட அந்த க்ருஷ்ணன், அந்த யாதவர்களுடன், தேவர்களுடன் (இந்த்ரன்) போல விளங்கினான்.அந்த எல்லா யாதவர்களும் அமர்ந்ததும், தேவேந்த்ரன் கட்டளையால் சபையில் க்ருஷ்ணனிடம் நாரதமுனி வந்தார். பிறகு பூஜ்யரான அந்த நாரதர் யதுகுல ச்ரேஷ்டர்களான சூரர்களால் நன்கு பூஜிக்கப்பட்டு க்ருஷ்ணனின் கையைப் பிடித்து உயர்ந்த ஆசனத்தில் அமர்ந்தார்.

சுகமாக வீற்றிருந்த அந்த நாரதமுனி அமர்ந்திருந்த அந்த யாதவர்களை நோக்கிச் சொன்னார். "நர ச்ரேஷ்டர்களே! என்னை இந்த்ரன் சொற்படி இங்கு வந்தவனாகத் தெரிந்து கொள்ளுங்கள். ராஜ ச்ரேஷ்டர்களே! கேசவன் குழந்தைப் பூர்வ முதல் செய்த கார்யங்களின் க்ருஷ்ணனது இந்தப் பராக்ரமத்தைக் கேளுங்கள். உக்ரஸேனனின், துர்புத்தியுடைய மகன் கம்ஸன் எல்லா யாதவர்களையும் துன்புறுத்தி பிதா உக்ரசேனனைச் சிறை வைத்து ராஜ்யத்தைக் கைப்பற்றினான். துர்மதி குலத்ரோஹி கம்ஸன் மாமனார் ஜராசந்தனை அண்டி போஜ, வ்ருஷ்ணி, அந்தகர் எல்லோரையும் அவமதித்தான். கீர்த்தி வாய்ந்த வஸுதேவர் பந்துக்கள் கார்யம் செய்ய விரும்பி உக்ரசேனனைக் காக்க வேண்டி, தன் பிள்ளையை நன்கு ரக்ஷித்தார். அந்தத் தர்மாத்மா மதுஸூதனன் மதுரை நகர் உபவனத்திலிருந்து கோபர்களுடன் அத்யத்புதமான கார்யங்கள் செய்தான். பெரிய அத்புத கார்யம் கேட்கப்படுகிறது.

வண்டியில் கீழ் இருக்கும் குழந்தை க்ருஷ்ணனால் சூரசேனர் முன்னிலையில் பறவை வேஷம் கொண்ட பெரிய தேஹமும் பலமும் கோபமும் கொடுமையும் உடைய பூதனை எனும் அந்த ராக்ஷஸி கொல்லப்பட்டாள். ஜனார்த்தனனுக்கு விஷம் பூசிய கொடிய ஸ்தனத்தைக் கொடுத்தாள். அந்த ராக்ஷஸி கொல்லப்பட்டவளாக அந்த வனவாசிகள் கண்டனர்.

புருஷோத்தமனை சிசு க்ருஷ்ணன் வண்டியின் அடியில் விளையாடிக் கொண்டு கால் கட்டை விரலால் வண்டியைத் தள்ளினான். மறுபிறப்பெடுத்தவன் என்று சொன்னார்கள். ஆதலால் "அதோக்ஷஜன்" எனப்பெயர் சூட்டப்பட்டான். இது ஆச்சர்யமாயிருந்தது. குமார லீலை செய்து கொண்டு உரலில் கயிற்றால் கட்டப்பட்டான். இரண்டு அர்ஜுன வ்ருக்ஷங்களை ஒடித்தான். அப்போது "தாமோதரன் " எனப் பெயரால் அழைக்கப்பட்டான். அணுக முடியாதவன், மஹாபலன், மஹா நாகம் காளியன் யமுனை மடுவில் விளையாடுகிற வாஸுதேவன் க்ருஷ்ணனால் ஜயிக்கப்பட்டான்.

ப்ரபு க்ருஷ்ணன், அக்ரூரன் காண நாக லோகத்தில் நாகங்களால் பூஜிக்கப்படுகிற திவ்ய திருமேனியைக் கொண்டான். குளிர் காற்றால் பீடிக்கப்பட்ட பசுக்களைப் பார்த்து புத்திமான் பாலன் வஸுதேவ புத்ரன் க்ருஷ்ணனால் விரும்பும் பசுக்களை ரக்ஷிக்கக் கோவர்த்தன மலை ஏழு இரவு தாங்கப்பட்டது. அப்படியே மனிதரை அழிக்கும் பெரிய தேஹமுடைய மிக்க பலம் வாய்ந்த துஷ்டக் காளை கோபதி, அரிஷ்டன் எனும் மஹா அசுரன் க்ருஷ்ணனால் கொல்லப்பட்டான். மிக்க பலம் வாய்ந்த பெரிய உருவங்கொண்ட துர்மதி தேனுகன் எனும் அந்த அசுரன், பசுக்களைக் காக்கும் பொருட்டுக் க்ருஷ்ணனால் கொல்லப்பட்டான். சத்ருக்களை அழிக்கும் க்ருஷ்ணன் எல்லா ஸேனைகளையும் திரட்டிக் கொண்டு வந்த ஸுநாமா என்பவனை ஓநாய்களால் விரட்டினான். ரோஹிணி மகன் பலராமனுடன் சேர்ந்து வனத்தில் சஞ்சரிக்கும் கோப வேஷம் பூண்ட க்ருஷ்ணனால் கம்சனுக்குத் திரும்பவும் பயம் உண்டு பண்ணப்பட்டது. புருஷோத்தமன் வஸுதேவ புத்ரன் க்ருஷ்ணன் ஆய்ப்பாடி அடைந்து போர் புரியும் பலம் வாய்ந்த போஜராஜன் கம்ஸன் நண்பன், குதிரை வடிவம் கொண்ட கேசி அசுரனைப் பார்த்து அப்படியே கொன்றான். [illegible] மந்த்ரியான பெரிய உடல் கொண்ட [illegible] புத்திமான் பலராமனால் ஒரே முஷ்டியால் கொல்லப்பட்டான்.

தேவ புத்ரர் போன்ற இந்த வஸுதேவ புத்ரர் இருவரும் மிக்க வீர்யமுடையவர்கள். ப்ரஹ்ம, கார்க்ய ப்ரோஹிதரால் வைதீக சடங்குகள் செய்யப்பட்டு வளர்ந்தனர். இவ்விருவரும் ப்ரஹ்ம ரிக்ஷி கார்க்யரால் பிறந்தது முதல் உள்ளபடியே சொல்லப்பட்ட உபநயநாதி ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டனர். இந்த நரச்ரேஷ்டர் இருவரும் யௌவன பர்வத்தையடைந்து ஹிமய மலையில் சஞ்சரிக்கும் சிம்ஹங்கள் போல் நன்கு வளர்ந்தனர். கோபிகளின் மனதை அபஹரிக்கும் மஹா பலம் கொண்ட வீரர்கள் இருவரும் தேவ புத்ரர் காந்தியுடையவராய் ஆய்ப்பாடியில் சிறந்தவராய் இருந்தனர். போரிலும், வெற்றியிலும் பல விளையாட்டுகளிலும் இவ்விருவரை நன்கு பார்த்து அறிய நந்தகோப கோபாலர்கள் சக்தி வாய்ந்தவர்களில்லை. பரந்த மார்பும், நீண்டகைகளும், காளைத்தோள்களும் உடையவர்களாய் வளர்ந்து வரும் இவர்களைப் பற்றிக் கேட்டு, இந்தக் கம்ஸன் மந்த்ரிகளுடன் பயங்கொண்டவனானான். பலராம கேசவர்களைப் பிடிக்கச் சக்தியற்றவனான போது வஸுதேவரைப் பந்துக்களுடனும் உக்ரஸேனனுடனும் திருடனைப் போல் கட்டி வைத்துச் சிறைப்படுத்தினான். வஸுதேவர் மிக அதிக காலத்தைத் துன்பத்துடன் கழித்தார். கம்ஸனும் பிதாவைச் சிறைப் படுத்தி (மாமனார்) ஜராசந்தனை நன்கு ஆச்ரயித்து சூரசேன ஆஹ்வ்ருதி பீஷ்மகரின் தேசங்களை அடக்கி ஆண்டான்.

சிறிது காலம் கழிந்ததும் ராஜா கம்ஸன் மதுரையில் ருத்ரனைக் குறித்து மஹோத்ஸவம் ஏற்பாடு செய்தான். அங்கு உக்ரஸேன ராஜனே! நடன, நாட்ய, கீத முதலிய காரியங்களில் சிறந்த பாடகர்களும் நடிகர்களும், நானா தேசத்து மல்லர்களும் வந்து சேர்ந்தனர். பிறகு போஜ ராஜன் கம்ஸன் சோபையுடன் கூடிய பெருஞ் செல்வமுடைய நடன அரங்கில் சிம்மாசனத்தில் ஏறினான். வீர்யவான் கம்ஸன் அரங்கில் ஏராளமான ஆயுதங்களை வைத்து பெற்ற மதங்கொண்ட யானையை வீரர்கள் கவனத்துக்கு உள்ளாக்கி வைத்தான். உக்ரஸேன ராஜனே! சூர்ய சந்த்ரர்கள் போன்ற மானிட வேங்கைகளான பலராம க்ருஷ்ணர்கள் வந்திருப்பதை மஹா தேஜஸ்வீ கம்ஸன் கேட்டு (தன்) ரகஷணத்தைப் பற்றி முயற்சி செய்யப்பட்டது. பலராம க்ருஷ்ணர்களை நினைத்துக் கொண்டு ராத்ரி சுகமாகத் தூங்கவில்லை. பலராம க்ருஷ்ணர்கள் இருவரும் அந்தச் சிறந்த உத்ஸவத்தைக் கேட்டுப் புலிகள் பசுக் கூட்டத்தில் போல் அரங்கில் புகுந்தனர். பிறகு வாசல் காவலரால் புகும் போது தடுக்கப்பட்ட, சத்ருக்களை வெல்லும் புருஷ ச்ரேஷ்டர்கள் பாகனுடன் குவலயாபீட யானையைக் கொன்று. அப்போது

அரங்கை அழித்து மிதித்து அடக்க முடியாதவர்களாய் நுழைந்தனர். சாணூராந்த்ர மல்லர்களைக் கசக்கிப் பிழிந்து மிக துஷ்டாத்மா கம்ஸன் தம்பியுடன் கேசவனாலும் பலராமனாலும் அழிக்கப்பட்டான். தேவர்களால் செய்ய முடியாதது, யது ஸிம்ஹமான க்ருஷ்ணனால் செய்யப்பட்டது. அந்தச் செயலைக் கேசவனைத் தவிர வேறொரு புருஷன் எவன் செய்வான்! முன்னோர்களான ப்ரஹ்லாத, பலி, சம்பரர்களால் அடையப்படாத இந்தத் தனம் க்ருஷ்ணனால் உங்களுக்காகக் கொண்டு சேர்க்கப்பட்டது. இந்த க்ருஷ்ணன் முரு, பஞ்சஜன அசுரர்களைக் கொன்று, மலைக் கூட்டத்திலிருந்து வெளிக் கிளம்பிய அசுரன் நிஸுந்தனைக் கூட்டத்துடன் கொன்றான். பூமி புத்ரன் நரகாசுரன் கொல்லப்பட்டான். அதிதியின் அழகிய குண்டலங்கள் மீட்டு எடுத்து வரப்பட்டன. கேசவனால் தேவலோகத்திலும் தேவர்களிடத்திலும் பெரும் புகழடையப்பட்டது.

யாதவர்களே! நீங்கள் சோகம், பயம், துன்பம் எல்லாம் நீங்கினவர்கள். க்ருஷ்ணனின் தோள் வலிமையை அண்டினவர்கள். பொறுமையில்லாமல் பலவித யாகங்கள் செய்யுங்கள். புத்திமான் க்ருஷ்ணனால் தேவர்களுக்கு மிகப் பெரிய கார்யம் செய்யப்பட்டது. இந்த நான் ப்ரியத்தைத் தெரிவிக்கிறேன். உங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்.தேவேந்த்ரன், "யது ச்ரேஷ்டர்களே! உங்கள் இஷ்டத்தை சோம்பலில்லாமல் செய்வேன். உங்களுக்காக நான், நீங்களும் எனக்கு. உங்களிடம் நான் இருக்கிறேன்.", என்று இவ்விதமாக க்ருஷ்ணனைப் பார்த்துச் சொன்னான். ப்ரீதியடைந்த அந்த தேவ ச்ரேஷ்டன் தேவேந்த்ரன் என்னை அனுப்பினான். அப்படியே நாம் மகிழ்ந்தோம். புத்தியிருக்கும் இடத்தில் செல்வம் இருக்கிறது. விநயம், புத்தி, செல்வம் மூன்றும் மஹாத்மா க்ருஷ்ணனிடம் ஸதா இருக்கின்றன.

அத்யாயம் 101 முற்றும்



## அத்யாயம் 102

## நாரதர் க்ருஷ்ணனின் அற்புதச் செயல்களை முற்றும் விரிவாகக் கூறுதல்

நாரதர் சொன்னார் : முருவின் பாசங்கள் அறுக்கப்பட்டன. நிஸுந்தன், நரகன் கொல்லப்பட்டனர். ப்ராக்ஜ்யோதிஷ நகரம் செல்லும் வழி க்ஷேமமுடையதாகச் செய்யப்பட்டது.

க்ருஷ்ணனுல் போரில் வில்லொலியாலும் பாஞ்சஜன்ய சங்கொலியாலும் விரோதி அரசர்கள் நடுங்கும்படி செய்யப்பட்டனர். மேகம் போன்ற தேர்ப் படைகள் கொண்டு தென் தேசத்தரசர்களால் நன்கு காக்கப்பட்ட மிக்க பல பராக்ரமமுடைய ருக்மியைப் போரில் வென்று பிறகு வ்ருஷ்ணி ச்ரேஷ்டன் கேசவன் மேகவொலியுடைய சூர்யவொளி கொண்ட தேர் மூலம் ருக்மிணியைச் சீக்ரமாக அபஹரித்தான். சங்கு சக்ரம், கதை, கத்தி அணிந்த கேசவன் சிறந்த மஹிஷி ருக்மிணியை மணம் புரிந்து கொண்டான். ஜாருதி நகரில் ஆஹவ்ருதி, க்ராதன், சிசுபாலன் இவர்கள் ஜயிக்கப்பட்டனர்.

இந்த்ரத்யும்னன், காலயவனன், கசெருமான், உறுதியான வில்லுடைய ஸௌபல்யபதி ஸ்ரீமான் சால்வன் இவர்கள் கொல்லப்பட்டனர். தாமரைக்கண்ணன் புருஷோத்தமன் ஆயிரம் பர்வதங்களை சக்ரத்தாலே பிளந்து த்யுமத்ஸேனனை அழித்தார். புருஷ வ்யாக்ரன க்ருஷ்ணன் நிமிஷத்திற்குள் செல்லக் கூடிய வருணனின் பக்கல் திரிபவர்களை மஹேந்த்ர மலைச் சிகரத்தில் பிடித்தான். இராவதியில் அக்னி சூர்யனுக்கொப்பான மஹாபோஜ குலத்தினர் கோபதியும், தால கேதுவும், சார்ங்க விற்கையன் க்ருஷ்ணனுல் போரில் அழிக்கப்பட்டனர்.

அக்ஷப்ரபதன மென்னுமிடத்தில் ஹம்ஸ, டிம்பக எனும் அஸுரர்கள் தம்மைச் சேர்ந்தவர்களுடன் க்ருஷ்ணனுல் கொல்லப்பட்டனர். மஹாத்மா கேசவனுல் காசியும் கொளுத்தப்பட்டது. காசி அதிபன் ஸேனையுடனும் ராஜ்யத்துடனும் அழிக்கப்பட்டான். அத்புதச் செயல் புரியும் க்ருஷ்ணனுல் போரில் கூரிய முனையுடைய பாணங்களால் யமனை ஜயித்து இந்த்ர சேனனின் மகன் மீட்டுக் கொண்டு வரப்பட்டான். மஹா பலன் வருணன் சமுத்ர ஜந்துக்கள் எல்லாவற்றுடனும் லோஹிதக் கூடம் அடைந்தான். அங்கு வருணன் ஜயிக்கப்பட்டான். மஹேந்த்ரன் மாளிகையில் உண்டாகி, மஹாத்மாக்கள் தேவர்களால் ரக்ஷிக்கப்பட்ட பாரிஜாத மரம் தேவேந்த்ரனை மதிக்காமல் அபஹரிக்கப்பட்டது. பாண்டியன், பௌண்டரன் கலிங்கன் , மாத்ஸ்யன், வங்கராஜன் ஆகிய ஒன்று கூடிய எல்லா அரசர்களையும் கொன்றுன். இந்த க்ருஷ்ணன் மஹா வீரர்களாகிய நூற்றொரு அரசர்களைப் போரில் கொன்று ப்ரிய தோற்றமுடைய மஹிஷி காந்தாரியை மணம் புரிந்து கொண்டான். அப்படியே காண்டீப விற்கையன் விளையாடுகிற அர்ஜுனனைக் குந்தி தேவி முன்னிலையில் மதுஸூதனன் ஜயித்தான்.

மஹாபாரதப் போரில் புருஷோத்தமன் க்ருஷ்ணன் ரதம் ஓட்டி த்ரோணர், அவர் மகன் அச்வத்தாமா, க்ருபன், கர்ணன், பீஷ்மர், துர்யோதனன் இவர்கள் எல்லோரையும் ஜயித்தான். சங்க சக்ர கதை வாள் தரித்த ப்ரபு க்ருஷ்ணன், பப்ருவின் ப்ரியத்தை விரும்பி, ஸவ்ய ராஜன் பெண்ணை பலாத்காரமாக அபஹரித்தான். வேணுதாரியின் மகன் பொருட்டு குதிரை தேர் யானையுடன் பரந்த பூமி முழுவதையும் முயன்று ஜயித்தான். இந்த ஹரி மாதவன் தவத்தின் வீர்யம் ஓஜஸ் பலம் இவையடைந்து முன் அவதாரத்தில் மஹா பலியினிடமிருந்து மூவுலகையும் அபஹரித்தான். ப்ராக்ஜோதிஷபுரத்தில் வஜ்ராயுதம், அசனி கதை வாள் இவை கொண்டு நடுங்கச் செய்யும் அசுரரால் இவன் மரணம் அடையவில்லை. மிக்க பலமும் செல்வமும் வாய்ந்த மஹா வீர்யவான் பலி புத்ரன் பாணன், கூட்டத்தாருடன் க்ருஷ்ணனால் அவமானம் செய்யப்பட்டான். மஹாபலவான், மஹாபாஹு ஜனார்த்தனன் கம்ஸனின் மந்த்ரி பீடனையும் அவன் மகன் அஸிரோமானையும் கொன்றான். பெருங்கீர்த்தி வாய்ந்த மனித வேங்கை ஸ்ரீக்ருஷ்ணன் மனித வடிவங்கொண்ட ஜ்ரும்பன், ஐராவணன், விருபன் இவர்களைக் கொன்றான். அப்படியே தாமரைக் கண்ணன் க்ருஷ்ணன் மஹா ஓஜஸ்ஸுடைய நாகராஜன் காளியனை ஜலத்தில் ஜயித்து ஸமுத்ரத்துக்கு அனுப்பினான். ஹரி நர வேங்கை க்ருஷ்ணன் சூர்ய புத்ரன் யமனை ஜயித்து ஸாந்தீபனியின் புத்ரன் மரித்த மகனை உயிர்ப்பித்தான்.

உக்ரஸேன ராஜனே! தேவர்களையும் ப்ராஹ்மணர்களையும் எப்போதும் த்வேஷிக்கும் அந்த துராத்மாக்களை, இந்த மஹாபாஹு க்ருஷ்ணன் இவ்விதம் அடக்குபவன். பூமி புத்ரன் நரகனைக் கொன்று ரத்ன குண்டலங்களை மீட்டு வந்து இந்த்ரன் ப்ரீதிக்காகத் தேவ மாதா அதிதிக்குக் கொடுத்தான். இப்படி எல்லா உலகையும் படைக்கும் பெரும் கீர்த்தி வாய்ந்த க்ருஷ்ணன் தேவர்களுக்கு அபயத்தையும் அசுரர்களுக்குப் பயத்தையும் எப்போதும் கொடுப்பவன். மனிதரிடத்தில் தர்மத்தை நிலை நிறுத்தி தக்ஷிணையுடைய யாகங்கள் செய்து தேவர்களுக்காக அளவு கடந்த கார்யம் செய்து க்ருஷ்ணன் தன் ஸ்தானத்துக்குப் போவான். மஹா கீர்த்தி வாய்ந்த க்ருஷ்ணன் போகங்களுடன் கூடிய அழகிய ரிஷிகள் விரும்பும் த்வாரகையைத் தன்னுட் கொண்டு முடித்து ஸமுத்ரத்தில் செலுத்தப் போகிறான். பல ரத்னங்கள் நிறைந்த, நூற்றுக் கணக்கான தோட்டங்கள், யாக சாலைகள் உடையவன, உபவனங்கள் பொருந்திய த்வாரகையை

ஸமுத்ரத்தில் அடையச் செய்வான். க்ருஷ்ணனின் அபிப்ராயம் அறிந்த ஸமுத்ரம் சூர்யனிருப்பிடம் போன்றதும் வாஸுதேவனால் கைவிடப்பட்டதுமான த்வாரகையை மூழ்கச் செய்வான். இந்த த்வாரகையில் வசிக்கத்தக்கவன் மதுஸூதனன் தவிர வேறொருவன் தேவர், அசுரர், மனிதர்களில் இருக்கவில்லை. முன் இருந்ததில்லை, இனி இருக்கப் போவதும் இல்லை. இவ்விதம் இந்த நாராயணன் விஷ்ணு யாதவர்களுக்கு மேலான விதியைச் செய்து தானே சூர்யனும் சந்த்ரனும் ஆவான். இவன் அளவிடமுடியாதவன். எண்ணற்கரியவன், இஷ்டம் போல் திரிபவன், எல்லோரையும் தன் வசப்படுத்துபவன். குழந்தை விளையாட்டுப் பொருள்களுடன் போல் ப்ராணிகளிடம் எப்போதும் மகிழ்கிறான். இந்த மஹாபாஹு மதுஸூதனன் அளவிடப்பட முடியாதவன். விச்வரூபனானவன். இவனைக் காட்டிலும் மேற்பட்டதும் கீழ்ப்பட்டதும் ஒன்றுமில்லை. இதுவே நூற்றுக் கணக்காகவும் நூறுயிரம் கணக்காகவும் கேட்கப்பட்டது. இவனுடைய செயல்களுக்கு முடிவு எவனாலும் காணப்பட்ட தில்லையல்லவா? பலராமனை ஸஹாயமாகவுடைய தாமரைக் கண்ணன் அப்போது குழந்தைகளின் நடுவில் நின்று இந்தக் கார்யங்களை இவ்விதம் செய்தான்.

முன்னர் எல்லாவற்றையும் நேரில் பார்க்கும் மஹாபுத்திமான் மஹாயோகி வ்யாஸர் தபோவீர்யத்தாலான (ஞானக்) கண்ணால் (கண்டு) இவ்விதம் சொன்னார். வைசம்பாயனர் சொன்னார் : நாரதமுனி மஹேந்த்ரன் சொற்படி கோவிந்தனை இவ்விதம் ஸ்தோத்ரம் செய்து எல்லா யாதவர்களாலும் பூஜிக்கப்பட்டு ஸ்வர்க்கம் சென்றார். பிறகு கோவிந்தன் மதுஸூதனன், புண்டரீகாக்ஷன், க்ருஷ்ணன் அந்தச் செல்வத்தை அந்தகர் வ்ருஷ்ணிகளிடம் தகுதிக்கேற்ப முறைப்படி கொடுத்தான். மஹாத்மாக்கள் யாதவர்களும் செல்வத்தை அடைந்து நிறைந்த தக்ஷிணையுடைய யாகங்களை முறைப்படி செய்து த்வாரகா நகரில் வசித்து வந்தார்கள்.

அத்யாயம் 102 முற்றும்

## அத்யாயம் 103

### க்ருஷ்ணனின் குடும்பம் விரிவுறக் கூறப்பட்டபின் பலதேவன் வசுதேவர், ப்ரத்யும்னன், அநிருத்தன் முதலியோர் குடும்ப வம்சாவளி கூறப்படல்

ஜனமேஜயர் சொன்னார் : பல்லாயிரக்கணக்கான ஸ்த்ரீகளுள் எட்டு மஹிஷிகள் முக்யமாகச் சொல்லப்பட்டனர். அந்த எட்டு

மஹிஷிகளின் குழந்தைகளைப் பற்றி எனக்குச் சொ..்ல வேண்டும். வைசம்பாயனர் சொன்னார் : புத்ரவதிகளான எட்டு மஹிஷிகள் முக்யமானவராகக் கருதப்படுகின்றனர். எல்லாரும் வீரப் ப்ரஜைகளையுடையவர்கள். அவர்களிடம் பிறந்த குழந்தைகளைப் பற்றி என்னிடம் கேள். ருக்மிணி, ஸத்யபாமை, நாகநஜிதி, தேவி, சிபி தேச ஸுதத்தை, அழகிய சிரிப்புடைய லக்ஷ்மணை, காளிந்த தேசத்து மித்ரவிந்தை, ஜாம்பவதி, புரு வம்சத்து மத்ரகுமாரி ஸுபீமை. ருக்மிணி பிள்ளைகளைப் பற்றிக் கேள். சம்பராஸுரனை அழித்த யுவனான ப்ரத்யும்னன் முதலில் பிறந்தான். வ்ருஷ்ணி ஸிம்ஹனான மஹாரதன் சாருதேஷ்ணன் இரண்டாமவன். சாருபத்ரன் சாருகரபன். ஸுதேஷ்ணன், த்ருமன், ஸுஷேணன், சாருகுப்தன், வீர்யவான் சாருவிந்தன் இளையவனான சாருபாஹு அப்படியே சாருமதி எனும் பெண் பிறந்தாள். க்ருஷ்ணனுக்கு ஸத்யபாமையிடத்தில் பானு, பீமரதன், க்ஷுபன், ரோஹிதன், தீப்திமான், தாம்ரஜக்ஷன், ஜலாந்தகன் எனப் பிள்ளைகளும், தங்கைகள் பானு, பீமலிகா, தாம்ரபரணி, ஜலந்தமா என நால்வரும் பிறந்தனர். ஜாம்பவதிக்குப் போரில் சோபிக்கும் சாம்பன், மித்ரவான், மித்ரவிந்தன், ஸுநீதன் எனும் பிள்ளைகளும், மித்ரவதி எனும் பெண்ணும் பிறந்தனர்.

நாகநஜிதியின் குழந்தைகளையும் கேள். பத்ரகாரன், பத்ரவிந்தன் எனும் பிள்ளைகள், அப்படியே பத்ரவதியெனும் பெண் பிறந்தனர். சிபி தேசத்து ஸுதத்தையிடம் ஸங்கிராமஜித், ஸத்யஜித், ஸேனஜித், அப்படியே சூரன் ஸபத்நஜித் எனும் பிள்ளைகள் உதித்தனர். மத்ர தேசத்து ஸுபீமைக்கு வ்ருகாசவன், வ்ருக நிர்வ்ருதி, வ்ருகதீப்தி எனும் பிள்ளைகள் பிறந்தனர். லக்ஷ்மணை தேவியின் குழந்தைகளைக் கேள். காத்ரவான், காத்ரகுப்தன், வீர்யவானான காத்ரவிந்தன் எனும் பிள்ளைகளும் தங்கை காத்ரவதியும் பிறந்தனர். காளிந்திதேவிக்கு அச்ருதன், ச்ருத ஸம்யுதன், என இரண்டு பிள்ளைகள். க்ருஷ்ணன் அச்ருதனை ச்ருதஸேனைக்கு (வளர்ப்பாகக்) கொடுத்தான். ஹ்ருஷீகேசன் அவனைக் கொடுத்து சந்தோஷித்தவனாய் அந்த மஹிஷியிடம் சொன்னான். "இவன் அனேக வருஷங்கள் உங்களிருவருக்கும் பொதுவான பிள்ளையாயிருக்கட்டும்" என்றான். ப்ருஹதி எனும் பத்னியிடம் கதன் எனும் பிள்ளை பிறந்தான். ஸைப்யதேசத்தவனிடம் அங்கதன், குமுதன், ச்வேதன் எனும் பிள்ளைகளும் ச்வேதை எனும் பெண்ணும் பிறந்தனர். ஸுதேவையிடம் அகாவஹன், ஸுமித்ரன், ஸுசி, சித்ரரதன், சித்ரஸேனன் எனும் பிள்ளைகளும் சித்ரா, சித்ரவதி எனும் பெண்களும் பிறந்தனர்.

கௌசிகி என்பவளிடம் வனஸ்தம்பன், ஸ்தம்பவனன், நிவாஸனன், அவனஸ்தம்பன் எனும் பிள்ளைகளும், ஸ்தம்பவதி எனும் பெண்ணும் உண்டாயினர். ஸுதஸோமையிடம் உபஸன்னன், சங்கு, வஜ்ராம்சு, க்ஷிப்ரன் இந்த நான்கு பிள்ளைகள், யௌதிஷ்டிரி என்பவளிடம் யுதிஷ்டிரன், விசித்ரமாக யுத்தம் செய்யும் கபாலி, கருடன் என்போர் பிறந்தனர். இவ்விதம் ஆயிரக்கணக்கான புத்ரர்கள் என யான் சொல்ல என்னிடமிருந்து தெரிந்து கொள். வாசுதேவனின் அந்தப் பிள்ளைகள் ஒரு லக்ஷம் எனச் சொல்லப்பட்டனர். அவர்களில் எண்பதினாயிரவர் போரில் சிறந்த வீரர். என்னால் அவ்வாறு ஜனார்த்தனின் புத்ரர்கள் சொல்லப்பட்டனர்.

ராஜ ச்ரேஷ்டனே! ஜனமேஜயா! ப்ரத்யும்னனுக்கு விதர்ப்ப தேச ருக்மியின் பெண்ணிடம் அநிருத்தன் உண்டானான். அவன் போரில் (எவராலும்) தடுக்கப்படாதவன். மான் கொடியுடையவன். பலதேவனுக்கு ரேவதியிடம் நிசடன், உல்முகன் என இருவர் சஹோதரர் பிறந்தனர். இருவரும் தேவரை ஒத்தவர். புருஷச்ரேஷ்டர். ஸுதனு, ஸுதாரா என வஸுதேவருக்கு இரண்டு பத்னிகள். ஸுதாரையிடம் 'கபிலன்' பிறந்தான். பௌண்ட்ரகன், ஸுதனுவின் மகன். வில்லேந்திய அவ்விருவரில் பௌண்ட்ரகன் அரசனானான். கபிலன் வனம் சென்றான். வசுதேவருக்கு நான்காவது வர்ணப் பெண்ணிடம் மஹாபலவான் ஜரா எனும் வீரன் பிறந்தான். எல்லா வேடர்களுக்கும் தலைவன். காச்யை, சாம்பனிடமிருந்து ஸுபார்ஸ்வன் எனும் பலவானை மகனைப் பெற்றாள். அநிருத்தனுக்கு ஸானு எனும் மகன் பிறந்தான். ஸானுவிற்கு வஜ்ரன் பிறந்தான். வஜ்ரனுக்கு ப்ரதிரதன், ப்ரதிரதனுக்கு ஸுசாரு எனப் பிள்ளை. வ்ருஷ்ணி சின்ன மகன் சுமைத்ரனிடம் சினி உண்டானான். சினிக்கு ஸத்யவந்தன் மஹாரதன் ஸத்யகன் பிறந்தான். ஸத்யகனுக்கு யுயுதானன் எனும் வீரன் பிறந்தான். யுயுதானனுக்கு அஸங்கன், அஸங்கனுக்கு மணி எனும் மகன் என இவ்வாறு வம்சாவளி முடிக்கப்படுகிறது.

அத்யாயம் 103 முற்றும்



## அத்யாயம் 104

### ப்ரத்யும்னன் சம்பராஸுரனை வதைத்த திறம் கூறுதல் - ப்ரத்யும்னனின் முற்பிறப்பு வரலாறு கூறுதல்

ஜனமேஜயர் சொன்னார் : இந்த ப்ரத்யும்னன் சம்பராசுரனைக் கொன்றவனென முன்னர் உம்மால் சொல்லப்பட்டது.

அவன் எப்படி சம்பரனை வதம் செய்தான் என்பதை எனக்குச் சொல்ல வேண்டும். லக்ஷ்மி அம்சமான ருக்மிணியினிடம் உறுதியான வ்ரதமுடையவன், அழகிய தோற்றமுடையவன், சம்பரனுக்கு யமனுமான மன்மதன் ப்ரத்யும்னன் பிறந்தான் ஸனத்குமாரர் இவ்விதம் புராணத்தில் சொல்லியிருக்கிறார். காலசம்பர யமனால் தனது ஆயுள் பறிக்கப்பட்டவனாய் மாயையால் அந்தக் குழந்தையை (ப்ரத்யும்னனை) அபஹரித்தான். காலசம்பரன், அந்தக் க்ருஷ்ணன் பிள்ளை சிசுவை பிறந்து ஏழு நாட்கள் முடிந்ததும், நள்ளிரவில் பிறந்த அறையிலிருந்து அபஹரித்தான். தேவமாயை அனுசரிக்கும் க்ருஷ்ணனால் (இது) அறியப்பட்டது.

ஆதலால் போரில் துர்புத்தியுள்ள அந்த அசுரன் தடுக்கப்படவில்லை. அந்தச் சம்பர யமனால் தனது ஆயுள் பறிக்கப்பட்டவனான அக்குழந்தையை அவன் மாயையால் அபஹரித்தான். அந்த மஹா அசுரன் அக்குழந்தையைத் தோள்களில் தூக்கிக் கொண்டு தன் நகரத்துக்கு எடுத்துச் சென்றான். அந்த அசுரனுக்கு நல்ல ரூபகுணங்களுடைய மனைவி குழந்தையில்லாதவளாயிருந்தாள். அவள் பெயர் மாயாவதி. மாயை போல் அழகிய தோற்றமுடையவள். காலனால் தூண்டப்பட்ட அந்த அசுரன் க்ருஷ்ணனது அந்தப் பிள்ளையை மாயா ரூபிணியான அந்த மஹிஷியிடம் கொடுத்தான். மாயாவதி தேவியோ அந்தக் குழந்தையைப் பார்த்து மிக்க ஆனந்தத்தால் மயிர் கூச்செறிந்து பேரானந்தமுடையவளாய் அந்தக் குழந்தையத் திரும்ப திரும்பப் பார்த்தாள். பிறகு பார்க்கிற அவளுக்கு இவன் சிவனால் எரிக்கப்பட்ட தன் கணவன்) அந்த மன்மதன் என்ற எண்ணம் உண்டாயிற்று. இவ்விதம் நினைத்து ஆலோசித்தாள். இவன் அந்த எனது பதியாகிற மன்மதன். என் கணவன். இவன் பொருட்டு நான் இராப்பகலாக சிந்தா வ்யாகூல ஸமுத்ரத்தில் மூழ்கி ஓரிடத்திலும் ஸந்தோஷத்தை அடையவில்லை. இவனும் முன் நாள் கோபமூட்டப்பட்ட தேவதேவன் சூலபாணி ருத்ரனால் உருவமில்லாமல் செய்யப்பட்டான். பூர்வ ஜன்மத்தில் என்னால் இது பார்க்கப்பட்டது. இதை அறிந்த நான் தாய்த் தன்மையோடு இவனுக்கு எப்படி முலை கொடுப்பேன். கணவனுக்கு மனைவியாயிருந்து பிள்ளை எனச் சொல்வேனா! இப்படி மனதில் ஆலோசித்து அந்தக் குழந்தையை அவள் வளர்ப்புத் தாயிடம் கொடுத்தாள். மருந்து உபயோகத்தால் சீக்கிரமாகவே வளர்த்தாள். அந்த ருக்மிணி மகன் தாதியின் மூலமாக அந்த மாயாவதியைப் பற்றிக் கேட்டு அவளை அறியாமையால் தன் தாயாகவே

நினைத்தான். அந்த மாயாவதியும் தாமரைக் கண்ணனாகிய அந்த க்ருஷ்ணன் மகனை வளர்த்தாள். காமத்தால் மோஹித்து இவனுக்கு எல்லா அசுர மாயைகளையும் கற்றுக் கொடுத்தாள். யௌவன மடைந்த அந்த ப்ரத்யும்னனும் அழகிய தோற்றமுடையவனானான். பெண்களின் மனோபாவத்தை அறிபவன். எல்லா அஸ்த்ர முறைகளின் கரை கண்டவன். அந்த மாயாவதி காமங்கொண்டு அந்த ப்ரத்யும்னனை நாயகனாக ப்ரேமை கொண்டாள். புன்சிரிப்புடன் இங்கிதங்களுடன் பார்த்து, வசப்படுத்த முற்பட்டாள்.

அழகிய சிரிப்புடன் தன்னை விரும்பும் அந்த மாயாவதியைக் குறித்து ப்ரத்யும்னன் சொன்னான்: "தாய்த்தன்மையை மீறி வேறு வகையாக ஏன் இப்படியிருக்கிறாய்? ஐயோ! துஷ்ட ஸ்பாவமுடையவளாய் இருக்கிறாய். பெண் தன்மையில் சபல மனதுடையவள். நீ புத்ர பாவத்தை விலக்கி என்னிடத்தில் அல்ப புத்தியால் முற்படுகிறாய். அழகியவளே! நான் உனக்கு மகனல்லவா? இது ஒழுக்க மாறுபாடு. தேவீ! உண்மையை நீ சொல்ல விரும்புகிறேன். இது என்ன முறை? பெண்கள் ஸ்வபாவம் மின் வீழ்ச்சி போன்றது. ஸ்த்ரீகள் மலையுச்சிகளில் மேகங்கள் போல் மனிதர்களிடம் பொருந்துகிறார்கள். சுபே! அழகியே! நான் உனக்குப் பிள்ளையா? பிள்ளையில்லையா? உண்மையை நீ சொல்ல விரும்புகிறேன். நீ செய்ய விரும்புவது என்ன?"

மன்மதனால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தப் பயந்த மாயாவதி, கலங்கின புலன்களுடையவளாய் க்ருஷ்ணன் மகனை ப்ரியனிடம் ஏகாந்தத்தில் சில வார்த்தைகள் சொன்னாள்: "ப்ரியனே! நீ என் பிள்ளையில்லை. சம்பரனும் உன் பிதா இல்லை. வ்ருஷ்ணி குலத்தவனே! நீ இயற்கையிலேயே ரூபவான். பராக்ரமசாலி. க்ருஷ்ணன் மகன். ருக்மிணி தேவிக்கு ஆனந்தம் வளர்க்கும் பிள்ளை. பிறந்த ஏழாவது நாளில் உத்தானசாயி கைக்குழந்தை சிசுவான நீ பிறந்த அறையிலிருந்து எடுத்து வரப்பட்டாய். பல வீர்யத்தைக் கொண்டு செயல் புரியும் என் கணவனால் உன் பிதா க்ருஷ்ணனின் பெரிய மாளிகை அலக்ஷ்யம் செய்யப்பட்டு நீ அபஹரிக்கப்பட்டவனாயிருக்கிறாய். வீரனே! க்ருஷ்ணனின் மகனான நீ, சம்பரனால் அபஹரிக்கப்பட்டுள்ளாய். அந்த உனது தாய் ருக்மிணியும் குழந்தையாகிய உன்னைக் குறித்துத் துக்கித்து கன்றைப் பிரிந்த காமதேனு போல் மிகவும் வருந்துகிறாள். கருடக் கொடியோன் உனது பிதா க்ருஷ்ணனும் பாலனான உன்னை இங்கு எடுத்து [illegible]தாக [illegible]றிகிறானில்லை. ப்ரியனே! நீ வ்ருஷ்ணி குலத்தவன். நீ சம்பரன் மகனேயில்லை. வீரனே! இத்தகைய

புத்ரர்களை அசுரர்கள் பெறமாட்டார்கள். ஆகையால் நான் உன்னை (கணவனாக) விரும்புகிறேன். எனக்கு நீ பிள்ளையாகப் பிறக்கவில்லை. அழகனே! உனது அழகிய ரூபத்தைப் பார்த்து துர்பலையான நான் மனதில் துன்பப்படுகிறேன்.

வ்ருஷ்ணி குலத்தவனே! ப்ரியனே! என்னால் நிச்சயிக்கப்பட்டு மனதில் உள்ளதை நீ பூர்த்தி செய்ய வேண்டும். எனக்கு உன்னிடம் உள்ள நல்ல எண்ணம் முழுதும் உனக்குச் சொல்லப்பட்டது." மாயாவதியால் இவ்விதம் சொல்லப்பட்ட எல்லா வார்த்தையும் கேட்டு எல்லா மாயைகளையும் நன்கறிந்த க்ருஷ்ண பகவானின் புத்ரன் இந்த ப்ரத்யும்னன் கோபங்கொண்டு தன் பெயரை உரக்கக் கூவி, சம்பரனை (போருக்கு) அழைத்தான். "ஆஹா! ஆச்சர்யம்! அசுர துஷ்டன் கேசவனின் குழந்தைப் பிள்ளையைப் பயமில்லாமல் அபஹரிக்கிறான். நான் இப்போது பயத்தை உண்டு பண்ணுகிறேன். எப்படி கோபம் வரும்? என்னால் எப்படி கொல்லப்படுவான்? மந்தபுத்தி சம்பரன் கோபம் கொள்ளும்படி முதலில் நான் என் செய்வேன்? மேரு சிகரம் போலுயர்ந்த தோரண வாயிலையடைந்து ஸிம்ஹக் கொடி விளங்கும் கொடி மரம் இருக்கிறது. கூர்மையான பாணயுதத்தால் இந்தக் கொடிமரத்தைப் பிடுங்கித் தள்ளுவேன். பிறகு சம்பரன் கொடி அழிக்கப்பட்டதாக அறிந்து வெளிக் கிளம்புவான். பிறகு போர்களத்தில் போரிட்டுக் கொன்று த்வாரகையை நோக்கிச் செல்வேன். இப்படிச் சொல்லி அம்புடன் வில்லை விரைவில் நாணேற்றினான். மஹாபுஜன் ப்ரத்யும்னனும் சம்பரனுடைய சிறந்த கொடியை அறுத்தான். மஹாத்மா ப்ரத்யும்னனால் கொடியறுக்கப்பட்டதைக் கேட்டு காலஸம்பரன் கோபங்கொண்டு பிள்ளைகளைக் கட்டளையிட்டான். பெரும் வீரர்களே! விரைவில் ருக்மிணி புத்திரனை கொல்லுங்கள். எனக்கு அப்ரியம் செய்பவனை இவ்வாறு பார்க்க நான் விரும்பவில்லை. சம்பரனது வார்த்தையைக் கேட்டு சம்பரனது அந்தப் பிள்ளைகள் ப்ரத்யும்னன் வதத்தை விரும்பி மகிழ்ந்து ஆயத்தமாய்ப் புறப்பட்டனர். சித்ரஸேனன், அதிஸேனன், விஷ்வக்ஸேனன், கதன், ஸ்ருதஸேனன், ஸுஷேணன், ஸோமஸேனன், ப்ரூன், ஸேதாநீ, ஸைன்யஹந்தா, ஸேனாஹா, ஸைனிகன், ஸேனஸ்கந்தன், அதிஸேனன் ஸேனகன், ஜனகன், ஸூதன், ஸகாலன், விகலன், சாந்தன், சாதாந்தகரன், அஸுசி, கும்பகேது, ஸூதமஷ்ட்ரன், கேசி இவர் முதலானோர். சக்ரம், தோமரம், சூலம், பட்டிசம், பாஸ்வதம் இவைகளை யெடுத்துக் கொண்டு மிக்க கோபங்கொண்டு, போரில் மகிழ்ந்து வெளிக் கிளம்பினர். சத்ரு ப்ரத்யும்னனைப்

போருக்கழைத்தனர். போர் முனையில் நின்றனர். மஹாபாஹு ப்ரத்யும்னனும் அப்போது விரைவாகத் தேரிலேறி வில்லெடுத்துப் போருக்கு நேராகச் சென்றான். பிறகு சம்பர புத்ரர்களுக்கு கேசவ புத்ரனோடு மயிர் கூச்செரியும் பெரிய போர் மூண்டது. பிறகு கந்தர்வர், உரகர், சாரணர் இவர்களுடன் கூடிய தேவர்கள் தேவேந்திரனை முன்னிட்டு விமானங்களில் முன் நின்றனர். நாரதர், தும்புரு, ஹாஹா, ஹூஹூ முதலிய பாடகர்கள் எல்லோரும் அப்ஸரஸ்ஸுக்களால் சூழப்பட்டு அங்கு நின்றனர். இந்திரனின் காவலாளியான கந்தர்வன் அத்புதமான அந்தப் போர்ச் செயலை வஜ்ராயுதமேந்திய தேவராஜனுக்குச் சொன்னான்.

சொல்லி சம்பரன் பிள்ளைகள் நூற்றுவர் க்ருஷ்ணன் மகன் ஒருவனே எப்படி பலருடன் போரிடும் இவன் வெற்றியடைவான்? என்று தேவேந்த்ரன் அவனுடைய அந்த வார்த்தையைக் கேட்டுச் சிரித்து இந்த வார்த்தை சொன்னான், இவனது பராக்ரமத்தைக் கேட்பாயாக. இந்த ப்ரத்யும்னன் முன் ஜன்மத்தில் காமன். சிவனின் கோபாக்னியால் அழிக்கப்பட்டான். (காமன் பத்னி) ரதிதேவியால் முக்கண்ணன் வேண்டப்பட்டான். மகிழ்ந்த அந்த ருத்ர தேவனால் இவளுக்கு வரம் கொடுக்கப்பட்டது. விஷ்ணு மனித தேஹம் கொண்டு த்வாரகையில் இருப்பான். இவன் அவனுக்கு மகனாக ஆவான். சந்தேகமில்லை. பெருங்கீர்த்தியுடைய அவன் மூவுலகிலும் அநங்கன் என ப்ரஸித்தி பெற்று. அந்த த்வாரகையில் பிறந்து. மிக்க தேஜஸ்வியாய், ஸம்பரனைக் கொல்வான். பிறந்த ஏழாவது நாளில் ஸம்பரன் மாயை கொண்டு ருக்மிணி மடியிலிருக்கும் ப்ரத்யும்னனை எடுத்துச் செல்வான். ஆகையால் ஸம்பரன் வீட்டிற்கு போ. மாயாமய பார்யையாயிரு. மாயா ரூபத்தால் மறைக்கப்பட்டவளாய் ஸம்பரனை மோஹிக்கச் செய்வாய். அங்கு நீ உனது குழந்தை வடிவமான காந்தனை வளரச் செய். யௌவன பர்வத்தை யடைந்து சம்பரனைக் கொல்வான். பிறகு உன்னுடன் கூட அநங்கன் த்வாரகைக்குச் செல்வான். பார்வதியுடன் நான் போல், உன்னுடன் ரமிப்பான். ருத்ரதேவன் இப்படிச் சொல்லி ஸித்த சாரணர் வஸிக்கும் மேரு போன்ற கைலாசத்தை அடைந்தான்.

பிறகு காமனின் பத்னி, ருத்ரதேவன் உமாபதியை வணங்கி காலத்தின் முடிவை எதிர்பார்த்துச் சம்பரன் க்ருஹத்தை அடைந்தாள். இப்படி இந்த மஹாபாஹு ப்ரத்யும்னன் சம்பரனைக் கொல்வான். இந்த துராத்மா சம்பரனை அவன் பிள்ளைகளுடன் அழிப்பவன் ஆவான்.

அத்யாயம் 104 முற்றும்.

## அத்யாயம் 105

### ப்ரத்யும்னனால் சம்பரனின் நூறு பிள்ளைகள் மடிதல் சம்பரன் நேர் வருணனை - சம்பரனுக்கு உற்பாதங்கள் தீவிரமான போர் அவர் மந்திரிகளோடு போர் - கேதுமாலி, துர்தரன், சத்ருஹந்தா, ப்ரமர்த்தனன் அழிதல்.

வைசம்பாயனர் சொன்னார் : பிறகு சம்பர புத்ரர்களுக்கும், ருக்மிணி புத்ரனுக்கும் மயிர் கூச்செறியும் பயங்கரப் போர் மூண்டது. பிறகு கோபங்கொண்ட பெரிய அஸுரர்கள் அம்பு, சக்தி, பாச்வதம், சக்ரம், தோமரம், குந்தம், புசுண்டி முசலம் இவைகளை மிக்க வேகத்துடன் ப்ரத்யும்னன் மேல் வீசினர். க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னன் மிக்க கோபங் கொண்டு எல்லா அஸ்த்ரங்களிலிருந்தும் வில்லிலிருந்தும் கிளம்பிய ஐந்தைந்து பாணங்களால் (எதிரியின்) ஒவ்வொன்றையும் கோபங் கொண்டு போர்களத்தில் வெட்டினான். மறுபடியும் அந்த எல்லா அஸுரரும் கோபங் கொண்டு உறுதியுடையவர்களாய் ப்ரத்யும்னனின் வதத்தை விரும்பி அம்புக் கூட்டங்களைப் பொழிந்தனர். மிக்க கோபங் கொண்ட அநங்கன் பிறகு வேகமாக வில்லெடுத்து, சம்பரனுடைய மிகச் சக்தி வாய்ந்த பத்துப் பிள்ளைகளை விரைவில் கொன்றான். கேசவனது வீர்யவானுன மகன் பின்பு கோபத்துடன் வேறொரு பல்லாயுதத்தால் சித்ரஸேனனின் தலையை அறுத்தான். கொல்லப்படாமல் எஞ்சியவர்கள் பிறகு ஒன்று கூடி அம்புமாரி பொழிந்து கொண்டு உக்ரமாகப் போர் செய்தனர். போரில் ஊக்கமுடைய அவர்கள் பின்பு பாணங்களைச் சேர்த்து விடுகிறவர்களாய் கொல்வதற்கு ஓடினர். மஹாதேஜஸ்வி ப்ரத்யும்னன் விளையாடுகிறவன் போல் அவர்கள் தலைகளை உருட்டித் தள்ளினான். உத்தம வில்லிகளான அந்த நூறு பேர்களையும் கொன்று ப்ரத்யும்னன் (மேலும்) போரை எதிர்பார்த்து நின்றான்.

நூறு பிள்ளைகள் கொல்லப்பட்டதைக் கேட்டு சம்பரன் கோபங் கொண்டான். என் தேரைப் பூட்டு எனத் தேர்ப்பாகனை ஏவினான். கட்டளையைக் கேட்டு அந்தத் தேர்பாகன் பூமியில் தலையால் வணங்கி பின்பு சேனையுடன் நன்கு பூட்டப்பட்ட தேரைக் கொண்டு வந்தான். சித்ரமாக ஆயிரம் மான்கள் கொண்டது. ஸர்ப்பமாகிற கயிற்றால் கட்டப்பட்டது புலித்தோல் விரிக்கப் பெற்றது. சப்திக்கும் சிறுமணிக் கூட்ட வரிசைகள் கொண்டது. சித்ரமாக ஓநாய் கூட்டங்கள் கொண்டது. பத்து வரிசையான சித்ரங்களால் விளங்குவது. நக்ஷத்திரங்களால் பதம் முழுதும் விசித்ரமாக விளங்குவது ஸ்வர்ணத் தகடு போல் மரத்தால் சோபிப்பது. அழகிய

கொடிகள் விளங்கும் உயர்நத சிகரத்தை யுடையது. உக்ர ஸிம்ஹத்தை த்வஜமாகவுடையது. நன்கு பிரித்தமைக்கப் பெற்ற காற்று வழிகள் உடையது. இரும்பு போல் மரம் கொண்டது. மந்த்ர மலை போன்ற உயர்ந்த சிகரம் உடையது. அழகிய சாமரங்களால் விளங்குவது. நக்ஷத்ர வரிசைகளால் சுற்றியமைக்கப்பட்டது. ஸ்வர்ண தண்டத்தால் உறுதியாக்கப்பட்டது. இப்படி விளங்கும் சோபையுடைய தேரில் சம்பரன் ஏறினான். தங்கத்தாலான அழகிய கவசம் பூண்டு வில்லோடு அப்படியே அம்புகள் எடுத்து யமனால் தூண்டப்பட்டு போரை விரும்பிப் புறப்பட்டான். நாலு மந்த்ரிகளுடனும் பெரிய சேனையால் சூழப்பட்டு போர்களத்தில் போர் புரியப் புறப்பட்டான். பத்தாயிரம் யானைகள் அப்படியே இருநூறு தேர்கள், எண்ணாயிரம் குதிரைகள், பத்து லக்ஷம் காலாட்படைகள். இந்த யுத்த வீரர்களால் சூழப்பட்டு அப்போது சம்பரன் புறப்பட்டான்.

போருக்குப் புறப்பட்ட அவனுக்கு உத்பாதங்கள் பல ஏற்பட்டன. ஆகாயம் கழுகுக் கூட்டங்களால் நிறைந்தது. சந்த்யா காலம் போன்ற நிறமுடைய மேகங்களின் ஒலியுண்டாயிற்று. மேகங்கள் கடுமையாகக் கர்ஜித்தன. ஆகாயத்திலிருந்து கொள்ளிகட்டை விழுந்தது. நரிகள் பெரிய ஸைன்யத்தின் அழிவை முன் கூட்டிக் காட்டுபவையாய் அமங்களமாக ஊளையிட்டன. கழுகு அஸுர ரத்தத்தை விரும்பி த்வஜத்தின் உச்சியில் இறங்கியது. அப்படியே தேர் நுனியில் உட்கார்ந்தது. பூமியில் கபந்தம் காணப்படுகிறது. சம்பரனின் தேரின் மேல் பறவைகள் சீ! சீ! கூசி! எனச் சப்தமிடுகின்றன. சூர்யன் ராஹுவால் முழு க்ரஹணமடைந்து சுற்றொளி தெரிந்தது. இடது கண் துடித்துப் பயத்தை அறிவித்தது. இடது கையும் துடித்தது. தேர் குதிரைகள் கால் தடுக்கி விழுந்தன. தேவசத்ரு சம்பரன் தலையில் காக்கை உட்கார்ந்தது. தேவர்கள் நெருப்போடு கலந்த ரத்த மழை பொழிந்தனர். போர்க்களத்தில் ஆயிரக்கணக்கான கொள்ளி கட்டைகள் விழுந்தன. எதிரில் செலுத்தும் பாகன் கையிலிருந்து சாட்டை கீழே நழுவியது. சாட்டை மிக அருகிலிருந்து காணப்பட்டது. இந்த உத்பாதங்களை லக்ஷியம் செய்யாமல் கோபங் கொண்டு ப்ரத்யும்னன் எதிர்த்து விரைந்து சென்றான். ஒரே சமயத்தில் ஒலிக்கும் பேரி, ம்ருதங்கம், பணவம் ஆனகம், துந்துபி இவைகளின் சப்தத்தால் பூமி நடுங்கியது. அந்தப் பேரொலியால் மிக நடுங்கிய மிருகங்களும், பறவைகளும் பயத்தால் கலங்கிய மனமுடையனவாய் அங்கிருந்து நாற்புறமும் ஓடின. போர் நடுவிலிருந்த க்ருஷ்ணன் மகன் ப்ரத்யும்னன் சத்ருவின் அழிவை ஆலோசித்து கணக்கில்லாத ஸைன்யங்களால் சூழப்பட்டு யுத்தம் புரிவதில் உறுதி கொண்டான்.

கோபங் கொண்ட சம்பரன் ஆயிரம் அம்புகளால் ப்ரத்யும்னனைச் செம்மையாக அடித்தான். அனங்கன் தன்னிடம் அடைந்த அந்த பாணங்களிலே தேர்ச்சி பெற்றவன் போல் வெட்டியெறிந்தான். ப்ரத்யும்னன் வில்லையெடுத்து அம்புமாரி பொழிந்தான். அம்பால் அடிக்கப்படாதவன் சத்ரு ஸேனையில் ஒருவருமில்லை. ப்ரத்யும்னனின் அம்பு வீச்சால் திருப்பப்பட்ட (முதுகு காட்டும்படி) அந்த ஸேனை பயத்தால் அடங்கிச் சம்பரன் அருகில் நின்றது. கோபங் கொண்ட அஸுரத் தலைவன் சம்பரன் தன் ஸேனை திரும்பி ஓடி வருவதைப் பார்த்து மந்திரிகளை அப்போது கட்டளையிட்டான். செல்லுங்கள். என் கட்டளையால் சத்ரு மகனை அடியுங்கள். சத்ரு அலக்ஷ்யம் செய்யத் தக்கவனில்லை யல்லவா? இவன் சீக்கிரம் கொல்லப்படட்டும. அலக்ஷ்யம் செய்யப்பட்ட நோய் போல் சீரத்தை அழித்து விடுவான். நிச்சயம். ஆதலால் இந்த துர்மதி பாபி ப்ரத்யும்னன், என் பிரியத்துக்காக கொல்லப்படட்டும்.

பிறகு அந்த மந்திரிகள் அவன் கட்டடளையைத் தலையால் ஏற்று கோபங் கொண்டு அம்புமாரி பொழிந்து வேகமாகத் தேரையோட்டினர். போரில் ஓடி வருகிற அவர்களைக் கண்டு மகரக் கொடியுடைய பலவான் ப்ரத்யும்னன் கோபத்துடனும், பரபரப்புடனும் வில்லை நாணேற்றி முன் நின்றான். ருக்மிணிக்கு ஆநந்தமளிக்கும் நல்ல தேஜஸ்வி ப்ரத்யும்னன் இருபத்தைந்து கூரிய அம்புகளால் தூர்தரனையும், அறுபத்து மூன்று கூரிய அம்புகளால் கேது மாலியையும், எண்பத்திரண்டு அம்புகளால் ப்ரமாத்தியையும் மிக்க கோபங் கொண்டு அடித்தான். பிறகு கோபங் கொண்ட அந்த மந்திரிகள் ஒவ்வொருவரும் அறுபது அறுபது அம்புகளால் ப்ரத்யும்னனை அடித்தனர். மகரத்வஜனை ப்ரத்யும்னன் அந்த எதிரியின் பாணங்கள் அடைவதற்கு முன்னரே தன் பாணங்களால் வெட்டியெறிந்தான்.

அவன் பிறகு அர்த்த சந்த்ர பாணத்தை யெடுத்து தூர்தரனின் தலையை எல்லா ராஜாக்களும், ஸேனைகளும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அழித்தான். பின்பு அவன் நல்ல கழுகுகளுடைய தங்கச் சிறகு கொண்ட நான்கு அம்புகளால் தூர்தரனது தேரில் கட்டப்பட்டுள்ள நான்கு குதிரைகளைக் கொன்றான். ஓர் அம்பால் தேர் கயிற்றையும் மற்றொன்றால் த்வஜத்தையும், அழகிய குடையையும், அறுபது அம்புகளால் தேர் சக்கரங்களின் அச்சையும் மகரத்வஜன் ஒடித்தெறித்தான். பின்பு நல்ல ஒளியுடைய இறக்கைகள் கொண்ட மற்றொரு அம்பையெடுத்து, அன்னியனை அண்டி பிழைக்கும் தூர்தரனின் ஹ்ருதயத்தில் எய்தான்.

துர்தரன் உயிர், சோபை, ஸத்வம், ப்ரபை இவற்றையிழநது புண்யம் குறைந்த க்ரஹம் போல் தேர்த் தட்டிலிருந்து விழுந்தான். சூரனை அஸுரன் துர்தரன் கொல்லப்பட்டதும், அஸுரத் தலைவன் கேதுமாலி அம்புக் கூட்டங்களை எய்து கொண்டு, ப்ரத்யும்னனை நோக்கி ஓடினான். பிறகு மிக்க கோபங் கொண்டு புருவத்தை நெரித்து பயங்கர முகமுடையவனாய் ப்ரத்யும்னனைக் குறித்து வேகமாக ஓடினான். நில்! நில்! என்றும் சொன்னான். கோபங் கொண்ட ப்ரத்யும்னன் மழைக்காலத்து மேகம் மலைமேல் பெரு மழைத்தாரை பொழிவது போல், அம்பு மழை பெய்தான். வில்லாளி ப்ரத்யும்னனால் அடிக்கப்பட்ட அஸுர மந்த்ரி, ப்ரத்யும்னன் வதத்தை விரும்பி சக்ரத்தை யெடுத்து வீசினான். க்ருஷ்ணனின் சக்ரத்தை யொத்த காந்தியுடைய ஆயிரம் ஆரங்கொண்டு (தன்னிடம்) வந்து சேர்ந்த அதை எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே துள்ளிக் குதித்துப் பிடித்து அந்த சக்ரத்தைக் கொண்டே கேதுமாலியின் தலையை அறுத்தான்.

தேவராஜன் இந்த்ரன் ருக்மிணி மகன் ப்ரத்யும்னனின் அரிய செயலைப் பார்த்து எல்லா தேவக் கூட்டங்களுடன் மிக்க ஆச்சர்யத்தையடைந்தான். கந்தர்வ அப்ஸரஸ்ஸுகளும் பூமாரி பொழிந்தனர். கேதுமாலி கொல்லப்பட்டதைப் பார்த்து சத்ருஹந்தா ப்ரமர்த்னன் பிறகு பெரிய ஸேனை கூட்டத்துடன் ப்ரத்யும்னனை நோக்கி ஓடினான். க்ருஷ்ணன் மகன் வதத்தின் பொருட்டு கதை, முசலம், சக்ரம், ப்ராசம், தோமரம், ஸாயகம், பிந்தபாலம், குடாரம், கூடம், முத்கரம் ஆகிய ஒளிவீசும் ஆயுதங்களை சேர்ந்தாற் போல் வீசினர். அந்த வீரப்ரத்யும்னனும் அந்த அஸ்த்ர கூட்டங்களை, அஸ்த்ர கூட்டங்களால் கைத்தேர்ச்சியைக் காண்பித்துக் கொண்டு பல படியாக வெட்டினான். ப்ரத்யும்னன் கோபங் கொண்டு யானைகளையும், யானைப் பாகர்களையும் அடித்தான். வீரர்களுடன் ரதங்களையும், குதிரைகளையும் செம்மையாக அடித்தான். அம்புக் கூட்டங்களால் அவைகளை தள்ளினான். அடிக்கப்படாத ஒருவரும் காணப்படவில்லை.

மகரத்வஜன் ப்ரத்யும்னன் இப்படி எல்லா சைன்யங்களையும் கலக்கினான். ரத்த நீர் அலைகளையுடைய பெரிய நதியை யுண்டு செய்தான். அந்நதி முத்துமாலை அலைகள் நிறைந்தது. மாம்ஸமும் ஜலமுமாகிற சேறுடையது. குடைகளாகிற தீவுகளையுடையது. தேர்களாகிற மணல் திட்டுகள், தோள்வளை குண்டலங்களாகிற ஆமைகள், த்வஜங்களாகிற மீன்கள், யானைகளாகிற பெரிய முதலைகள், கத்திகளாகிற கொடிய முதலைகள், ரோமங்களாகிற

பாசிக் கொத்துகள் அரைஞாண்களாகிற தாமரைத் தண்டுகள், அழகிய முகங்களாகிற தாமரைகள், சாமரங்களாகிற ஹம்ஸங்கள், தலைகளாகிற திமில் மீன்கள், ரத்தமாகிற தண்ணீர் இவையுடையது. தாண்டமுடியாதது. பயங்கரமானது. பார்க்க முடியாதது. செல்ல முடியாதது. தேஜஸ்ஸில்லாதவரால் தாண்டமுடியாது. சஸ்த்ரங்களாகிற முதலைகளையுடையது. கோரமானது. யமனுடைய ராஜ்யத்தை விசேஷமாக வளர்ப்பது. அந்த நதியில் ஸ்ரீமான் ருக்மிணி குமாரன் சத்ருஹந்தாவைக் குறித்து பல அம்புகளைப் பொழிந்தான். வில்லாளிகளை வீழ்த்தினான். சத்ருஹந்தா மறுபடியும் கோபங் கொண்டு சிறந்த அம்பை எய்தான். ப்ரத்யும்னனை அது அடைந்து, ஹ்ருதயத்தில் வீழ்ந்தது. அந்த பாணத்தால் அடிக்கப்பட்ட பலவான் ப்ரத்யும்னன் நடுங்கவில்லை. மரணமடையவிருக்கும் சத்ருஹந்தாவைக் குறித்துச் சக்தி ஆயுதத்தை யெடுத்தான். ப்ரத்யும்னனால் எறியப்பட்ட அந்தச் சக்தி ஆயுதம் ஜ்வாலை வீசி, இந்த்ரன் வஜ்ராயுதம் போல் சப்தம் செய்து போரில் சத்ருஹந்தாவின் ஹ்ருதயத்தைப் பிளந்து விழுந்தது. மஹாபலவான் சத்ருஹந்தா ஹ்ருதயம் பிளக்கப்பட்டு, சரீரம் சீர் குலைந்து, மர்மங்களும் எலும்புகளும் கட்டு விட்டு, ரத்தம் கக்கிக் கொண்டு விழுந்தான்.

சத்ருஹந்தா கொல்லப்பட்டதை ப்ரமர்த்தனன் பார்த்து நின்றான். அவன் முசலாயுதத்தை யெடுத்தான். பிறகு இந்த வார்த்தையைச் சொன்னான், துர்புத்தியுடையவனே! நில்! சாமான்யமான இவர்களுடன் போர் புரிந்து என்ன செய்யப் போகிறாய்? போரில் விருப்பமுள்ள நீ என்னுடன் போரிடு. பிறகு நீ இருக்கமாட்டாய். வ்ருஷ்ணி குலத்தில் பிறந்த உனது பிதா க்ருஷ்ணன் எங்களுக்கு சத்ரு. அவனுடைய மகனை (உன்னை) நான் கொல்லப் போகிறேன். பிறகு இவனும் (க்ருஷ்ணனும்) கொல்லப்பட்டவன் ஆவான். புத்தி கெட்டவனே! அவன் (க்ருஷ்ணன்) இறந்ததனால் எல்லாத் தேவர்கள் அழிவும் ஏற்படும். எல்லா திதி புத்திரர்களான அஸுரர்களும், தானவர்களும், சத்ருக்கள் அழிந்து போய் ஸந்தோஷம் அடையட்டும். எனது அஸ்த்ரத்தால் நீ கொல்லப்பட்டதும் உன் உடலிலிருந்து பெருகிய ரத்தங்களால், சம்பர புத்ரர்களுக்கு நீர்க்கடன் செய்வேன். இப்போது யௌவன பர்வத்திய நீ ஆயுள் முடிந்து கொல்லப்பட்டதைக் கேட்டு, அந்த பீஷ்மக புத்ரி ருக்மிணி பரிதாபமாக அழுவாள். சக்ரதாரி அந்த உன் பிதா, பயனற்ற ஆசையுடையவன் ஆவான். மந்த புத்தியுடைய அவன் நீ கொல்லப்பட்டதை அறிந்து பின்பு உயிரை விடுவான்.

இவ்விதம் சொல்லி ருக்மிணி மகனை பரிகாயுதத்தால் வேகமாக அடித்தான். அடிக்கப்பட்ட மஹா தேஜஸ்வி பராக்ரமம் வாய்ந்த ருக்மிணி மகன் ப்ரத்யும்னன் அவனுடைய தேரைக் கைகளாலேயே தூக்கி பூமியில் போட்டுச் சூர்ணமாக்கினான். அந்த ப்ரமர்த்தனன் அந்த ரதத்திலிருந்து கீழே குதித்துக் காலாளாகவே யிருந்தான். அந்தக் கதையை எடுத்து வேகமாக ப்ரத்யும்னனை துன்புறுத்தினான். அந்த கதையாலேயே ப்ரத்யும்னன், ப்ரமர்தனனை கொன்றான். ப்ரமர்த்தன அஸுரன் கொல்லப்பட்டதும் பார்த்து எல்லோரும் வேகமாக ஓடினர். ஸிம்ஹ பயத்தால் யானைகள் போல் ப்ரத்யும்னன் முன்னால் நிற்பதற்கு சக்தியற்றவராயினர். வேட்டை நாயைக் கண்ட ஆட்டுக் கூட்டம் போல் துன்பப்படும் அந்த ஸேனை, ப்ரத்யும்ன பயத்தால் கலங்கி ஓட்டமெடுத்தது. ரத்தம் நனைந்த ஆடையும், அவிழ்ந்த தலைமயிருமுடைய சோபையற்ற ஸேனை, ரஜஸ்வலையான ஸ்த்ரீ போல் முயற்சியற்றிருந்தது. ப்ரத்யும்னனின் பாணத்தால் பிடிக்கப்பட்டு, நடுக்கத்தால் வருந்தி, யுவதியொத்த வேஷத்தையுடைய அஸுர ஸேனை மன்மதப் போரைப் பார்க்கச் சக்தியற்றதாய் பெருமூச்சு விட்டுத் தன் வீட்டுக்குப் போக விரும்பி இங்கு (போர்களத்தில்) இருக்க விரும்பவில்லை. அந்தச் சேனை சிதறிப்போய் தலைவர்களை அடைந்தது.

அத்யாயம் 105 முற்றும்



## அத்யாயம் 106

## சம்பரன் - ப்ரத்யும்னன் போர் விவரம் விரிவாகக் கூறப்படல்

வைசம்பாயனர் சொன்னார் : ஜனமேஜயராஜனே! பிறகு சம்பரனும் கோபங் கொண்டு தேரோட்டியை நோக்கிச் சொன்னான். வீர! எனக்கு ஆச்சர்யம் செய்யும் இவனை ப்ரத்யும்னனை பாணங்களால் கொல்வேன் என் தேரை சத்ருக்கு முன்னால் சீக்கிரம் செலுத்து. அவன் ப்ரியத்தைச் செய்யும் [illegible] வார்த்தையைக் கேட்டு, பொன்மயமான [illegible] தேரை ஓட்டினான். வருகிற தேரை நோக்கி [illegible] ப்ரத்யும்னன் வில்லெடுத்து பொன்மயமான [illegible] அம்பைத் தொடுத்தான். தான் மிக்க கோபங் கொண்டு சம்பரனைக் கோபமூட்டிப் போரில் அந்த அம்பால் அடித்தான். அந்த அம்பால் ஹ்ருதயத்தில் அடிக்கப்பட்ட தேவசத்ரு அந்தச் சம்பரன் மிகக் கலங்கி

மயக்கமுற்றான். பிறகு ரத சக்தி ஆயுதத்தின் உதவி கொண்டு நின்றான். அந்தச் சம்பரன் உணர்ச்சி திரும்பப் பெற்று வில்லெடுத்துக் கோபத்துடன் ஏழு கூரிய அம்புகளால் ப்ரத்யும்னனை அடித்தான். ப்ரத்யும்னன் பின்பு அந்த பாணங்கள் தன்னையடையும் முன்னரே அவற்றை ஏழு அம்புகளால் ஏழாகத் துண்டித்தான். பிறகு எழுபது கூரிய அம்புகளால் சம்பரனையும் அடித்தான். திரும்பவும் மயில் தோகை இறக்கை கொண்ட ஆயிரம் அம்புகளால், மழைத் தாரைகளால் பர்வதத்தையறைவது போல் கோபத்துடன் சம்பரனையடித்தான். திக்குகளும், விதிக்குகளும் அம்பு மழையால் மூடப்பட்டன. ஆகாயம் இருள் மூண்டது. சூர்யன் காணப்படவில்லை.

சம்பரன் பின்பு மின்னல் அஸ்த்ரத்தால் இருட்டைப் போக்கி, ப்ரத்யும்னன் தேர்த் தட்டில் அம்புமாரி பொழிந்தான். ஜனமேஜயராஜனே! ஸ்ரீ ப்ரத்யும்னன் அப்போது அந்த அஸ்த்ரக் கூட்டத்தைக் கைத் திறனைக் காட்டி கூரிய முனையுடைய அம்பால் பலபடியாக வெட்டித் தள்ளினான். க்ருஷ்ணன் மகனால் அந்த அம்பு மாரி தடுக்கப்பட்ட பிறகு, காலசம்பரன் மாயையால் வ்ருக்ஷ மழை பொழிந்தான். மர மழையின் மிகுதியைப் பார்த்து பிறகு கோபாவேசம் கொண்ட ப்ரத்யும்னன் ஆக்னேயாஸ்த்ரத்தை விட்டான். அதனால் மரங்களை நாசம் செய்தான். மர மழை சாம்பலானதும் கல் மாரிக் கூட்டங்களைப் பொழிந்தான். ப்ரத்யும்னனோ அதை வாயுவாஸ்த்ரத்தால் போர்களத்தில் சிதறவடித்தான்.

ராஜனே! பராக்ரமமுடைய தேவ சத்ரு சம்பரன் மேலான மாயை செய்தான். ஸிம்ஹங்கள், புலிகள், பன்றிகள், சிவிங்கிகள், கரடிகள், [illegible], மேகம் போன்ற யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், இவைகளை வில்லை வளைத்து ப்ரத்யும்னன் தேரில் விட்டான். அப்போது ப்ரத்யும்னன் காந்தர்வாஸ்த்ரத்தால் துண்டம் துண்டமாக்கினான். ப்ரத்யும்னனால் தன் மாயை அழிக்கப்பட்டதைச் சம்பரன் பார்த்து, பிறகு கோபாவேசங் கொண்டு வேறு மாயையை விட்டான். மஹா மனதுடைய க்ருஷ்ணன் மகன், தாமரைக் கண்ணன் ப்ரத்யும்னன் ஸிம்ஹ மாயையை ச்ருஷ்டிக்க மனதில் நினைத்தான். புத்திமான் ருக்மிணி மகனால் படைக்கப்பட்ட ஸிம்ஹமாயையால் யானை மாயை சூர்யனால் இருள் போல் நஷ்டமாயிற்று. யானை மாயை அழிக்கப்பட்டதை மஹா அஸுரன் பார்த்து வேறொரு ஸம்மோஹினி எனும் மாயையை அந்தத் தானவ ஸ்ரேஷ்டன் படைத்தான். மாயையினால் செய்யப்பட்ட அந்த மோஹினி எனும்

மாயையைப் பார்த்த வீர்யவான் ப்ரத்யும்னன் ஸமிஜ்ஞை என்கிற அஸ்த்ரத்தால் அழித்தான். அப்போது அழிக்கப்பட்ட மாயையால் சம்பரன் கோபங் கொண்டான். பிறகு அந்த மஹா தேஜஸ்வீ அஸுரத் தலைவன் ஸிம்ஹ மாயையைப் படைத்தான். கீர்த்தி வாய்ந்த ப்ரத்யும்னன் ஓடி வருகிற ஸிம்ஹங்களைப் பார்த்து காந்தர்வாஸ்த்ரத்தையெடுத்து அப்போது சரபங்களைப் படைத்தான். பலம் வாய்ந்த நகங்களையும், கோரைப் பற்களையும் கொண்டு எட்டு பாதங்களுடைய அந்தச் சரபங்கள் அந்த போரில் ஸிம்ஹங்களைக் காற்று ஓட்டும் மேகங்களைப் போல் விரட்டின. அஷ்டபாத மாயையால் விரட்டப்பட்டு ஓடுகிற ஸிம்ஹங்களைப் பார்த்து சம்பரன் சிந்தித்தான்.

இவனை எப்படிக் கொல்வேன்? நான் மூர்க்க ஸ்வபாவமுடையவன். குழந்தைப் பர்வத்திலேயே என்னால் கொல்லப்படவில்லை. துர்மதி ப்ரத்யும்னன் யௌவன தேஹத்தை அடைந்துள்ளான். அஸ்த்ரங்களிலும் தேர்ச்சி பெற்றவன். ஆகையால் போர் முனையிலுள்ள இந்த சத்ருவை எப்படிக் கொல்வேன்? "பந்நகீ" எனும் பயங்கர கொடிய அந்த மாயை இருக்கிறது. அஸுர சத்ரு தேவ தேவன் ருத்ரனால் எனக்குக் கொடுக்கப்பட்டது. ஸர்பங்களால் வ்யாபிக்கப்பட்ட அந்த மஹா மாயையைப் படைக்கிறேன். துஷ்டாத்மா மாயாமலி பலவானான இவன் அதனால் தஹிக்கப்படுவான். விஷஜ்வாலை நிறைந்த அந்தப் பந்நகீ மாயை படைக்கப்பட்டது. அந்தப் பந்நகீ மாயையால் தேர்க் குதிரைகள் பாகன் இவைகளுடன் கூடிய ப்ரத்யும்னனை அம்புக் கட்டுகளால் கட்டினான். வ்ருஷ்ணி குலத்துதித்த ப்ரத்யும்னன் அப்போது கட்டப்படும் தன்னையறிந்து ஸர்ப்பத்தை யழிக்கும் "ஸுபர்ண" மாயையை த்யானம் செய்தான். மஹாத்மா ப்ரத்யும்னனால் அந்த ஸுபர்ண மாயையை த்யானிக்கப்பட்டதும் கருடன்கள் ஸஞ்சரித்தன. மஹா விஷம் கொண்ட நாகங்கள் அழிந்தன. ஸர்ப்ப மாயை அழிக்கப்பட்டதும் தேவாஸுரர்கள் புகழ்ந்தனர்.

வீர! மஹாபாஹோ! ருக்மிணிக்கு ஆனந்தம் கொடுப்பவனே! உன்னால் மாயை அடக்கப்பட்டது. நாங்கள் மிக்க ஸந்தோஷம் அடைந்தோம். ஸர்ப்ப மாயை அழிக்கப்பட்டதும் சம்பரன் திரும்ப ஆலோசித்தான். யமதண்டம் போன்ற முத்கர ஆயுதம் எனக்கு இருக்கிறது. அது தேவ, தானவ மனிதர்களால் போரில் தடுக்கப்பட முடியாதது. மிக மகிழ்ந்த பார்வதியால் முன்னர் எனக்குக் கொடுக்கப்பட்டது.அத்தேவி, சம்பரா பொன்னாபரணங் கொண்ட இந்த முத்கரத்தை நீ எடுத்துக் கொள். மிக அரிய தவம்

செய்து என்னால் என் சரீரத்திலிருந்து படைக்கப்பட்டது. மாயாந்தக்கரணம் எனப் பெயர். எல்லா அஸுரர்களையும் அழிக்க வல்லது. சும்பன், நிசும்பன் ஆகிய இஷ்ட ரூபியான இரண்டு கொடிய பலம் வாய்ந்த அஸுரர்கள் கூட்டத்துடன் (இதன் மூலம்) என்னால் அழிக்கப்பட்டனர். அது ப்ராண ஸந்தேஹம் வந்த போது உன்னால் சத்ருவைக் குறித்து விடத்தக்கது என்று சொல்லி அப்போதே அங்கே மறைந்தாள்.

அந்த சிறந்த முத்கரத்தைச் சத்ருவைக் குறித்து விடுவேன். அந்தச் சம்பரன் மனதை யறிந்து தேவராஜன் இந்த்ரன் நாரதரை நோக்கிச் சொன்னன். நாரதரே! ப்ரத்யும்னனின் தேரை நோக்கி நீர் சீக்கிரம் செல்லும்; மஹாபாஹு ப்ரத்யும்னனுக்கு முன் ஜன்மத்தை நினைவுபடுத்தும். சம்பரனின் வதத்திற்காக வைஷ்ணவ அஸ்த்ரத்தை இவனுக்குக் கொடும். அஸுர ஸம்ஹாரத்தின் பொருட்டு பிளக்க முடியாத கவசத்தையும் கொடும். இவ்விதம் இந்த்ரனால் சொல்லப்பட்ட நாரதர் சீக்கிரம் சென்றார். ஆகாசத்திலிருந்து கொண்டு ப்ரத்யும்னனைக் குறித்துச் சொன்னார் : 'குழந்தாய்! தேவகந்தர்வன் நாரதனாகிய என்னை பார். தேவேந்த்ரனால் உனக்குச் சொல்லும் பொருட்டு, அனுப்பப்பட்டு வந்திருக்கிறேன். கௌரவம் கொடுப்பனே! உனது முன் ஜென்மத்தை நினைத்துப் பார். மன்மதனாயிருக்கிறாய். ருத்ர கோப நெருப்பால் எரிக்கப்பட்டாய். அதனால் இங்கு அநங்கன் எனச் சொல்லப் படுகிறாய். நீ வ்ருஷ்ணி குலத்தில் பிறந்திருக்கிறாய். ருக்மினி வயிற்றில் கேசவனுக்குப் பிறந்தவன், ப்ரத்யும்னன் எனச் சொல்லப்படுகிறாய். கௌரவம் தருபவனே! நீ பிறந்த அறையிலிருந்து ஏழு நாட்களுக்குள்ளாகச் சம்பரனால் அபஹரித்து இங்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறாய். மஹாபாஹோ! தேவ கார்ய சித்தியின் பொருட்டு சம்பர வதத்திற்காக அபஹரிக்கப்பட்ட நீ, கேசவனால் ஒன்றும் அறியாதவன் போல் அலக்ஷ்யம் செய்யப்பட்டாய். சம்பரனின் பார்யை மாயாவதி என்பவளே உனது முற்பிறவியில் மனைவியான மங்கள ரதியென்று அறி. உனது பாதுகாப்புக்காக சம்பரன் வீட்டில் (ரதி) வஸித்தாள். அந்தத் துராத்மா மோஹிப்பதற்காகத் தன் சரீரத்தில் பிறந்த மாயையை அவனுடைய போகத்துக்கு ரதி அனுப்பி கொண்டிருக்கிறாள்.

ப்ரத்யும்னா! இப்படி அறிந்து உனது பத்னி அங்கு ஸ்திரமாக இருக்கிறாள். வீரா! வைஷ்ணவாஸ்த்ரத்தால் அந்தச் சம்பரனைப் போரில் கொன்று, மனைவி மாயாவதியைக் கைக் கொண்டு த்வாரகைக்குப் போகக் கடவாய். சத்ருவை அடக்குபவனே! இந்த

வைஷ்ணவாஸ்த்ரத்தையும், மிக்க சோபையுடைய கவசத்தையும் ஏற்றுக் கொள். இந்த்ரனால் சொல்லப்பட்டு உனக்கு அனுப்பப்பட்டுள்ளன. குழந்தாய்! இப்போது எனது மற்றொரு வார்த்தையும் சந்தேஹமின்றிக் கேட்கப்படட்டும். இந்தத் தேவ சத்ருவின் முத்கரம் எப்போதும் பலம் வாய்ந்தது. பார்வதி மிக மகிழ்ந்த போது சத்ருவை அடக்க வல்லதாக கொடுக்கப்பட்டது. தேவ தானவ மனிதர்களாலும் வீணாகாதது. அந்த அஸ்த்ரத்தை அடக்க தேவி பார்வதியை தியானம் செய்ய கடவாய். ஸ்துதிக்கவும் தக்கவள். போரில் முனைந்தவர்களால் வணங்கத் தக்கவளும் ஆவாள். அதில் சத்ருவுடன் போரில் முயற்சி செய்யப்படட்டும். இப்படி சொல்லி நாரதர் இந்த்ரனிடம் சென்றார்.

அத்தியாயம் 106 முற்றும்



## அத்தியாயம் 107

### ப்ரத்யும்னன் பார்வதியைத் துதித்தல்–அவள் ஈந்த வரத்தின்படி சம்பரனின் முத்கரம் தாமரை மாலையாகுதல்–பின்பு ப்ரத்யும்னன் விடுத்த வைஷ்ணவாஸ்த்ரத்தால் சம்பரன் மடிதல்.

வைசம்பாயனர் சொன்னார் : கோபங் கொண்ட சம்பரனும், பிறகு அந்த முத்கராயுதத்தை யெடுத்தான். முத்கரம் எடுக்கப்படும் போது பன்னிரு ஆதித்யரும் ப்ரகாசித்தனர். எல்லா பர்வதங்களும் நடுங்கின. பூமியும் அப்படியே. ஸமுத்திரங்கள் பொங்கின. தேவதைகளும் கலங்கினர். ஆகாயம் கழுகுகளால் நிறைந்தது. கொள்ளிக்கட்டை வீழ்ந்தது. மேகங்கள் ரத்த மழை பொழிந்தன. காற்று கடுமையாக வீசிற்று. இந்தப் பெரிய உத்பாதங்களை நோக்கி அந்த வீர ப்ரத்யும்னன் கோபத்துடன் ரதத்திலிருந்து இறங்கி கைகூப்பி நின்றான்.

[illegible] பார்வதி தேவியை வணங்கினான். தேவியைத் தலையால் வணங்கி ஸ்துதிக்க ஆரம்பித்தான். 'காத்யாயனி, கிரிஜா, த்ரைலோக்யமாதா, சத்ருநாசினி, கௌரி, சிவப்ரியே, சம்பரனைக் கொல்பவளே, நிசும்பனைக் கொன்றவளே, காளராத்ரி, கௌமாரி, பைரவப்ரியே, விந்த்ய வாஸப்ரியே, துக்கத்தை அழிப்பவளே, ரணதுர்கை, ரணப்ரியை, மஹாதேவீ ஜயை, விஜயை, அபராஜிதா, அஜிதா, சத்ருநாசினி, கண்டைக்கையளே, கண்டாமாலையளே, த்ரிசூலினி, மஹிஷாஸுரனை அழிப்பவளே,

ஸிம்ஹ வாஹனையே, ஸிம்ஹக்கொடியளே, ஏகாநம்ஸா, காயத்ரீ, விப்ரர் ஸாவித்ரியே உன்னை வணங்குகிறேன். தேவீ! என்னை எப்போதும் காப்பாற்று. போரில் வெற்றியைக் கொடு.'

இவ்விதம் ப்ரத்யும்னனின் துதியால் ஸந்தோஷமடைந்த துர்க்கா தேவி மனமகிழ்வுடன் ப்ரீதி நிறைந்த ஹ்ருதயத்துடன் வார்த்தை சொன்னாள்: 'என்னை பார், ருக்மிணிக்கு ஆனந்தத்தை வளர்பவனே! மஹாபாஹோ! வரம் கேட்பாயாக, குழந்தாய்! என் தர்சனம் வீணாகாது.' தேவியின் வார்த்தையைக் கேட்டு மனமகிழ்ச்சியால் மயிற்கூச்செறிந்து, தேவியைத் தலையால் வணங்கி விண்ணப்பம் செய்யப் புகுந்தான். தேவி! நீ ஸந்தோஷமடைந்தால் நான் விரும்பியது கொடுக்கப்படட்டும். வரங்கொடுப்பளே! வரம் யாசிக்கிறேன். எல்லா விரோதிகளையும் ஜயிக்க வேண்டும். உனது சரீரத்தில் உண்டான முத்கரம் சம்பரனுக்குக் கொடுக்கப்பட்டது. இது என் உடலையடைந்து தாமரை மாலையாக மாறவேண்டும். அந்தத் தேவியும் அப்படியே ஆகட்டும் எனச் சொல்லி அங்கேயே மறைந்தாள்.

மஹா தேஜஸ்வி ப்ரத்யும்னனும் மகிழ்ந்து தேரில் ஏறினான். பிறகு அந்த முத்கரத்தை எடுத்து கோபாவேசம் கொண்ட வீர்யவான் சம்பரன் சுழற்றி ப்ரத்யும்னன் மார்பில் எறிந்தான். அந்த முத்கரம் மன்மதனை யடைந்து தாமரை மாலையாக மாறியது. நக்ஷத்ர மாலையால் சூழப்பட்ட சந்த்ரன் போல், கழுத்தில் மாலை கொண்ட ப்ரத்யும்னன் ப்ரகாசித்தான். முத்கரம் பூமாலையானதைப் பார்த்த பிறகு தேவர், கந்தர்வர், ஸித்தர், ப்ரம்மரிஷிகள் எல்லோரும் நல்லது! நல்லது! என்று ப்ரத்யும்னன் எதிரில் சொன்னார்கள். ப்ரத்யும்னனைக் கொண்டாடினர். நாரதரால் சொல்லப்பட்டபடியே வில்லெடுத்து வைஷ்ணவமான சிறந்த அஸ்த்ரத்தைத் தொடுத்தான். இந்த வார்த்தையைச் சொன்னான், நான் ருக்மிணி கேசவன் புத்ரனல்லவா? அப்படியானால் அந்த ஸத்யத்தால் இந்தப் பாணம் சம்பரனைப் போரில் கொல்லட்டும். மஹா மனதையுடைய ப்ரத்யும்னன் இவ்விதம் சொல்லி பிறகு வில்லை யிழுத்து அம்பைத் தொடுத்து, மூவுலகையும் எரிப்பது போல் சம்பரனைக் குறித்து எய்தான். வ்ருஷ்ணி ஸிம்ஹத்தால் விடப்பட்ட ராக்ஷஸர்களை மயக்கும் அந்த அம்பு சம்பரன் ஹ்ருதயத்தைப் பிளந்து பூமிக்கு வந்தது. மாம்ஸம், நரம்பு, எலும்பு, தோல், ரத்தம் ஒன்றும் இல்லை. அந்த எல்லாம் வைஷ்ணவ தேஜஸ்ஸால் சாம்பலாயிற்று. பெரிய தேஹமுடைய கீழ்மகன் சம்பராஸுரன் கொல்லப்பட்டதும் தேவகந்தர்வர் மகிழ்ந்தனர். அப்ஸரஸ் கூட்டங்கள் ந்ர்த்தனமாடினர். ஊர்வசி, மேனகை, ரம்பை,

விப்ரஸித்தி, திலோத்தமை இந்த அப்ஸரஸ்கள் மனமகிழ்ந்து நடனமாடினர். தேவராஜன் மிக மகிழ்ந்து, எல்லாத் தேவகணங்களும் ஸ்தாவர ஜங்கமங்களுடன் ப்ரத்யும்னனைப் பூமாரியால் அர்ச்சித்தனர். க்ருஷ்ணன் மகனால் வைஷ்ணவ அஸ்த்ரங் கொண்டு அஸுர ராஜன் போரில் கொல்லப்பட்ட பிறகு சத்ரு பயம் நீங்கிய எல்லா தேவர்களும் ப்ரத்யும்னனை ஸ்தோத்திரம் செய்து கொண்டே சென்றனர். அந்த ருக்மிணி மகனும் போர்க் களைப்புடனேயே நகர வாயிலையடைந்தான். மனைவியுடன் கணவன் போல் சீக்ரமாக ரதிக்கு காக்ஷியளித்தான்.

அத்யாயம் 107 முற்றும்



## அத்யாயம் 108

### ப்ரத்யும்னன் தன் மனைவி மாயாவதியுடன் துவாரகையைச் சேர்தல்-ருக்மிணியின் அளவற்ற மகிழ்ச்சி

வைசம்பாயனர் சொன்னார்: மாயை அறிந்து மாயம் செய்யும் வீரன் அழிவற்ற கால சம்பரன் மாயம் முடிந்து போரில் அஷ்டமி திதியில் கொல்லப்பட்டான். ரிஷபேந்த நகரில் அந்த அஸுர ஸ்ரேஷ்டனைக் கொன்று மாயாவதி தேவியை அழைத்துக் கொண்டு, பிதாவின் நகருக்குச் சென்றான். பராக்ரம சோபையுடைய ப்ரத்யும்னன் ஆகாயத்தில் மறைந்திருந்து பிதாவின் தேஜஸினால் ப்ரகாசிக்கப்பட்ட அழகிய நகருக்கு வந்து சேர்ந்தான். ருக்மிணி இருந்த அவன் ஆகாயத்திலிருந்து மாயாவதியுடன் கூட அழகிய ரூபங்கொண்ட மன்மதன் போல் கேசவன் அந்தப்புரத்தில் குதித்தான்.

அப்படி அங்கு அவன் குதித்ததும் சோபையுள்ள மடந்தைகள் ஆஸ்சர்யம், பயம், மகிழ்ச்சி கொண்டவர்கள் அழகிய கண்களுக்கு மகிழ்ச்சி தரும் மன்மதன் போன்ற தோற்றமுடைய மனைவியுடன் கூடினவனுமான ப்ரத்யும்னனை மகிழ்ந்த முகத்துடன் அவர்கள் பார்த்தனர். அடிக்கடி கோவிந்தன் என்று விரும்பு முகமுடைய அவனைப் பார்த்து அந்த எல்லா க்ருஷ்ணனின் மனைவிகளும் அன்புடைய மனத்தராயினர். நூற்றுக் கணக்கான தோழிகளுடன் கூடிய புத்ர வாத்ஸல்யமுடைய ருக்மிணியும் அவனைப் பார்த்து சோகத்தால் கண்ணீர் வடிய வார்த்தை சொன்னாள். இரவில் பின் ஜாமத்தில் என்னால் ஸ்வப்னம் காணப்பட்டது. க்ருஷ்ணனால் மாந்தளிர் கொண்டு வந்து கொடுக்கப்பட்டது. மடியில் வைத்து

சந்த்ர கிரணம் போன்ற மங்களமான முத்துமாலை என் கழுத்தில் கட்டப்பட்டது. வெண்ணாடையுடுத்து அழகிய கூந்தலுடைய, தாமரை கையில் கொண்ட அழகிய பெண் என்னைப் பார்த்துக் கொண்டே என் வீட்டில் புகுந்தாள். மறுபடியும் அவளால் பிடித்து மனோஹரமான நீர் கொண்டு ஸ்நாநம் செய்விக்கபட்டேன். பின்பு அந்தப் பெண் தாமரைப் பூமாலையைக் கையிலெடுத்து என் தலையில் உச்சி மோந்து அந்தப் புனித மாலை எனக்கு கொடுக்கப்பட்டது.

இவ்விதம் ஸ்வப்னத்தைச் சொல்லி மனமகிழ்ந்த ருக்மிணி தேவி தோழியால் சூழப்பட்டு அந்தக் குமாரனை அடிக்கடி பார்த்தாள். ப்ரிய ரூபமுடைய தீர்க்காயுளுடைய இவன் பாக்யசாலியான என்னுடைய மகனல்லவா? இத்தகையவன் காமனைப் போன்றவன். யௌவன முதல் தசையில் இருக்கிறான். குழந்தாய்! உன்னால் ஜீவ புத்ரையான பாக்யவதியான கார்மேக வண்ணமுடைய நீ மனைவியுடன் எதன் பொருட்டு இங்கு வந்தாய்? பலவானுன யமனால் நீ எடுத்துப் போகப்படாமலிருந்தால் இந்த வயதில் நீ என் மகன் ப்ரத்யும்னன்தான். மிகத் தெளிவு! தெளிவு! நீ க்ருஷ்ணன் மகன் என்னால் நினைக்கப்பட்டது பொய்யில்லை. அடையாளங்களால் நீ அறியப்பட்டிருக்கிறாய். சக்ரமில்லாமல் ஜனார்த்தனனே நீ. முகம் நாராயணனது போன்றே. குஞ்சியம், குஞ்சி முனையும் அப்படியே தொடைகள், மார்பு புஜங்கள், என் மைத்துனன் பலராமனுக்கு ஒத்தவை. உடலால் வ்ருஷ்ணி குலம் முழுவதையும் ப்ரகாசிக்கச் செய்து கொண்டிருக்கும் நீ யார்? உனது மேலான சரீரம் நாராயணனது போன்று திவ்யமாயிருக்கிறது.

இச்சமயத்தில் க்ருஷ்ணன் சம்பரன் வதத்தைப் பற்றி நாரதர் வார்த்தையைக் கேட்டுத் திடீரென ப்ரவேசித்தான். அந்த மன மகிழ்ந்த க்ருஷ்ணன் மன்மத லக்ஷணங் கொண்ட மூத்த மகனையும் மருமகள் மாயவதியையம் பார்த்தான். அந்த க்ருஷ்ணன் தேவதை போன்ற ருக்மிணியைக் குறித்துச் சொன்னான், தேவி இந்த என் பிள்ளை விக்ரேஷ்திபவனாய் திடீரென வந்துள்ளான். இவனால் மாயா பேரில் வல்லவன் சம்பரனை கொன்று, எல்லாத் தேவர்களாலும் துஷ்ப்ரத்தி மாயைகள் அபஹரிக்கப்பட்டன. இந்த மங்களமான பதிவ்ரதையான பத்னி உன் மகனின் மனைவி மாயாவதியென்ற பேரால் சம்பரன் வீட்டில் வஸித்தவள். இவள் சம்பரன் மனைவி எனத் துக்கம் வேண்டாம். முன் மன்மதன் அங்கமில்லாமல் அழிந்த போது மன்மதன் ப்ரிய பத்னியாயிருந்த ரதி என்பவள் இவள். சம்பரன் மனைவியில்லை. அந்த அஸுரனை மங்களமான இவள் மாயாரூபத்தால் அடிக்கடி மோஹமடையச்

செய்கிறாள். அவனுடைய யௌவன பர்வ வசத்தில் இவள் இல்லை. இந்த சுபமானவள் தன் மாயா ரூபத்தைச் செய்து சம்பரனையடைந்தாள். இந்தச் சிறந்த பெண் என் மகனின் மனைவி. உனது மருமகள். உலகம் விரும்பும் ப்ரத்யும்னனுக்கு மனோமய உதவியைச் செய்வாள். இந்தக் கௌரவிக்கத் தக்க மூத்த மருமகளை எனது மாளிகைக்கு அழைத்து போ. வெகுகாலம் மறைந்து மீண்டு வந்திருக்கும் உன் மகனை ஏற்றுக் கொள். க்ருஷ்ணனால் சொல்லப்பட்ட வார்த்தையை ருக்மிணி தேவி கேட்டு அளவற்ற மகிழ்ச்சியடைந்து வார்த்தை சொன்னாள். ஆச்சர்யம். வீர புத்ரன் சேர்க்கையால் மிகவும் பாக்யவதியானேன். எனது ஆசை இப்போது பலன் பெற்றது. எனது மனோரதம் நிறைவேறிற்று. வெகு காலமுன் மறைந்த மகனைக் காண்பது மனைவியுடன் கூட குழந்தாய் இங்கு வா. மனைவியுடன் கூட வீட்டில் புகுவாய். பிறகு அந்த ப்ரத்யும்னன் கோவிந்தனையும் அந்த தாயையும தி்ருவடிகளில் வணங்கி, மஹாபலவானான பலராமனையும் பூஜித்தான். மேலான வீரன் வீர்யவான் கேசவன் பலவான்களில் சிறந்த ப்ரத்யும்னனைத் தூக்கி அணைத்து உச்சி மோந்தான். தங்காபரணம் பூண்ட ருக்மிணிதேவியும் அந்த மருமகளைத் தூக்கி அருகில் அழைத்து அணைத்து அன்புடன் தழுதழுத்த குரலுடன் பேசினாள். இந்த்ரனுடன் சசி தேவியை மாமியார் அதிதி தேவி அழைத்து போவது போல், மகனை மனைவியுடன் அப்போது மாளிகையைச் சேர்ந்து உள்ளே ருக்மிணி தேவி அழைத்துச் சென்றாள்.

அத்யாயம் 108 முற்றும்



## அத்யாயம் 109

## பலராமனால் ப்ரத்யும்னனுக்கு ரக்ஷைக்காகச் சொல்லப்பட்ட ஆஹ்நிக ஸ்தோத்ரம் இது ஆயுள், செல்வம், வெற்றி கொடுப்பது

(இந்த ஸ்தோத்ரத்தில் பிரம்மா வேதங்கள், அங்க உபாங்கங்கள், பஞ்சபூதங்கள், மஹரிஷிகள், முப்பத்துமூன்று தேவர்கள், குலபர்வதங்கள், ஸர்ப்பராஜாக்கள், புண்ய நதி தீர்த்தங்கள், தேவகன்னிகைகள், மாதாக்கள், க்ரஹங்கள், ஆபத்ஸஹாயர்கள், முனிவர்கள், யக்ஞசிரேஷ்டர்கள், மங்களத்ரவ்யங்கள், ஆயுதங்கள் இவை முக்கியமாக ரக்ஷைக்காகச் சொல்லப்பட்டு பலஸ்ருதியோடு முடிகிறது.)

வைசம்பாயனர் சொன்னார் : ராஜஸ்ரேஷ்டனே! வெற்றி வீரனில் சிறந்தவனே! ஜனமேஜயா! அந்த சம்பரனைக் கொன்று ப்ரத்யும்னன் த்வாரகைக்கு வந்ததும் பலதேவனால் ரக்ஷைக்காகச் சொல்லப்பட்ட ஆச்சர்யமான ஆஹ்நிக ஸ்தோத்ரம் சொல்லப்படுகிறது. அதை மாலையில் ஜபிப்பவன் புனித ஆத்ம ஸ்வரூபத்தை அடைவான். பலதேவனாலும், விஷ்ணு க்ருஷ்ணனாலும், தர்மத்தில் ஆசையுள்ள ரிஷிகளாலும், முனிவர்களாலும் சொல்லப்பட்டது. ஒரு ஸமயம் ருக்மிணி மகன் ப்ரத்யும்னன் பலராமனுடன் வீட்டில் அமர்ந்திருந்தான். பிறகு அவனை வணங்கி கைகூப்பி, ப்ரத்யும்னன் சொன்னான் என் பிதா க்ருஷ்ணரின் தமையனுரே! மஹாபாக்யரே! ரோஹிணி தேவியின் மகனாரே! ப்ரபோ! நான் ஜயித்துப் பயமற்றிருக்கக்கூடிய ஒரு ஸ்தோத்திரத்தை எனக்குச் சொல்ல வேண்டுகிறேன். ஸுராஸுர ஜகத்பதி ப்ரஹ்மா என்னைக் காக்கட்டும். பிறகு ஓங்காரம், வஷட்காரம், ஸாவித்ரீ, மூன்று விதிகள், ருக் யஜுஸ் ஸாம வேதங்கள், சந்தஸ்ஸுக்கள், அதர்வண வேதங்கள், ரஹஸ்ய விஸ்தரங்களோடு கூடிய நான்கு வேதங்கள், அங்க உபாங்கங்கள் எல்லா வ்யாக்யானங்களும் என்னைக் காக்கட்டும். ப்ருதிவீ, வாயு, ஆகாசம், அப்பு ஐந்தாவதான ஜ்யோதி, இந்த்ரியங்கள், மனது, புத்தி, அப்படியே ஸத்வம், ரஜஸ், தமஸ், வ்யான, உதான ஸமான ப்ராண அபானமோடு ஐந்து, பிற ஏழு வாயுக்களும் அவற்றிற்கு உட்பட்ட இந்த உலகும், மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது, ப்ருஹு, பகவான் வசிஷ்டர் அந்த மஹர்ஷிகளும் என்னைக் காக்கட்டும். கச்யபர் ஆதியான முனிவர்கள் பதினைவர், பத்து ருத்விக்குகள், கணங்களுடன் கூடிய நர நாராயண தேவர்கள், எட்டே மாதும் என்னைக் காக்கட்டும். பதினோரு ருத்ரர்கள் பன்னிரு ஆதித்தியர்கள், எட்டு வஸுக்களாகிய தேவர்கள், இரு அச்வினிகள், ஹ்ரீ:, ஸ்ரீ:, லக்ஷ்மி, ஸ்வதா, புஷ்டி, மேதா, துஷ்டி, ஸம்ருதி, த்ருதி, ஸுராஸுர மாதாக்களாகிய அதிதி, தனு, ஸிம்ஹிகா, ஹிமவான், ஹேமகூடம், நிஷத:, ஸ்வேத, ஸஹ்ய பர்வதம், உதயம், மலயம், மேரு, மந்த்ரம், தர்துரம், க்ரௌஞ்சம், கைலாசம், மைநாகம், ஆகிய பூமியைத் தாங்கும் மலைகள் என்னைக் காக்கட்டும். சேஷன், வாஸுகி, விசாலாக்ஷன், தக்ஷகன், ஏலாபத்ரன், சுக்ல வர்ணன், கம்பலன், அச்வதரர்களாகிய இருவர், ஹஸ்திபத்ரன், பிடரகன், கார்க்கோடகன், தனஞ்ஜயன், பூர்ணகன், கரவீரகன், ஸுபநாஸ்யன், ததிமுகன், ச்ருங்கார பிண்டகன், மூவுலகப் புகழ் பெற்ற பகவான் மணி நாகன், நாகராஜன், அதிகரணன், ஹாரித்ரகன் இவர்களும் சொல்லப்படாத மற்ற பூமியைத் தாங்கும் ஸத்ய

தர்மமுடைய ஸர்ப்ப ராஜாக்களும் என்னைக் காக்கட்டும். நான்கு ஸமுத்ரங்களும், நதிகளில் சிறந்த கங்கையும் காக்கட்டும். ஸரஸ்வதி, சந்த்ரபாகா, சதத்ரு தேவிகா, சிவா த்வாரசுவதி, பிபாஸா, ஸரயு, யமுனா, கல்மாஷி ரதோஷ்மா, பாஹுதா, ஹிரண்யதா, பலக்ஷா, இக்ஷுமதி, ச்ரவந்தி, ப்ரஹத்ரதா, விக்யாதா, சர்மன்வதீ, புண்யா, வதூஸரா, இவைகளும் சொல்லப்படாத மற்ற நதிகளும் வடதேசத்தில் பாயும் நதிகளும் தமது தீர்த்தங்களால் என்னை ஸ்நாநம் செய்விக்கட்டும். வேணீ, கோதாவரி, ஸீதா, காவிரி, கௌங்கணவதி, க்ருஷ்ண, வேணு, சுக்தி மதீ, தமஸா, புஷ்பவாஹிநீ, தாம்ரபரணி, ஜ்யோதிதரா, உத்பலா, உதும்பராவதி, வைதரணி, புண்யமான கோமதி, மேற்கு பாயும் நதியாகிய புகழ் பெற்ற சோண, இவைகளும் சொல்லப்படாத மற்ற தென் தேசத்து நதிகளும் தமது தீர்த்தங்களால் என்னை ஸ்நாநம் செய்விக்கட்டும். புண்யமான மஹி, சுப்ரவதி, ஸிந்து, வேத்ரவதி, போஜாந்தா, வனமாலிகா, பூர்வபத்ரா, பராபத்ரா, ஊர்மிளா, பரத்ருமா, புகழ் பெற்ற வேதாவதி, கீர்த்தி பெற்ற சாபதாஸீ, ப்ரஸ்தரவதீ, குண்டந்தீ, புண்யமான ஸரஸ்வதீ, சித்ரக்நீ, இந்துமாலா, மதுமதீ, உமா, குருந்தி, தாபீ, விமலோதகா, விமலா, விமலோதா, மத்தகங்கா, பயஸ்விநீ, இவைகளும் சொல்லப்படாத மேற்கு திசை போகும் மற்ற நதிகளும் என்னை அபிஷேகம் செய்யட்டும்.

புண்ய தீர்த்தமுடைய, கிழக்கு திசையை அடைந்த சம்புஜ, க்ருதா, பரமசிவனால் தாங்கப்பட்ட அந்தப் பாகீரதீ இவை என்னால் சொல்லப்பட்டு என் பாபத்தை எரிக்கட்டும். ப்ரபாஸம், ப்ரயாகம், நைமிஷம், புஷ்கரம், கங்கா தீர்த்தம், குருக்ஷேத்ரம், ஸ்ரீகண்டம், கௌதமாஸ்ரமம், ராமஹ்ரதம், விநசநம், ராமதீர்த்தம், கங்காத்வாரம், சந்த்ரன் உதித்த கனகலம், கபாலமோசனம், புகழ்வாய்ந்த ஜம்பூமார்க்கம், அப்படியே கீர்த்தி பெற்ற ஸ்வர்ணபிந்து, கனகபிங்களம், புண்யமான ஆச்ரமங்களால் அலங்கரிக்கப்பட்ட தசாச்வமேதிகம், பத்ரி என கீர்த்தி பெற்ற நரநாராயணாச்ரமம், புகழ்பெற்ற பலகு தீர்த்தம், சந்த்ரவடம், மிகப் புனிதமான கோகாமுகம், கங்காஸாகரம், மகத தேசத்தில் புகழ் பெற்ற தபோதம், கங்கோத்பேதம், மஹரிஷிகளால் ஸேவிக்கப்பட்ட இந்தப் புண்ய தீர்த்தங்கள் என்னால் சொல்லப்பட்டு தங்கள் தீர்த்தங்களால் என்னைப் புனிதப்படுத்தட்டும்.

ஸூகரம், யோகமார்க்கம் ஸ்வேதத்வீபம், ப்ரஹ்மதீர்த்தம், நூறு அஸ்வமேத யாகத்துக்கு ஸமமான ராமதீர்த்தம், தாராரூபமாக விழும் கங்கை, பாபங்களைப் போக்கும் கங்கா, வைகுண்ட கேதாரம் ஸூகரோத்பேதனம், உத்தமமான சாப மோசனம், இவைகள் என்னை

பாபத்திலிருந்து காக்கட்டும். தர்மார்த்த காம விஷயமான சாஸ்த்ரம், கீர்த்தி பெறுதல், சம, தம, வருண, ஈச, தனத, யம, நியம, கால, நயஸந்நதி, க்ரோதம், மோஹம், க்ஷமா, த்ருதி, வித்யுத், மேகம், ஓஷதி, ப்ரமாத, உன்மாத, விக்ரஹ, யக்ஷ, பிசாச, கந்தர்வ, கிந்நர, ஸித்த, சாரண, நிசாசர, கேசர, அழகிய உடலுடைய துஷ்ட ப்ராணிகள், பலவான், பலமற்றவை, லம்போதரன், பிங்காக்ஷன்,விஸ்வரூபி, மருத, பர்ஜன்யன், கலா, த்ருஷீ, லவ, க்ஷண, நக்ஷத்ர,க்ரஹ, சிசிராதி ருதுக்கள், மாஸம், பகல், இரவு ,சூர்யன், சந்த்ரன், ஆமோத, ப்ரமோத, ப்ரஹர்ஷ, சோக, ரஜ, தம, தப, ஸத்யம், சுத்தி, புத்தி, த்ருதி, ஸ்ருதி, உத்ராணீ, பத்ரகாளி, பத்ரா, ஜ்யேஷ்டா, வாருணீ, பாஸீ, காளிகா, சாண்டிலீ, ஆர்ய, குஹூ, ஸிநீவாலீ, பீமா, சித்ரரதி, ரதி, ஏகாநம்ச, கூஷ்மாண்டீ, காத்யாயனிதேவீ, லோஹித்யா, ஜனமாதா, கோநந்தா, தேவபத்னீ, சொல்லப்பட்ட இந்த எல்லாத் தேவகன்னிகைகளும் பந்துக்களுடன் கூடிய என்னைக் காக்கட்டும்.

பல்வேறு ஆபரணங்களோடு வேஷம் பூண்டவர், பல்வேறு ரூப அடையாளமுள்ள முகம் உடையவர், பல்வேறு தேஸங்களில் ஸஞ்சரிப்பவர், நாநவித ஆயுதங்களை உபயோகிப்பவர், மாம்ஸ ப்ரியர்கள், பானம் மாம்ஸம் குடல் ப்ரியர்கள், பூனை புலி முகமுடையவர், யானை ஸிம்ஹம் போன்ற முகமுடையவர், பாம்பைப் பூணூலாகக் கொண்டவர், தோல் போர்வை கொண்டவர் ரத்தம் நனைந்த முகமுடையவர், முரசு பேரி வாத்யங்கள் போன்ற குரலுடையவர், பொறாமை கோபமுடையவர், மாடி அழகிய வீடு இலைகளில் வஸிப்பவர், மதம் பெருமிதம் பைத்தியம் கொண்டவர், வீட்டில் வஸிப்பவர், எல்லோரையும் அடிப்பவர்கள், சிவந்த கண்கள, தலையில் சிவந்த குறுகிய குடுமிமயிர் உடையவர், மேல் நோக்கிய தலைமயிர் உடையவர், கறுப்புக்குஞ்சியர் சிலர், வெள்ளைக் குஞ்சியர் சிலர், ஆயிரம் யானை பலம் கொண்டவர், வாயு வேகமுடையவர், ஒரு கையர், ஒரு காலர், ஒரு கண்ணா,சிவந்த நிறத்தர், வெகு புத்ரர் உடையவர், மிகச் சில புத்ரர் உடையவர், இரு புத்ரர் உடையவர், மண்டிக் புத்ரர் கொண்டவர், முக மண்டி, பிடாலி பூதனா, கந்த பூதனா, சீத வாத உஷ்ண வேதாலீ, ரேவதி, ஹாஸ்யப்ரியர், கோப்ரியா, ஸுகம் கொடுப்பவா,எப்போதும் ப்ராஹ்மணப்ரியர், நிசாசரர், எப்போதும் ஸுக பலன் கொடுப்பவர், பர்வகாலத்தில் பயங்கரமானவர், இந்த எனது மாதாக்கள், எப்போதும் மாதாவைப் போல் புத்ரனாகிய என்னை ரக்ஷிக்கட்டும். ப்ரஹ்மா முகத்தில் உண்டானோர், கொடியவர், ருத்ரன் அங்கத்தில் உதித்தவர்,

குமரன் வியர்வையில் உதித்தவர், வைஷ்ணவ முதலிய ஜ்வரங்கள், மஹாபயங்கரமானவர், மஹா வீர்ய முடையவர், மதங்கொண்டவர், மஹா பலமுடையவர், க்ரோதனர், அக்ரோதனர், க்ரூரர், தேவரைப் போன்ற ரூபமுடையவர், நிசாசரர், பிடரி மயிருடையவர், கோரைப் பல்லுடையவர், ப்ரியரூபம் உடையவர், தொங்கும் வயிறுடையவர், ப்ரஷ்டபாகமுடையவர், சிவந்த கண்ணுடையவர், விஸ்வரூபமுடையவர், சக்தி, ரிஷ்டி, சூலம், பரிகம் ப்ராஸம், சர்மா, அஸி இந்த ஆயுதங்களைக் கையிலேந்தியவர். பிநாகம், வஜ்ரம், முசலம், ப்ரஹ்ம தண்டம் முதலிய வற்றில் ப்ரியமுடையவர், தண்டமுடையவர், கிண்டியுடையவர், சூரர், ஜடையாலான க்ரீடம் தரித்தவர், வேதவேதாங்க ஸமர்த்தர், எப்போதும் பூணூல் தரித்தவர், ஸர்ப்பத்தைத் தலையில் சூடியவர், குண்டலங்களுடையவர், வீரர், கேயூரம் தரித்தவர், பலவித ஆடையுடுத்தவர், விசித்ர மாலை வாஸனை பூச்சு உடையவர், யானை, குதிரை, ஒட்டகம், கரடி, பூனை, ஸிம்ஹம் போன்ற முகமுடையவர், பன்றி, கோட்டான், நரி, மான், எலி, எருமை போன்ற முகமுடையவர், குட்டையர், விகடம் செய்பவர், கூனிகள், பயங்கரமானவர், குட்டைத் தலைமயிருடையவர், ஆயிரவர், நூற்றுவர், ஆயிரம் ஜடை தரித்த மற்றவர், கைலாசமலை போன்று வெளுத்தவர், சிலர் சூரியன் போன்ற நிறமுடையவர், சிலர் மேக நிறமுடையவர், கறுப்பு மை போன்ற நிறமுடையவர், ஒரு காலர், இரு காலர், இரட்டைத்தலையர், மாம்ஸமில்லாதவர், பருத்த கணைக்காலுடையவர், பிளந்த வாயுடையவர், பயங்கரமானவர், நடைவாவி, குளம், கிணறு, ஸமுத்ரம், நதி, ஸ்மசானம், மலை மரம் சூன்யமான வீடு இவைகளில் வஸிப்பவர், இந்த க்ரஹங்கள் என்னை எப்போதும் எல்லாப் பக்கங்களிலும் காப்பாற்றட்டும்.

மஹா கணபதி, நந்தீ, மஹாகாலன், மஹாபலன், லோக பயத்தை உண்டு பண்ணும் மஹேஸ்வரன், வைஷ்ணவ ஜ்வரங்கள், க்ராமணி கோபலன், ப்ருங்கரீடி, கரணஸ்வரன், தேவன், வாமதேவன், கண்டாகர்ணன், கரந்தமன், ஸ்வேதமோதன், கபாலி, ஜம்பகன், சத்ருதாபனன், மஜ்ஜன், உன்மஜ்ஜன், சந்தாபனன், விலாபனன், நிஜகாஸ, அகஸ, ஸ்தூணசுரணன், ப்ரசோஷணன், உல்காமாலி, தபதமன் ஜ்வாலாமலி, பாமர்த்தனன், ஸங்கட்டணன், ஸங்குடனன், காஷ்டபூ பூதன், சிவங்கரன், கூஷ்மாண்டன், கும்பமூர்தா, ரோசனன், க்ரஹமாகிபலி, வைக்ருதன், அனிமுகதன், ஸுராரிக்னன், சிவன், அசிவன், க்ஷேமகன், பிசிதாஸி, ஸுராரி, ஹரிலோசனன், பீமகன், அக்ரக்ரஹன், உபக்ரஹன், அர்யகன், ஸ்கந்தக்ரஹன், சபலன், அஸமவேதாளன், தாமஸன், ஸுமஹாகபி, ஹ்ரதயஉத்வர்தனன்,

ஜடன், குண்டாசி, கங்கண ப்ரியன், ஹரிசம்ஸ்ரு, மனோமாருத வேகங்கொண்ட கருத்மான், பார்வதியின் கோலத்திலிருந்து பிறந்த சக்தி, தைர்யமுடைய ப்ராஹ்மண பக்தாள், ஸத்ய ஸங்கல்பமுடையவர், போரில் சத்ருக்களின் எல்லா ஆசைகளையும் அழிப்பவர், இவர்கள் ஆபத்துக்களில் சொல்லப்பட்டவர்களாய் அந்தக் கணங்களுடன் கூடிய பதிகள், ஸகல குணங்களாலும் எப்போதும் என்னை ரக்ஷிக்கட்டும்.

நாரதர், பர்வதர், கந்தர்வ அப்ஸரஸ் கணங்கள், பித்ருக்கள் காரணம், கார்யம், ஆதி, வ்யாதி, அகஸ்த்யர், காலவர், கார்க்யர், சகிதி, தௌம்யர், பராசரர், க்ருஷ்ணாத்ரேயர், பகவான் அஸிதர், தேவலர், பலர், ப்ரஹஸ்பதி, உதத்யர், மார்க்கண்டேயர், ச்ருதச்ரவர், த்வைபாயனர், விதர்பர், ஜைமினி மாடரர், கடர், விச்வாமித்ரர், வசிஷ்டர், மஹாமுனி லோமசர், உதங்கர், நைப்யர், பௌலோமர், த்விதர், காலவ்ருக்ஷ்யரிஷி, மேதாதிதிமுனி, ஸாரஸ்வதர், யவக்ரீதி, ருசிகர், கௌதமர், ஸம்வர்த்தர், ரிஸ்ய ஸிங்கர், ஸ்வஸ்திக யாத்ரேயர், விபாண்டகர், ரிசீகர், ஜமதக்னி, தவச்செல்வர் ஔரவர், பரத்வாஜர், ஸ்தூலசிரர், கச்யபர், புலஹர், க்ரது, ப்ருஹதக்னி, ஹரிஸ்மஸரு, விஜயர், கன்வர், தீர்கதாபர், வேதகாதர், அம்சுமான் சிவர், அஷ்டாவக்ரர், ததீசி, ஸ்வேதகேது, க்ஷீரபாணி, ச்ருங்கீ, கௌரமுகர், அக்னி வேஸ்யர், சமிகர், ப்ரமுசு, முமுசு, இவர்களும் அந்ய ரிஷிகளும் சிறந்த வ்ரத முடைய முனிவர்களும், சிறந்த யாகம் செய்பவர்களும், சாந்தமுடையவர்களும், இன்னும் சொல்லபடாதவர்களும் எனக்கு எப்போதும் சாந்தியை அளிக்கட்டும்.

மூன்று அக்னிகள், மூன்று வேதங்கள், மூன்று வித்யைகள் (வேதஞானம்) கௌஸ்துபமணி, உச்சைஸ்ரவஸ் குதிரை, ஸ்ரீமான் வைத்யர் தன்வந்திரி, ஹரி, அம்ருதம், கௌ, ஸுபர்ண, ததி, வெண்கடுகு, வெண் புஷ்பங்கள், கன்யை, வெண்குடை, யவம், அக்ஷதை, அருகுபுல், ஸ்வர்ணம், வாஸனைப் பூச்சு, விசிறி, எங்குந் தடங்கலில்லா சக்ராயுதம், வ்ருஷபம், சந்தனம், விஷம், வெள்ளைக் காளை, மதங்கொண்ட யானை, ஸிம்ஹம், வேங்கை, குதிரை, மலை, வராஹாவதாரத்தால் தூக்கப்பட்ட பூமி, நெற்பொரி, ப்ராஹ்மணர், தேன், பாயஸம், ச்வஸ்திகாவளதக்கை, நந்த்யாவர்த்த புஷ்பம், குங்குமப்பூ, பில்வம், கோமயம், மத்ஸயம், துந்துபி, படகத்வநி, ரிஷிபத்னிகள், கன்யைகள், ஸ்ரீமத்பத்ராஸனம், வில், கோரோசனை, மங்களத்ரவ்யம், நதிகளின் (ஸமுத்ர) ஸங்கம தீர்த்தம், நல்ல இலைகள், தாமரை, சகோரம், ஜீவ ஜீவக பறவை, நந்தீமுக பறவை, மயூரம், முத்து ரத்னம் பதித்த கோடிகள், உத்தம ஆயுதங்களும் கார்ய

ஸித்தி தரக்கூடிய இவைகள் என்னைக் காக்கட்டும். புண்யம், ஸ்ரீயோடு கூடியது, மங்களமுடையது. ஆயுள், செல்வம், வெற்றி இவை மூன்றையும் விரும்பும் பலராமனால் முன்நாள் சொல்லப்பட்டது. மங்களமான நூற்றெட்டு நாமங்களுடைய இந்த ஸ்தோத்ரத்தை சொல்கிற கேட்கிற அறிவாளி, பர்வங்கள் தோறும் ஸ்நாநம் செய்து ஜபிக்கிறவன், மரணம், கட்டுப்படுதல், வியாதி, சோகம், அவமானம், துக்கம் இவைகளை அடையமாட்டான், இஹத்திலும், பரத்திலும், ஸுகம் கொடுப்பது. தனம், கீர்த்தி, ஆயுள் மூன்றையும் கொடுக்கவல்லது. புனிதப்படுத்தவல்லது. வேதத்துக் கொப்பானது. லக்ஷ்மீகரமானது. ஸ்வர்கம் கொடுக்கவல்லது. எப்போதும் புண்யமானது. குழந்தை கொடுக்கவல்லது. மங்களகரமானது, சுபமானது, க்ஷேமகரம், மனிதனுக்குப் புத்தி கூர்மை கொடுக்க வல்லது. மேலானது எல்லா வ்யாதிகளையும் போக்க வல்லது. தன் குலத்தையும் புகழையும் வளர்ப்பது. ஸ்ரத்தையுடனும், தயையுடனும், மன அடக்கத்துடனும் படிக்கிறவன் பாபங்கள் நீங்கி நல்ல கதியை அடைகிறான்.

109 அத்தியாயம் முற்றும்



## அத்யாயம்110

### த்வாரகையில் பல தேசத்தரசர்கள் முன்னிலையில் நாரதர் க்ருஷ்ணனின் பெருமையைச் சொல்லுதல். (சுவை மிக்கது)

வைசம்பாயனர் சொன்னார் : தன்னைதானே கொன்று கொண்ட சம்பராஸுரன் ப்ரத்யும்னனை அபஹரித்துப் போன அதே மாதத்தில், ஜாம்பவதிக்குச் சாம்பன் பிறந்தான். பால்ய முதல் பலராமனால் அஸ்த்ர ஸஸ்தரங்களில் பயிற்றுவிக்கப்பட்டான். எல்லா வ்ருஷ்ணிகளாலும் பலராமனுக்கு அடுத்தபடி கௌரவிக்கப்பட்டான். சாம்பன் பிறந்த பின்பு க்ருஷ்ணன் சுற்றியுள்ள சத்ருக்களை அடக்கியவனாய் இந்திரன் உத்யானத்தில் தேவன் போல் அந்த ஸுபமான த்வாரகையில் வஸித்து வந்தான். யாதவர் ஸம்பத்தைப் பார்த்து தேவேந்த்ரன் தன் செல்வத்தை வெறுக்கிறான். ஜனார்த்தனனின் பயத்தால் அரசர்கள் சாந்தி யடையவில்லை. சிறிது காலம் கழிந்ததும், ஹஸ்தினாபுரத்தில் துர்யோதனனின் யாகத்தில் எல்லா அரசர்களும் வந்து சேர்ந்தார்கள். அந்த மாதவனின் செல்வத்தையும். புத்ரர்களுடன் கூடின ஜனார்த்தனனையும் ஸமுத்ர நடுவில் அமைக்கப்பட்ட த்வாரகா நகரையும் கேட்டு அந்தத் தூதர்களால் (க்ருஷ்ணனுடன்) ஸந்திசெய்து கொண்டு

ஹ்ருஷீகேசனின் செல்வத்தைப் பார்ப்பதற்கு பூமியிலுள்ள எல்லா அரசர்களும் க்ருஷ்ணன் திருமாளிகைக்கு வந்தனர். த்ருதராஷ்டரனுக்கு வசப்பட்ட துர்யோதனன் முதலிய எல்லோரும் பாண்டவரை முன்னிட்ட த்ருஷ்டத்யும்னன் முதலிய அரசர்களும் பாண்டிய, சோழ, கலிங்க நாட்டரசர்கள், பாஹலிஹர், த்ராவிடர், கசதேசத்தரசர் ஆகிய எல்லோரும் 18 அக்ஷௌஹிணி சேனைகளை அழைத்துக் கொண்டு கோவிந்தன் புஜ வலிமையால் பரிபாலிக்கப்பட்ட யது புரியை அடைந்தனர். அந்த ராஜாக்கள் ரைவதக மலையைச் சுற்றி தங்கள் தங்களுக்கு ஏற்பட்ட ஒவ்வொரு யோஜனையிடத்தில் தங்கினர். தாமரைக்கண்ணன் ஸ்ரீமான் க்ருஷ்ணன் யாதவஸ்ரேஷ்டர்களுடன் ராஜ ஸ்ரேஷ்டர்கள் ஸமீபம் வந்தான். அந்த அரசர்களின் நடுவிலிருக்கும் அந்த யதுஸ்ரேஷ்டன் க்ருஷ்ணன் சரத்கால சூர்யன் போல் ப்ரகாசித்தான். அங்கு அந்த க்ருஷ்ணன் தகுதிக்கும் வயதுக்கும் ஏற்ப உபசாரங்கள் செய்து தங்க ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்தான். அரசர்களும் பின்பு பலவித விசித்ர ஸிம்ஹாஸனங்களிலும் பீடங்களிலும் அமர்ந்தனர். யாதவர்கள், அரசர்கள் உள்ளிட்ட அந்தக் கூட்டம் அப்போது ப்ரஹ்ம ஸபையில் தேவர், அஸுரர் கூட்டம் போல் ப்ரகாசித்தது. அந்த ஸபையில் அவர்களது ஸந்திப்பில் கேசவன் கேட்கும்படி அந்த யாதவர்களுக்கும் ராஜாக்களுக்கும் விசித்ரமான கதைகள் நடந்தன.

இச்சமயம் மேக சப்தம் போன்ற காற்று வீசிற்று. மின்னல் இடியுடன் கூடிய மேகத்தால் மூடப்பட்ட துர்தினம், இருள் நாள் ஆயிற்று. அந்த மேகங்களால் மறைக்கப்பட்ட இடத்தைப் பிளந்து கொண்டு வீணையேந்திய கையுடன் சுற்றிக் கட்டிய ஜடைகளையுடைய நாரதர் காணப்பட்டார். அக்னி ஜ்வாலை போன்ற வடிவமுடையவரும் கடல் போன்றவரும் இந்த்ரன் ஸகாவுமான ஸ்ரீமான் நாரத முனி ராஜாக்கள் நடுவில் இறங்கினார். அந்த நாரதமுனி ஸ்ரேஷ்டர் பூமியில் இறங்கியதும் அந்த ஆச்சர்யமான பெரிய மேகக் கூட்டமுடைய துர்தின இருள் நாள் மறைந்தது.

கடலையொத்த அந்த முனி ராஜாக்கள் நடுவில் ஆஸனத்தில் வீற்றிருக்கும் யது ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னார் "புருஷோத்தமா! நீ ஆஸ்சர்யமானவன். தேவருள் நீ ஒருவனே பாக்யசாலியாயும் இருக்கிறாய். மஹாபாஹோ உலகில் வேறொருவன் இல்லை." இப்படி சொல்லப்பட்ட க்ருஷ்ணன் புன்சிரிப்புச் செய்து முனியைக் குறித்துப் பதில் சொன்னான்: "ஆச்சர்யனும்தான், பாக்யசாலியும்தான்,

தக்ஷிணையுடன் சேர்ந்து! என்று இப்படி உம்மால சொல்லப்பட்டுள்ளேன்." ஆஸ்சர்யஸ்ச தன்யஸ்ச தக்ஷிணேஸ்ஸஹ இதி கீதம் இவ்விதம் க்ருஷ்ணனால் சொல்லப்பட்ட முனிஸ்ரேஷ்டன் அரசர் மத்தியில் சொன்னார்: க்ருஷ்ணா முடிவு கண்ட வார்த்தையுடையவனுயிருக்கிறேன். வந்தபடியே செல்கிறேன்! புறப்படும் நாரதரைப் பார்த்து நாரதரால் சொல்லப்பட்ட ரகஸ்ய மந்த்ர வசனத்தை அறியாதவர்களாகி அரசர்கள் க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னார்கள்: " மாதவ! ஆஸ்சர்யமென்றும், பாக்யசாலியென்றும் சொல்லப்பட்டது, தக்ஷிணையுடன் கூட என்று, இவ்விதம் நாரதருக்குப் பதில் சொன்னதும், இந்தத் திவ்ய பெரிய மந்த்ர பதம் என்ன வென்று அறிகிறோமில்லை. க்ருஷ்ணா! எங்களால் கேட்கத் தக்கதானால் பொருளைக் கேட்க விரும்புகிறோம்" பிறகு க்ருஷ்ணன் எல்லா ராஜஸ்ரேஷ்டர்களையும் பார்த்துச் சொன்னான்: "கேட்கப்படட்டும். இந்த நாரத ப்ராஹ்மணர் உங்களுக்குச் சொல்வார். நாரதரே! அரசர்கள் உம்மால் சொல்லப்பட்டதையும், என் பதிலையும் கேட்க விரும்புகின்றனர். உட்பொருளைச் சொல்லும்".

நன்கு அலங்கரிக்கப்பட்ட அந்த நாரதர் அழகிய ஸ்வர்ண பீடத்தில் நன்கமர்ந்து வணங்கத் தக்க க்ருஷ்ணனின் பெருமையைச் சொல்வதற்கு ஆரம்பித்தார். நாரதர் சொன்னார் : "ராஜஸ்ரேஷ்டர்களே! இங்கு வந்துள்ள எல்லோரும் கேளுங்கள். இந்த க்ருஷ்ணனது பெருமையின் கரையை நான் எப்படி அடைந்தேன் என்பதைக் கேளுங்கள். நான் ஒரு ஸமயம் இரவு மறைந்து ஸூர்யன் தோன்றும் போது கங்கை கரையில் முக்கால ஸந்த்யத்தை விரும்பி ஒருவனாய் இருந்தேன். மலைச்சிகர [illegible], இரு [illegible] சேர்ந்த தேஹமுடையதும், ஒரு [illegible] போல் இரண்டு பங்கு நீளமுடையதும், நான்கு கால்கள் [illegible] நனைந்து சேறு படிந்ததும் [illegible] என் வீணை போல் [illegible] ஜலத்தில் [illegible]" ஆமையே! நீ [illegible] பாக்யசாலியா யிருக்கிறாய். [illegible] ஜலத்தில் ஸஞ்சரிக்கிறாய்' என்று [illegible] அந்த ஆமை தானோ மனிதன் போல் [illegible] பதில் சொல்லிற்று. 'முனியே! என்னிடம் என்ன [illegible] ப்ரபோ! நான் எப்படி பாக்கியசாலி? த்விஜரே! இந்த கங்கை நதி பாக்யசாலி

அதில் என் போல் ப்ராணிகள் லக்ஷக்கணக்கில் நடமாடுகின்றன. இதைக் காட்டிலும் என்ன ஆச்சர்யம். நான் குதூஹலத்துடன் அந்தக் கங்கை நதியை நோக்கி ஸ்துதித்தேன். 'உத்தம நதியே! பாக்யசாலியாய் இருக்கிறாய். எப்போதும் ஆச்சர்யமாக விளங்குபவள். நீ பெரிய தேஹமுடைய இந்த ஆமை போன்ற ப்ராணிகளால் விளங்குகிறாய். மடுக்களையுடையவள். தபஸ்விகளின் ஆச்ரமங்களை ரக்ஷித்துக் கொண்டு ஸமுத்ரத்தை அடைகிறாய்.' இப்படிச் சொல்லப்பட்ட கங்கை, பிறகு ரூபமெடுத்தவளாய் இந்த்ரன் மித்ரனான தேவ கந்தர்வராகிய நாரத விப்பரரைப் பார்த்து பதில் உரைத்தாள். 'இப்படி இல்லை! இல்லை! தேவகந்தர்வா! போரிலும். கலகத்திலும் ப்ரியனே! ப்ராஹ்மணோத்தமனே! நான் பாக்யசாலி இல்லை. ஆஸ்சர்யமாக விளங்குபவளும் இல்லவேயில்லை. த்விஜரே! ஸத்யத்தில் நிலையான உமது வார்த்தை என்னைப் பற்றி பாதிக்கிறது. உலகில் எல்லா ஆஸ்சரயங்கள் செய்வதும். பாக்யசாலியும் ஸமுத்ரமே. அதில் என் போல் விஸ்தீர்ணமான நதிகள் நூற்றுக் கணக்கில் செல்கின்றன'.

அதைக் கேட்ட நான் கங்கை வாக்யத்தைக் கேட்டு ஸமுத்ரத்தை ஸ்துதித்தேன். 'மஹார்ணவா! உலகிலெல்லாம் நீ ஆஸ்சர்யமானவன். பாக்யசாலியாயுமிருக்கிறாய். நீ எல்லா தீர்த்தங்களுக்கும் மூலகாரணமாய் தீர்த்தங்களின் தலைவனா யிருக்கிறாய். உலகில் வணங்கப்பட்டு புனிதப்படுத்தும் தீர்த்தங்களைக் கொண்ட இந்த நதிகள், உன் பத்னிகளாக உன்னை வந்தடைகின்றன. இது பொருத்தமானதே.' இப்படிச் சொல்லப்பட்ட ஸமுத்ரமும் பிறகு காற்று வீசும்படி ஜலப்பரப்பைப் பிளந்து கொண்டு மேல் கிளம்பி என்னிடம் வார்த்தை சொன்னான். 'இப்படி இல்லை! இல்லை! தேவகந்தர்வ! ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! முனிவரே! நான் ஆஸ்சர்யன் இல்லை. இந்த பூமி பாக்யசாலி. நான் அதன மேல் இருக்கிறேன். உலகில் பூமியைத் தவிர இதற்கு மேல் என்ன ஆஸ்சர்யம்!'.

அதைக் கேட்ட நான் குதூஹலத்துடன் பூதலத்திலிருந்து கொண்டு ஜகத்துக்குப் புகலிடமான பூமியைப் பார்த்துச் சொன்னேன். 'எல்லோரையும் தாங்குபவளே! ப்ராணிகளுக்கெல்லாம் தாயே! மங்களமானவளே! மாபெரும் பொறுமையுடையவளே! படைப்புக்களுள் நீ ஆஸ்சர்யமானவள். பாக்யசாலியும் ஆவாய். ஆதலால் ப்ராணிகளைத் தாங்குபவளாய் இருக்கிறாய். மனிதர்களுக்கு உத்பத்தி ஸ்தானம். பொறுமை உன்னிடமிருந்தே பிறந்தது. ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களுக்கு கர்ம விளை

நிலமாகவும் இருக்கிறாய். பிறகு என்னால் சொல்லப்பட்ட ஸ்துதி வாக்யத்தால் தூண்டப்பட்டு அந்த பூமி எனக்கு ப்ரத்யக்ஷமாகி அதைர்யமுடையவளாய்ச் சொன்னாள். 'இப்படி இல்லை! இல்லை! தேவகந்தர்வா! போரிலும் கலகத்திலும் ப்ரியனே! நான் பாக்யசாலியில்லை. ஆஸ்சர்யளுமில்லை. இந்த தாங்கும் சக்தி பிறருடையது. த்விஜ ஸ்ரேஷ்டா! இந்த மலைகள் பாக்யசாலிகள். என்னைத் தரிக்கின்றன. ஆஸ்சர்யங்களாகவும் காணப்படுகின்றன. இவை பூமிக்குக் காரணம்.'

அதைக் கேட்ட நான் பூதேவியின் வாக்யத்தால் பர்வதங்களை ஸ்துதித்தேன். நீங்கள் பாக்யசாலிகளாகக் காணப்படுகிறீர்கள். பர்வதங்களே! மிக்க ஆச்சர்யமாகவும் காணப்படுகிறீர்கள். ஸ்வர்ணத்துக்கும், சிறந்த ரத்னங்களுக்கும் விசேஷமாகத் தாதுப் பொருள்களுக்கும் நீங்கள் இருப்பிடமல்லவா! ஆதலால் நீங்கள் பூமியில் ஆச்சர்யத்திலும் பாக்கியத்திலும் நிலைபெற்றவர்கள். நிலைத்தவைகளில் சிறந்த வனங்களால் சோபிக்கும் அந்தப் பர்வதங்கள் எனது இந்த வார்த்தையைக் கேட்டு, ம்ருது பாஷையில் (என்னைப் பார்த்து) சொன்னார்கள் 'ப்ரஹ்மரிஷியே நாங்கள பாக்யசாலிகளில்லை எங்களுக்கு ஆச்சர்யங்களுமில்லை. படைப்பவரான ப்ரஹ்மாவே பாக்யசாலி. தேவர்களிலும் மிக்க ஆஸ்சர்யனுமானவர்.

அதைக் கேட்ட நான் எல்லாவற்றிற்கும் காரணமான அழிவற்ற ப்ரஹ்மாவிடம் சென்று அந்த வாக்யத்தின் க்ரமமான முடிவு போல் எண்ணினேன். அப்படி எண்ணிய நான் லோக காரண பிதாமஹ தேவனான நான்முகனைக் குனிந்த முகத்துடன் வணங்கி பின்பு ஸ்துதிக்க ஆரம்பித்தேன். அப்படி வணங்கிய நான் வாக்கியத்தின் முடிவிற்காகத் தாமரையில் பிறந்தவனைக் கேட்கச் செய்தேன். பகவானும் ஜகத்குருவானவரும் நீர் ஒருவரே ஆஸ்சர்யமானவரும், பாக்யசாலியுமாய் இருக்கிறீர். உம்மைவிட மற்ற எவரொருவரையும் நான் பார்க்கவில்லை. [illegible] இந்த உலக முழுதும் உம்மிடமிருந்தே உண்டாயிற்று. எல்லாத் தேவர்களுக்கும் தலைவனே! [illegible] லோகங்கள் தேவர், அஸுரர், மனிதர், பூதம், இந்த்ரியம் இவைகள் [illegible] இவையெல்லாம் உம்மிடமிருந்தே உண்டாயின. ஆதலால் தேவர்களுள் தேவதேவருமாக இருக்கிறீர். தேவர்களையே படைப்பவராய் இருக்கிறீர். எல்லா உலகத்திற்கும் முதல் காரணம்'. பிறகு உலகப் பாட்டனார் பகவான் ப்ரஹ்மா என்னைக் குறித்துச் சொன்னார் 'நாரதா! பாக்யசாலி, ஆஸ்சர்யன் என்னும் வார்த்தைகள்

கொண்ட வாக்யங்களால் என்னை ஏன் ஸ்துதிக்கிறீர்? நாரதா! வேதங்கள் மேலான ஆஸ்சர்யம் பாக்யங் கொண்டவைகளும் கூட. உட்பொருளை (யஜ்ஞபதியை) விளக்கும் வேதங்கள் உலகங்களைத் தரிக்கின்றன. ருக், ஸாம, யஜுர், அதர்வண வேதங்களின் உண்மையான மதத்தை நானாக அறி. பரமேஷ்டியான ஸ்வயம்பூ ப்ரஹ்மாவின் வார்த்தையால் தூண்டப்பட்டு நான் வேத லக்ஷணங்கள் விஸ்தாரமானதைக் கொண்டு வேதத்தை ஸ்தோத்ரம் செய்ய முற்பட்டேன்.

அப்படி முற்பட்ட நான் ஸ்வயம்பூவின் வார்த்தையால் வேதங்களை ஸ்தோத்ரம் செய்தேன். மந்த்ர ப்ரவசனங்களோடு கூடின நான்கு வேதங்களையும் சொன்னேன். நீங்கள் புண்யமானவர்கள். பாக்யசாலிகள். எப்போதும் ஆஸ்சர்யமாக விளங்குபவரும். ப்ராஹ்மணர்களின் ஆதாரங்களும் கூட இவ்விதம் ப்ரஹ்மா சொன்னார். உங்களைப் பற்றிய மேன்மை விஷயம் ஸ்வயம்பூ ப்ரஹ்மாவைக் காட்டிலும் (பரமானது) சிறந்தது. கேள்விகளாலும் தவத்தாலும் உங்களுக்கு மேல் ஒருவருமில்லை. என்னைச் சுற்றியிருந்த வேதங்கள் என்னைக் குறித்துப் பதில் கூறின: 'யக்ஞபதி நாராயணனை லக்ஷ்யமாக கொண்ட யாகங்கள் தானே. ஆஸ்சர்யங்களும் பாக்யங்கொண்டவைகளுமாகும். நாரதா! பரமாத்மாவால் நாங்கள் யாகங்களுக்காகவே படைக்கப் பட்டிருக்கிறோம். ஆதலால் எங்களைக் காட்டிலும் யக்ஞம் மேலானது. நாங்கள் எங்கள் வசத்திலில்லை. ப்ரஹ்மாவைக் காட்டிலும் வேதங்கள் மேலானவை. வேதங்களைக் காட்டிலும் யாகங்கள் மேலானவை.

பிறகு. பெருமை பொருந்திய வாக்யங்கள் கொண்டு முன் நிற்கும் யாகங்களைப் பார்த்து நான் ஸ்துதித்தேன். பெரியோர்களே! யக்ஞங்களே! உங்களிடமல்லவா உயர்ந்த தேஜஸ் காணப்படுகிறது. ப்ரஹ்மனாலும் கௌரவமாகச் சொல்லப்பட்டது. வேதங்களாலும் சொல்லப்பட்டது உங்களைக் காட்டிலும் மேலான ஆஸ்சர்யம் இவ்வுலகில் ஒன்றும் காணப்படுகிறதில்லை. பாக்யசாலிகளும் நீங்கள் தானே! ப்ராஹ்மண வம்சத்தில் உண்டானவர்கள். அந்த (மூன்று) அக்னிகளும் கூட உங்களால் த்ருப்தி செய்யப்பட்டு த்ருப்தி அடைகின்றன. பல்வகை தேவர்களும் யூபமில் யாகங்களால் த்ருப்தி யடைகின்றனர். மஹரிஷிகளும் யக்ஞ மந்த்ரங்களால் த்ருப்தி கொள்கின்றனர். பூர்த்திகளுடனிருந்த அக்நிஷ்டோமம் முதலிய எல்லா யக்ஞங்களும் என் வார்த்தையைக் கேட்டவுடன் என்னைப் பார்த்து பதில் வார்த்தை சொல்லின.

'முனியே! ஆஸ்சர்ய சப்தமோ, பாக்யம் எனும் சப்தமோ எங்களிடம் இல்லை. மேலான ஆஸ்சர்யம் விஷ்ணு. அவனல்லவா எங்களுக்கு மேலான புகலிடம். அக்னியில் ஹோமம் செய்யப்பட்ட பரிசுத்தமான எந்த நெய்யை நாங்கள் உண்கிறோமோ, அந்த எல்லாவற்றையும் உலக வடிவான தாமரைக் கண்ணன் கொடுக்கிறான்.' அதைக் கேட்ட நான் விஷ்ணுவின் ஸ்தானத்தை அடைய விரும்பி இங்குப் பூமியில் இறங்கினேன். உங்களால் சூழப்பட்ட இந்த க்ருஷ்ணன் இங்கு என்னால் காணப்பட்டான். அரசர்களே! இங்கு உங்கள் நடுவில் இருக்கும் க்ருஷ்ணனைக் குறித்து 'ஜனார்த்தனா! நீ ஆஸ்சர்யனாயும், பாக்யாசாலியாயும் இருக்கிறாய்' என்று என்னால் ஸ்துதிக்கப்பட்டவனல்லவா? இந்த க்ருஷ்ணனால் இப்போது இந்த வாக்யத்திற்கு 'தக்ஷிணையோடு கூட' என்று பதில் சொல்லப்பட்டேன். எல்லா யக்ஞங்களுக்கும் தக்ஷிணையோடு விஷ்ணுவல்லா கதி. முன்னால் ஆமையால் சொல்லப்பட்டு க்ரமமாய் இங்கு வந்தடைந்து, தக்ஷிணையோடு கூடிய இந்தப் புருஷனிடத்தில் இந்த வாக்யம் முடிவடைந்தது. என்ன? இந்த வாக்யத்தின் உட்பொருளை நீங்கள் வினவினீர்கள். அந்த எல்லாம் என்னால் சொல்லப்பட்டது. வந்தபடியே செல்கிறேன். நாரதர் ஸ்வர்கம் சென்றதும், ஸேனைகள், வாஹனங்களோடு கூடிய அந்த எல்லா அரசர்களும் ஆஸ்சர்ய மடைந்து தங்கள் ராஜ்யங்களைச் சேர்ந்தனர். யது நந்தன வீர க்ருஷ்ணனும் அக்னியைப் போன்ற யாதவர்களுடன் கூடி தன் மாளிகையை அடைந்தான்

110அத்யாயம் முற்றும்



## அத்யாயம் 111

## க்ருஷ்ணனால் அர்ஜுனன் ப்ராஹ்மணனின் சிசுவைக் காக்க ஏவப்படல்

ஜனமேஜயர் சொன்னார், யதுஸ்ரேஷ்டா! மஹாபாஹோ! வைசம்பாயனரே! ஜகத்பதி க்ருஷ்ணன் மேலான பெருமையை மறுபடி கேட்க விரும்புகிறேன். முன் தோன்றலான புத்திமான் அந்த மஹாத்மா (க்ருஷ்ணனின்) கார்யங்களின் பரம்பரைகளைக் கேட்க எனக்கு இங்கு த்ருப்தியில்லையல்லவா!

வைசம்பாயனர் சொன்னார் : 'மஹாராஜா, கோவிந்தனின் ப்ரபாவத்தினது முடிவு நூற்றுக் கணக்கான வருஷங்களாயினும் சொல்லி முடியாது. இந்த ஆஸ்சர்யம் கேட்கப்படட்டும். மஹாராஜா!

குருகுலத்தவனே! சரதல்பத்தில் படுத்திருக்கும் பீஷ்மனால் ஏவப்பட்டு, காண்டீப வில்லுடைய அர்ஜுனன் மூத்த தமையனை சத்ருக்களை வென்ற யுதிஷ்டிரரிடம், ராஜாக்களின் நடுவில் சொல்லிய கேசவனது பெருமையைக் கேட்பாயாக.

அர்ஜுனன் சொன்னான்: 'முன்னர் நான் பந்துக்களைப் பார்க்க த்வாரகைக்குப் போனேன். அங்கு போஜ, வ்ருஷ்ணி அந்தக குல பெரியோர்களால் கௌரவிக்கப்பட்டு வஸித்தேன். பின்பு ஒரு ஸமயம் தர்மாத்மா மஹாபாஹு மதுஸூதனன் சாஸ்த்ரங்களில் சொல்லிய யாகத்தில் ஒரு நாள் தீக்ஷையிலிருந்தார். பிறகு யாகதீக்ஷையிலிருக்கும் க்ருஷ்ணனை த்விஜ ஸ்ரேஷ்டன் அணுகி அவனிடம் விண்ணப்பித்துக் கொண்டான். 'காப்பாற்று! காப்பாற்று! என்றும் சொன்னான். ப்ராஹ்மணன் சொன்னான் : உமக்கு ரக்ஷையில் அதிகாரம். ப்ரபுவே! என்னைக் காப்பாற்று. ரக்ஷிக்கிறவன் தர்ம பங்கில் நாலில் ஒன்றை அடைகிறான். வாஸுதேவன் சொன்னான்: த்விஜ ஸ்ரேஷ்டா பயம் வேண்டாம். உன்னை ரக்ஷிக்கிறேன். பயம் ஏன்? செய்யக் கஷ்டமாயிருப்பினும் உண்மையைச் சொல்லு. உனக்கு மங்களம்.

ப்ராஹ்மணன் சொன்னான்: 'மஹாபாஹோ! க்ருஷ்ண! பாபமற்றவனே! எனக்குக் குழந்தை பிறக்கப் பிறக்க அபஹரிக்கப்படுகிறது. மூன்று பிள்ளைகள் அபஹரிக்கப்பட்டனர். நாலாவது பிள்ளையைக் காக்க வேண்டுகிறேன். இன்று ப்ராஹ்மணிக்கு ப்ரஸவ காலம். ரக்ஷை கொடுக்கப்படட்டும். எனது குழந்தை தரிக்க ஜனார்த்தனா வகை செய். அர்ஜுனன் சொன்னான். பிறகு கோவிந்தன் என்னிடம் சொன்னான். 'நான் யாகத்தில் தீக்ஷிதனாயிருக்கிறேன். எந்த அவஸ்தையிலிருப்பவர்களானாலும். ப்ராஹ்மணன் விஷயத்தில் ரக்ஷை செய்யத் தக்கது'. யுதிஷ்ட்ர ராஜனே! இப்படி க்ருஷ்ணன் வார்த்தையைக் கேட்டு நான் சொன்னேன் : 'கோவிந்தா! என்னை நியமிப்பாய். நான் த்விஜனைப் பயத்திலிருந்து காப்பேன். யுதிஷ்ட்ர ராஜனே! இவ்விதம் என்னால் சொல்லப்பட்ட அந்த ஜனார்த்தனன் புன்சிரிப்பு கொண்டு என்னிடம் 'நீ ரக்ஷிக்கிறாய்' என்று சொன்னான். இப்படிச் சொல்லப்பட்ட நான் வெட்கமடைந்தேன்.

பிறகு ஜனார்தனன் என்னை வெட்கப்பட்டவனாக நினைத்து மறுபடியும் சொன்னான்: 'கௌரவ ஸ்ரேஷ்டனே! உன்னால் ரக்ஷிக்க முடியுமானால் போவாயாக. மஹாபாஹு பலராமன், மஹாபலன் ப்ரத்யும்னன் இவரைத் தவிர வ்ருஷ்ணி அந்தக குல மஹாரதர்களும் உனக்கு உதவியாக முன் சென்று ரக்ஷிக்கட்டும்.

பிறகு நான் பெரிய வ்ருஷ்ணி ஸேனையால் சூழப்பட்டு அந்த த்வஜனை முன்னிட்டு ஸேனையுடன் சென்றேன்.

### 111 அத்யாயம் முற்றும்



## 112 அத்யாயம்

### அர்ஜுனனால் சிசுவைக் காக்க முடியாது போதல்

அர்ஜுனன் சொன்னான்: பரத ஸ்ரேஷ்ட யுதிஷ்டிரரே! ஒரு முஹூர்த்த காலத்துக்குள் அந்த கிராமத்தை யடைந்து களைப்பு நீங்க வாஹனங்களுடன் எல்லோரும் இடங்களில் தங்கினோம். குருநந்தன! யுதிஷ்டிரரே! பிறகு நான் க்ராம நடுவில் தங்கினேன். நாற்புறமும் பெரிய வ்ருஷ்ணி ஸேனையால் சூழப்பட்டிருந்தேன். கண்ணொளி மிருகங்களும் பக்ஷிகளும் க்ரூர சப்தங்கள் செய்தன. ஒளி வீசும் திக்குக்களில் பக்ஷிகள் சப்திக்கின்றனவாய், எனக்குப் பயத்தை அறிவிக்கின்றன. ஸந்த்யா நிறம் செம்பருத்தி புஷ்பம் மிகச் சிவந்திருந்தது. சூர்யனும் ஒளியற்றிருந்தான். எரி நக்ஷத்ரங்கள் விழுந்தன. பூமி நடுங்கிற்று. அந்த பயங்கர மயிர்க் கூச்செறியும் பெரிய உற்பாதங்களைப் பார்த்து, ஸாத்யகி முதலான அந்தக குல மஹாரதர்கள் கவலை மனதுடைய ஜனங்களுக்கு [illegible] குறித்து ஆயத்தமாயிருக்க கட்டளையிட்டனர். எல்லோரும் தேர் பூட்டி ஆயத்தமாயினர். நான் தானும் அப்படியே ஆயினேன்.

நள்ளிரவு [illegible] பயத்தால் அணுகி, எங்களிடம் இந்த வார்த்தை சொன்னான்: 'என் பத்னியின் ப்ரஸவ காலம் ஸமீபித்து [illegible] நீங்கள் ஜாக்ரதையாக இருக்க வேண்டும். ஒரு முஹூர்த்த காலத்துக்குள்ளேயே அந்த [illegible] அபஹரிக்கப் படுகிறான்! அபஹரிக்கப்படுகிறான்' என்று [illegible] அழுகைக் குரலைக் கேட்டேன். பிறகு ஆகாயத்தில் அபஹரித்துச் செல்லப்படுகிற குழந்தையின் '[illegible]' என்ற குரலைக் கேட்டேன். ராக்ஷஸனைக் காணவில்லை. பிறகு அப்பா! யுதிஷ்டிரரே! எங்களால் அம்பு மழையால், நாற்புறமும் எல்லாத் திக்குகளும் மறைக்கப்பட்டன. ஆனால் அந்தக் குழந்தை அபஹரிக்கப்பட்டதே. அந்தக் குழந்தை அபஹரிக்கப்பட்டதும் அந்த ப்ராஹ்மணன் அழுகுரலுடன் அப்போது என்னை குறித்து உக்ரமான க்ரூர வார்த்தைகள் சொன்னான். வ்ருஷ்ணிகள் நஷ்டமான ஸங்கல்பம்

உடையவர். அப்படியே நான் புத்தி ஸ்வாதீனமிழந்தேன. இப்படி ப்ராஹ்மணன் என்னைக் குறித்து விசேஷமாகச் சொன்னான். 'துர்புத்தியுடையவனே ரக்ஷிப்பேன் என உன்னால் சொல்லப்பட்டது ரக்ஷிக்கவில்லை. உனக்குத் தக்க வார்த்தைகள் சொல்கிறேன் கேட்பாய். அளவற்ற புத்திமான் க்ருஷ்ணனுடன் நீ வீணாகப் போட்டியிடுகிறாய். கோவிந்தன் இங்கிருந்தானாயின் இந்தக் கொடுமை ஏற்பட்டிராது. மூடா! ரக்ஷிக்கிறவன் தர்மத்தின் நான்கிலொரு பங்கு அடைவது போல் ரக்ஷிக்காதவன் பாபத்தின் பலனையும் அப்படியே அடைகிறான். உன்னால் ரக்ஷிப்பேன் எனச் சொல்லப்பட்டது. நீ ரக்ஷிக்கும் சக்தனாய் இல்லை. இந்த உனது காண்டீவ வில் பயனற்றது. உனது வீர்யமும் கீர்த்தியும் அப்படியே.

பிறகு நான் அந்த ப்ராஹ்மணனை ஒன்றும் சொல்லாமல் மஹாதேஜஸ்வீ க்ருஷ்ணன் இருக்கும் இடத்திற்கு வ்ருஷ்ணி அந்தகருடன் புறப்பட்டேன். த்வாரகைக்குச் சென்ற பிறகு மதுஸூதனைக் கண்டு சோகத்தால் வாட்டப்பட்டு வெட்கமடைந்த நான் கோவிந்தனால் பார்க்கப்பட்டேன். அந்த ப்ராஹ்மணனும் வெட்கமடைந்த என்னைப் பார்த்து க்ருஷ்ணன் ஸந்நதியில் என்னை நிந்தித்தான். 'எனது முட்டாள் தனத்தைப் பாருங்கள். நான் நபும்ஸகன் வார்த்தையை நம்பினேன். ப்ரத்யும்னன், அநிருத்தன், பலராமன், கேசவன் இவர்களைத் தவிர வேறு எந்த அரசன் காப்பாற்ற முடியும். வீண் வார்த்தை பேசும் அர்ஜுனன்! சீசீ வெட்கம். தன்னைத் தான் புகழும் அர்ஜுனன். காண்டீவ வில், சீசீ. வெட்கம். தெய்வத்தால் கெடுக்கப்பட்டுத் துர்மதியான அவன் முட்டாள் தனத்தால் ரக்ஷிக்க வருகிறான். இவ்விதம் விப்ர ரிஷி சபிக்கும் போது வைஷ்ணவீ வித்யையை ஆஸ்ரயித்து யான், வீர அர்ஜுனன் யமன் இருக்கும் ஸம்யமன் புரத்தை அடைந்தேன்.

விப்ரன் குழந்தையைக் காணாமல் இந்த்ர, அக்னி, நிர்ருதி, ஸௌம்யாம், உதீசீ, வாருணீ நகரங்களை அடைந்தேன். பாதாளம், ஸ்வர்கம் இன்னும் மற்ற இடங்களையும் ஆயுதமேந்திச் சென்றேன். பிறகு த்விஜன் மகனை அடையாமல், ப்ரதிஜ்ஞையை நிறைவேற்ற முடியாதவனாய் அக்னி ப்ரவேசம் செய்ய நிச்சயித்து க்ருஷ்ணனாலும், ப்ரத்யும்னனாலும் தடுக்கப்பட்டேன். 'உனக்கு ப்ராஹ்மணன் மகனைக் காட்டிக் கொடுக்கிறேன். தன்னைத் தானே அவமதிக்க வேண்டாம். இந்த மனிதர்கள் உனக்குப் பரந்த கீர்த்தியை நிலை நிறுத்துவார்கள். இப்படி எனக்குச் சொல்லி, ப்ரீதியால் ஸமாதானப்படுத்தி அந்தப் ப்ராஹ்மணனைச் சாந்தப்படுத்தி இந்த வார்த்தை கூறினான். 'ஸுக்ரீவன், சைப்யன், மேகபுஷ்பன்,

பலாஹகன் எனும் குதிரைகளைப் பூட்டு தேரில்! என்று ஸாரதியைப் பார்த்துச் சொன்னான். க்ருஷ்ணன் அந்த ப்ராஹ்மணனைத் தேரிலேற்றி, ஸாரதியை இறங்கச் சொல்லி பிறகு அவன் 'தேரை நடத்து' என என்னைக் கட்டளையிட்டான். கௌரவஸ்ரேஷ்டரே! பிறகு க்ருஷ்ணனும், நானும் அந்த ப்ராஹ்மணனும் ஸோமனுடைய வடக்குத் திசைக்குச் சென்றோம்.

112 அத்யாயம் முற்றும்



## அத்யாயம் 113

## க்ருஷ்ணன் ப்ராஹ்மணனுக்கு நான்கு பிள்ளைகளையும் மீட்டுக் கொடுத்தல்

அர்ஜுனன் சொன்னான் : 'பிறகு பர்வதக் கூட்டங்களையும், நதிகளையும் காடுகளையும் தாண்டி வருணன் இருப்பிடமான ஸமுத்திரத்தைப் பார்த்தேன். பிறகு அந்த ஸமுத்ரம் நேரில் அர்க்யம் கொடுத்து கை கூப்பி யெழுந்து ஜனார்த்தனனைப் பார்த்துச் சொன்னான். ஜனார்த்தனன் அந்த பூஜையை ஏற்றுக் கொண்டு அவனைச் சொன்னான் : 'நதிகள் நாயகனே! உன்னால் கௌரவிக்கப்பட்ட நான் தேர் வழியை விரும்புகிறேன்.' ஸமுத்ரமும் பிறகு கைகூப்பி, கருட த்வஜன் க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னான். 'பகவானே! க்ருபை செய்ய வேண்டும். இப்படி (வழிவிட) இல்லை. மற்றவரும் இப்படிச் செல்வார். ஜனார்தனா! முன்னர் உன்னாலேயே ஆழமுடையவனாக (தாண்ட முடியாதவனாக) ஸ்தாபிக்கப்பட்டேன். உன்னால் (இப்போது) காட்டப்பட்ட வழியில் எல்லோரும் போக நெடு வழி ஆவேன். கோவிந்த! அஹங்காரத்தால் மயக்கங் கொண்ட இதர ராஜாக்களும் இப்படிச் செல்வார்கள். இந்த விஷயத்தை நன்கு சிந்தித்து எது தகுதியோ அதைச் செய்வாய்.

வாஸுதேவன் சொன்னான் : 'ஸமுத்ரமே! ப்ராஹ்மணனுக்காகவும் எனக்காகவும் என் வார்த்தைப்படி செய். என்னைத் தவிர வேறு ஒரு புருஷனும் உன்னைக் கடந்து செல்ல மாட்டான். பிறகு ஸமுத்ரம் மீண்டும் ஜனார்தனனைக் குறித்துச் சாபம் நேரும் பயங்கொண்டு) சொன்னான் : 'பரம! அப்படியே! நீ விரும்பிய இவ்விதமே ஆகட்டும். கேசவ க்ருஷ்ணா! நீ செல்லும் வழியை வற்றச் செய்கிறேன். கொடி கட்டிய தேருடன், தேர்பாகனுடன் தேர்மேல் செல்லலாம்'. வாஸுதேவன் சொன்னான். நீ வற்றமாட்டாய்

எனும் வரம் முன்னர் கொடுக்கப்பட்டது. உன்னிடம் பலவித ரத்ன கூட்டங்களை அந்த மனிதர்கள் அறிய மாட்டார்கள். ஸாதுவே உனது ஜலத்தை ஸ்தம்பிக்கச் செய். பிறகு நான் தேரிலேறிச் செல்வேன். உன்னிடமுள்ள ரத்தினங்களின் அளவை எவனும் அறிவதில்லை. ஸமுத்ரத்தால் 'அப்படியே ஆகட்டும்' எனச் சொல்லப்பட்டதும் பூமியில் ரத்னம் போல் ப்ராகாசிக்கும் ஸ்தம்பித்த ஜல வழியில் புறப்பட்டோம். பிறகு ஸமுத்ரத்தைத் தாண்டி உத்ர குரு ஸ்தலத்தைக் கடந்து ஒரு க்ஷணத்தில் கந்தமாதன மலையையும் தாண்டிச் சென்றோம்.

பின்பு ஜயந்தன், வைஜயந்தன், நீலன், ரஜதபர்வதன், மஹாமேரு, கைலாஸம், இந்த்ரக் கூடம் எனும் ஏழுமலைகள் பலவித ஆஸ்சர்ய வர்ணரூபங்கள் தரித்துக் கேசவனைத் துதித்தன. அவை கோவிந்தனைத் துதித்து 'தங்களுக்கு என்ன செய்வோம்?' என்று கூறின. மதுஸூதனன் அந்தப் பர்வதங்களை முறைப்படி கௌரவித்தான். நமஸ்கரித்து வணங்கி நிற்கும் அவைகளைக் குறித்து ஹ்ருஷீகேசன் சொன்னான்: 'ரஹஸ்ய த்வாரத்தில் செல்லும் எனக்கு இப்போது தேர் வழி கொடுக்கப்படட்டும். அந்தப் பர்வதங்கள் க்ருஷ்ணன் வார்த்தையைக் கேட்டு ஏற்றுக் கொண்டு இஷ்டபடி, செல்ல வழி கொடுத்தன. எல்லாப் பர்வதங்களும் அங்கேயே மறைந்தன. தேரும் மேகக் கூட்டங்களில் சூர்யன் போல் தரையில் பொருந்தாமல் சென்றது. அது எனக்கு ஆஸ்சர்யமாக இருந்தது. ஏழு த்வீபங்கள், ஏழு ஸமுத்ரங்கள், ஏழு மலைகள், லோகா லோக பர்வதம் எல்லாவற்றையும் கடந்து மிகப் பெரிய இருட்டில் புகுந்தார்.

யுதிஷ்டிர ராஜனே! பின்பு ஒரு ஸமயம் குதிரைகள் மிக ச்ரமப்பட்டுத் தேரை இழுத்துச் சென்றன. இருட்டு சேறாக விருந்தது. தொட்டுப் பார்த்து தெரிந்தது. பிறகு அந்த இருட்டு பர்வதம் போலாயிற்று. மஹாராஜா! அதை அடைந்து குதிரைகள் முயற்சியற்றனவாய் நின்று விட்டன. கோவிந்தன், அப்போது வெளியில் சென்று இருட்டைப் பிளந்து பிறகு மேலான ஆகாய ரத வழியைக் காட்டினான். அந்த இருட்டிலிருந்து வெளியில் சென்று ஆகாயம் காட்டப்பட்டதும் இனி ஜீவிப்பேன் என எண்ணம் வந்தது. எனது பயமும் நீங்கியது. பிறகு ஆகாயத்தில் மிக ஜ்வலிக்கும் தேஜஸ்ஸைப் பார்த்தேன். அது உலக முழுவதையும் ஆக்ரமித்துப் புருஷ உருவமுடையதாயிருந்தது. ஹ்ருஷீகேசன் ஜ்வலிக்கும் அந்த தேஜோ நதியில் நுழைந்தான். நானும் அந்த ப்ராஹ்மண ஸ்ரேஷ்டனும் ரதத்திலேயே இருந்தோம்.

பிறகு முஹூர்த்த காலத்துக்குள் க்ருஷ்ணன், ப்ராஹ்மணன் புத்ரர் நாலு பாலர்களைப் பிடித்துக் கொண்டு வெளியில் வந்தான். ஜனார்த்தனன் முன்னர் அபஹரிக்கப்பட்ட மூன்று பிள்ளைகள், இப்போது பிறந்த குழந்தை ஆக எல்லா புத்ரர்களையும் ப்ராஹ்மணனுக்குக் கொடுத்தான். ப்ரபோ! யுதிஷ்டிரரே! ப்ராஹ்மணன் அங்கு மறுபடியும் பிள்ளைகளைப் பார்த்து மிக மகிழ்ந்தான். நானும் அப்போது மிகப் ப்ரீதியடைந்தவனாயும், ஆஸ்சர்யம் கொண்டவனாயும் ஆனேன். பரதஸ்ரேஷ்டரே! யுதிஷ்டிரரே! பின்பு நாங்கள் எல்லோரும் ப்ராஹ்மணப் பிள்ளைகளும் எப்படி சென்றோமோ அப்படியே திரும்பினோம். ராஜஸ்ரேஷ்டரே! யுதிஷ்டிரரே! பாதி பகல் ஆவதற்குள் ஒரு க்ஷணத்தில் த்வாரகை வந்தடைந்தோம். நான் திரும்பத் திரும்ப ஆஸ்சர்யமடைந்தேன். அப்போது பெருங்கீர்த்தி வாய்ந்த க்ருஷ்ணன் பிள்ளைகளுடன், ப்ராஹ்மணனைச் சாப்பிடச் செய்து நிறைந்த செல்வமும் வாரிப் பொழிந்து வீட்டுக்கு அனுப்பினான்.

113 அத்யாயம் முற்றும்



## அத்யாயம் 114

### அர்ஜுனன் தான் கண்ணால் கண்ட அற்புதங்களைப் பற்றி வினவ, க்ருஷ்ணன் தான் பரம்பொருள், சர்வசக்தன் என்பதைத் தெரிவித்தல்

அர்ஜுனன் சொன்னான்: பிறகு க்ருஷ்ணன் ரிஷிபுங்கவர்களான அநேக நூற்றுக் கணக்கான ப்ராஹ்மணர்களுக்குப் போஜனமிட்டு அப்போது செய்ய வேண்டியதைச் செய்தவனானான். பாரத! யுதிஷ்டிரரே! பிறகு க்ருஷ்ணன் வ்ருஷ்ணி போஜர்களுடனும், என்னுடனும் உணவு உண்டு எல்லா விதத்தாலும் விசித்ர திவ்ய கதைகளைச் சொன்னார்கள். பிறகு கதை முடிவில் அங்கு நான் ஜனார்த்தனனிடம் நடந்தபடி, நான் பார்த்த விஷயங்களைக் கேட்டேன். 'தாமரை கண்ணா! எப்படி ஸமுத்ரம் ஸ்தம்பித்த ஜலமுடையதாகச் செய்யப்பட்டது? அச்சுதா! பர்வதங்களுக்குள் த்வாரம் எப்படி ஏற்பட்டது? அந்தக் கொடிய கனமான இருட்டு (1) எப்படிச் சக்ரத்தால் பிளக்கப்பட்டது? அந்த மேலான தேஜஸ்ஸில் எப்படி நுழைந்தாய்? அந்தக் குழந்தைகள் அந்த தேஜஸ்ஸால் எதற்காக அபஹரிக்கப்பட்டது? ப்ரபோ! அந்த நீண்ட வழி எப்படி மறுபடி சுருக்கப்பட்டது? கேசவா! குறுகிய காலத்தில் நாம் எப்படி போய் வந்தோம்? கேசவா! இந்த எல்லாவற்றையும் நடந்தபடியே சொல்லு

வாஸுதேவன் சொன்னான்: 'க்ருஷ்ணன் ப்ராஹ்மணனுக்காக வருவான். வேறுபடி வரமாட்டான். என்றுதான், என்னைக் காண்பதற்கு . அந்த குழந்தைகள், அந்த பரம புருஷனால் அபஹரிக்கப்பட்டன. பரதஸ்ரேஷ்ட அர்ஜுனா! நீ பார்த்த அந்தப் பெரிய திவ்ய தேஜோ மய ப்ரஹ்மம் நான்தான். அந்த பரம்பொருள் எனது தேஜஸ். அது வ்யக்தா வ்யக்தமான எனது மிகப் பழைய தன்மை. அதையடைந்து சிறந்த யோக ஞானிகள் முக்தர்களாகின்றனர். அது ஞானயோகிகளுக்கும், கர்ம யோகிகளுக்கும் புகலிடம். அந்த இடம் பரப்ரஹ்மம். எல்லா ஜகத்தையும் பிரிக்கிறது. பரத குலத்தவனே! அந்தக் கனமான தேஜஸ்ஸை நானாகவே அறிந்து கொள். ஸ்தம்பிக்கும் ஜலத்தையுடைய ஸமுத்ரமும் நான். ஜலத்தை ஸ்தம்பிக்கச் செய்தவனும் நான். உன்னால் பார்க்கப்பட்ட பலவித பர்வதங்களும் நான். நீ பார்த்த சேறாகவிருந்த இருட்டும் நான். கனமான இருட்டும் நான். அதைப் பிளந்தவனும் நான். எல்லாப் பூதங்களுக்கு முடிவும் நான். பழைய தர்மமும் நான். சந்த்ர சூர்யர்கள், பெரிய பர்வதங்கள், நதிகள், தடாகங்கள், எல்லா நான்கு திசைகளும், என்னுடைய நாலு விதமான ஆத்மாவே! நான்கு வர்ணங்கள் என்னிடம் உண்டாயின. நான்கு ஆஸ்ரமங்களும் நான்தான். பாரத! நான்கு வித ச்ருஷ்டிகள் கர்த்தாவும் நானே என்று தெரிந்து கொள்.

அர்ஜுனன் சொன்னான்: பகவானே எல்லா பூதங்களுக்கும் ஈசனே! ப்ரபோ! புருஷோத்தமா! உனக்கு வணக்கம். உன்னை நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். உன்னிடம் சரணாகதி செய்த நான் உன்னைக் கேட்கிறேன்.

வாஸுதேவன் சொன்னான்: 'பாண்டவா! பார்த்தா! ப்ரஹ்மா, ப்ராஹ்மணர்கள், தவம், ஸத்யம், பயங்கர சக்தி, மிகப் பெரியது இவையெல்லாம் என்னிடமிருந்து உண்டாயின என்று அறி. மஹாபாஹோ! உனக்கு நான் ப்ரியமானவன். என்றும் நீ ப்ரியமாயிருக்கிறாய். ஆதலால் உனக்குச் சொல்கிறேன். மற்றவருக்குச் சொல்ல மாட்டேன். நான் யஜுர் வேதங்களும், ஸாமங்களும், ரிக் வேதங்களும் அதர்வண வேதங்களும். பரதஸ்ரேஷ்டா! ரிஷிகள் தேவதைகள், யக்ஞங்கள் என் தேஜஸ்ஸிலிருந்து உண்டானவை. ப்ருதிவீ, வாயு, ஆகாயம், அப்பு, தேயு, சந்த்ர சூர்யர், பகல் இரவு பக்ஷங்கள், மாதங்கள், ருதுக்கள், முஹூர்த்தங்கள், கலைகள் க்ஷணங்கள், வர்ஷங்கள், பல்வேறு மந்திரங்கள், சாஸ்த்ரங்கள் வித்யைகள், அறியத்தக்கது ஆகிய எல்லாம் என்னிடமிருந்தே உண்டாயின. பாரத! குந்தி புத்ர! ஆக்கலும் அழித்தலும் என் மயமானது, என்று அறி. ஸத், அஸத் இவற்றுக்கு மேலான ஸ்வரூப

எல்லாம் என் தத்வமே. அர்ஜுனன் சொன்னான் : 'ராஜராஜனே! யுதிஷ்டிரரே! ப்ரீதியடைந்த க்ருஷ்ணனால் அப்போது இவ்வாறு சொல்லப்பட்டது. அப்படியே என் மனம் ஜனார்த்தனனிடத்து எப்போதும் நிலைத்திருந்தது. கேசவனது, என்னால் காணப்பட்ட இந்தப் பெருமை, என்னை நீர் வினவினபடி இப்போது கேட்கப்பட்டது. இக்காரணத்தால் ஜனார்த்தனன் பெரியன். வைசம்பாயனர் சொன்னார். இதைக் கேட்டு, குருஸ்ரேஷ்டர், தர்மராஜா தர்மாத்மா யுதிஷ்டிரர் புருஷோத்தமனான கோவிந்தனைப் பூஜித்தார். யுதிஷ்டிர ராஜா எல்லா ஸஹோதரர்களுடனும் அங்கு வந்து அமர்ந்திருந்த அரசர்களுடனும் ஆஸ்சர்யமடைந்தான்.

## அத்தியாயம் 114 முற்றும்



## அத்யாயம் 115

### வைசம்பாயனர் க்ருஷ்ணனின் அளவற்ற வீர்யமும் கீர்த்தியும் வாய்ந்த சரித்திரங்களை வரிசையாகச் சொல்லுதல்

ஜனமேஜயர் சொன்னார் : 'த்விஜஸ்ரேஷ்டரே! வைசம்பாயனரே! புத்திமான் யாதவஸிம்ஹம் க்ருஷ்ணனின் அளவற்ற கார்யங்களை மறுமுறை உள்ளபடி கேட்க விரும்புகிறேன். மஹாதேஜஸ்வீ க்ருஷ்ணனது அற்புதமான திவ்ய, பலவித, அளவற்ற, மேலான சரித்திரங்கள் கேட்கப்படுகின்றன. பாபமற்றவரே! மஹாமுனே! வைசம்பாயனரே! நான் இவனது பலவித சரிதங்களைக் கேட்டு ப்ரீதியடைகிறேன். அவைகளைக் கேட்க விரும்பும் எனக்கு விஸ்தாரமாகச் சொல்லீர்.

வைசம்பாயனர் சொன்னார் : 'பாரத! மஹாபாஹுவே! ஜனமேஜயா! மஹாத்மா கேசவனின் ஆச்சர்யமான பல கதைகள் சொல்லப்பட்டன. அவன் செயல்களின் முடிவை, நான் முழுமையாக, விஸ்தாரமாக, பாரத! என்னால் அவைகளை சரிதமாகச் சொல்லத்தக்கதல்லவா? ராஜனே! அளவற்ற வீர்யமுடைய கீர்த்தி வாய்ந்த உதார குணம் கொண்ட சரித்ரங்களை வரிசையாகச் சொல்வேன். கவனமாய்க் கேட்பாயாக. த்வாரகையில் வஸிக்கும் புத்திமான் யாதவஸிம்ஹம் க்ருஷ்ணனால் மஹாத்மாக்களான, அரசஸ்ரேஷ்டர்களின் ராஜ்யங்கள் கலைக்கப்பட்டன. யாதவர்களை அழிக்க ஸமயம் பார்த்த த்விசக்ரன் எனும் அஸுரன் கொல்லப்பட்டான். மறுபடியும் அந்த மஹாத்மா க்ருஷ்ணனால்

ஸமுத்ர நடுவில், ப்ராக்ஜோதிஷபுரம் சென்று, நரகாஸுரன் அழிக்கப்பட்டான். போரில் இந்த்ரனை ஜயித்து பலாத்காரமாக பாரிஜாத மரம் அபஹரிக்கப்பட்டது. வருண பகவானும் லோஹித மடுவில் ஜயிக்கப்பட்டான். கருஷ தேசாதிபதி தந்தவக்த்ரன். தென்தேசத்தில் கொல்லப்பட்டான். சிசுபாலனும் நூறு குற்றங்கள் முடிந்ததும் கொல்லப்பட்டான்.

மஹாராஜா! மஹாபலியின் மகனான மஹாவீர்யமுடைய ஆயிரம் கைகள் கொண்ட, ருத்ரனால் ரக்ஷிக்கப்பட்ட பாணாஸுரன் பெரும் போரில் ஜயிக்கப்பட்டு உயிருடன் விடப்பட்டான். மஹாத்மா க்ருஷ்ணனால் மலை நடுவில் அக்னி பகவானும் ஜயிக்கப்பட்டான். போரில் சால்வன் ஜயிக்கப்பட்டுக் கொல்லவும் பட்டான். ஸமுத்ரத்தைக் கலக்கிப் பாஞ்சஜன்யம் வசப்படுத்தப்பட்டது. ஹயக்ரீவ அஸுரனும் கொல்லப்பட்டான். வேறு மஹாபலமுடைய அஸுரர்களும் கொல்லப்பட்டனர். ஜராஸந்தனழிவில் எல்லா அரசர்களும் விடுவிக்கப்பட்டனர். அரசர்களை ரதப் போரில் ஜயித்து, காந்தார புத்ரீ அபஹரிக்கப்பட்டாள். ராஜ்யத்திலிருந்து நழுவி சோகத்தால் பீடிக்கப்பட்ட பாண்டவர்கள் ரக்ஷிக்கப்பட்டனர். இந்த்ரனது கொடிய காண்டவ வனம் எரிக்கப்பட்டது. அக்னியால் காண்டீபம் கொடுக்கப்பட்டு அர்ஜுனனைச் சேர்ந்தது.

ஜனமேஜய! கோரமான போரில் தூது செல்லுதல் அவனால் செய்யப்பட்டது. இந்த யது ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனால் யதுவம்சம் வளர்க்கப்பட்டது. குந்தியின் முன்னிலையில் பாரத யுத்தம் முடிந்ததும் அவள் பிள்ளைகளைத் திருப்பிக் கொடுக்கிறேன் என்று சொல்லப்பட்ட பாண்டவர்களைப் பற்றிய ப்ரதிக்ஞை நிறைவேற்றப்பட்டது. மிக்க கொடிய சாபத்திலிருந்து, மிக்க தேஜஸ்வி ந்ருகனும் விடுவிக்கப்பட்டான். காலனென்ற, புகழ் பெற்ற யவனும் போரில் கொல்லப்பட்டான். அடக்க முடியாத மஹாவீர்யமுடைய மைந்தன் த்விதன் எனும் வானர வீரர்கள் போரில் ஜயிக்கப்பட்டனர். ஜாம்பவானும் தோற்கடிக்கப்பட்டான். யமன் வசம் சென்ற சாந்தீபினி புத்ரனும், உன் தகப்பனாகிய (பரீக்ஷித்தும்) அவன் தேஜஸால் உயிர் பெற்றனர். அரசஸ்ரேஷ்டர்களை அழிக்கும் பல கொடிய போர்கள் புரியப்பட்டன. ஜனமே ஜயா! போரில் அத்புதமான வெற்றிகள் புரிந்து எல்லா ராஜாக்களும் கொல்லப்பட்டனர். எல்லாம் என்னால் உனக்குச் சொல்லப்பட்டது.

115 அத்யாயம் முற்றும்

## அத்யாயம் 116

### வைசம்பாயனர் பாணசுரனின் விருத்தாந்தம் சொல்லத் தொடங்குதல்—பாணனுக்குப் போரிடுதலில் பெரு விருப்பம் - சிவமுருகர் உதவி பெறல்—நிகழும் உற்பாதங்கள்— கும்பாண்டன் கவலையுறல்.

ஜனமேஜயர் சொன்னார்: 'தவச்செல்வரே! வித்வான்களில் சிறந்தவரே! த்விஜஸ்ரேஷ்டரே! வைசம்பாயனரே! யதுஸ்ரேஷ்டன் வாஸுதேவனது அளவற்ற செயல்கள் உம்மிடமிருந்து கேட்கப்பட்டன. முன்னர் மஹா அஸுரன் பாணனைக் குறித்து உம்மால் சொல்லப்பட்டதை, நான் விவரமாகக் கேட்க விரும்புகிறேன். ப்ரஹ்ம ஞானியே! பாணன் உடன் வஸிக்கும் மஹாத்மா சங்கரனாலும், கணங்களுடன் கூடிய ஸுப்ரமண்யனாலும் நேரில் ரக்ஷிக்கப்பட்டான். அந்த பாணன், தேவதேவன் சங்கரனுக்கு எப்படி புத்ரத் தன்மை அடைந்தான்? பலவான் பலியின் புத்ரன், நூறு பிள்ளைகளில் மூத்தவன். நூற்றுக் கணக்கான திவ்ய அஸ்த்ரங்கள் தரித்த ஆயிரம் கைகள் நாற்புறமும் உள்ளவன். கணக்கிட முடியாத உடலுடைய நூற்றுக் கணக்கான பெரும் பலம் பொருந்திய ஸேனைகளால் சூழப்பட்டவன். இத்தகைய அவன் போரில் க்ருஷ்ணனால் எப்படி ஜயிக்கப்பட்டான்? போரை விரும்பி பரபரப்புடைய அவன் எப்படி உயிருடன் விடப்பட்டான்?

வைசம்பாயனர் சொன்னார்: 'ராஜனே! மனித உலகில் அளவில்லா தேஜஸ்வீ க்ருஷ்ணனுக்கும் பாணனுடன் எப்படிப் போர் நடந்தது என்பதைக் கவனமாய்க் கேள். ருத்ர, முருகர்களை ஸஹாயமாகவுடைய போர்ப் பெருமைக் கொண்ட பலிபுத்ரன் ஜயிக்கப்பட்டு, ஜீவனுடன் விடப்பட்டதும் மஹாத்மா சங்கரனால் வரங்கொடுக்கப்பட்டதும், அப்படியே குறைவற்ற கணபதி ஸாந்நித்யமும், பாணனின் அந்தப் போரும், உயிருடன் விடப்பட்டதும் அப்பெரும் போர் எதற்கென்றும் எவ்வாறென்றும் கேட்பாயாக. விளையாடுகிற மஹாத்மா முருகனின் அழகிய உடலைப் பார்த்து, மஹா வீர பலி புத்ரன் மிக ஆஸ்சர்யமடைந்தான். அந்தப் பாணனுக்கு செய்வதற்கரிய தவம் செய்ய புத்தி உண்டாயிற்று. ருத்ரனைப் பூஜை செய்து அவனுக்கு மகனாக வேண்டும் எனும் இச்சை பிறந்தது. பின் தவத்தால் தன்னை வாட்டினான். கர்வமும் கொண்டான். ருத்ரனும் பார்வதியுடன் மிக மகிழ்ச்சியடைந்தான். நீல கண்டனும் மிகப் ப்ரீதியடைந்து அஸுரனைக் குறித்துச் சொன்னான்: 'உன் மனதிலிருக்கும் வரத்தைக் கேட்டுக் கொள். உனக்கு மங்களம்'

பின்பு தேவதேவனாகிய ருத்ரனைக் குறித்து பாணன் வார்த்தை சொன்னான் : 'முக்கண்ணா! தேவியின் புத்ரனாகும் தன்மையை உம்மால் கொடுக்கப்பட விரும்புகிறேன்.' சங்கரனும் 'அப்படியே' என்று சொல்லி பார்வதியை நோக்கிக் கூறினான். 'முருகனின் இளையவனான இவன் உனது புத்ரனாக அங்கீகரிக்கப்படட்டும். அக்னி குமாரனான ஸேனாபதி முருகன் எந்த நகரில் தோன்றினானோ அந்த இடத்திலேயே இவனுக்கு நகரம் உண்டாகும். ஸந்தேஹமில்லை. அந்தச் சிறந்த நகரம் 'ஸ்ரோணிதபுரம்' எனப் பெயருடையதாகும். என்னால் நன்கு ரக்ஷிக்கபட்டு பெருமையுடைய அதை ஒருவனும் அணுக மாட்டான். பிறகு அந்தப் பாணன் ச்ரோணிதபுரத்தில் வஸித்து எல்லா தேவதைகளையும் கலங்கச் செய்து கொண்டு எப்போதும் அரசாட்சி செய்கிறான். பின்பு பாணன் ஆயிரம் தோள்களுடன் வீர்ய மதங்கொண்டு தேவகணங்களைப் பொருட்படுத்தாமல் எப்போதும் போரையே விரும்புகிறன். முருகனும் ப்ரீதியுடன் அக்னி தேஜஸுள்ள மயில் கொடியையும் ஒளிவீசும் மயில் வாகனத்தையும் அந்தப் பாணனுக்குக் கொடுத்தான். ருத்ர தேஜஸ்ஸால் தேவர் கந்தர்வர், யக்ஷர், பன்னகர் அவனுடைய போரில் எதிர்த்து முன் வரவில்லை. முக்கண்ணனால் நன்கு காக்கப்பட்டு மிக்க கர்வம் கொண்ட அந்த மஹாஸுரன் பாணன் பெரிய போர் விரும்பினன். பரமசிவனிடம் சென்றான்.

பிறகு அந்தப் பலிபுத்ரன் பாணன் ருத்ரனிடம் சென்று வணங்கி அபிவாதனம் செய்து காளைக் கொடியோனை நோக்கி இந்த வார்த்தை சொன்னான் : "ஸாத்யர்களுடனும் மருத்கணங்களுடனும் கூடின தேவர்கள் என்னால் மதபலம் காரணமாக ஸேனைகளுடன் உனது ஸஹாயத்தால் பலமுறை ஜயிக்கப்பட்டனர். தோல்வியால் நடுங்கிய அவர்கள் என்னை வெல்வதில் ஆசையற்று இந்தத் தேசத்தையடைந்து நகரில் ஸுகமாக வஸிக்கின்றனர். என் அனுமதி பெற்று ஸ்வர்கலோகத்தையடைந்து ஸுகமாக வாழ்கின்றனர். அத்தகைய நான் போரில் ஆசையற்று உயிர் வாழ விரும்பவில்லை. போர் செய்யாத எனக்கு ஆயிரம் தோள்களைத் தாங்குவது வீண் ஆதலால் போர் வரும் வழியைச் சொல்ல வேண்டுகிறேன் தேவனே! போரின்றி எனக்கு மகிழ்ச்சியில்லை. எனக்கு அனுக்ரஹம் செய்ய வேண்டும்".

பிறகு காளைக் கொடி பகவான் சிவன் சிரித்துக் கொண்டு சொன்னான் : ' பாணா! போர் உண்டாகும் வழி சொல்கிறேன் கேள் குழந்தாய்! உன்னிடம் நாட்டப்படும் கொடிக்குப் பங்கம் வரும் போது போர் நேரும்.' இவ்விதம் சொல்லப்பட்ட பாணனும்

ஸந்தோஷத்தால் பலமாகச் சிரித்து தெளிந்த முகமுடையவனாகி பரமசிவன் பாதங்களில் வணங்கிச் சொன்னான். பாக்யவசத்தால் ஆயிரம் தோள்கள் சுமப்பது வீணாகவில்லை. நான் பாக்யத்தால் இந்த்ரனை மறுபடியும் போரில் வெல்வேன். சத்ருக்களைக் கண்டிக்கும் பாணன் ஆனந்தத்தால் நீர் நிறைந்த இரு கண்களுடன் (ஆயிரம் கைகளால்) ஐந்நூறு அஞ்சலிகள் செய்து பரமசிவனைப் பூஜித்து பூமியில் விழுந்து வணங்கினான். ஈஸ்வரன் கூறினான் எழுந்திரு எழுந்திரு தோள்களுக்கும், தனக்கும், தன் குலத்துக்கும் தக்க ஒப்பற்ற பெரிய தொரு போரை அடைவாய்.

வைசம்பாயனர் சொன்னார்: பிறகு மஹாத்மா முக்கண்ணனால் இப்படி சொல்லப்பட்ட பாணன் ஸந்தோஷத்தால் மிகப் பூரித்து காளைக் கொடியோனை வணங்கினான். நீலகண்டனால் விடப்பட்ட சத்ரு நகரங்களை ஜயிக்கும் பாணாஸுரன் தன் பெரிய கொடி (பறக்கும்) மாளிகையை சீக்ரம் அடைநதான். அங்கு உட்கார்ந்து சிரித்துக் கொண்டு கும்பாண்டனிடம் இது சொன்னான். என் மனதிலுள்ள உனக்கு ப்ரியமான ஒன்றைச் சொல்வேன். இப்படிச் சொல்லப்பட்ட கும்பாண்டன் சிரித்துக் கொண்டு போரில் ஒப்பற்ற பாணனைக் குறித்துச் சொன்னான். ராஜனே! எனக்குச் சொல்ல விரும்பும் ப்ரியமானது எது? ஆச்சர்யத்தால் மலர்ந்த கண்களுடன் ஸந்தோஷத்தோடு பேசுகிறாய். சங்கரன் அனுக்ரஹத்தாலும் மஹாத்மா ஸ்கந்தன் அனுக்ரஹத்தாலும் அடைந்த வரத்தை உன்னிடமிருந்து கேட்க விரும்புகிறேன். மஹாஸுரா! ருத்ரன் க்ருபையாலும், ஸ்கந்தன் ஸம்ரக்ஷணத்தாலும் அடையப்பட்ட விருப்பத்தை என்னிடம் சொல். சூலபாணி பரமசிவனால் மூவுலகாட்சி கொடுக்கப்பட்டதா? இந்த்ரன் உனக்குப் பயந்து பாதாளம் செல்வானா? அஸுரர் விஷ்ணுவிடம் பயத்தை விடுவார்களா? [illegible] அஸுரர் [illegible] விட்டு உன் பலத்தை அண்டி ஸ்வர்க்க லோகத்தில் வஸிப்பார்களா? ராஜனே! விஷ்ணுவால் அடக்கப்பட்டுக் கட்டப்பட்ட உன் பிதா பலி ஸமுத்ரத்திலிருந்து வெளி வந்து தன் ராஜ்யத்தை அடைவானா? திவ்ய மாலை, ஆடை தரித்த திவ்ய புஷ்பங்களையும் பூச்சுக்களையும் உடைய [illegible] உன் பிதாவை (நாம்) காண்போமா? ப்ரபோ! [illegible] எல்லா உலகங்களையும் எல்லா தேவர்களையும் வென்று திரும்பி அடைவோமா? அழகிய கம்பீரத்வனியுடைய சங்கு சப்தம் போல் முன் செல்லும் போரில் வல்ல நாராயண தேவனை வெல்வோமா? அப்பா! உன் உள்ளம் பூரிக்க கண்களில் ஆனந்த பாஷ்பம் சொரிய காளைக் கொடியோன் அன்புடன் வரம் தந்தானா? ஸ்கந்...

அனுமதியாலும் ருத்ரன் ஸந்தோஷத்தாலும் எங்கள் எல்லோருக்குமாக ராஜ்ய ஸம்பத்தை அடைந்திருக்கிறாயா?

இவ்விதம் கும்பாண்டன் வார்த்தைகளால் தூண்டப்பட்ட சொல்வோரில் வல்ல அந்த அஸுர ச்ரேஷ்டன் பாணன் தடங்கலில்லா வார்த்தை சொன்னான். "கும்பாண்டனே! வெகு நாளாகவே என்னால் போர் அடையப்படவில்லை. பிறகு கீர்த்தி வாய்ந்த நீலகண்டன் என்னால் ப்ரார்த்திக்கப்பட்டான். தேவ! எனக்கு மிகப் பெரிய போர் புரிய ஆசையுண்டாகிறது. மனதுக்கு ஸந்தோஷத்தை வளர்க்கும் போரை நான் அடைய வேண்டும்" பின்பு சத்ருக்களைக் கொல்லும் தேவதேவன் சங்கரனால் வெகுகாலம் சிரித்து ப்ரிய வார்த்தை சொல்லப்பட்டேன். பாணனே! ஒப்பற்ற பெரிய போரை நீ அடைவாய். திதி புத்ர அஸுரனே! மயூரத்வஜ பங்கம் ஏற்படுகிற போது மிகப் பெரிய போரை அடைவாய். பிறகு நான் மிக ப்ரீதியடைந்து காளைக் கொடி பகவானை வணங்கி உன்னிடம் வந்தேன். இவ்விதம் சொல்லப்பட்டதைக் கேட்டுக் கும்பாண்டன் அப்போது அரசனைப் பார்த்துச் சொன்னான். ஐயோ! ராஜனே! நீ இவ்விதம் சொல்லும் வார்த்தை மங்களமானதன்று. ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டிருக்கும் போது மேலிருந்த கொடி இடியாலடிக்கப்பட்டு வேகமாக விழுந்தது. அந்த மேலான கொடி விழுந்ததைப் பார்த்து மிக மகிழ்ச்சி கொண்டான். போர் வந்து விட்டதாவும் நினைத்தான். பிறகு இடி அதிர்ச்சி கொண்ட பூமி நடுங்கிற்று. பூனை பூமியில் மறைந்து சப்தித்தது. கத்தலும் செய்தது. சோணிதபுரத்தில் இந்த்ரன் நாற்புறமும் மிகப் பெரிய ரத்த மழை பொழிந்தான். பெரிய எரி நக்ஷத்ரம் சூர்யனே பிளந்து கொண்டு (பகலில்) விழுந்தது. தன் பக்கத்தில் தேவர்களால் தூண்டப்பட்ட சூரியன் பரணி நக்ஷத்திரத்தைப் பிடித்தான். ஸம்சான மரங்களில் திடீரென ஆயிரக்கணக்கில் ரத்த தாரை பொழிந்தன. கொடிய எரி நக்ஷத்திரங்கள் விழுந்தன.

ஜனமேஜயராஜனே! பர்வ காலம் இல்லாத போது சூர்யனே ராஹு விழுங்கிற்று. உலகிற்கு அழிவு செய்யும் காலத்து இடி விழுந்தது. வால் நக்ஷத்ரம் தெற்குத் திக்கில் போயிருந்தது. மிகக் கொடிய காற்றுக்கள் இடைவிடாது எப்போதும் வீசின. சூர்யன் வெளுத்த மஞ்சள் ப்ரபை உடையவன் ஆனான். கருத்த கழுத்துடையவன் மின்னல் காந்தியுடையவன், மூவர்ண சுற்று உடையவன். இத்தகைய சூர்யன் ஸந்த்யா காலம் சிவப்பைச் சுற்றி பரப்பினான். பயங்கர செவ்வாய் பாணனின் ஜன்ம நக்ஷத்ரம்

ரோஹிணியைக் கண்டிக்கிறவனாகி கார்த்திகை நக்ஷத்திரத்தில் வக்ர கதி செய்தான். மஹாத்மா அஸுரர்களின் எல்லா கன்னிகைகளாலும் பூஜிக்கப்பட்ட பல கிளைகளுடைய சைத்ய வ்ருக்ஷமும் பூமியில் இவ்விதம் பலதுர்நிமித்தங்களைப் பார்த்து பலத்தால் கர்வங் கொண்ட பாணன் ஒரு நிச்சயமும் செய்யவில்லை. பாணனின் மந்திரி புத்திமான் கும்பாண்டன் உட்பொருளையறிந்து அங்கே பல தோஷங்களைச் சொல்லிக் கொண்டு தெளிவற்ற மனதுடையவன் ஆனான். இங்கு உற்பாதங்கள் காணப்படுகின்றனவல்லவா? அமங்களத்தைத் தெரிவிக்கின்றன. உனது ராஜ்ய நாசத்தின் பொருட்டு ஆகின்றன. ஸந்தேஹமில்லை. ராஜனே! பாணனே! உன் துர்நீதியால் நாங்களும் மற்ற மந்திரிகளும் உன்னைப் பின் தொடரும் பணியாட்களும் சீக்ரமே நாசம் அடைவோம். தனது மோஹத்தால் போரை விரும்பி கர்ஜிக்கும் பாணனுடைய வீழ்ச்சி இந்த்ர கொடி மர உயரமுள்ள சைத்ய வ்ருக்ஷத்தின் வீழ்ச்சி போல் நிச்சயம் உண்டாகும். மஹாதேவன் வரத்தால் மூவுலகாட்சி (பாணன்) அடைந்தான். அதிக்ரமத்தால் நாசம் காணப்படுகிறது என்று தனக்குள் கும்பாண்டன் எண்ணினான். மேலான வீரன் பாணனோ போரை விரும்பிக் கர்ஜித்தான். இப்படி கர்ஜித்து மனமகிழ்ச்சியுடன் தைத்ய தானவ ஸ்த்ரீகளுடன் உயர்ந்த மது பானம் செய்தான்

அப்போது கும்பாண்டன் மனக்கவலையில் முழுகியவனாய் ராஜமாளிகையை அடைந்தான். அந்தந்த உற்பாதங்களைக் கண்டு அதனதன் உட்பொருளை ஆலோசித்தான். மகாஸுர ராஜா பாணன் அலக்ஷிய புத்தியுடையவன். துர்புத்தி வெற்றியடைந்ததாக கருதுகிறவன். போரையே விரும்புகிறான். கர்வத்தால் தன் தோஷங்களை நினைக்கிறானில்லை. பெரிய உற்பாத பயமும் பொய்யாகாது. உற்பாதங்களின் தோற்றம் பொய்யாகுமோ? இங்கு வீர்யமுடைய முக்கண்ணனும் கார்த்திகேயனும் இருக்கின்றனர். அந்தப் பாணனால் உண்டான குற்றம் எங்களைப் பங்கப்படுத்தாமல் இருக்குமா? நேர்ந்த உற்பாதங்களால் உண்டாகிய இந்த நாசம் பெரிதாகும். தோஷங்களின் அழிவு உண்டாகாது. இந்த ராஜனின் துஷ்ட சுபாவத்தால் இந்த தோஷம் நிலைத்திருக்கும் ஸந்தேஹமில்லை. அஸுரர்களே தோஷமுடையவர்கள்தானோ! தேவ அஸுர கூட்டங்களுக்குப் படைத் தலைவன். உமைத் தலைவன் கார்த்திகேய பகவானும். லோகித ஸேனானிப் பதத்தில் வைக்கும்படி செய்யப்பட்டான். குஹன் (முருகன்) எப்போதும் பாணனைக் காட்டிலும் சிவனுக்குப் ப்ரியமானவன். பாணனோ முருகனைக் காட்டிலும் சிவனுக்கு விசேஷமாக எப்போதும் ப்ரியமுள்ளவன். அஹங்கார மிகுதியால் அழிவின் பொருட்டுச் சிவனிடம் போருக்கா

வரம் கேட்டான். பேராசை கொண்ட அவன் எல்லா ப்ரகாரத்தாலும் வாழமாட்டான். விஷ்ணுவை முதலாகவுடைய இந்த்ராதி தேவர்களுக்கு மேகம் போல் நன்மை கிடைத்தல் உண்டாகுமானால் சிவன் கையால் செய்யப்பட்டதாகும். பாணனுக்கு உதவி செய்ய விரும்பும் இந்தச் சிவன், முருகன் இவர்களுக்கு (எதிர்த்து) போர் புரிய எவன் வல்லவன்? தேவன் வார்த்தை ஒரு போதும் பொய்யாகாது. எல்லா அஸுரர்களை அழிக்கும் பெரிய போர் உண்டாகும். அந்த தத்வ தர்சி கும்பாண்ட மஹாஸுரன் இவ்விதம் மனக் கவலையில் மூழ்கி மங்களம் உண்டாக எண்ணினான். புண்ய கர்மாக்களையுடைய தேவர்களுடன் போரில் விரோதிகள் பலி அடக்கப்பட்டது போல் பேரழிவை அடைவர்.

அத்தியாயம் 116 முற்றும்



## அத்தியாயம் 117

### அப்ஸரஸ் சித்ர[illegible]-பாணன் மகள் உஷை-பார்வதி தேவியின் அனுக்ரஹம்-உஷை காமமோஹத்தால் வருந்துதல் தோழியர் காரணம் வினவுதல்-தன் தாயிடம் தெரிவித்தல்

வைசம்பாயனர் சொன்னார் : ஒரு ஸமயம் ப்ரபு சிவன் சோபையுடைய அழகிய நதி தீரத்தில் பார்வதி தேவியுடன் விளையாடுமிடத்தில் அமர்ந்திருந்தான். அங்கு எல்லா ருதுக்களும் சோபிக்கிற அழகிய நதி தீரத்தில் நாற்புறமும் நூறு அப்ஸரஸ்ஸுகளும் அப்படி கந்தர்வ பதிகளும் விளையாடினார்கள். பாரிஜாத, ஸந்தான புஷ்பங்களால் நதி தீரமெங்கும், ஆகாய முழுவதும் நறுமணம் நிறைந்தது. அப்போது வேணு, வீணை, ம்ருதங்கம், [illegible] இவ்வாத்யங்கள் வாசிப்புடன் அப்ஸரஸ்களின் [illegible] சிவன் கேட்டான். அப்ஸரஸ் கூட்டங்கள் ஸூத, [illegible] தேவ தேவன் அழகிய மேனியுடையவன் [illegible] சிவப்பாடை உடையவன், மனோ[illegible] பார்வதி பதி, மஹா தேவன் இத்தகையவனை [illegible] சித்ரலேகையுடன் சிறந்த அப்ஸரஸ் பார்வதி [illegible] பாலிகைகளை ஸந்தோஷப்படுத்தினாள். அப்போது பார்வதி தேவியின் சிநேகிதிகள் பாலிகைகளை ஸந்தோஷப்படுத்தும் [illegible] அப்ஸரஸ் கூட்டங்கள் சிரிக்கின்றன. சிவனது [illegible] எல்லாத் தேவகணங்களும் பார்வதி தேவியின் [illegible] மேல் அங்கங்கே விளையாடினர். பின் [illegible] ஆன அந்தப் பார்ஷதர்கள், மஹாதேவன் ரூபத்துடன் அவனது விளையாட்டாலும், வார்த்தைகளாலும்

விளையாடினார்கள். அப்போது பார்வதி தேவி பலமாகச் சிரித்தாள். அந்த அப்ஸரஸ்களும் சிரித்தனர் பின்பு எல்லா பக்கங்களிலும் 'கில கில' சப்தம் உண்டாயிற்று. அப்போது பரமசிவன் ப்ரியமனதுடன் ஒப்பற்ற மகிழ்ச்சி யடைந்தான். அங்கும் பாணன் மகள் உஷையெனும் பெண் அங்கிருந்தாள். மிக்க தேஜஸ்வியும் பன்னிரு ஆதித்யர் தேஜஸ்ஸுடையவரும் ஆகிய மஹாதேவன் பல சரீரங்கள் கொண்டு நதியையடைந்து பார்வதி தேவிக்கு ப்ரியம் செய்யத் தேவியுடன் விளையாடுவதைப் பார்த்த பிறகு உஷை பார்வதி தேவியின் முன்னிலையில் (தானும்) பரமசிவ பார்வதி போல் விளையாட மனோரதம் கொண்டாள். பதியுடன் இவ்விதம் கூடியவள் பார்வதியல்லவா? அப்படி உஷையால் நினைக்கப்பட்டது.

பிறகு பார்வதி தேவி உஷையின் அந்த அபிப்ராயத்தை யறிந்து உஷையை மகிழ்விப்பவளாய் அவளிடம் வார்த்தை சொன்னாள்: உஷே! என்னுடன் சத்ரு நாசகன் சங்கரன் விளையாடுவது போல் நீயும் சீக்ரத்தில் இப்படிப் பர்த்தாவுடன் ரமிப்பாய். பார்வதி தேவியால் இவ்விதம் வார்த்தை சொல்லப்பட்ட அப்போது கவலையால் கலங்கின கண்ணுடைய உஷை எப்போது என் பர்த்தாவுடன் ரமிப்பேன் என்று எண்ணம் கொண்டாள். பார்வதி தேவி நன்கு சிரித்து வார்த்தை சொன்னாள்: உஷே ! நீ பர்த்தாவுடன் சேரும் ஸமயத்தை நான் சொல்கிறேன். கேள். வைசாக மாத த்வாதசியில் பகல் கழிந்ததும் உன் ஸ்வப்னத்தில் ராத்ரியிலிருக்கும் உன்னை ரமிப்பிக்கும் புருஷன் உனக்கு பர்த்தாவாவான். இவ்விதம் சொல்லப்பட்ட அஸுரப் பெண் கன்னிகை கூட்டங்களால் சூழப்பட்டு ஸுகமாக விளையாடிக் கொண்டு வெளியே சென்றாள்.

பிறகு தோழிகளுடன் [illegible]சித்துக் கொண்டு மகிழ்ச்சியால் மலர்ந்த கண்களுடைய [illegible] போட்டுக் கொண்டு ஒருவருக் கொருவர் [illegible] அப்ஸரஸ்கள், யக்ஷகன்னிகைகள், பல அஸுர கன்னிகைகள் [illegible] கன்னிகைகள் ஆகிய இவர்கள் உஷைக்குத் தோழிமார்கள். அவள் அவர்களால் அங்குச் சொல்லப்பட்டாள். அழகிய முகத்தையுடையவளே! உஷே! பார்வதி தேவியின் வார்த்தையால் [illegible] உன் பர்த்தா சீக்கிரமே கிடைப்பான். தேவியின் வார்த்தை ஒரு போதும் பொய்யாகாது. அப்படியே அழகு நற்குலம் வாய்ந்த கணவனை உஷை [illegible]பட்டான். உஷை தோழியரின் அந்த வார்த்தைகளை முறைப்படி கௌரவித்துப் பார்வதி தேவியால் கொடுக்கப்பட்ட மனோரதத்தைச் சிந்தித்துக் கொண்டிருந்தாள். உமையுடன் அந்த விளையாட்டு ஸுகத்தை

அனுபவித்து பகல் மறைந்தது. பிறகு மிக ஆஸ்சர்யமான அந்த எல்லா பெண்களும் தங்கள் இருப்பிடம் அடைந்தனர். பார்வதி தேவியும் மறைந்தாள். சில பெண்கள் குதிரைகள் மேலும், சிலர் பல்லக்குகளிலும், சிலர் யானைகள் மேலும் மகிழ்ந்து நகரில் புகுந்தனர். சிலர் ஆகாச வழிச் சென்றனர். ப்ரபோ! ஜனமேஜயா! அது முதல் அந்த உஷா தேவி காம மோஹம் அடைந்தாள். அப்போது பார்வதி தேவியின் வார்த்தைகளை நினைத்த கணவனை ஸதா சிந்தித்து இரவில் உறங்குவதில்லை. அப்படியே பகலில் உண்பதில்லை. கணவன் கிடைக்கப் போவதையெண்ணி அந்த ராஜகுமாரி புலம்பினாள். ஆகாயத்தில் சந்திரனை நிந்தித்தாள். சந்தனம் பூசுவதில்லை.

ஜனமேஜய ராஜாவே! காமனால் நன்கு பீடிக்கப்பட்ட அந்த பெண் மோகம் அடைந்தாள். ஜ்வரமில்லாதிருந்தும் ஜ்வரம் உள்ளவளாக நினைத்து அவளது சந்தனம் பூசப்பட்ட மார்பும் வெப்ப மடைந்தது. கன்னங்கள் வெளுத்தன. கண்கள் நீர் ததும்பின. அவளுடலில் கொட்டாவியும், தூக்கமும் வளர்ந்தன. தோழியர் காமாக்னியால் பீடிக்கப்பட்ட அவள் மார்பில் குளிர்ந்த தாமரைக் கிழங்குப் பொடிகளைத் தூவுகின்றனர். விசிறி கொண்டு வீசுகின்றனர். அடிக்கடி வினவுகின்றனர். பெண்ணே! என்ன கஷ்டம்? என்ன உடம்பு? உனக்கு இது என்ன? அழகிய முகத் தேவி, உனக்கு என்ன விருப்பம் அதைச் சொல்லு. மனதுக்குகினியவளே! தீர்க்க முடியாத இது எப்படி உண்டாயிற்று? இந்தப் பக்ஷிகள் உன் மனதுக்கு ப்ரிய வார்த்தைகளைக் கூறுகின்றன. அழகிய புருவத்தனளே! மிக்க நீல நிறக்கிளிகள் புருஷன் போல் பேசுகின்றன. மிக்க ஸந்தோஷம் உண்டு பண்ணும் வார்த்தையை ஏன் பேசுகிறாயில்லை? சிறந்த நிறத்தவளே! உன் பிதா பெரிய வீரன். தேவர்களாலும வெல்ல முடியாதவன். உலகில அவன் எதிரில ஒருவரும (தைரியமாக) நிற்பதில்லை. பலி புத்ரன் மஹாவீரன் மீற முடியாதவன். (இந்த்ரனது) அமராவதியை (எல்லாவற்றிலும்) மேம்பட்ட சோணிதபுரம் அவனது நகரம். அங்கே பரமேஸ்வரன் சூலமேந்தி நிற்கின்றான். உஷே! கேட்பாயாக. மஹாதேவன் ஹரன் உனது பிதா பாணனைக் குறித்து கிரிஜை (பார்வதி) யிடம் இவன் புத்ரன் என்று அறிந்து கொள் என்று சொன்னார். உனக்கு என்ன துன்பம்? நெற்றியிலும், மூக்கு முனையிலும் வியர்வை ப்ரகாசிக்கிறது. சரத் காலத்தில் தாமரையிதழில் நீர்த் துளிகள் போல் ஒளி வீசுகின்றன. பூர்ண சந்திரன் மறைவது போல் ஒளி மறைந்தது. சோபிக்கிறதில்லை. இதற்கு காரணம் என்ன? சொல். பெருமூச்சு விடுகிறாய். மனதில் ஸந்தோஷமடைகிறாயில்லை. உனது மனதுக்குப் பிடித்த

ஆஹாரத்தைச் சாப்பிடு. இதற்கு முன் உனக்குத் தாம்பூலம் பிடிக்கும். இப்போது ஏன் அது எடுத்து கொள்ளபடுவதில்லை. மற்றவர்களால் அடைய முடியாத சிறந்த வஸ்த்துக்களை ஏற்றுக் கொள். தேவீ! எழுந்திரு. உனது உடலில் உண்டான துன்பத்தைச் சொல்.

உஷையின் இருப்பிடத்தில் உண்டான இந்த கோலாஹலத்தைக் கேட்டுத் தாபாரின் முன்னிலையில் பணிப் பெண்களால் தனித் தனியாகச் சொல்லப்பட்டது. தேவீ! கற்புடைய ராஜ புத்ரி உஷை ஜலக்ரீடை விளையாட்டிலிருந்து வந்தது முதல் ஊமை போல் காணப்படுகிறாள். ஆதலால் தேவீ! பணிப் பெண்களாகிய நாங்கள் உனக்குச் சொல்கிறோம். என்ன மோஹம்? என்ன மௌனம்? என்ன தூக்கம்? எப்படி வாட்டம்? தேவீ! வைத்யர்களைக் கேட்டு (இந்த உஷையின்) கஷ்ட சாந்தியின் பொருட்டு ஏற்பாடு செய்யபடட்டும். அழகிய முகத்தவளே! தேவீ! ஸ்ரீஷப்பூ போன்ற ம்ருதுவான உடல் வ்யாதி பாரத்தை எப்படி ஸஹிக்கும்? ஹம்ஸ நடை தேவி (தாயார்) இதைக் கேட்டு த்வரையுடன் உஷையிருந்தவிடம் சென்று இந்தத் துன்பத் தோற்றம் என்ன? என்று வினவி அப்போது தளிர் போன்ற கையால் அந்த உஷையின் அழகிய கையைத் தொட்டு விரல்களை சுலபமாகச் சுடக்கிட்டாள். மங்களமானவளே! உனக்கு என்ன இருக்கிறது? உனக்கு என்ன கஷ்டம் வந்தது. இப்படி இந்த வைத்யர்கள் இங்கு வந்து உன்னைக் கேட்கின்றனர்.

வைத்யர்கள் சொன்னார்கள்: ராஜபுத்ரீ! தோழியர் கணங்களுடன் பார்வதியின் ஜலக்ரீடைக்குச் சென்றாள். அங்கு விளையாடினாள். அங்கு விளையாட்டுச் ஸ்ரமத்தால் உண்டான வ்யாதியென அறிகிறோம். ஸ்ரமத்தால் வாட்டமுண்டாயிற்று. அடிக்கடி கொட்டாவியும் தூக்கமும் வருகிறது. அதனால் பயப்படவேண்டாம் என்று வைத்யர் கூறினார். வைத்யர்களே! மந்திரிகளே! குளிர்ச்சி கலவை சந்தனம் மார்பில் வைக்கப்பட்டது. இது என்ன சீக்ரம் கொதிக்கிறது? மிக்க உஷ்ணம். அதி வியர்வை பசி தாகம் இல்லை. புலம்பல்தான். அவளுக்கு என்ன? சாஸ்த்ரப்படி நிச்சயித்துச் சொல்லுங்கள் எனத் தாயார் சொன்னாள். வைத்யர்கள் சொன்னார்கள் தேவஸந்நிதியில் விளையாட்டிடத்தில் பெண்கள் கூடினர். கற்புடைய ராஜபுத்திரியும் ஒப்பற்ற அழகுடையவள். அந்த பெண்களால் உஷைக்கு கண் எரிச்சல் உண்டாயிருக்கிறது. அதனால் இவளுக்கு துன்பம் உண்டாயிற்று. ரக்ஷா மந்த்ரங்களாலும் மஞ்சள் நிற அருகுகளாலும், பானங்களாலும், அபிஷேகத்தாலும் ரக்ஷை செய்தால் மேலான சாந்தியுண்டாகும். இப்படிச் சொல்லி எல்லா வைத்யர் களும் காம வேட்கையால் வந்த துன்பமென சூசிப்பித்து அரச

மாளிகையிலிருந்து வெளியேறினர். வெகு காலம் தாயாரால் வினவப்பட்ட அந்த சிறந்த பெண் மஹா பாக்யவதி உஷை லஜ்ஜையுடன் மிக அழுது கொண்டு, தாயே! கேள் எப்போதும் உன்னுடன் பேசுவதில் ருசியில்லை. அப்படியே போஜனத்திலும், அப்படியே ஸந்தோஷ விஷயத்திலும் மனது எப்போதும் தாபத்துடன் இருக்கிறது என்று இப்படி சொல்லி பிறகு அழகிய முகத்துடைய அந்த உஷை பேச்சை நிறுத்தினாள். எல்லாப் பெண்களும் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக் கொண்டனர். பெண்களின் யௌவனம் லஜ்ஜை கொடுக்கக் கூடியதல்லவா? இந்த ராஜ கன்னிகையும் பர்த்தாவை அடைய வேண்டியவள். சொல்வதற்கு என்ன இருக்கிறது! தந்தை தாய் அனுக்ரஹத்தால் நல்ல வரனை அடையவேண்டும்

**அத்தியாயம் 117 முற்றும்**



## அத்தியாயம் 118

### தோழியர் உஷையைத் தேற்றுதல்-சித்ரலேகைக்குத் தன் ஸ்வப்பனத்தைப் பற்றி உஷை கூறுதல்-சித்ரலேகை உஷையின் விவரம் கேட்டு இவள் பர்த்தா அநிருத்தன்தான் என நிச்சயித்துத் த்வாரகை சேர்தல்

வைசம்பாயனர் சொன்னார்: அங்கிருந்த அழகிய ஸ்த்ரீகள் சித்ரகலையில் வல்லவர்கள். பிறகு வைகாசி மாதத்தில் சுக்ல த்வாதசி இரவில் ஸகி கணங்களுடன் இருந்த மங்களமான அழகிய பெண் உஷையை முன் பார்வதியால் சொல்லப்பட்ட புருஷன் ஸ்வப்னத்தில் ரமிக்கச் செய்தான். பார்வதி தேவீ வசனப்படி நன்கு ஸ்வப்னத்தில ரமிக்கும்படி செய்யப்பட்டாள். ஸ்த்ரீ தன்மையையும் அடைந்து பர்த்தா பிரிவால் விசேஷமாக அழுதாள். இரவில் உஷை சிவந்த சந்தனப் பூச்சை கண்ணீர் கழுவ ரத்தப் பூச்சுடன் அழுது கொண்டு உடனேயே எழுந்திருந்தாள். அப்படி அழும் அவளைப் பார்த்து பயமடைந்த ஸகீ சித்ரலேகை மிக்க அற்புதமும் ஹிதமுமான வார்த்தை சொன்னாள். உஷே! பயப்படாதே. நீ ஏன் இப்படி அழுது கொண்டு பரிதபிக்கிறாய்? பலியின் மகனின் பெண் ஸ்ரீ கீர்த்தி வாய்ந்தவள். ஏன் பயம் கொள்கிறாய். அழகிய புருவத்தினளே! உலகில் உனக்கு விசேஷமாகப் பயம் இல்லை. அழகிய தொடையினளே! உன் பிதா தேவர்களுக்கு பயமவன். எழுந்திரு. எழுந்திரு. உனக்கு மங்களம். துக்கப்படாதே. அழகிய

முகத்தினளே! இந்த மாதிரி வாஸஸ்தலங்களில் பயம் கிடையாது. சசி பதி, தேவேந்த்ரன் தேவர்களுடன் இந்த நகருள் வராமலேயே பலமுறை உன் பிதாவால் போரில் விரட்டப்பட்டான். உனது பிதாவான இவன் தேவ கணங்களுக்குப் பயம் கொடுப்பவன். பலியின் மகன். மிக்க பலம் வாய்ந்தவன். ஸ்ரீமான், பெரிய அஸுர ஸ்ரேஷ்டன். தோழியால் இவ்விதம் சொல்லப்பட்ட புகழ் வாய்ந்த, குற்றமற்ற பாணன் மகள், ஸ்வப்னத்தில் பார்க்கப்பட்ட ரூபத்தைத் தெரிவித்தாள்.

உஷை சொன்னாள்: இவ்விதம் (ஸ்வப்நத்தில்) கற்பழிந்த நான் எப்படி வாழ்வேன். சத்ருக்களை வெல்லவல்ல தேவசத்ரு என் பிதாவிடம் என்ன சொல்வேன்? மிக்க புகழ் பெற்ற இந்த வம்ஸத்துக்கு நான் பேரிழுக்கை விளைவித்து விட்டேன். எனக்கு மரணம் மேலானது. இப்போது ஜீவித்திருப்பது நன்றன்று விரும்பப்பட்ட புருஷன் என்னால் அடையப்பட்டான். விழித்திருக்கும் போது போல இந்த அவஸ்தை எனக்குச் செய்யப்பட்டது. இரவில் விழித்திருக்கும் போது போல் இந்த நிலை எவனால் செய்யப்பட்டேன்? இவ்விதம் செய்யப்பட்ட கன்னிகையாகிய நான் எவ்விதம் ஜீவித்திருப்பேன்? குலத்துக்குப் பழி விளைவிக்கும் குலக் கொள்ளி, பற்றுக் கொம்பில்லாதவள், பதிவ்ரதைகளின் முன்னணியில் இருந்த பெண் உயிருடன் இருக்க விரும்பமாட்டாள். அப்போது தாமரைக் கண்ணி உஷை தோழியரால் சூழப்பட்டு இவ்விதம் நீர் நிறைந்த கண்களுடன் வெகு காலம் புலம்பினாள். அனாதை போல் அழும் நீர் நிறைந்த கண்களுடைய அந்த உஷைக்கு மனம் கலங்கிய எல்லாத் தோழிகளும் ஒன்று சேர்ந்து சொன்னார்கள். தேவி! அழகிய புருவத்தினளே! தோஷ சிந்தையுடன் நல்லதோ கெட்டதோ செய்யப்பட்டால் அது வருந்தத்தக்கது. உனது மனது சிறிதும் குற்றமற்றது. அபலையானவளே! அழகியே! தெய்வச் செயலால் ஸ்வப்னத்தில் பலாத்காரமாக நீ அனுபவிக்கப்பட்டாய். உன் வ்ரதக் குறைவு உண்டாகாது. ஸுந்தரீ! தேவீ! ஸ்வப்ன தோஷம் உனக்குக் கிடையாது. பூவுலகில் ஸ்வப்ன தோஷம் கிடையாது. தர்மமறிந்த விப்ர ரிஷிகள் இவ்விதம் சொல்கின்றனர். மனதாலும், வாக்காலும், செயலாலும் கெடுக்கப்பட்ட பெண்தான் பாபமுடையவளாக அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. பயப்படுகிறவளே! உன் மனது எப்போதும் சலனமுடையதாகக் காணப்படவில்லை. நீதியுடன் ப்ரஹ்மசாரிணியான நீ எப்படித் தோஷத்தால் கெடுக்கப்பட்டவள்? சுத்த மனதுடைய பதிவ்ரதையான நீ தூக்கத்தில் இந்நிலையை யடைந்தால் தர்மம் கெடவே கெடாது. அழகியே! முன்னர் மனம்

கெட்டு, செயலும் கெட்டால் அவளைக் கோஷமுடையவளாகச் சொல்வார்கள். நீ தோஷமற்றவள். நற்குலத்தினள். அழகி ப்ரஹ்மசாரிணி வ்ரதமுடையவள். நீ இந்த நிலையை அடைவிக்கப்பட்டாய். காலம் மீற முடியாதது. இவ்விதம் சொல்லப்பட்டு கண்ணீர் ததும்பி அழும் அந்த உஷைக்கு மந்த்ரி கும்பாண்டனின் பெண் சிறந்த இந்த வார்த்தை சொன்னாள். விசாலக்கண்ணி! அழகிய முகத்தினளே! நீ பாபமற்றவள். சோகத்தை விடு. என்னால் கேட்கப்பட்ட இந்த வார்த்தையை நீ கேட்பாயாக. உஷே! தேவதேவன் ஸமீபத்திலிருந்த போது, பர்த்தாவைத் த்யானிக்கிற உனக்குப் பார்வதி தேவியால் சொல்லப்பட்ட வார்த்தையை நினை. வைசாக சுக்ல த்வாதசி இரவில் மாடியில் படுத்திருக்கும் உன்னை ஸ்த்ரீதன்மை அடைவித்து அழச் செய்பவனே சத்ருக்களைக் கண்டிக்கும் அந்த சூரன் உனக்கு பர்த்தா ஆவான். சந்த்ரன் போன்று நெற்றியுடைய தேவீ பார்வதி மகிழ்ந்து உனது மனதிலுள்ளதை யறிந்து இவ்விதம் சொன்னாள். பார்வதி தேவியால் சொல்லப்பட்ட அந்த வார்த்தை பொய்யாகாது. நீ ஏன் இவ்விதம் அதிகமாக அழுகிறாய்? இப்படி அவளால் சொல்லப்பட்ட அழகிய கண்ணி பாணன் மகள், அந்தச் சிறு பெண் உஷை பிறகு பார்வதி வார்த்தையை நினைத்துக் சோகம் நீங்கியவள் ஆனாள்.

உஷை சொன்னாள்: அழகியவளே! சங்கரன் க்ரீடா ஸமயம் பார்வதி தேவியின் வார்த்தையை நினைத்துப் பார்க்கிறேன். சொல்லப்பட்ட எல்லாம் என்னால் மாடியில் அடையப்பட்டது. லோகநாதன் சங்கரன் பார்யை பார்வதி தேவி சொல்படி ஸ்வப்நத்தில் கண்ட இவன் எனக்குப் பர்த்தாவானால் அவனை எப்படியறிவது? அது விஷயத்தில் செய்ய வேண்டியது சொல்லப்படட்டும். இவ்விதம் வார்த்தை சொல்லப்பட்டதும் கார்யம் செய்யும் வகையில் வல்ல கும்பாண்டனின் பெண் மறுபடியும் முறைப்படி சொன்னாள், தேவீ! அவனுடைய குலம், கீர்த்தி பௌருஷம் ஆகியவற்றை ஒருவரும் உண்மையாக அறியவில்லை. நீ மோஹமடைகிறாய், என்ன செய்வது? சுபே! பயந்தவளே! ஸ்வப்நத்தில் காணப்பட்ட அவன் காணப்படாதவனும் கேட்கப்படாதவனும் திருட்டுந் தனமாக ரமிக்கிற அவனை நாங்கள் எப்படி அறிவோம். கறுத்த கடைக்கண்ணியளே! யௌவன பர்வத்தால் சோபிக்கிறவளே! தோழியே! சத்ருக்களைக் கண்டிக்கும் இவன் பராக்ரமத்தால் லோகப்ரஸித்தி பெற்ற நகரின் அந்தப்புரத்தில் புகுந்து நீ அநுபவிக்கப்பட்டு அழுதாய். உன்னிடம் பலாத்காரமாகப் புகுந்த இவன் ஸாதாரண ஒரு புருஷனில்லை.

பயங்கர பராக்ரமம் வாய்ந்த ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள், மஹாதேஜஸ்வீ அஸ்வனி தேவதைகள் இவர்கள் சோணிதபுரத்தில் புக சக்தியற்றவர்கள். இந்த அளப்பறு குணங்களமைந்த சத்ருக்களை வெல்லும் அந்த ஸ்வப்ந புருஷன் பாணன் தலைமையை ஆக்ரமித்துச் சோணிதபுரம் புகுந்தான். தாமரைக்கண்ணி! போரில் வல்லவனான இத்தகைய பர்த்தா இல்லாதவளுக்கு உயிராலோ மற்ற போகங்களாலோ என்ன பயன்? பார்வதி தேவியின் அனுக்ரஹத்தால் இப்படிப்பட்ட காமதேவனுக்கொப்பான வீரமுடைய பர்த்தா உன்னால் அடையப்பட்டான். நீ பாக்யசாலி அனுக்ரஹிக்கப்பட்டவள். என்னால் சொல்லப்படும் இந்த முக்ய கார்யத்தைக் கேள். எவன் மகன் இவன்? என்ன பெயர்? எக்குலத்தினன்? என்று அறியத்தக்கது.

இவ்விதம் சொல்லப்பட்டதும் காமத்தால் மோஹித்த உஷை, கும்பாண்டன் மகளைப் பார்த்துச் சொன்னாள். தோழீ! நான் எப்படி அறிவேன்? தோழீ! எனக்குப் பதில் தெரியவில்லை? நான் எப்படி உயிர் பெறுவேனோ அப்படி நீயே ஆலோசனை செய். உலகம் தன் கார்யத்தில் மோகமடைகிறது. உஷையின் வார்த்தையைக் கேட்டுக் கும்பாண்டன் மகள், அழகிய தோழி, அழுத உஷையைப் பார்த்து மறுபடியும் இந்த வார்த்தை சொன்னாள். நீண்ட கண்ணியே! தோழீ! சேர்க்கை - பிரிவு கார்யங்களில் ஸமர்த்தையான அப்ஸரஸ் சித்ரலேகை சீக்ரம் தெரியப் படுத்தப்படட்டும். இவளுக்கு எப்போதும் மூவுலகு முழுதும் நன்கு தெரியும். இவ்விதம் சொல்லப்பட்ட உஷா ஆய்சர்யமடைந்து ஸந்தோஷத்துடன் அப்போதே தனது ப்ரிய ஸகீ சித்ரலேகையை வரவழைத்து பெருந்தும் உஷை கைகூப்பிச் சொன்னாள். அந்த ஸகி சித்ரலேகை உஷையால் சொல்லப்பட்ட அந்த வார்த்தையைக் கேட்டு புகழ் வாய்ந்த பாண புத்ரியை ஸமாதானப்படுத்தினாள்.

பிறகு ஆஸ்சர்யமடைந்த அந்தப் பாண புத்ரி ப்ரிய ஸகி அப்ஸரஸ் சித்ரலேகாவைப் பார்த்து சொல்வதற்குக் கஷ்டமான இந்த வார்த்தையைப் ப்ரீதியுடன் சொன்னாள். அழகியே! மிக முக்யமான இந்த வார்த்தையைச் சொல்கிறேன் கேள். தாமரைக் கண்ணன் மதங் கொண்ட யானை மேல் செல்லும் எனது அழகிய ப்ரிய பர்த்தாவை இப்போதே அழைத்து வராமல் போனால் பிறகு துடியிடையாளே! சீக்ரமே ப்ராணனை விடுவேன். சித்ரலேகை உஷைக்கு ஸந்தோஷம் தருபவளாய் மெதுவாக வார்த்தை சொன்னாள். நல்ல வ்ரதமுடையவளே! அழகியே! இந்த விஷயம் என்னால் அறிய முடியவில்லை. தோழி! அக்கள்வன் குலத்தை

ஜாதியால், சீலத்தால், ரூபதுதால், தேசத்தால், என்னால் அறியப்படவில்லை. ஆனால் தோழீ! எனக்குத் தோன்றும் வார்த்தையைக் கேள். முடிந்த அளவு புத்தியெட்டும் வரை செய்வேன். நீ உன் விருப்பத்தை அடைவாய். தேவர், தானவர், யக்ஷர், கந்தர்வர், உரகர், மனித உலகிலும் கீர்த்தி வாய்ந்த ஸ்ரேஷ்டர்கள் எல்லோரையும் பெருமைக்குத் தக்கபடி நான் சித்ரமெழுதுவேன். பயந்தவளே! நான் ஏழு நாட்களில் அவர்களை உனக்குச் (சித்ரமாகக்) காட்டுவேன். பிறகு அறிந்து சொன்னால் படத்தில் இருக்கும் பர்த்தாவை உன்னடிக் கீழ் நீ அடைவாய். சித்ரலேகையால் ஹிதம் செய்யும் விருப்பத்தால் இவ்விதம் சொல்லப்பட்ட உஷை, ப்ரிய ஸகி சித்ரலேகாவைப் பார்த்து 'அவ்விதமே செய்' என்று சொன்னாள்.

மங்களமான அவள் இவ்விதம் சொல்லி தேர்ந்த கைகளால் முறைப்படி எல்லாப் பக்கத்திலும் உள்ள முக்கியர்களை சித்ர படத்திலுள்ளவர்களாக ஏழு நாட்களில் எழுதிக் கொண்டு வந்தாள். பிறகு அந்தச் சித்ரலேகை தான் எழுதிய சித்திரப் படத்தை விரித்து; உஷைக்கும் அப்படியே விசேஷமான தோழியருக்கும் காட்டினாள். இவர்கள் தேவர்களில் முக்கியர், அப்படியே, அஸுர வம்சத்தினர், கின்னரர் ,உரகர், யக்ஷர், நாற்புறமுள்ள அஸுரர், தைத்யர், ,மற்றுமுள்ளநாகர் எல்லா மனிதர்களிலும் விசேஷமாக உள்ளவர்கள்,அவரிர் எல்லோரையும் என்னால் உள்ளபடி எழுதப்பட்டவர்களைப் பார். சகீ! உனது பர்த்தா உள்ள ரூபத்தை அப்படியே எழுதியுள்ளேன். ஸ்வப்னத்தில் பார்த்தவரை நீ அடையாளம் தெரிந்து கொள்.

பிறகு காம வேட்கை மிக்க அந்த உஷை தேவ, தானவ, கந்தர்வ, வித்யாதர கூட்டங்கள் அந்த எல்லோரையும் வரிசையாகப் பார்த்து எல்லா யாதவர்களையும் தாண்டி யதுஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனைப் பார்த்தாள்.அங்கு அநிருத்தனைப் பார்த்து ஆஸ்ரயித்தாள் மலர்ந்த கண்களுடன் அந்த சித்ரலேகையைக் குறித்துச் சொன்னாள். ஸகீ! இவனே அந்தக் கள்வன். மாடியில் இருந்த நான் இவனால் ஸ்வப்னத்தில் கெடுக்கப்பட்டேன். நன்கு அறியபட்ட ரூபம் உடைய இந்த இன்பத திருடன் எங்கிருந்து வந்தான்? மங்களமானவளே! சித்ரலேகே! அவன் குலம், சீலம் விசேஷ வம்சம் இவைகளை உண்மையாகச் சொல். அழகிய இவன் பெயர் என்ன? அதற்குப் பின் செய்ய வேண்டிய காரியத்தின் முடிவைச் சொல்கிறேன்.

சித்ரலேகைச் சொன்னாள் : விசாலாட்க்ஷி! இவன் ரூபமுடைய

நாயகன் புத்திமான் க்ருஷ்ணனின் பேரன். ப்ரத்யும்னனின் மகன். உனது பர்த்தா. பயங்கர பராக்ரமமுடையவன். பராக்ரமத்தில் இவனை யொத்தவன் மூவுலகங்களிலும் இல்லை. இவன் பர்வதங்களையே பிடுங்கி பர்வதங்களை அழிப்பான். நீ பாக்யசாலி. அனுக்ரஹம் பெற்றவள். யதுஸ்ரேஷ்டன், சிறந்தவன், ஸத்தானவன் உனக்குத் தகுந்த கணவனாக முக்கண்ணன் பார்வையால் குறிப்பிடப் பட்டான்.

உஷை சொன்னாள் : அழகிய முகத்தினளே! விசாலாக்ஷீ! சித்ரலேகே! இந்த கார்யத்திற்கு நீதான் தகுந்தவளாய் இருக்கிறாய். வேறு கதி அடையமுடியாதல்லவா? அகதியான எனக்கு நீ கதியாயிரு. நீ ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவள். யோக சக்தியுடையவள், ப்ரிய ரூபமுடையவள். இந்த உபாயத்துக்கு ஸாமர்தயமுடையவள். என் ப்ரியனை சீக்கிரம் அழைத்து வா. ப்ரியே! சுந்தரி! பயமுள்ளவளே! எனக்கு ஸுகத்தை ஆலோசித்து உபாயத்தால் கார்யசித்தி பெற்றுத்திரும்பி வா. ஆபத்தில் மித்ரன் தான் மித்ரனைப் புகழப்படுகிறன். அழகிய ப்ருஷ்டபாகமுடையவளே! நான் காமத்தால் பீடிக்கப்பட்டிருக்கிறேன். என் ப்ராணனைத்ரக்ஷட் செய்பவளாக இரு. சுபே! விசாலாக்ஷீ! தேவனையொத்த என் பர்த்தாவை, அன்று சீக்கிரம் அழைத்து வராவிடின் ப்ராணனை விடுவேன்.

உஷையின் வார்த்தையைக் கேட்டுச் சித்ரலேகை வார்த்தை சொன்னாள். மங்களமானவளே! புன்சிரிப்புடையவளே! என் வார்த்தையைக் கேட்க வேண்டும். பயந்தவளே! தேவீ! பாணனின் நகரம் நாற்புறமும் ரக்ஷிக்கப்படும் வகையிலேயே, த்வாரகையும் தேவர்களாலும் அணுகமுடியாது. அந்நகரம் இரும்புக் கதவுகளால் மறைக்கப்பட்ட வாயில்களையுடையது. த்வாரகை வாஸிகளான வ்ருஷ்ணி குமாரர்களால் காக்கப்பட்டது. நாற்புறமும் ஸமுத்திரம் சூழ்ந்தது. விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்டது. பதமநாபன் க்ருஷ்ணன் கட்டளையால் கொடிய பலமுடைய புருஷர்களால் ரக்ஷிக்கப்படுகிறது. மலை மதில்கள், அகழியும் வரிகளால் காவலுள்ளது. ஏழு மதில் சுற்றுக்கள் உள்ளது. தாதுக்கள் நிறைந்த மலைகள் உள்ளது. ஊர் அறியாதவர்களால் புகமுடியாதது. என்னையும் உன்னையும் விசேஷமான உன் பிதாவையும் காப்பாயாக. (இந்த ப்ரயத்னம் வேண்டாம் எனும்படி). உஷை சொன்னாள். உனது யோக சக்தியால் அங்கே புக முடியும். அதிகம் பேசிப் பயன் என்? எனது ப்ரதிக்ஞை கேட்கப்படட்டும். அநிருத்தனனின் பூர்ண சந்த்ரன் போன்ற காந்தியுடைய அந்த முகத்தைப் பார்க்காவிடில் யமலோகம் செல்வேன். அழகியே! தூதனால் கார்ய

ஸித்தி ஆகிறது. எனவே நான் ஜீவிக்க நீ விரும்பினால் எனது தூதாகச் செல். என் ஸ்நேகத்தையும் ப்ரிய வார்த்தைகளையும் நீ நினைத்தால் எனது கணவனைச் சீக்கிரம் அழைத்து வா. காம வேட்கையால் வருந்தும் பெண்கள் ப்ராண ஸ்நேஹத்தையும், குல அழிவையும் பார்க்கிறார்களில்லை. கார்யங்களில் முயற்சி உசிதமானது என்று சாஸ்த்ர நிச்சயம். விசாலாக்ஷி! த்வாரகையைப் புகுவதில் நீ சக்தியுடையவள். பயந்தவளே! என்னால் ஸ்துதிக்கப்பட்டவளாய் உள்ளாய். எனக்குக் கணவன் தர்சனத்தைச் செய்வாயாக.

சித்ரலேகை சொன்னாள் : பயந்தவளே! உஷே! அம்ருதம் போன்ற உனது வார்த்தைகளால் நான் எல்லாப்படியாலும் ஸ்துதிக்கப்பட்டேன். ப்ரியமான இன்ப வார்த்தைகளாலும், முயற்சி செய்யவும் தூண்டப்பட்டேன். இந்நாள், த்வாரகைக்கு சீக்கிரம் செல்வேன். இப்போது த்வாரகை நகரையடைந்து, வ்ருஷ்ணி குலத்துதித்த மஹாபாஹு உன் பர்த்தா அநிருத்தனை அழைத்து வருகிறேன். அந்தச் சித்ரலேகை தானவர்களுக்குப் பயம் கொடுக்கும் அமங்களமான வார்த்தை சொல்லிச் சீக்கிரம் மனோவேகமாக மறைந்தாள்.

தோழியருடன் கூடிய அந்த உஷை கவலையுடன் இருந்தாள். அந்தச் சித்ரலேகை, மூன்றாம் முஹூர்த்தத்தின் போது பாணபுரத்திலிருந்து மறைந்தாள். தோழியின் ப்ரியத்தைச் செய்ய விரும்பி தவச் செல்வர்களான முனிவர்களைப் பூஜித்து க்ருஷ்ணனால் ரக்ஷிக்கப்பட்ட த்வாரகையை ஒரு க்ஷணத்தில் அடைந்தாள். கைலாச சிகரம் போன்ற மாடங்களால் ப்ரகாசிக்கும் ஆகாயத்தில் நக்ஷத்ரம் போல் இருக்கும் அழகிய த்வாரகையைப் பார்த்தாள்.

அத்யாயம் 118 முற்றும்

## அத்யாயம் 119

### சித்ரலேகை நாரதர் சொற்படி தாமஸ வித்யையை மேற்கொண்டு அநிருத்தனை உஷையிடம் அழைத்து வரல்-செய்தியறிந்த பாணன் அஸுர வேனைகளை அனுப்ப அநிருத்தன் அவர்களை வென்று ஓடச் செய்தல்-பின் பாணனோடு போர் செய்தல்-நாரதர் த்வாரகைவருதல்.

பிறகு அந்தச் சித்ரலேகை, த்வாரகையை அடைந்து ஒரு வீட்டின் பக்கத்தில் நின்று, அநிருத்தனைப் பற்றி அறிவதற்காகச் சிந்தித்தாள். புத்தியையும், புத்தியால் செய்யப்படும் பொருளையும் சிந்திக்கும் அந்தச் சித்ரலேகை அங்கு ஜலத்தில் த்யானித்துக்

கொண்டிருக்கும் நாரத முனியைப் பார்த்தாள்.அவரைப் பார்த்து சித்ரலேகை ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களுடன் நெருங்கி அபிவாதனம் செய்து அப்போதே அங்கேயே தலை குனிந்து நின்றாள். நாரதர் ஆசி கூறிய பிறகு சித்ரலேகையைப் பார்த்துச் சொன்னார். எதற்கு நீ இங்கு வந்திருக்கிறாய்? உள்ளபடி கேட்க விரும்புகிறேன்.

பிறகு சித்ரலேகை கை கூப்பி உலகம் வணங்கும் அந்த திவ்ய ரிஷி நாரதரைப் பார்த்துச் சொன்னாள்: பகவானே! நாரத முனியே! எனது வார்த்தை கேட்கப்படட்டும். அநிருத்தனை அழைத்துச் செல்ல நான் இங்குத் தூதாக வந்திருக்கிறேன். (இது) எதற்காக என்பதையும் கேளுங்கள். சோணிதபுரமெனும் நகரில் பாணன் எனும் மஹாஅஸுரன், அவன் பெண் அழகில் சிறந்தவள். உஷை எனும் பெயர், நாரத பகவானே! அவள் ப்ரத்யும்னனின் மகன் புருஷோத்தமன் அநிருத்தனிடம் மிக்க ப்ரேமை கொண்டவள். பார்வதி தேவியின் வரத்தால் அந்த உஷைக்கு அவன் பர்த்தாவாகக் குறிப்பிடப்பட்டான். மஹா முனிவரே! அவனை அழைத்துபோக நான் வந்துள்ளேன். அது ஸித்தியாகும் உபாயத்தை சொல்ல வேண்டுகிறேன். என்னால் சோணிதபுரத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டதும், உம்மால், தாமரைக் கண்ணன் க்ருஷ்ணனிடம் (இந்த) விஷயம் சொல்லத்தக்கது. பாணனுக்கு க்ருஷ்ணனுடன் பெரிய விரோதம் ஏற்படும். அந்த பெரிய அஸுரன் திவ்ய சக்திவாய்ந்தவன் அல்லவா! ஆயிரந்தோளுடன் வரும் அந்த மஹா அஸுரனை போரில் வெல்ல அநிருத்தன் சக்தியற்றவன். மஹாபுஜன் க்ருஷ்ணன் வெல்வான்.

நாரத பகவானே இந்த அபிப்ராயத்துடன் நான் தங்களிடம் வந்திருக்கிறேன். இந்த விஷயத்தை தாமரைக்கண்ணன் எப்படி தெரியப்படுத்தப்பட்டவன் ஆவான்? நாரத பகவானே! உமது அனுக்ரஹத்தால் க்ருஷ்ணனிட மிருந்து எனக்கு பயம் உண்டாகாது ஏனென்றால் அவன் உள்ளப்பொருளை அறிந்தவன் அநிருத்தனை எப்படி அபஹரிப்பது? கோபங்கொண்ட அந்த மஹாபாஹு க்ருஷ்ணன் மூவுலகையும் எரித்து விடுவான். பௌத்ர சோகத்தால் தாபமடைந்த க்ருஷ்ணன், என்னைச் சாபத்தால் தஹித்து விடுவான். நாரத பகவானே! உஷை கணவனை அடையும் படியும், எனக்கு அபயம் கிடைக்கும் படியும் உபாயத்தைத் தாங்கள் சிந்திக்க வேண்டுகிறேன். இப்படி சொல்லப்பட்ட நாரத பகவான் சித்ரலேகைக்கு மங்களமான வார்த்தை சொன்னார். பயப்படாதே! உனக்கு அபயம், மேலும் கேள். புன்சிரிப்புடையவளே! உன்னால்

அநிருத்தன் அழைத்துச் செல்லப்பட்டு கன்னி உஷையின் இடத்தை அடைவிக்கப்பட்டதும், போர் உண்டானால் அப்போது நான் நினைக்கத் தக்கவன். மனோரமே! எனக்குப் போரைப் பார்ப்பதில் மிக்க ஆசை. அதைப் பார்த்து மிக்க ப்ரீதியும் அதில் முயற்சியும் உண்டாகும். தேவீ! எல்லா உலகையும் மோஹிக்கச் செய்யும் தாமஸ வித்யை ஏற்றுக் கொள்ளப்படட்டும். நான் இந்த வித்யையை உனக்குக் கொடுக்கிறேன். நான் செய்ய வேண்டியதைச் செய்தவன் ஆவேன்.

நாரத ரிஷியால் இவ்விதம் வார்த்தை சொல்லப்பட்டதும் மனோஹரமுடைய சித்ரலேகை அப்படியே என்று வார்த்தை சொன்னாள். அந்தச் சித்ரலேகை மஹாத்மா ரிஷிச் ஸ்ரேஷ்டர் நாரதரை வணங்கி அநிருத்தனின் மாளிகையை ஆகாய மார்க்கமாய் அடைந்தாள். த்வாரகை நடுவில் ப்ரத்யும்னனின் அழகிய மாளிகை. அதன் பக்கத்திலுள்ள அநிருத்தனின் மாளிகையைச் சேர்ந்தாள். தங்கத்தால் திண்ணைகளும், தூண்களும், தங்க வைடூர்ய தோரணங்களும் உடையது. பூமாலைகள் கட்டப்பட்டுள்ளன. பூர்ணகும்பங்கள் சோபிக்கின்றன. ரத்னங்களும், பவழங்களும் பரந்து எங்கும் பதிக்கப்பட்டுள்ளன. ஒரே கல்மேல் கட்டிய மயில் கழுத்துப் போன்ற மாடியுடையது. தேவ கந்தர்வ கானம் நிறைந்தது. அத்தகைய மாளிகையில் அநிருத்தன் ஸுகமாக வஸித்தான். பிறகு அந்த பெரிய மாளிகையுள் அப்ஸரஸ் ஸ்ரேஷ்டை சித்ரலேகை திடீரென நுழைந்து சிறந்த பெண்களின் நடுவில் உதித்த சந்த்ரன் போல் அநிருத்தனைப் பார்த்தாள். விளையாட்டிடத்தில் இங்கும் அங்கும் பெண்களால் உபசரிக்கப்பட்டு இனிய மதுபானம் செய்து கொண்டு மிக்க சோபையுடனிருந்தான். குபேரனைப் போல் ஆஸனத்தில் வீற்றிருந்தான். ஸமதாளமான வாத்யங்கள் இனிமையான கானங்கள் கேட்கப்பட்டன. அவனது மனம் அவைகளில் பதியவில்லை. எல்லா நற்குணங்களும் பொருந்திய பெண்கள் ஆங்காங்கு நடனமாடினர். இவனது மனஸந்தோஷத்தைச் சித்ரலேகை காணவில்லை. அப்படியே மது பானத்திலும் ரமிப்பில்லை. இவனுடைய ஹ்ருதயத்தில் அந்த ஸ்வப்நம் சுற்றுகிறது தெளிவு என்று புத்தியால் நிச்சயித்துப் பயம் நீங்கினாள். அந்த நல்ல மனதுடைய சித்ரலேகை இந்த்ர த்வஜத்தை யொத்த அநிருத்தனை உத்தம ஸ்த்ரீகள் மத்தியில் பார்த்து கவலை சூழ்ந்த மனத்தினள் ஆனாள். இந்தக் கார்யம் எப்படிச் செய்வது எப்படி நன்மையுண்டாகும் என்று ஆலோசித்து அழகிய கன்னி புகழ் வாய்ந்த சித்ரலேகை தாமஸ வித்யையால் மறைந்தாள்.

பிறகு ஆகாயத்திலிருந்தே மாடி மேல் இருந்து கொண்டு இனிய சொல்லால் ம்ருதுவாக அநிருத்தனைப் பார்த்து வார்த்தை சொன்னாள் அந்தச் சித்ரலேகை அவனுக்குத் திவ்ய சக்ஷுஸைக் கொடுத்து, தன் தர்சனத்தையும் தந்து தனியிடத்தில் அவனைப் பார்த்து இந்த வார்த்தை சொன்னாள். ரதியின் மகனே! யது நந்தனா! வீரா! மஹாபாஹோ! உனக்கு எல்லாவற்றிலும் க்ஷேமந்தானா? பகலோ, ப்ரதோஷகாலமோ, (முன் இரவு) ஸுகமாகச் செல்கிறதா? எனது விஜ்ஞாபனத்தைக் கேட்பாயாக. என் தோழி உஷையின் வார்த்தையை உள்ளபடி சொல்வேன். அவள் ஸ்வப்நத்தில் உன்னால் பார்க்கப்பட்டு ஸ்திரீ தன்மையையும் அடைவிக்கப்பட்டாள். உன்னை ஹ்ருதயத்தில் வைத்து அழுது விம்மி அடிக்கடி பெருமூச்சு விட்டு கொண்டிருக்கிறாள். அவளால் நான் தூதாக உன்னிடம் அனுப்பப்பட்டேன். இனிய தோற்றமுடையவனே! எப்போதும் அந்த ப்ரியை உன்னைக் காணும் நோக்கத்துடனேயே பரிதவிக்கிறாள். நீ வந்தால் தான் உயிர் தரிப்பாள். உன்னைக் காணாவிடில் அவள் மரிப்பாள். இதில் ஸந்தேஹமில்லை. யது நந்தன! ஆயிரக் கணக்கான பெண்கள் உன் ஹ்ருதயத்திலிருந்தாலும் உன்னை விரும்பும் பெண்ணுக்கு நீ கை கொடுக்க வேண்டும். அவளுக்கு வரதானமாக பார்வதி தேவியால் மனதுக்குகந்த பதியாக நீ கொடுக்கப்பட்டாய். என்னால் கொடுக்கப்பட்ட உனது சித்ரபட அடையாள கொண்டு அவள் உயிர் வாழ்கிறாள். யது குலத்தவனே! யது ச்ரேஷ்டா! அவளுடைய மனோரதத்தில் நீ இரக்கமுடையவனாயிரு. உஷை உன்னைத் தலையால் வணங்குகிறாள். நாங்களும் அப்படியே. அவளுடைய பிறப்பு கேட்கப்படட்டும். குலம், சீலம் எப்படி யென்பதையும் உடலமைப்பு, ஸ்வபாவம், இவள் தந்தையையும் பற்றிச் சொல்கிறேன். பலி புத்ரன் வீரன் பாணன் எனும் மஹா அஸுரன், சோணிதபுரத்தரசன், அவனது பெண் உஷை உன்னை விரும்புகிறாள். உன் குணத்தில் சென்ற சிந்தையள். அவள் வாழ்க்கை உன் மயம். பார்வதி தேவியால் மனதுக்குகந்த பர்த்தாவாக நீ கொடுக்கப்பட்டுள்ளாய். அந்த அழகிய பின் பாகமுடைய உஷை மங்களமான உன்னை அடைந்தால் உயிர் தரிப்பாள்.

சித்ரலேகை வார்த்தையைக் கேட்டு அந்த அநிருத்தன் இப்படிச் சொன்னான். அந்தப் பெண் என்னாலும் பார்க்கப்பட்டாள். சுபமானவளே! என்னிடமிருந்து நீ கேள். அவளது ரூபம், காந்தி புத்தி, சேர்க்கை, அழகை எல்லாவற்றையும் இராப்பகல் சிந்தித்துக் கொண்டு இவ்விதமே நானும் மோஹமடைகிறேன். சித்ரலேகே நான் அனுக்ரஹிக்கத் தக்கவனுனுல் என் ஸந்தேஹத்தை. விரும்பினால் என்னை அழைத்துச் செல்

என் ப்ரியையை நான் பார்க்க விரும்புகிறேன். ப்ரியையை அடையும் விருப்பத்தால் காமதாபத்தால் தஹிக்கப்பட்டேன். நான் கை கூப்புகிறேன். என் ஸ்வப்னத்தை உண்மையாகச் செய். ச்ரேஷ்ட அப்ஸரஸ் சித்ரலேகை அவனது அந்த வார்த்தையைக் கேட்டு என் தோழியால் யாசிக்கப்பட எனது மனக்கஷ்டம் நல்ல பலன் தந்தது என்று சொன்னாள்.

வைசம்பாயனர் சொன்னார் : அழகி சித்ரலேகை அந்த அநிருத்தனின் விருப்பத்தையறிந்து, பிறகு ஸந்தோஷமடைந்து, அப்படியே என்று சொன்னாள். மாடியில் பெண் கூட்ட மத்தியிலிருக்கும் போரில் மதங்கொண்ட அநிருத்தனை அப்போது கண்ணுக்கு மறைத்து எடுத்துக் கொண்டு மேலே கிளம்பினாள். மனோவேகங்கொண்ட அவள் ஸித்த சாரணர் செல்லும் அந்த வழியே வந்து சீக்கிரமாகச் சோணிதபுரத்தையடைந்தாள். அழகிய ரூபமுடைய அவள் அந்த அநிருத்தனை மாயையால் காணாது கொண்டு வந்து மஹா பாக்யசாலி உஷையிருப்பிடம் அடைந்தாள். சித்ர ஆபரணமணிந்து அழகிய ஆடையுடுத்து தேவ ரூபமுடைய இந்த வீரனை உஷைக்குக் காட்டினாள். மாடியிலிருந்த உஷை அவனை அங்குப் பார்த்து வியப்படைந்து தோழி முன்னிலையில் அப்போது அவனைத் தன் வீட்டிற்குள் அழைத்துச் சென்றாள். கார்யங்களில் ஸமர்த்தையான அந்த உஷை மாடியிலிருந்தே மகிழ்ச்சியால் மலர்ந்த கண்களுடன் அநிருத்தனை அர்க்யம் கொடுத்துப் பூஜித்தாள். பயந்தவள் போல் நீ உஷை த்வரையுடன் சித்ரலேகையைப் அணைத்து மகிழ்வித்தாள்.

சித்ரலேகையைப் பார்த்துச் சொன்னாள். தோழீ! ரகஸ்ய கார்ய வல்லவளே! இது எப்படிச் செய்வது தக்கது? ரஹஸ்யமாகச் செய்தால் க்ஷேமமுண்டாகும். வெளிப்படையானால் உயிர் நாசம். சித்ரலேகை சொன்னாள். தோழீ! என் முடிவைக் கேள். முயற்சியால் செய்யப்பட்டதைத் தெய்வம் க்ஷணத்தில் அழிக்கிறது. (தெய்வானுகூலமே முக்யமென்றபடி) உனக்குப் பார்வதி தேவியின் அனுகூலமிருப்பின், இப்போது மாயையால் செய்யப்பட்ட ரஹஸ்யத்தை ஒரு மனிதனும் அறியமாட்டான். தோழியால் இவ்விதம் சொல்லப்பட்ட உஷை உறுதி கொண்ட மனதுடன் இது இப்டியேயென்று அநிருத்தனைப் பார்த்து இந்த வார்த்தை சொன்னாள். அடையமுடியாத ப்ரியனை அடையும் ஆசையால் எவனுக்காக வருத்தப்பட்டேனோ ஸ்வப்னத்தில் வந்த சோரனாகிய அழகிய நாயகன் அத்ருஷ்டவசத்தால் என்னால் காணப்படுகிறான்.மஹாபாஹோ! உமக்கு எல்லாப்படியாலும்

ஸுகம்தானு? ஸ்த்ரீகளின் ஹ்ருதயம் மிருதுவானதல்லவா? அதனால் உமது க்ஷேமத்தைக் கேட்கிறேன். அந்த உஷையின் ம்ருதுவான அர்த்தத்தோடு கூடிய வார்த்தையைக் கேட்டு அந்த யது ச்ரேஷ்டனும் மங்களகரமான அக்ஷரங்களும் அர்த்தமும் கூடிய வார்த்தையைச் சொன்னான். மகிழ்ச்சியால் மலர்ந்த கண்களுடைய உஷையின் கண்ணீரைக் கையால் துடைத்து, சிரித்து, மந்த ஹாஸத்துடன் மனதுக்குப் பிடித்த வார்த்தையைச் சொன்னான். தேவீ! துடியிடையாளே! மிதபாஷிணீ! உனது அனுக்ரஹத்தால் எனக்கு எல்லாவிதத்திலும் க்ஷேமமே. உனக்குப் ப்ரியத்தைச் சொல்கிறேன். சுபதோற்றமுடையவளே! கன்யை அந்தப்புரத்தில் இந்த இடம் என்னால் முன் காணப்படாதது. இரவு ஸ்வப்நத்தில் எப்படி ஒரு முறை காணப்பட்டதோ, அப்படியே இருக்கிறது. பயந்தவளே! உனதனுக்ரஹத்தால் நான் இங்கு வந்துள்ளேன். ருத்ர பத்னி பார்வதியின் அந்த வார்த்தை பொய்யாகாது. அழகியே! உன்னிடத்தில் பார்வதி தேவியின் ப்ரியத்தையறிந்து உன் ப்ரியத்திற்காகவும் இப்போதே உன்னிடம் வந்துள்ளேன். உன் வீட்டை அடைந்தேன். அனுக்ரஹம் செய்.

இவ்விதம் சொல்லப்பட்ட உஷை த்வரையுடன் நன்கு அலங்கரித்துக் கொண்டு ப்ரியனுடன் மிக பயத்துடன் சேர்ந்திருந்தாள். பிறகு அவர்கள் காந்தர்வ விவாக முறையில் சேர்ந்தனர். பகலில் சக்ரவாகப் பக்ஷிகள் போல் பரஸ்பரம் ரமித்தனர். திவ்ய ஆடை பூச்சுக்களுடைய அந்தச் சிறந்த உஷை தன் ப்ரிய பதி அநிருத்தனுடன் சேர்ந்து மகிழ்ந்திருந்தாள். அப்போது பாணனுக்குத் தெரியாமல் அவன் மகள் உஷை அநிருத்தனுடன் ரமித்துக் கொண்டிருந்தாள். அந்த க்ஷணத்திலேயே திவ்ய மாலை ஆடை தரித்து, திவ்ய மாலை பூச்சுடன் உஷையுடன் சேர்ந்திருக்கும், யது ச்ரேஷ்டன் அநிருத்தன் பாணன் காவல்காரர்களால் அறியப்பட்டான். பிறகு அந்தக் காவல்காரர்களால் பெண்ணின் அருந்து மீறியதைப் பார்த்தபடி முழுதும் சீக்கிரமாகப் பாணனுக்குத் தெரிவிக்கப்பட்டது. சத்ருக்களைக் கொல்லும் பயங்கரச் செயலுடைய வீரன், பலிபுத்ரன் பாணனால் கிங்கரஸேனை ஏவப்பட்டது. எல்லோரும் ஒன்று சேர்ந்து செல்லுங்கள். துர்புத்தியுடையவன் கொல்லப்படட்டும். அந்த துராத்மாவால் நமது குலவொழுக்கம் கெடுக்கப்பட்டது. உஷைக்கும் தோஷம் களங்கம் ஏற்பட்டால் நம் குலத்துக்கே பெருமைகளை... நம்மால் கொடுக்கப்படாதவளை தானாகவே க்ரஹித்துக் ... படுத்தினான். வீர்யம் என்ன ஆச்சர்யம்! தைரியம் ... ஆச்சர்யம்! முரட்டுத்தனம் என்ன ஆச்சர்யம்! அ... துர்புத்தியுடைய வாலிபன், நம்முடைய இந்...

நுழைந்தான். வீட்டினுள்ளும் நுழைந்து விட்டான. இவ்விதம் சொல்லித் திரும்பவும் அந்தப் பணியாட்களை மிகவும் தூண்டினான். மஹா பலமுள்ள அவர்கள் மிக்க ஆயத்தயராய் பாணன் கட்டளைப்படி அநிருத்தனிருக்கும் இடம் சென்றனர். பல்வேறு ஆயுதங்களைக் கையில் ஏந்திய பல்வேறு ரூபமுள்ள பயங்கரமான அந்த அஸுரர்கள் அநிருத்தனைக் கொல்லும் நோக்குடன் மிக்க கோபங்கொண்டனர். அந்த ஸேனையைப் பார்த்து, புகழ்பெற்ற அந்தப் பாண புத்ரீ கண்கள் நீர் ததும்ப அநிருத்தனின் வதத்தில் பயங்கொண்டு அழுதாள்.

பிறகு ஹா ஹா! என் ப்ரியனே! எனக் கூவி நடுங்கி அழும் அந்த மான்விழி உஷையைப் பார்த்து அநிருத்தன் சொன்னான். அழகிய பின்பாகமுடையவளே! நான் இருக்கும்போது நீ பயப்படாதே! உனக்கு ஸந்தோஷ காலம் வந்து விட்டது. பயத்துக்கு இங்குக் காரணமில்லை. பயந்தவளே! புகழ் பெற்றவளே! பாணனின் முழு ஸேனையும் வந்தாலும் எனக்குக் கவலையில்லை. இப்போது என் பராக்ரமத்தைப் பார். பிறகு வருகிற அந்த ஸேனையின் சப்தத்தைக் கேட்டு ஸ்ரீமான் அநிருத்தன் என்ன என்று சொல்லித் திடீரென எழுந்தான். பின்பு அந்த அநிருத்தன் பெரிய வீட்டைச் சுற்றி நாற்புறமும் இருக்கும் பல்வேறு ஆயுதமேந்திய ஸேனையைப் பார்த்தான். பிறகு அந்த ஸேனை சுற்றியிருக்கும் இடத்தைச் சீக்கிரம் அடைந்தான். ஸ்வபலத்தைக் கூட்டி, கோபங் கொண்டு உதட்டைக் கடித்தான். போர் செய்ய ஆயத்தமாயிருக்கும் ஸேனையைப் பார்த்து அந்த சித்ரலேகை தேவரூபமுடைய நாரத பகவானை ஸ்மரித்தாள். சித்ரலேகையால் நினைக்கப்பட்ட பின்பு அந்த நாரத முனிச்ரேஷ்டர் ஒரு நிமிஷத்திற்குள் சோணிதபுரத்தை அடைந்தார். அங்கு ஆகாயத்திலிருந்து கொண்டு நாரதர் அநிருத்தனிடம் பிறகு சொன்னார். வீர! உனக்கு மங்களம்! பயம் வேண்டாம்! இப்போது இந்த நகரை நான் அடைந்திருக்கிறேன். நாரதரைப் பார்த்து மிக்க பலவான் அந்த அநிருத்தன் வணங்கி மன மகிழ்ந்து, பிறகு போருக்கு ஆயத்தமானான். அந்த எல்லா அஸுரரின் கோஷத்தைக் கேட்டு பிறகு அந்த சூரன் அநிருத்தன் ஈட்டியால் துன்புறுத்தப்பட்ட யானை போல் எழுந்தான். உதட்டைக் கடித்துக் கொண்டு மாடியிலிருந்து இறங்கி வருகிற அந்தப் பெருந்தோளன் அநிருத்தனைப் பார்த்துப் பயத்தால் நடுங்கி ஓடினர். அந்தப்புர வாசலிலுள்ள ஒட்டற்ற தாழ்க்கோலை எடுத்து பலவித் போரில் வெல்ல அநிருத்தன் அந்த அஸுரர் வதத்திற்காக எறிந்தான். அந்த எல்லா அஸுரரும் போர்க்களத்தில் பாண மழைகளாலும் அப்படியே உலக்கை, கதை, வாள், சக்தி சூலம் இவைகளாலும் அடித்தனர்.

நாற்புறமும் ஆயுதம் வல்ல கோபங்கொண்ட தானவர்களால் பரிகங்களாலும் அம்புகளாலும் தாக்கப்பட்ட (எல்லா பூதங்களின் உள்ளத்திலுள்ள) அந்த அநிருத்தன், கோடை மேகம் போல் கர்ஜித்துக் கொண்டு கலங்கவில்லை. அந்த அஸுரர் நடுவில் கோரமான தாழ்க்கோலை நாற்புறமும் சுழற்றி மேகங்கள் நடுவில் ஆகயாத்தில் ஸஞ்சரிக்கும் சூர்யன் போல் நின்றான். தண்டம் மான்தோல் தரித்த அந்த நாரதமுனி மனமகிழ்ந்து நல்லது நல்லது என்று அங்கு அநிருத்தனைக் குறித்துச் சொன்னார். அளவற்ற தேஜஸ்ஸுடைய கொடிய தாழ்கோலால் செம்மையாகத் தாக்கப்பட்ட அந்த அஸுரர் எல்லோரும் காற்றால் தள்ளப்பட்ட மேகங்கள் போல் பயத்தால் ஓடினர். நல்ல பராக்ரம வீரன் அநிருத்தன், மனமகிழ்ந்து தாழ்க்கோலால் அஸுரரை ஓட்டிப் போர்க்களத்தில் ஸிம்ஹ கர்ஜனை செய்தான். கோடை முடிவில் ஆகாயத்தில் கர்ஜிக்கும் பெருமுழக்குடைய மேகம் போல் சத்ருக்களைக் கண்டிக்கும் அநிருத்தன் போரில் மதங் கொண்ட எல்லாத் தானவர்களையும் நில்லுங்கள் என்று அதட்டிச் செம்மையாக அடிக்கவும் செய்தான். அந்த மஹாத்மாவால் போரில் அடிக்கப்பட்ட எல்லா அஸுரர்களும் பயந்து போரில் பின் வாங்கி பாணன் இடம் சென்றனர். பிறகு ரத்தம் பூசப்பட்டுப் பயத்தால் கலங்கிய மனதுடன் பெருமூச்சு விட்டுக் கொண்டு பாணன் பக்கல் நிற்கும் அஸுரர் துன்பப்பட்டனர். அந்த அரசனால் பயம் வேண்டாம்! பயம் வேண்டாம்! நடுக்கத்தை விட்டு ஓரிடமேயிருந்து போரிடுங்கள் என்று அஸுர ச்ரேஷ்டர் தூண்டப்பட்டனர்.

பயத்தால் கலங்கிய கண்களுடைய அவர்களைப் பார்த்துப் பாணன் சொன்னான். உலகம் ஏற்கும் புகழைத் தூரத்தில் எறிந்து பேடிகள் போல் தைர்யமின்றி நீங்கள் கலக்கம் அடைகிறீர்கள். இது என்ன? இது என்ன? பலவித போரில் வல்ல நற்குலத்துதித்த நீங்கள் எல்லோரும் எதிரி பயத்தால் நடுங்கிப் பல பககங்களில் ஓடுகிறீர்கள். உங்களால் போர் உதவி இப்போது எனக்குச் செய்ய வேண்டாம். அழிந்து போங்கள். எனது அருகிலிருந்து விலகி ஒழியுங்கள் என்று இவ்விதம் சொன்னான். பிறகு அவர்களைப் பல படி கொடிய வார்த்தைகளால் நடுங்கச் செய்து பலவான், பாணன் வேறு வீரர்களை ஆயிரக்கணக்கில் போருக்கு ஏவினான். அநிருத்தனை அடக்குவதில் பல்வேறு ஆயுதங்களைக் கொண்டு (பரமசிவனின்) ப்ரமதகணங்கள் நிறைந்த மிக்க கொடிய ஸேனை ஏவப்பட்டது. பிறகு தீ ஜ்வாலை மிகவீசும் கண்களுடைய பாணஸேனைகளால் ஆகாயம் மின்னலுடன் கூடிய மேகங்களால் சூழப்பட்டது போல் மிகவும் வ்யாபிக்கப்பட்டதாயிற்று. நாற்புற

சிலர் பூமியிலிருந்து யானைகள் போல் உரக்கக் கூச்சலிட்டனர். கோடை முடிவில் மேகங்கள்போல் ஆகாயத்தில் சிலர் ப்ரகாசித்தனர். பிறகு அந்த மிகப் பெரிய ஸேனை மறுபடியும் ஒன்று சேர்ந்தது. அப்போது நில்! நில்! எனும் வார்த்தைகள் நாற்புறம் கேட்கப்பட்டன. அந்த வீரன் அநிருத்தனும் போரில் அவர்களை எதிர்த்து நின்றான். அவன் ஒருவனாகவே எதிர்த்து நின்றது மிகவும் ஆஸ்சர்யமாயிருந்தது. மிக்க வீர்யமுடைய அஸுரர்களுடன் போரில் எதிர்த்துப் போரிட்டான். அஸுரர்களின் தோமரங்கள் பரிகங்களையுமே அநிருத்தன் எடுத்துக் கொண்டான். அப்போது போரில் அவ்வாயுதங்களைக் கொண்டே மிக்க பலவான் அநிருத்தன் போர்கள மத்தியில் அவ்வஸுரர்களைக் கொன்றான். மறுபடியும் பரிகத்தை யெடுத்து வீசி சத்ருகளைக் கண்டிகவல்ல அவன் தான் ஒருவனாகவே நாலா வழியிலும் சென்று சுற்றிக் குதித்து தாவித் துள்ளி, ஆடியோடி இவ்விதம் முப்பத்திரண்டு வழிகளில் திரிந்து கண்ணுக்குப் புலப்படவில்லை. போர்க் களத்தில் பல படியாகப் போரிட்டு விளையாடும் திறந்த வாயுடைய யமன் போல், இருக்கும் ஒருவனை ஆயிரமாய் இருப்பவனாகக் கண்டனர்.

பிறகு அந்த அநிருத்தனால் பிடிக்கப்பட்டு ரத்த வெள்ளத்தில் நனைந்து தோற்று மறுபடியும் பாணனிருக்கு மிடத்துக்கு ஓடிச் சென்றனர். யானை குதிரை, தேர் கூட்டங்களால் சுமக்கப்படும் தானவர்கள் துக்க த்வனி யெழுப்பி தேஜஸ் இழந்து நாற்திசையும் ஓடினர். அப்போது அவர்கள் பயத்தால் பீடிக்கப்பட்டு ஒவ்வொருவரும் தம்மேல் ரத்தம் கக்கிக் கொண்டு போரில் பின் வாங்கியோடினர். போரில் அநிருத்தனுடன் போரிடுபவருக்கு உண்டான மஹாபயம் தேவர்களுடன் போர் புரியும் போது கூட உண்டாகவில்லை. மலைச் சிகரம் போன்ற சில அஸுரர் கதை. சூலம், கத்தி இவை கையில் கொண்டு ரத்தத்தைக் கக்கிக் கொண்டு பூமியில் விழுந்தனர். அப்போது ஜயிக்கப்பட்டு பயத்தால் கலங்கின. அவ்வஸுரர், போரில் பாணஸுரனை விட்டு நீங்கி விசாலமான ஆகாயத்தை யடைந்தனர். அந்தப் பெரிய ஸேனை அப்போது ஓடியோடு ஒழிந்து போனதைப் பார்த்து பாணன் யாகத்தில் ஜ்வாலை விட்டெரியும் தீப்போல் கோபத்தால் ஜ்வலித்தான். அநிருத்தனின் போரில், நாரதமுனி ப்ரீதி கொண்டவராய் ஆகாயத்தில் நாற்புறமும் ஸஞ்சரித்து நல்வார்த்தை சொல்லிக் கொண்டு நடனமாடுகிறார். இந்த ஸமயம் வீர்யவானுன மிக்க கோபங் கொண்ட பாணன் எட்டும் பாண்டனால் கொண்டு வரப்பட்ட தேரில் ஏறி நின்று சக்தியை ஏந்தி அநிருத்தனிருக்குமிடம் சென்றான். அஸுரஸ்ரேஷ்டன் மஹாபுஜன் பாணன் விரல் கவசம் பூண்ட கைகளால் பல்வேறு

ஆயுதங்கள் கொண்டு பட்டிசம், வாள், கதை, சூலம், கோடரி இவைகளை ஆயிரங்கைகளிலும் ஏந்தியவனும், நூற்றுக் கணக்கான கொடிகளுடன் இந்திரன் போல் ப்ரகாசித்தான். கோபத்தில் மிக சிவந்த கண்களுடன், ஸிம்ஹநாதம் எழுப்பிக் கொண்டு, நாணேற்றிய வில்லுடன் கோபித்து நில்! நில்! என அநிருத்தனை நோக்கிச் சொன்னான். அந்தப் பாணனின் வார்த்தையை நன்கு கேட்டு வெல்லப்படாத அநிருத்தன் போரில் பாணனின் முகத்தை உற்றுப் பார்த்துச் சிரித்தான். நூற்றுக்கணக்கான மணிகளின் சப்தத்தையுடையது சிவப்புக் கொடியுடையது. மான்தோல் போர்த்தது நாலாயிரம் முழம் உயரம். இத்தகையது பாணன் தேர். தேவாஸுரப் போரில் ஹிரண்ய கசிபுவின் தேர் போன்று அந்த மஹாத்மா பாணனின் தேர் ஆயிரம் குதிரைகள் பூட்டப் பெற்றது. யது ஸ்ரேஷ்டன், அநிருத்தன் எதிர்த்து வரும் அந்த அஸுரனைப் பார்த்தான். பின்பு மிக மகிழ்ந்து போரில் தேஜஸ்ஸால் நிறைந்தான். முன்னர் முதல் அஸுரன் (ஹிரண்யகசிபு) வதத்தில் மூண்ட நரஸிம்ஹன் போல் போரில் ப்ரீதி கொண்டு கத்தி, கேடயம் ஏந்தி அநிருத்தன் கலங்காது நிலைத்திருந்தான். அப்போது கத்தி கேடயம் ஏந்தி வரும் அநிருத்தனைப் பாணன் பார்த்தான். அப்படி காலனாக வரும் அவனைப் பார்த்து அவனைக் கொல்லும் விருப்பத்தால் பாணன் மிக மகிழ்ச்சியடைந்தான். கவசமில்லாது கத்தியேந்திய யாதவ அநிருத்தனும் (போர் ஸாதனங்கள்) மிகக் கொண்ட பாணனை எளிதில் ஜயிக்க முடியாதவன் என நினைத்து போர் செய்ய எதிர்த்து நின்றான். விஜயத்தால் சோபிக்கும் மஹாபலமுடைய பாணன் மிக கோபங்கொண்டு போரில் அநிருத்தனைக் குறித்து பிடிக்கப்படட்டும் கொல்லப்படட்டும் என்று சொன்னான்.

பாணன் சொல்லும் வார்த்தையைக் கேட்டு அநிருத்தன் போரில் சிரித்துக் கோபங்கொண்டு பார்த்தான். பயத்தால் நடுங்கி அழும் உஷையைப் பார்த்து அவளை ஸமாதானப்படுத்திச் சிரித்து நின்றான். பிறகு அநிருத்தனைக் கொல்ல விரும்பி கோபங்கொண்ட பாணன் நாற்புறமும் க்ஷுத்ரகம் எனும் பாணக் கூட்டங்களை எறிந்தான். அநிருத்தனும் அந்தப் பாணன் தோல்வியை விரும்பி அந்தப் பாணங்களை வெட்டி முறித்தான். பாணன் அநிருத்தனின் வதத்தை விரும்பி அவன் தலையில் க்ஷுத்ரக அம்புக் கூட்டங்களை நாற்புறமும் பொழிந்தான். அந்த அநிருத்தன் பின்பு ஆயிரக் கணக்கான பாணங்களைக் கேடயத்தால் உதறியெறிந்து, அந்தப் பாணன் எதிரில் உதய பர்வதத்திலிருக்கும் ஸூர்யன் போல ப்ரகாசித்தான். அந்த யதுச்ரேஷ்டன் வனத்தில் ஒரு யானையைப் பார்த்து ஸிம்ஹம் போல் போரில் பாணனை அலக்ஷ்யம் செய்து

எதிரில் நின்றான். அந்தப் பாணன் கூர்மையான கொடிய வேகமாகச் சென்று மர்மத்தைப் பிளக்கும் பாணக் கூட்டங்களால் ஜயிக்கப்படாத அநிருத்தனை அடித்தான். பின்பு பாணங்களால் அடிக்கப்பட்ட அநிருத்தன் கத்தி கேடயம் தரித்தவனாய் விழுந்தான். விழும் அவனைக் கூரிய அம்புகளால் பாணன் அடித்தான். வளைந்த கணுக்களுடைய பாணங்களால் மிகவும் தாக்கப்பட்ட மஹாபாஹு அநிருத்தன் செயற்கரிய செயலைச் செய்ய விரும்பிக் கோபத்தால் மிக ஜ்வலித்தான். பாண மழையால் ரத்த வெள்ளம் பெருகும் உடலுடன் அநிருத்தன் அவமதிக்கப்பட்டு மிக்க கோபங்கொண்டு பாணன் தேரை நோக்கிச் சென்றான். கத்தி, உலக்கை, சூலம், பட்டிசம், தோமரம் இவைகளாலும் அப்படியே பாணக் கூட்டங்களாலும் மிகவும் தாக்கப்பட்ட அநிருத்தன் கலங்கவில்லை. கோபங்கொண்ட அநிருத்தன் திடீரெனத் தாவிக்குதித்து தேரின் பார்தடியைத் துண்டித்தான். போர்களத்தில் பாணனின் குதிரைகளையும் கத்தியால் வெட்டிக் கொன்றான். போர் வழிவல்ல பாணன் திரும்ப அந்த அநிருத்தனை அம்பு மழையாலும், பட்டிச, தோமரங்களாலும் மறைத்தான். இந்த அநிருத்தன் கொல்லப்பட்டான் என நினைத்து அஸுரக் கூட்டங்கள் ஆரவாரித்தன.

பிறகு திடீரென வெளியில் குதித்துத் தேரின் பக்கலில் நின்றான். பிறகு, கோபங்கொண்ட பாணன் பயங்கரமான கோரரூபமுடைய மணிமாலை நிறைந்து ஜ்வலிக்கும் சக்தி ஆயுதத்தை எடுத்தான். ஒளி வீசும் ஸூர்யன் போன்றதும் யமதண்டம் போன்றதும் கொடிய தோற்றமுள்ளதும் ஜ்வாலை வீசும் எரி நக்ஷத்ரம் போன்றதுமான அந்தச் சக்தியைப் பயமில்லாமல் அநிருத்தன் மேல் ஏவினான். அப்போது உயிரை முடிக்கவரும் அந்தச் சக்தியைப் பார்த்து அந்தப் புருஷோத்தமன் அநிருத்தன் துள்ளிக் குதித்துக் கையில் பிடித்தான். பிறகு மஹாபலவான் அநிருத்தன் அந்தச் சக்தியால் பாணனை அடித்தான். அந்தச் சக்தி பாணஸுரனின் தேஹத்தைப் பிளந்து கொண்டு பூமியை அடைந்தது. அந்தப் பாணன் பலமாகத் தாக்கப்பட்டு வருந்தி கொடிக்கம்பத்தை கெட்டியாகப் பிடித்து நிலைத்து கொண்டான். பின்பு மூர்ச்சையடைந்த அவனைக் குறித்து (மந்திரி) கும்பாண்டன் வார்த்தை சொன்னான். அஸுரராஜனே! விடாப் போரிடும் சத்ரு அநிருத்தனை ஏன் இப்படி அலக்ஷ்யம் செய்கிறாய். அவகாசம் பெற்ற இந்த வீரன் இப்போது போர் விகாரமில்லாமல் (களைக்காமல்) காணப்படுகிறானல்லவா? மாயையைக் கொண்டு போரிடு. வேறு வழியில் இவனைக் கொல்ல முடியாது. உன்னையும் என்னையும் காப்பாற்று. அஜாக்ரதையால் ஏன் அலக்ஷ்யம் செய்கிறாய்?

இப்போதே இவன் கொல்லப்படட்டும். நம் எல்லோரையும் இவன் அழிக்க வேண்டாம். மற்றவரையும் நூற்றுக் கணக்கில் கொன்று உஷையை அழைத்துச் சென்று விடுவான். கும்பாண்டன் வார்த்தையால் இவ்விதம் தூண்டப்பட்ட சொல்வல்ல அஸுரச்ரேஷ்டன், மிகக் கோபங்கொண்டு கொடூர வார்த்தையைச் சொன்னான். இந்த நான் போரில் இவனுக்கு ப்ராணனை அபஹரிக்கும் மரணத்தைச் செய்வேன். நான் இவனைக் கருடன் ஸர்பத்தைப் போல் இழுத்துச் செல்வேன் என்று இவ்விதம் சொல்லி தேர், குதிரை, ஸாரதி இவர்களுடன் கந்தர்வ நகரம் போல் மாயையால் அங்கேயே மறைந்தான். மாயை கொண்ட பகவான் பாணன் மறைந்து, கூரிய பாணங்களை விடுத்தான். பாணன் மறைந்ததை யறிந்து ஜயிக்கப்படாத அநிருத்தன் வீரங்கொண்டு பத்துத் திக்கையும் பார்த்தான்.

அப்போது <u>தாமஸ</u> மாய வித்யையை அண்டி மாயைக் கைக்கொண்டு கோபமுடைய பலி புத்ரன் பலவான் பாணன் மறைந்திருந்து கூரிய அம்புகளை விடுத்தான். அநிருத்தன் ஸர்பங்களாகிற நாகபாச அம்புகளால் நாற்புறமும் கட்டுண்டான். அவனுடைய உடல் ஸர்ப்பக் கூட்டங்களால் பலபடியாகச் சுற்றப்பட்டது. போரில் கட்டப்பட்டு முற்றும் சுற்றப்பட்ட எல்லா அங்கங்களையுமுடைய அநிருத்தன் மைந்நாக பர்வதம் போல் முயற்சி யற்றவனாகச் செய்யப்பட்டிருந்தான். தீ வீசும் முகங்களையுடைய பாம்பின் உடல்களால் அசைவறச் செய்யபட்ட அநிருத்தன், போரில் பர்வதம் போன்ற தோற்றமுடைய வனாயிருந்தான். ஸர்ப்ப முக [illegible] எல்லா பக்கங்களிலும் சுற்றப்பட்ட [illegible] அசைவற்ற நிலைமையை அடைந்திருந்தும், [illegible] கோபங்கொண்ட பாணன் கொடிய வார்த்தைகளால் [illegible] அநிருத்தனை அடித்தான் கொடியைப் பிடித்துக் கொண்டு வார்த்தைகள் சொன்னான். கும்பாண்டனே சீக்கிரமே இந்த குலத்தைக் கெடுத்தவன் கொல்லப்படட்டும். துஷ்ட ஒழுக்கமுடைய இவனால் உலகில் என் குல சரிதம் கெடுக்கப்பட்டது. என்று இவ்விதம் வார்த்தை சொல்லப்பட்டதும் கும்பாண்டன் வார்த்தை சொன்னான் ராஜனே! நான் சிறிது சொல்வேன். இஷ்டப்பட்டால் கேள். இந்திரன் போன்ற பராக்ரமமுடைய இவன் யாரைச் சேர்ந்தவன்? எங்கிருந்து இங்கு வந்தான்? இங்கு யாரால் அழைத்து வரப்பட்டான்? என்று அறியப்படட்டும். அரசனே! இவன் பெரும் போரில் போரிடுவதை நான் பார்த்தேன். போரில் தேவ புத்ரன் விளையாடுகிறது போன்று காணப்படுகிறான். அஸுரஸ்ரேஷ்டனே! இவன் பலவான்

தைர்யமுடையவன். எல்லா ஆயுதங்களிலும் வல்லவன். ஆதலால் வதம் செய்யத்தக்கவனில்லை. உமது பெண் உஷை காந்தர்வ விவாஹத்தால் இவனுடன் சேர்ந்தாள். வேறொருவனுக்கு கொடுக்கத் தக்கவளில்லை. வேறொருவரால் ஏற்றுக் கொள்ளத் தக்கவளுமில்லை ஆகையால் யோசித்து வதம் செய். ஆலோசித்து இவனது வதத்தையோ, கௌரவத்தையோ செய்வாய். இவனைக் கொல்வதிலோ பெரிய தோஷம். ரக்ஷிப்பதில் மிகப் பெரிய குணம். இவனோ புருஷர்களில் சிறந்தவன். எல்லாப்படியாலும் கௌரவிக்கத் தக்கவன். பாம்புகளால் நாற்புறமும் சுற்றப்பட்ட உடலுடைய இவன் கலங்குகிறானில்லை. குலம், காம்பீர்யம், வீர்யம் இவை நன்கு பொருந்தியவன்.

ராஜனே! பார்! இவன் மஹாவீர்ய குணங்களுள்ள புருஷோத்தமன். கொல்லப்படும் நிலையை அடைந்த போதிலும் பலவானான இவன் நம் எல்லோரையும் லக்ஷ்யம் செய்கிறனில்லை. இங்கு. இவன் மாயையின் பெருமையால் கட்டப்படாதிருப்பின் எல்லாத் தேவக் கூட்டங்களையும் போரில் எதிர்ப்பான். இதில் ஸந்தேஹமில்லை. இவன் எல்லாப் போர் வழிகளையும் அறிந்தவன். வீர்யத்தில் மேம்பட்டவன் ஆவான். ரத்தப் பெருக்காலும், பாம்பு உடலாலும் சுற்றப்பட்ட இவன் மூன்று சிகை புருவ நெரிப்பைச் செய்து இங்கு எதிர் நிற்கும் நம்மை லக்ஷ்யம் செய்கிறனில்லை. ராஜனே! இந்த நிலை அடைவிக்கப்பட்ட போதிலும், தன் தோள் வலியையே கொண்டு, உன்னைக் கவனிக்கிறானில்லை. இந்த யௌவன புருஷன் அத்புத வீரன். ஆயிரந்தோளுடைய உன்னுடன், இரண்டு தோளுடையவன் போரில் எதிர் நிற்கிறன். வீர்ய மதங்கொண்ட இவன் உன் வீர்யத்தைப் பொருட்படுத்த வில்லை. உனக்கு உசிதமாகத் தோன்றினால் இவன் வீர்ய பராக்ரம [illegible] உன்னால் அறியத் தக்கவன். அஸுரஸ்ரேஷ்டனே! இந்த பெண் உஷையும் அவனுடன் சேர்ந்தவள். வேறொருவனுக்கு கொடுக்கத் தகாதவள். மஹான்கள் வம்சத்தில் இவன் விரும்பத் தக்கவனானால், அதனால் இவன் கௌரவத்தை யடைவான். இவன் ரக்ஷிக்கப்படட்டும் எனச் சொல்லப்பட்டு, அப்படியே ஆகட்டும் என்று பாணன் இருந்தான். மஹாத்மா கும்பாண்டனால் இவ்விதம் சொல்லப்பட்டதும், சத்ருக்களை வெல்லும் பாணன் கும்பாண்டனைப் பார்த்து அப்படியே ஆகட்டும் எனச் சொன்னான். பின்பு புத்திமான் அநிருத்தனுக்கு காவல்காரர் ஏற்படுத்திப் பெருங்கீர்த்தி வாய்ந்த பலி புத்ரன் பாணன் தன் வீட்டிற்குச் சென்றான். மஹாபலவான் அநிருத்தன் மாயையால் கட்டப்பட்டதைப் பார்த்து ரிஷிஸ்ரேஷ்டர் நாரதமுனி ஆகாய வழியாக த்வாரகையை அடைந்தார்.

ரிஷிஸ்ரேஷ்டர் நாரதமுனி சென்றதும் அநிருத்தன் ஆலோசித்தான். இந்தக் கொடிய அஸுரன் மறைந்தான். திரும்ப போருக்கு வருவான் ஸந்தேஹமில்லை. அந்த நாரதர் அங்கு சென்று சங்கு, சக்ர கதா தாரி க்ருஷ்ணனிடம் இந்த விஷயத்தை உள்ளபடி சொல்வார். ஸந்தேகமில்லை. நாகபாசத்தால் அசையாமலிருக்கும் அநிருத்தனைப் பாத்து மனங்கலங்கிய உஷை, நீர் ததும்பம் கண்களுடன் அழுதாள். அழும் அவளைக் குறித்து அநிருத்தன் மறுபடியும் சொன்னான் பயந்தவளே! ஏன் இந்த அழுகை? மான்விழியாளே! நீ பயப்படாதே! அழகிய பின்பாகமுடையவளே! என் பொருட்டு வரும் மதுஸூதனனைப் பார். அவனது சங்க த்வனியையும், பலராமனின் தோள் தட்டு சப்தத்தையும் கேட்டு அஸுரர்களும், அஸுர ஸ்த்ரீகளின் கர்டங்களும் நாசமடையும். வைசம்பாயனர் சொன்னார்: அநிருத்தனால இப்படி சொலலப்பட்ட உஷை நம்பிக்கை கொண்டாள். துடியிடையாள் உஷை இரக்கமற்ற பிதாவைக் குறித்து வருந்தினாள்.

119 அத்யாயம் முற்றும்.

## அத்யாயம் 120

## அநிருத்தன் தன் கட்டிலிருந்து விடுபட <u>கோடவதி</u> என்னும் ஆர்யா தேவியைத் தோத்தரித்து பூஜித்தாள் - கட்டு நீங்கி விடுபட்டான் - இந்த ஆர்யா ஸ்தோத்ரம் கட்டு நீங்கி மங்களம் அளிப்பது.

வைசம்பாயனர் சொன்னார்: பாணன் நகரில் பலி புத்ரன் பாண ராஜனால் வீரன் அநிருத்தன் உஷையொடு காவலில் வைக்கப்பட்ட போது ரஷைக்காக <u>கோடாவதி</u> தேவியை அநிருத்தன் சரணடைந்தான். அநிருத்தனால் சொல்லப்பட்ட இந்தத் தேவி ஸ்தோத்ரத்தைக் கேள்.

அநந்தன், அக்ஷயன், திவ்ய ஆதிதேவன், ஜகத்ப்ரபு நாராயணனை வணங்கி, லோகத்தால் வணங்கப்பட்ட சண்டீ, காத்யாயனீ, வரதாபகீ. ஆர்யா தேவியை விஷ்ணுவால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட நாமங்களால் கீர்த்தனம் செய்கிறேன். ரிஷிகளாலும், தேவர்களாலும் வாக் புஷ்பங்களால் (நல்ல ஸ்தோத்ரங்களால்) அர்ச்சிக்கப்பட்டவளும் எல்லாத் தேஹங்களிலிருப்பவளும் எல்லாத் தேவராலும் வணங்கப்பட்டவளும் அந்த மங்களமான ஆர்யா தேவியைக் கீர்த்தனம் செய்கிறேன். அநிருத்தன் சொன்னான், மஹேந்தரன், விஷ்ணு இவர்களின் ஸஹோதரி நீ! ஹிதத்தின் பொருட்டு உன்னை வணங்குகிறேன். நல்லெண்ணங் கொண்ட மனதால் சுத்தனாய் கை கூப்பி ஸ்துதிக்கிறேன். கௌதமீ! கம்ஸனுக்கு பயம் தந்தவளே!

யசோதைக்கு (தான் பிறந்து) ஆனந்தம் ஊட்டுபவளே! பரிசுத்த மானவளே! கோகுலத்தில் பிறந்தவளே! நந்தகோபன் பெண்ணே! உன்னை ஸ்துதிக்கிறேன். ப்ரஜ்ஞே! தக்ஷே! சிவே! ஸௌம்யே! அஸுரபுத்ரர்களை அடக்குபவளே! எல்லாத் தேஹத்திலும் இருப்பவளே! எல்லாப் பூதங்களாலும் வணங்கப்பட்டவளே! தர்சனீ! பூரணீ! ரிஷிக்கூட்டங்களுடன் தேவர்களால் வணங்கத்தக்கவளே!

காளீ! காத்யாயனி தேவீ! பயம் கொடுப்பவளே! பயம் போக்குபவளே! காளராத்தி! இஷ்டப்படி திரிபவளே! முக்கண்ணீ! ப்ரஹ்மசாரிணி! சௌதாமினி! மேகம் போன்ற குரல் கொண்டவளே! வேதாளீ! பறந்த முகமுடையவளே! கணத் தலைவி! மஹா பாக்யசாலி! சகுனீ! ரேவதி! பஞ்சமி! ஷஷ்டீ! பூர்ணிமை! சதுர்தசி திதிகளே! இருபத்தேழு நக்ஷத்ரங்களே! எல்லா நதிகள், பத்து திக்குகள், நகர உபவன, உத்யான வாயில்கள், உச்சி மாடிகள், இவைகளில் வசிப்பவளே! ஹ்ரீ! ஸ்ரீ கங்கே! கந்தர்வே! யோகினீ, ஸத்புருஷருக்கு யோகத்தைக் கொடுப்பளே! கீர்த்தீ! ஆசையே! திக்கே! ஸ்பர்சே! ஸரஸ்வதீ! வேதங்கள் தாயே! ஸாவித்ரீ! பக்தவத்ஸலே! தபஸ்விநீ! சாந்தி கொடுப்பவளே! ஏகா நமசே! ஸநாதநே! குடிசை வாஸியே! மதிரே! சண்டீ! இலே! மலைவாஸினி! பூதங்களை வளர்ப்பளே! பயம் கொடுப்பவளே! கூஷ்மாண்டீ! குஸும ப்ரியே! பயங்கரீ! மது மயக்கம் கொடுப்பவளே! விந்த்ய, கைலாஸவாஸினி! பெண்களில் சிறந்தவளே! ஸிம்ஹவாஹினீ! பல வடிவம் உடையவளே! காளைக் கொடியளே! தூர்லபே! துர்ஜயே! நிசும்பாஸுரனுக்குப் பயம் கொடுப்பவளே! தேவர்களுக்குப்ரியே! ஸுராதேவீ! இந்த்ரனுக்குப் பின் பிறந்தவளே! மங்களமானவளே! கிராதீ. மரவுரி ஆடையளே! திருடர் ஸேனையால் வணங்கப்படுபவளே! [illegible] ஸோமரஸம் குடிப்பவளே! ஸௌம்யரூபியே! எல்லா மலைகளிலும் வஸிப்பவளே! நிசும்ப, சும்ப அஸுரர்களை வதம் செய்தவளே! யானைத்தலை போன்ற ஸ்தனங்களுடையவளே! ஸித்த ஸேனைக்குத் தாயே! ஸித்த சாரணரால் வணங்கப்பட்டவளே! ஸுப்ரமண்யனின் தாயே! எங்கும் திரிபவளே! பார்வதீ! பர்வதராஜ புத்ரீ! இத்தகைய உன்னை வணங்குகிறேன். ஐம்பது தேவகன்யைகள் தேவகண பத்னிகள், கத்ருவின் ஆயிரம் புத்ரர்கள், அவர்களின் புத்ர பௌத்ரர்கள் இவர்கள் எல்லோரின் பத்னிகள், இவர்களின் மாதா பிதாக்கள், ஸ்வர்க்கத்தில் தேவ அப்ஸர கணங்கள், ரிஷிபத்னி கணங்கள், யக்ஷ கந்தர்வ பெண்கள் வித்யாதரப் பெண்கள், மனித பதிவ்ரதைகள், இந்த எல்லா பெண்களுக்கும் எல்லாப் பூதங்களுக்கும் புகலிடமே! கின்னரர் கீதங்களால் ஸ்துதிக்கப்பட்டவளே! மூவுலகிலும்

வணங்கப்படுபவளே! நினைக்க முடியாதவளே! அளவிட முடியாதவளே! உனக்கு வணக்கம். கௌதமீ! இந்த பெயர்களாலும், வேறு பெயர்களாலும் நீ துதிக்கப்பட்டாய். விசாலாக்ஷீ! உன் அனுக்ரஹத்தால் விக்னம் நீங்கிக் கட்டிலிருந்து சீக்கிரம் விடுபடுவேன். என்னைக் கடாக்ஷிக்க வேண்டும். உன் திருவடிகளில் சரணம் அடைகிறேன். எல்லாக் கட்டுகளிலிருந்தும் என்னை விடுவிக்க வேண்டும். ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், சந்த்ரன், ஸூர்யன், அக்னி மாருதன், அஸ்வனிகள், வஸுக்கள், விஸ்வதேவர்கள், ஸாத்யர்கள், மருத், பர்ஜன்யன், தாதா, பூமி, பத்து திக்குகள், பசுக்கள், நக்ஷத்ர வம்சங்கள், க்ரஹங்கள், நதிகள், மடுக்கள், ஓடைகள், ஸமுத்திரம், நானாவித வித்யாதரர், உரகர், நாகர், தேவர்கள், கந்தர்வ கணங்கள், அப்ஸரகணங்கள், உலகமுழுதும் தேவியாகிற உனது கீர்த்தியைப் பாடுகின்றனர்.

தேவியின் இந்தப் புனித ஸ்துதியை மிக்க கவனத்துடன் படிக்கின்றவனுக்கு ஏழாவது மாதத்தில் அந்த தேவி உயர்ந்த வரத்தைக் கொடுக்கிறாள். காத்யாயனீ! வரதே! கண்ணழகீ! பதினெட்டுப் புஜங்களுடனும் திவ்ய ஆபரணங்களுடனும்,மாலையால் சோபிக்கும் அங்கங்களுடனும், க்ரீடம், சித்ர பூஷணங்களுடனுமுள்ள நீ ஸ்துதிக்கப்படுகிறாய். சிறந்த வரத்தைக் கொடுக்கிறாய். ஆதலால் உன்னை ஸ்துதிக்கிறேன். மஹாதேவீ! உனக்கு வணக்கம். என் விஷயத்தில் எப்போதும் மிகப்ரீதியுடன் இரு. எனக்கு நீ, ஆயுள், புஷ்டி, க்ஷேமம், தைர்யம் இவற்றை வரமாகக் கொடு. கட்டிலிருந்து விடுபடுவேன். இது உண்மையாக வேண்டுமென்று நீ வரம் கொடு

வைசம்பாயனர் சொன்னார்: இவ்விதம் ஸ்துதிக்கப்பட்ட அடைய முடியாத (ஒப்பற்ற) பராக்ரமமுடைய மஹாதேவி துர்கை, அநிருத்தன் கட்டுண்டிருக்குமிடத்தில் ப்ரத்யக்ஷமானாள். சரணமடைந்தவரிடம் ப்ரியமுள்ள தேவி, அநிருத்தன் ஹிதத்திற்காகப் பாணன் நகரில் வீர அநிருத்தனை விடுவித்தாள். பொறுமையிழந்த அநிருத்தனை ஸமாதானப்படுத்தினாள். அவளை அந்த கீர்த்தி வாய்ந்த வீர அநிருத்தன் பூஜித்தான். அந்தத் தேவீ அநிருத்தன் கட்டுண்டவிடத்தில் அனுக்ரஹம் செய்தாள். நாக பாசத்தால் கட்டப்பட்டு உஷையால் அபஹரிக்கப்பட்ட மனதுடைய அநிருத்தனின் வஜ்ரம் போன்ற (கெட்டியான) கூட்டைக் கை நுனியால் தட்டி, பாணபுரத்தில் கட்டுண்டிருக்கும், அநிருத்தனைச் சாந்தப்படுத்தி அனுக்ரஹ நோக்குடன் அப்போது தேவி சொன்னாள். அநிருத்த! உன்னைச் சக்ராயுதம் கொண்ட க்ருஷ்ணன் கட்டிலிருந்து சீக்கிரம் விடுவிப்பான். அதுவரை பொறுத்திரு. பாணனின்

ஆயிரம் கைகளை வெட்டி, அஸுர சத்ரு க்ருஷ்ணன் தன் நகருக்கு உன்னை அழைத்துச் செல்வான். பிறகு சந்த்ர சோபை முகத்துடைய அநிருத்தன் மகிழ்ந்து திரும்ப தேவியை ஸ்துதித்தான். அநிருத்தன் சொன்னான். வரப்ரதே! மங்கள தேவீ! உனக்கு வணக்கம் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவளே! ஸதா மங்களமானவளே! ப்ரிய மானவளே! எல்லோருக்கும் நன்மை விரும்புவளே! சத்ருக்களுக்கு எப்போதும் பயம் தருபவளே! கட்டிலிருந்து விடுவிப்பவளே! உனக்கு வணக்கம். ப்ரஹ்மாணீ! இந்த்ராணீ! ருத்ராணீ! நாராயணீ! முக்காலமானவளே! சுபே! என்னை எல்லாப் பயங்களிலிருந்தும் காப்பாற்று. உனக்கு வணக்கம். ஜகந்நாதே! ப்ரீயே! இந்த்ரியங்களை அடக்குபவளே! மஹா வ்ரதே! பக்தப்ரீயே! ஜகந்மாதா! பர்வதராஜ புத்ரீ! பூதேவீ! அஸுரருக்குப் பயம் தருபவளே! விசாலாக்ஷீ! எல்லாத் துக்கங்களிலிருந்தும் என்னைக் காப்பாற்று. உனக்கு வணக்கம். ருத்ரனுக்கு ப்ரியே! மஹா பாக்யசாலீ! பக்தர்களின் மனக்கவலை போக்குபவளே! தேவீ! உன்னைத் தலையால் வணங்குகிறேன். கட்டிலிருந்து விடுபட்டேன். இந்தப் புனிதமான ஆர்யா ஸ்தவத்தை மிகக் கவனமாகப் படிப்பவன், எல்லாப் பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணு லோகத்தை அடைகிறான். கட்டிலிருப்பவன் விடுபடுவான். இது ஸத்யமான வ்யாஸ வாக்கு.

120 அத்யாயம் முற்றும்

## அத்யாயம் 121

த்வாரகையில் பெண்களின் அழுகுரல் - யுத்தபேரி அடிக்கப்படல் - ஒற்றர்கள் அநிருத்தனைத் தேடப் புறப்படல் - சேனாபதி உரைத்தல் - க்ருஷ்ணன் நாரதரால் உண்மை தெரிந்து பாணனோடு போரிடக் கருடன் மேல் செல்லுதல்

வைசம்பாயனர் சொன்னார்: பிறகு த்வாரகையிலிருந்து அநிருத்தன் வீட்டில் எல்லாப் பெண்களும் ப்ரியமான நாதனைக் காணாமல் அன்றில் பறவைகள் போல் கூட்டங் கூட்டமாக அழுதனர். ஐயோ! பாபம்! இது என்ன? எல்லா நாதர்களுக்கும் நாதனை க்ருஷ்ணன் இருக்கும் போது அநாதைகள் போல் பயத்தால் பீடிக்கப்பட்டு நடுங்கி அழுகிறோம். ஆதித்ய மருத் கணங்களுடன் கூடிய இந்த்ரன் முதலான தேவர்கள் க்ருஷ்ணனின் தோள் நிழலையண்டி ஸ்வர்க்கத்தில் கவலையின்றி வஸிக்கின்றனர். பயங்கொடுக்கும் அவனுக்கு உலகில் இந்த பெரிய பயம் உண்டாயிற்று. க்ருஷ்ணனின் பௌத்ரன் எங்கள் வீரன் அநிருத்தன் எவனாலேயோ அபஹரிக்கப்பட்டான். அந்தோ! துர்மதியான்! (அபஹரித்த) அவனுக்கு உலகில் பயமில்லை! வாஸுதேவனுக்குப் பொறுக்க முடியாத கோபத்தை உண்டு பண்ணுகிறான்.

வாஸுதேவனைப் போரில் மயக்கத்தால் எதிர்க்கும் சத்ரு. திறந்த வாயுடைய யமனின் கோரைப் பல் முனையில் நடமாடுகிறான். யதுஸ்ரேஷ்டனிடம். இவ்விதமான அபிப்ராயத்தைச் செய்து ஸாக்ஷாத் தேவேந்தரன் கூட உயிருடன் எப்படி விடப்படுவான்? நாதன் அபஹரிக்கப்பட்டு அநாதையாய் செய்யப்பட்ட நாங்கள் நாதன் பிரிவால் யமன் வசப்பட்டவராகச் செய்யப்பட்டோம். என்று இவ்விதம் சொல்லிக் கொண்டும். அழுது கொண்டும். அந்தச் சிறந்த பெண்கள் கண்களிலிருந்து அமங்களமான நீரை விட்டனர். நீர் நிரம்பிய அவரது கண்கள் வர்ஷா காலத்தில் தண்ணீர் நிறைந்த தாமரைகள் போல் ப்ரகாசித்தன. அவர்களது வளைந்த இமைகள் கொண்ட சிவந்த மங்களமான கண்கள், ரத்தத்தால் பூசப்பட்டது போல் ப்ரகாசித்தன. மாடியிலிருந்து அழும் அவர்களின் பெரிய சப்தம், ஆகாசத்தில் ஆயிரக்கணக்காக அழும் அன்றில் பறவைகளின் சப்தம் போல் இருந்தது அந்தப் புருஷ ஸ்ரேஷ்டர்கள் அபூர்வமான கோர பய சப்தத்தைக் கேட்டு தங்கள் வீடுகளிலிருந்து வெளிக் கிளம்பினர். அநிருத்தன் வீட்டில் இந்த பெரிய சப்தம் எதனால் கேட்கப்படுகிறது? க்ருஷ்ணனால் ரக்ஷிக்கப்பட்ட நமது வீட்டில் எங்கிருந்து பயம் வந்தது? ஸ்நேஹத்தால் கலங்கி தழுதழுத்த குரலுடன் அவர்கள் ஒருவருக்கொருவர் இப்போது கூறினர். அவமானத்தை ஸஹிக்காத, ஸிம்ஹங்கள் குகைகளிலிருந்து கிளம்புவது போல் வெளியேறினர். அப்போது க்ருஷ்ணனுடைய பெரிய யுத்த பேரி அடிக்கப்பட்டது. அதன் சப்தத்தால் எல்லோரும் ஒன்று சேர்ந்து நின்றனர். அந்த யாதவர் இது என்ன? என்று ஒருவருக்கொருவர் கேட்டுக் கொண்டனர். அவர்கள் எல்லோரும் ஒவருக்கொருவர் நடந்த விஷயத்தைத் தெரிவித்துக் கொண்டனர். பிறகு அந்த யாதவர் நீர் ததும்பியும் கோபத்தால் சிவந்துமுள்ள கண்களுடன் போரில் மதங்கொண்டவராய் பெருமூச்சு விட்டுக் கொண்டு நின்றனர்.

எல்லோரும் மௌனமாயிருக்கும் போது விப்ருது என்பான். அடிக்கடி பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கும் வீர ச்ரேஷ்டன் க்ருஷ்ணனைப் பார்த்து வார்த்தை சொன்னான். புருஷோத்தமா! நீ இங்குக் கவலை கொண்டவனாயிருப்பது ஏன்? எல்லா யாதவர்களும் உன் தோள் வலிமையை அண்டி ஸுகமாயிருக்கின்றனர். க்ருஷ்ணா! உம்மை அண்டிய யாதவர்கள் எல்லாப்படியாலும் நன்கு ரக்ஷிக்கப்பட்டுள்ளனர். அப்படியே பகவான் இந்த்ரன் வெற்றி தோல்விகளை உம்மிடம் வைத்துப் பயமற்று ஸுகமாய் உறங்குகிறான். நீ ஏன் கலங்கியிருக்கிறாய்? உனது எல்லாப் பந்துக்களும் மிக ஆழ்ந்த சோக ஸாகரத்தில் மூழ்கியுள்ளனர். மஹாபாஹோ! மாதவா!

துக்க ஸாகரத்தில மூழ்கியிருக்கும் யாதவரை ஒப்பற்ற நீ (துககககடலை) தாண்டச் செய். கலக்கத்தால் சூழ்ந்து ஏன் சிறிது கூடப் பேசாமலிருக்கிறாய்? நீ வீணாய் கலங்கக் கூடாது. இவ்விதம் சொல்லப்பட்ட க்ருஷ்ணனும் வெகுகாலம் அதிகப் பெருமூச்சு விட்டுத் தானே ப்ரஹஸ்பதிபோல் வாக்யமறிந்த அவன் பேசினான். க்ருஷ்ணன் சொன்னான்: விப்ருதுவே! மனங்கலங்கி இந்தக் கார்யத்தை ஆலோசித்தேன். ஆலோசித்தும் இந்தக் கார்யத்தை (அநிருத்தன் அபஹரிக்கப்பட்டதை) முடிவு காணக்கிடைக்க வில்லையே! அப்படியே நான் உன்னால் சொல்லப்பட்ட போதிலும், ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை. தாயார்கள் கண் மத்தியில் நான் பொருள் பொருந்திய வார்த்தையைச் சொல்கிறேன். யாதவர்கள் எல்லோரும் கேளுங்கள். நான் எவ்விதம் கவலை கொண்டேன் என்பதைக் கேளுங்கள். வீர அநிருத்தன் அபஹரிக்கப்பட்டதும் பூமியில் எல்லா அரசர்களும் பந்துக்களோடு கூடிய நம்மெல் லோரையும் சக்தியற்றவர்களென நினைப்பார்கள். முன்னர் சால்வ ராஜனால் நமது ராஜா உக்ரஸேனர் அபஹரித்துப் போகப்பட்டார். நம்மால் கொடிய போர் செய்து திரும்பக் கொணடு வரப்பட்டார். ருக்மிணியின் மகன் நம் குழந்தை ப்ரத்யும்னனும் (அஸுர) சம்பரனால் அபஹரிக்கப்பட்டான். அவன் போரில் சம்பரனைக் கொன்று திரும்பி வந்தான். இதுவா மிகப் பெரிய கஷ்டம். ப்ரத்யும்னன் மகன் அநிருத்தன் எவ்விடத்துக்கு எடுத்துச செல்லப்பட்டான்? மனித ச்ரேஷ்டர்களே! இந்த வித கஷ்டம் நான் நினைக்கவில்லை. எவனால் என் தலைமேல் தூசி படிந்த கால் (ஊதாஸீனமாக) வைக்கப்பட்டதோ. போரில் பந்துக்களுடன் அவனது உயிரை அழிப்பேன்.

க்ருஷ்ணனால் இவ்விதம் சொல்லப்பட்டதும் ஸாத்யகி வார்த்தை சொன்னான். க்ருஷ்ணா! அநிருத்தனைத் தேட ஒற்றர் ஏவப்படட்டும். மலைவன ப்ரதேசங்களுடன் கூடிய பூமியைத் தேடட்டும். க்ருஷ்ணனும் அப்போது புன்சிரிப்புச் செய்து உக்ரஸேனனை நோக்கிச் சொன்னார். ராஜனே! ரகஸ்ய ஒற்றரும் பஹிரங்க ஒற்றரும் ஏவப்படட்டும். வைசம்பாயனர் சொன்னார்: கேசவனது வார்த்தையைக் கேட்டு உக்ரஸேனன், த்வரைப்பட்டான். அநிருத்தனை தேடுவதற்கு அப்போது ஒற்றரை ஏவினான். பிறகு புகழ் பெற்ற ராஜனால் குதிரை மேல் ஒற்றரும், தேரின் மேல் ஒற்றரும் ஏவப்பட்டனர். நாற்புறமும் உள்ளூரிலும் வெளியிலும் தேடுங்கள் என ஏவினான். கொடிகளில் நெருங்கிய வேணுமான்மலை அப்படியே ரேவதகமலை ரிக்ஷிவான் இந்த மலைகளை வேகமாகக் குதிரைகள் மேல் (சென்று) தேடப்படட்டும்.

காடுகளையும், ஒவ்வொரு உத்யானத்தையும் தேடுங்கள். உத்யானங்களில் நாற்புறமும் பயமில்லாமல் செல்ல வேண்டும். ஆயிரக்கணக்கான அநேக தேர்களிலும், குதிரைகளிலும் ஏறி, சீக்கிரமாக யது நந்தனனைத் தேடுங்கள். அநாத்ருஷ்டி எனும் ஸேனாபதி எளிதில் கார்யம் செய்ய வல்ல க்ருஷ்ணனைக் குறித்து மிகவும் பயந்தவனாய் இந்த வார்த்தை சொன்னான், க்ருஷ்ணா! ப்ரபோ! திருவுள்ளமானால் எனது வார்த்தை கேட்கப்படட்டும். உம்மிடம் இதைச் சொல்ல வெகுகாலமாக எனது எண்ணம். அஸிலோமன், புலோமன், நிசுந்தன், நரகன், ஸௌபலசால்வன், மைந்தன், த்விவிதன் இவர்கள் எல்லோரும் கொல்லப்பட்டனர். மிகப் பெரிய ஹயக்ரீவனும் பந்துக்களுடனும் தேவர்களுக்காகச் செய்யப்பட்ட கொடிய போரில் கொல்லப்பட்டான். கோவிந்தா! இந்த எல்லாக் கார்யங்களையம் மீதியில்லாமல் ஒவ்வொரு போரிலும் செய்தாய். உமக்குப் பக்க உதவியும் ஒருவருமில்லை. பாரிஜாத அபஹரித்தலில், செய்ய முடியாத பெரிய கார்யம் உன்னால் செய்யப்பட்டது. க்ருஷ்ணா! அங்குப் போர்வல்ல ஐராவதத்தின் சிரஸில் உட்கார்ந்து செல்லும் இந்த்ரன் உமது தோள் வலிமையால் ஜயிக்கப்பட்டான். உம்முடன் அவனுக்கு விரோதம் செய்யத்தக்கது இதில் ஸந்தேகமில்லை. உம்முடன் அவனால் மிக்க விரோதத் தொடர்ச்சியும் செய்யத்தக்கது. அங்கு இந்த்ரன் தன்னாலேயே அநிருத்தன் அபஹரிப்பு செய்யப்பட்டது. இந்த விரோதத்துக்குப் பதில் செய்வது பற்றி வேறொருவருக்குச் சக்தி கிடையாது.

இவ்விதம் சொல்லப்பட்டது. புத்திமான் க்ருஷ்ணன் யானை போல் பெரு மூச்சுவிட்டு மஹாபலவான் அநாத்ருஷ்டியைப் பார்த்துப் பதில் வார்த்தை சொன்னான், அப்பா! ஸேனாபதியே! இப்படி இல்லை! இல்லை! தேவர்கள் அல்பகாரியங்கள் செய்பவர்கள் அல்ல. செய்நன்றி அற்றவர்களில்லை. கையாலாகாதவர்களில்லை. மூர்க்கர்களுமில்லை. அஸுரர் அழிவில் எனது பெருமுயற்சி தேவர்களுக்காகவே. அவர்கள் ப்ரியத்திற்காகவே கர்வங் கொண்ட மஹா பலமுள்ள அஸுரர்களைப் போரில் அழிக்கிறேன். தேவர்களாகிய அவர்கள் பக்கமே என் எண்ணம். அவர்களிடமே எனது மனம், அவர்கள் பக்தன் நான். அவர்கள் ப்ரியத்திலேயே இன்பமுடையவன். இந்த மாதிரி என்னையறிந்து என் விஷயத்தில் அவர்கள் எப்படிக் குற்றம் செய்வார்கள். அற்பரல்லாதவர், ஸத்யவான்களும் எப்போதும் பக்தர்களிடம் அனுதாபமுடையவர்கள் அவர்களிடம் குற்றமில்லை. நீ குழந்தைத் தன்மையால் பேசுகிறாய் ஒருவேளை புருஷனை வேண்டும் பெண்ணால் அபஹரித்துப் போகப்பட்டிருப்பான். இந்த்ரனுடன் கூடிய தேவர்களில் இந்த

கார்யம் கிடையாது. வைசம்பாயனர் சொன்னார்: இவ்விதம் சிந்திக்கும் அத்புத கார்யம் செய்யவல்ல க்ருஷ்ணன் வார்த்தையைக் கேட்டுப் பிறகு பொருள் செறிந்த வார்த்தைவல்ல அக்ரூரர் ம்ருது பாஷையால் இனிமையாகக் கூறினார். ப்ரபோ! இந்த்ரன் கார்யம் இதுவென எங்களது நிச்சயம். இந்த்ரனுக்கு எங்களால் செய்யப்பட வேண்டியதும் நிச்சயம். நாமும் தேவர்களால் ரக்ஷிக்கத்தக்கவர்கள். தேவர்களும் நம்மால் காப்பாற்றத்தக்கவர். நாமும் தேவர்களுக்காக மனிதத் தன்மை அடைந்துள்ளோம்.

இவ்விதம் அக்ரூரர் வார்த்தைகளால் தூண்டப்பட்ட மதுஸூதனன் க்ருஷ்ணன் ஸ்நேக பாவமுள்ள கம்பீரமான வார்த்தை மறுபடியும் சொன்னான். இந்த ப்ரத்யும்னன் புத்ரன் அநிருத்தன் தேவ கந்தர்வ யக்ஷ ராக்ஷஸர்களால் அபஹரிக்கப்படவில்லை. பெரிய கீர்த்தி வாய்ந்த அக்ரூரரே! புருஷன் ஆசை கொண்ட பெண்ணால் தான் தைத்ய அஸுரப் பெண்கள் மாயையில் வல்லவர். புருஷன் ஆசை கொண்டவர். அத்தகையவரால் அபஹரிக்கப பட்டிருக்கிறான். ஸந்தேகமில்லை. வேறிடத்திலிருந்து பயம் இல்லை. வைசம்பாயனர் சொன்னார்: மஹாத்மா க்ருஷ்ணனால் உண்மையையறிந்து இவ்விதம் சொல்லப்பட்டதும் யாதவ கூட்டத்தில் க்ருஷ்ணனைக் கொண்டாடும் பெரிய சப்தம் எழுந்தது. க்ருஷ்ணன் மாளிகையில் ஸூதர், மாகதர், வந்தியர் எல்லோரையும் மகிழ்வித்துக் கொண்டு இனிமையான முழக்கம் கேட்கப்படுகிறது. நாற்புறமும் சென்ற எல்லா ஒற்றர்களும் ஸபை வாயிலையடைந்து தழுதழுத்த குரலுடன் பொதுவாக இந்த வார்த்தையை சொன்னார்கள். உத்யானங்கள், குகைகள், மலைகள், ஸபைகள், நதிகள், தடாகங்கள், ஒவ்வொன்றும் நூற்றுக்கணக்கில் தேடினோம். காணப்படவில்லை. மற்ற ஒற்றர்கள் வந்து க்ருஷ்ணனிடம் அப்போது சொன்னகள். எங்களுக்குத் தெரிந்த எல்லாவிடங்களும் தேடப்பட்டன. அநிருத்தன் காணப்படவில்லை மதுஸூதனா! க்ருஷ்ணா! அநிருத்தனைத் தேடுவதில் இன்னும் என்ன கார்யம் செய்ய வேண்டும்? அதைக் கட்டளையிடும் பிறகு அவர்கள் எல்லோரும் மனந்தாழ்ந்து கண்கள் நீர் பெருகி ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டனர். இதற்கு மேல் என்ன செய்வது? சிலர் உதட்டைக் கடித்தனர். சிலர் கண்களில் நீர் பெருக்கினர். சிலர் புருவத்தை நெரித்தனர். இப்படிச் செய்து கார்ய ஸித்தியை ஆலோசித்தனர். இப்படி சிந்திக்கிறவர்களால் பல விஷயங்கள் பேசப்பட்டன. அநிருத்தன் எங்கே? என்று மிகப் பெரிய பரபரப்புண்டாயிற்று. ஜனமேஜய ராஜனே! கோபங்கொண்ட யாதவர்கள் ஒருவரையொருவர் பார்த்து அநிருத்தன் அபஹரிக்கப்பட்டான். எதை திரும்பச் திரும்பச் சொல்லி

மனங்கலங்கி ச்ரமப்பட்டு இரவைக் கழித்தனர். இப்படி அவர்கள் சொல்லிக் கொண்டே பொழுது விடிந்தது. அப்போது மஹாபாஹு க்ருஷ்ணன் மாளிகையில் வாத்ய ஒலிகளாலும் சங்கொலிகளாலும் திருப்பள்ளியெழுச்சி உணர்த்தப்பட்டது. விடியற்காலே நிர்மலமாமாக சூர்யன் எழுந்ததும் ஒப்பற்ற நாரதமுனி ஸபையில் சிரித்துக் கொண்டே ப்ரவேசித்தார். க்ருஷ்ணனுடன் எல்லா யாதவர்களும் கூடியிருப்பதைப் பார்த்து பிறகு ஜய! ஜய! எனும் சப்தத்தால் மாதவனைப் பூஜித்தார். அந்த உக்ரஸேன ராஜா முதலியவர்களும் அந்த ரிஷியைப் பூஜித்தனர். பிறகு போரில் வல்ல ப்ரபு க்ருஷ்ணன் மனக்கலக்கத்துடன் எழுந்து மதுபர்க்கம், பசு இவைகளைக் கொடுத்தான்.

நாரதர் ஸகல விரிப்புகளாலும் மூடப்பட்ட வெண்ணிற ஆஸனத்தில் அமர்ந்து ஸுகமாக வீற்றிருந்து முறைப்படி பொருள் கொண்ட இந்த வார்த்தையைச் சொன்னார் : ஏன் எல்லோரும் கவலையில் மூழ்கிப் பற்றற்று மனமொடிந்து உத்ஸாக மின்றி கையாலாகதவர் போல் உட்காந்திருக்கின்றீர்கள். இப்படி மஹாத்மா நாரதரால் சொல்லப்பட்டதும் வாஸுதேவன் வார்த்தை சொன்னான்: பகவானே! இந்த வார்த்தை கேட்கப்படட்டும் நல்ல வ்ரதமுடைய ப்ரஹ்மவித்தே! இரவில் அநிருத்தன் யாராலேயோ அபஹரிக்கப்பட்டான். அவன் பொருட்டு நாங்கள் மனங்கலங்கியிருக்கிறோம். பாபமற்றவரே! முனிவரே! இந்த விஷயம் உம்மால் கேட்கப்பட்டோ காணப்பட்டோயிருக்குமானால் பகவானே! நன்கு தெளிவாகச் சொல்லப்படட்டும். மஹாத்மா கேசவனால் இவ்விதம் சொல்லப்பட்டதும் சிரித்து இந்த வார்த்தை சொன்னார். மதுஸூதனா! கேட்கப்படட்டும். பெரிய போர்க்களத்தில் தனித்து ஒருவனாக அநிருத்தனுக்கும் (ஸேனையுடன்) பாணனுக்கும் தேவாஸுர யுத்தம் போன்று பெரிய போர்க்களத்தில் மூண்டது. அளவிட முடியாத தேஜஸ்ஸுடைய பாணனுக்கு உஷையெனும் ஒரு பெண். அவளுக்காக சித்ரலேகையெனும் அப்ஸரஸ் அநிருத்தினே வேகமாக அபஹரித்துச் சென்றாள். அங்குப் போர்களத்தில் அநிருத்த பாணன் இருவருக்கும் பலி இந்த்ரர்களுக்குப் போல் மிகக் கொடிய போர் நடந்தது. அந்த மிகப் பெரிய அற்புதப் போர் என்னுலும் காணப்பட்டது. போர்களில் புறங்காட்டாத பாணனால் பயத்தால் மாயைக்கொண்டு மஹாபலன் அநிருத்தன் நாகாஸ்த்ரத்தால் கட்டப்பட்டான். கருடத்வஜ க்ருஷ்ணா! பாணனாலும் அநிருத்தனது வதம் கட்டளை இடப்பட்டது. அவனது மந்திரி கும்பாண்டன் என்பான் அவனைத் தடுத்தான். போரில் ஈடுபட்ட அந்தப் பாணனால் மாயையைக் கையாண்டு ஸர்பங்களால் கட்டுப் போடப்பட்

தாங்கள் கீர்த்தியின் பொருட்டும் வெற்றியின் பொருட்டும் சீக்கிரமாகப் புறப்படவும். அப்பா! ஜயத்தை விரும்புவருக்குத் தன் ப்ராண ரக்ஷணத்துக்கு இது ஸமயமில்லை. வீரன் அநிருத்தன் சிறிது ப்ராணனை வைத்துக் கொண்டு தைர்யத்தைக் கைப்பிடித்து நிற்கிறான். வைசம்பாயனர் சொன்னார்: இவ்விதம் வார்த்தை சொன்னவுடன், கீர்த்தி வாய்ந்த வீர்யவான் வாஸுதேவன் ப்ராயணம் செய்பவர்களை ஸாதனங்களைச் சேகரிக்கும்படி கட்டளையிட்டான். பிறகு நாற்புறமும் சந்தன சூர்ணங்களாலும் பொரிகளாலும் தூவப்பட்ட மஹாபாஹு ஜனார்த்தனன் க்ருஷ்ணன் புறப்பட்டான். நாரதர் சொன்னார்: மாதவ! வைநதேயன் கருடனை நினைக்கக் கடவாய். மஹாபுஜனே! வேறேருவரால் அந்த வழியில் செல்ல முடியாது. செல்ல வேண்டிய ஜனார்த்தனு செவிகொடு. அந்த வழி வெல்ல முடியாத மிகக் கஷ்டமானது. பதினோராயிரம் யோஜனை தூரமுள்ளது. சோணிதபுரமெனப் பெயர் அநிருத்தன் இப்போது அங்கு இருக்கிறான். கீர்த்தி வாய்ந்த மஹா வீர்யவான் வைனதேயன். மனோ வேகங் கொண்டவன். கோவிந்த! அவனை அழை. அவன்தான் உன்னை அங்கு அழைத்துச் செல்வான். ஒரே முஹூர்த்த காலத்தில் பாணனை நீ காணச் செய்வான். வைசம்பாயனர் சொன்னார், நாரதரின் அந்த வார்த்தையைக் கேட்டு (வாஸுதேவன்) கருடனை நினைத்தான். அந்தக் கருடன் க்ருஷ்ணன் பக்கல் வந்து கைகூப்பி நின்றான்.

பிறகு, மஹா பலன் வைனதேயன் மஹாத்மா வாஸுதேவனை வணங்கி ம்ருதுவாக இனிமையான வார்த்தைகள் சொன்னான்: மஹா தேவா! பத்மநாப! நான் எதற்காக நினைக்கப்பட்டேன்? உமக்கு என்ன கார்யம் செய்ய வேண்டியுள்ளது. உள்ளபடி கேட்க விரும்புகிறேன். ப்ரபோ கோவிந்தா! எவன் நகரை இறக்கைகளால் நாசம் செய்ய வேண்டும். உமது ப்ரபாவத்தால் என் பலத்தை எவன் அறியமாட்டான்? வீரா! மஹாபுஜா! உமது கதாயுத வேகத்தையும் சக்ராயுதத்தின் அக்னியையும் மூடாத்மாவான எவன் அறியமாட்டான்? அவன் கர்வத்தால் நாசமடைவான். துளஸி மாலையணிந்த பலராமன் ஸிம்ஹ முகத்தையுடைய கலப்பையை எவனிடம் செலுத்துவான்? எவனுடைய தேஹம் பிளக்கப்பட்டுப் பூமியை அடையும்? மாதவா! சங்கத்வனிகளால் எவன் உயிரை மயக்கமடையச் செய்வாய்? இன்று பரிவாரத்துடன் யமலோகம் செல்பவன் எவன்? புத்திமான் கருடனால் இவ்விதம் வ்ார்த்தை சொல்லப்பட்டதும் வாஸுதேவன் (பதில் வார்த்தை) சொன்னான்: சொல்வோரில் சிறந்தவனே! நீ கேட்பாயாக! பலிபுத்ரன் பாணனால் ஜயிக்க முடியாத அநிருத்தன், சோணித

நகரில் உஷை காரணமாகக் கட்டுப்பட்டுள்ளான். காமத்தால் பீடிக்கப்பட்ட அநிருத்தன் கொடிய விஷமுள்ள நாகங்களால் (கட்டுப்பட்டுள்ளான்). கச்யபபுத்ரா! பக்ஷிராஜனே! அவனை (அநிருத்தனை) விடுவிக்க நீ என்னால் கூப்பிடப்பட்டாய். உன் வேக ஸமானன் ஒருவருமில்லை. பக்ஷிகளில் சிறந்தவன் நீ. மற்றவனால் அந்த வழி செல்ல முடியாது. அநிருத்தனிருக்குமிடம் என்னை அழைத்துப் போ! வீரா! உனது மருமகள் (ப்ரத்யும்னன் மனைவி) புத்ர வாத்ஸல்யத்தால் அழுது கொண்டிருக்கிறாள். உன் அனுக்ரஹத்தால் இவள் புத்ரனுடன் கூடியவளாவாள். நாகத்தை உணவாகக் கொண்டவனே! உன்னால் முன்னர் அம்ருதம் அபஹரிக்கப்பட்டது. அப்போது என்னுடன் சேர்ந்து எனது கொடியாகவும் ஆனாய். பக்ஷிராஜனே! எல்லா வ்ருஷ்ணிகளும் உன் பக்தர்கள். தோழமையையும் பக்தியையும் கௌரவப்படுத்து. ஸுபர்ணா! நாகநாசனே! உன் போன்ற வேகமுடையவர் எவருமில்லை. உன் போன்ற பக்ஷிகளுமில்லை. இதைச் சபதம் செய்து கூறுகிறேன். முன்னர் (கர்த்ருவுக்கு) அடிமையான உன் தாய் விநதை, உன் ஒருவனாலேயே (ஸஹாயமில்லாமல்) விடுவிக்கப்பட்டாள். முன்னர் உனது இறக்கைகளின் வீச்சுக்களால் மாத்திரமே போர் வீரர்கள், உன்னால் கொல்லப்பட்டனர். நீ தேவ கணங்களாகிய யாதவர் எல்லோரையும் என்னுடன் கூட முதுகில் ஏற்றிக் கொண்டு புக முடியாத தேசத்துக்குப் போ. உனது உதவியால் ஜயமும் கிடைக்கும். கனத்தில் நீ மேரு போன்றவன். இலேசாயிருப்பதில் காற்று போன்றவன். பராக்ரமத்தில் உனக்கு ஸமானன் முக்காலத்திலும் இல்லை. வைநதேயனே! மஹா பாக்யசாலியே! மஹாதேஜஸ்வி! வைநதேயா! இப்போது அநிருத்தனைக் காண உதவி செய்யவேண்டும்.

கருடன் சொன்னான்: மஹாபுஜா ஜனார்த்தனா! உனது இந்த வார்த்தை மிக ஆச்சர்யமாயிருக்கிறது. உனது அனுக்ரஹத்தாலேயே வெற்றி எங்கும். மஹா புஜா! மதுஸூதனா! ஸ்துதியால் தர்மஜ்ஞர்களை அனுக்ரஹிக்கப் பார்க்கிறாய். க்ருஷ்ணா! நீ என்னால் ஸ்துதிக்கப்பட வேண்டியவன். நீ என்னை ஸ்துதிக்கிறாய். நீ வேதத் தலைவன். தேவர் தலைவன். எல்லா விருப்பங்களையும் கொடுப்பவன். வீணாகா தர்சனம் உடையவன். வரம் கேட்பவருக்கு வரத்தைக் கொடுப்பவனல்லவா! சதுர்புஜன் நான்கு மூர்த்திகளாயிருப்பவன். யக்ஞமூர்த்தி. நான்கு ஆஸ்ரமங்களுக்கு அதிகாரி. நான்கு புருஷார்த்தங்களை நடத்துபவன். மஹாஞானி. ப்ரபோ! நீ தனுர்தரன், சங்கதரன், பெரியவன். முன் அவதாரங்களில் பூமியைத் தரித்தவனாய் புகழ் பெற்றவன். கலப்பை, உலக்கை, சக்ரம் இவைகளை ஆயுதமாக

உடையவன், தேவகியின் மைந்தன். சாணூரனைக் கொன்றவன். கோப்ரியன், கம்ஸனைக் கொன்றவன். கோவர்த்தனத்தைக் தரித்தவன். மல்லருக்குச் சத்ரு, மல்லரைப் போஷிப்பவன், மல்லருக்கு ப்ரியன். மஹா மல்லன், மஹா புருஷனும் கூட விப்ர ப்ரியன், விப்ர ஹிதன். விப்ரரை அறிந்தவன். விப்ரரைப் போஷிப்பவன். வேத புருஷன், ச்ரேஷ்டனும் தாமோதரனென நினைக்கப்படுபவனும். ப்ரலம்பன், கேசி இவர்களைக் கொன்றவன். அஸுரரை அழிப்பவன். அஸிலோமாவைக் கொன்றவன். ராவணனைப் கொன்றவன். விபீஷணனுக்கு ராஜ்யம் கொடுத்தவன். பகவான் வாலி வதம் செய்தவன். ஸுக்ரீவனுக்கு ராஜ்யம் கொடுத்தவன். பலியின் ராஜ்யத்தை அபஹரித்தவன். ஸமுத்ரத்தில் உண்டான ஸ்ரேஷ்டன். வருணனுகப் புகழ் பெற்றவன். நதிகள் உற்பத்தியிடமான மலைகளைத் தரிப்பவன். வில்லாளி வில்வல்லோரில் சிறந்தவன். மிகப் பெரியவன். தாசார்ஹன் (யாதவர் பகுதி) எனப் புகழ் பெற்றவன். பெரிய வில்லாளி. வில்லில் ப்ரியன். கோவிந்தனெனப் புகழ் பெற்றவன். நல்ல வ்ரதமுடையவன்! நீ ஸமுத்ரமும் கூட ஆகாசம், தவம், ஸமுத்ரத்தைக் கடந்தவன். நிறைந்த பலனுடைய ஸ்வர்க்கம். ஸ்வர்க்கத்தில் ஸஞ்சரிக்கும் மிகப் பெரியோன். மேகமும் நீயே! உற்பத்தி காரணமும் நீயே! மூவுலகையும் கலக்குபவனும் நீ! க்ரோதம், லோபம், மனோரதம் நீயே! நீயே இஷ்டத்தைக் கொடுப்பவன். எல்லாவித வில்லும் தரிக்க வல்ல காமனும் நீ. ஸம்ஹார கர்த்தாவும் நீ. ஸ்ருஷ்டி கர்த்தாவும் நீ. மஹாப்ரளயமும் நீ. மஹா ரக்ஷகனும் நீயே! எல்லா ரூபமும் அறிந்த ப்ரஹ்மாவும் நீ. உருவங் கொண்ட மதுஸூதனனும் மஹாதேவனே! எண்ணற்கரிய குணங்களுடைய சிவனும் நீயே! யதுஸ்ரேஷ்டா! தேவா! ஸ்துதிக்கத் தக்க நீ. என்னை ஸ்துதி செய்ய விரும்புகிறாய். உனது பரம ப்ரீதியோடு பார்க்கப்பட்ட ப்ராணிகள் எல்லாம் இம்மையிலும் மறுமையிலும் எல்லாப் ப்ரகாரத்தாலும் ஸபலமானவர்கள். மஹாபாஹோ! இந்த நான் உன் வசப்பட்டு உன் நியமனத்தில் நிற்கிறேன்.

பிறகு வெற்றிப் புறப்பாட்டுக்கு ஆயத்தமாகி கருடன் கேசவனை நோக்கிச் சொன்னான்: வீர! மஹா பலவானே! நான் தயாராக இருக்கிறேன். என் மீது ஏறிக்கொள். பின்பு கருடன் கழுத்தை அணைத்துக் கொண்டு மாதவன், தோழா! சத்ருவின் விநாசத்தின் பொருட்டு இந்த அர்க்யம் ஏற்றுக் கொள்ளப்படட்டும் என்று சொன்னான். சங்கு, சக்ரம், கதை, வாள் ஏந்திய மஹாபுஜன் புருஷோத்மன் மிக்க ப்ரீதியுடன் அர்க்யம் கொடுத்துக் கருடன் மீதேறினான். கரு நிறக்குர்சி, கையில் வளை, நிறத்தாலும் கறுப்பு

இந்த (ரூபமுடைய) ப்ரத்யும்னன் முதலில் க்ருஷ்ணனின் பக்கல் ஸந்தோஷமாக அமர்ந்தான். நான்கு தோள்கள், நான்கு தாடைகள், உடையவன், நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் அறிந்தவன், ஸ்ரீவத்ஸ அடையாளமுடையவன், தாமரைக் கண்ணன். மேல் நோக்கிய ரோமங்களுடையவன், ம்ருதுவான சருமம் உடையவன். விரல்கள் ஸமமானவை. விரல் நகங்கள் சிவப்பானவை. இனிமையான கம்பீரக் குரல். உருண்டு திரண்ட கைகள். உயர்ந்த தோள்கள். முழந்தாள் வரை நீண்ட கைகள். சிவந்த வாய். ஸிம்ஹத்தின் தெளிவான ப்ராக்ரமம். ஆயிரம் ஸூர்யர்கள் போன்ற ஒளி வீசும் சோபை. இவையுடையவன் விஸ்வாத்மா. ப்ராணிகளை வளர்ப்பவன். கச்யப ப்ரஜாபதியால் அஷ்டைஸ்வர்யங்கள் கொடுக்க பெற்றவன். ப்ரஜாபதிகள், தேவர்கள், ஸாத்யர்கள் இவர்களுள் நிலை பெற்றவன். ஸூதர், மாகதர், வந்தியர், வேத வேதாங்க ஸமர்த்தரான மஹா பாக்யசாலி ரிஷிகள் இவர்களால் திவ்ய ஸ்தோத்ரங்களால் ஸ்துதிக்கப் பெற்றவன்.

இத்தகைய மஹாபலன், புகழ் பெற்ற வாஸுதேவன் த்வாரகையில நல்ல காவல் ஏற்படுத்திப் புறப்பட எண்ணினான். தேவன் க்ருஷ்ணன் கருடன் மேல் அமர்ந்தான். அவன் பின்னால் கலப்பை ஆயுதமாகவுடைய பலராமனும், பலராமன் பின்னால் சத்ருவைக் கண்டிக்கும் ப்ரத்யும்னனும் அமர்ந்தனர். மஹாபாஹோ! போரில் பாணனே வெற்றி கொள். போரில் பாணனை சேர்ந்த பின்பற்றுபவரையம் வெற்றி கொள்வாய். பெரும் போரில் உன் எதிரில் நிற்க ஒருவனும் சக்தியுடையவனில்லை. உன் அனுக்ரஹத்தில் ஐஸ்வர்யம் உறுதி பராக்ரமத்தில் வெற்றியும் உறுதி ஸேனையோடு கூடிய அஸுரராஜன் சத்ரு பாணனைப் போரில் வெற்றி கொள்வாய். நாற்புறமும் ஸித்த சாரணர் கூட்டங்களுடையவும் மஹர்ஷிகளுடையவும் இத்தகைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு கேசவன் போரின் பொருட்டு ஆகாயத்தில் சென்றான்.

121 அத்யாயம் முற்றும்

## அத்யாயம் 122

### கருடன் மேலேறிச் சென்ற யாதவர் மூவருடனும் பாணபுரி அக்னிகளும், மஹரிஷி அங்கீரஸும் போரிடல்- பலராமக்ருஷ்ணர் ஜ்வரதேவதையுடன் கடும் போர் புரிதல்

வைசம்பாயனர் சொன்னார்: பின்பு வாத்ய சப்தங்களாலும் சங்கங்களின் பேரொலிகளாலும் ஆயிரக் கணக்கான வந்தி, மாகத ஸூதர்களின் ஸ்தோத்திர ஒலியாலும் மனிதர்களின் மேல் நோக்கிய வெற்றி ஆசீர்வாதங்களாலும் துதிக்கப்படும் க்ருஷ்ணன், அப்போது

சந்திர சூர்ய, சுக்ரர்களுக் கொப்பான ரூபத்தைத் தரித்தான். ஜனமேஜயா! உனக்கு மங்களம். ஆகாயத்தில் கிளம்பும் கருடனின் ரூபம், ஹரியின் தேஜஸால் பெருகி மிகவும் ப்ரகாஸித்தது. பின்பு தாமரைக் கண்ணன் க்ருஷ்ணன் எட்டு கைகள் கொண்டு, பாணனின் அழிவை மிக விரும்பி, பர்வதம் போன்ற (பெரிய) உருவம் கொண்டு ப்ரகாசித்தான். வாள், சக்ரம், கதை, அம்புகள் (க்ருஷ்ணனது) வலப்பக்கத்தை யடைந்தன. கேடயம், சார்ங்கம் எனும் வில், வஜ்ரம், சங்கம் இவை இடது பக்கத்தை யடைந்தன. அப்போது க்ருஷ்ணனால் ஆயிரம் தலைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. பலராமன் ஆயிரம் சிரங்கள் வஹித்துக் கொண்டு வெண்ணிற ஆயுதங்கள் ஏந்தி அணுக முடியாதவனாய் சிகரங்கள் கூடிய கைலாசம் போல் காணப்பட்டான்.

பின்பு உதய சூர்யன் போல் கருடன் மீது க்ருஷ்ணன் புறப்பட்டான். போரில் வீரத்தைப் காட்டப் புகும் மஹாபாஹு ப்ரத்யும்னனுக்கு ஸனத்குமாரனின் தேஹம் உண்டாயிற்று. அந்தப் பலவான் கருடன், இறக்கைகளின் பலமான வீச்சுகளால் பல பர்வதங்களை அசைத்துக் கொண்டு காற்று வழியைத் தடுத்து சென்றான். பிறகு கருடன் வாயுவைக் காட்டிலும் அதிக வேகத்தை யடைந்து ஸித்த சாரணர்களின் மங்களமான வழியைத் தாண்டினான். பின்பு பலராமன் போரில் நிகரற்ற க்ருஷ்ணனைக் குறித்து வார்த்தை சொன்னான், க்ருஷ்ணா! இதற்கு முன் இல்லாதது போல் நம் சொந்த சோபை நீங்கியவர்களாயிருக்கிறோம். என்ன காரணம்? எல்லோரும் தங்கள் நிறமுடையவர்களாகி விட்டோம். ஸந்தேகமில்லை. இது என்ன வென்று உண்மையைச் சொல். நாம் மேருமலைப் பக்கம் அடைந்து விட்டோமா?

பகவான் க்ருஷ்ணன் சொன்னான்: சத்ருவை வெல்பவனே! நாம் பாணனின் நகரின் ஸமீபம் அடைந்து விடடோமென நினைக்கிறேன். அந்த நகரின் காவலுக்காக வெளிக் கிளம்பிய அக்னி ப்ராகாசித்துக் கொண்டிருக்கிறது. பலராமா! ஆஹவனீய அக்னியின் சோபையால் தாக்கப் பட்டவர்களாயிருக்கிறோம். அதனால் நமக்கு இந்த நிற மாறுதல் ஏற்பட்டது. பலராமன் சொன்னான், நகரை நெருங்கி விட்டோமானால் இப்போது மேல் செய்ய வேண்டிய கார்யத்தை ஸ்வயமாக யோசித்துச் செய். பகவான் க்ருஷ்ணன் சொன்னான், கருடா! இனி நீ செய்ய வேண்டிய கார்யத்தை நீ செய். உன்னால் கார்யம் செய்யப்பட்டதும் நான் மேலானதைச் செய்வேன்.

வைசம்பாயனர் சொன்னார்: வாஸுதேவனின் இந்த வார்த்தையைக் கேட்டு மஹா பலவான் இஷ்ட ரூபங் கொள்ள வல்ல கருடன் ஆயிரம் முகங்களை எடுத்து கொண்டான். மஹா பலவான் கருடன் கங்கையை அடைந்தான். ஆகாச கங்கையில் நீராடி நிறைந்த ஜலத்தைக் குடித்து கீர்த்தி வாய்ந்த கருடன் மேல் கிளம்பிச் சென்று மழை பொழிந்தான். புத்திமான் வினதை புத்ரன், கருடன் அந்த அக்னியை அணைத்தான்.

பிறகு ஆஹவநீய அக்னி அணைந்தது. ஆகாச கங்கையால், அந்த ஆஹவநீய அக்னி அணைத்ததைப் பார்த்து மிக ஆச்சர்யமடைந்து கருடன் வார்த்தை சொன்னான்: யுக அழிவில் எரிக்கும் அக்னியின் பலம் ஆச்சர்யம் இங்குப் புத்திமான் க்ருஷ்ணனுக்கு நிறமாற்றம் செய்தான். க்ருஷ்ணன், பலராமன், மஹாபலவான் ப்ரத்யும்னன் ஆகிய மூவரும் மூன்று லோகங்களுக்குப் போதுமானவர்கள் என்று எனது தீர்மானம். அக்னி அடங்கிய பிறகு அந்தப் பக்ஷிராஜன் தன் இறக்கைகளை அடித்துக் கொண்டு பெரிய பயங்கர சப்தத்துடன் புறப்பட்டான்.

ருத்ரனுடன் ஸஞ்சரிக்கும் அக்னிகள் அந்த ஆச்சர்யத்தை அங்கே பார்த்து பாபத்தைக் கொடுக்கும் பல்வேறு ரூபங்களுடைய இவர்கள்,கருடன் மேல் ஏறி எதற்காக இங்கு வந்துள்ளார்கள்? இந்த மூவர் எவர்கள்? என்று பாணபுரியிலிருக்கும் அந்த அக்னிகள் நிச்சயம் செய்ய முடியவில்லை. அந்த மூன்று யாதவர்களுடன் போர் செய்யவும் (அக்னிகள்) ஆரம்பித்தன. அந்தப் போர் செய்ய ஆரம்பித்த அவர்களுடைய சப்தம் மிகப் பெரியதாயிற்று. கர்ஜிக்கும் ஸமுத்ரத்தைப் போன்ற அதைக் கேட்டு புத்திமான் அங்கிரஸ் தன்னைச் சேர்ந்த ருஷிகளை அனுப்பினார். அந்த போர் நடக்கும் இடத்திற்கு போவதில் தாமதம் வேண்டாம். அந்த எல்லையற்றதைப் பார்த்துச் சீக்கிரமாகத் திரும்பி வா' என்று சொல்லியனுப்பினார். அப்படியே என்று சொல்லி பெரும் போரில் வாஸுதேவனுடன் எதிர்த்துப் போரில் கலக்கும் அந்த அக்னிகளின் அந்தப் போர் நடப்பதைப் பார்த்தான். அந்த எல்லா அக்னிகளும், கல்மாஷன், குஹனன், தபனன், மஹாபலன், ஸ்வானன், ஸ்வாஹாகாரத்தில் பிரசித்தி பெற்ற இந்த ஐந்து அக்னிகள் இன்னும் மற்ற பலம் வாய்ந்த தங்கள் வேலைகளுடன் [illegible] துணையாயினர். பிதரன், பதகன், ஸ்வர்ணகன், ஸ்வாகதன், ப்ராஜன் [illegible] ஸ்வாஹாகாரத்துக்கு ஆஸ்ரயமாயுள்ள அந்த ஐந்து அக்னிகளும் போர் செய்தனர். ஜ்யோதிஷ்டோமம், விபாகம் [illegible] வஷட்காரத்தை ஆஸ்ரயித்த மஹாத்மா, மஹாதேஜஸ் [illegible] இரு அக்னிகளும் போரிட்டனர்.

அவர்கள் இருவர் நடுவில் மஹரிஷி அங்கிரஸ்ஸும் அகனி ரதத்தில் ஏறி ஒளி வீசும் அம்பை ஏந்தி போரில் ப்ரகாசித்தார். கூரிய அம்புகளை விடுத்து இருக்கும் அங்கிரஸைப் பார்த்து க்ருஷ்ணன், அடிக்கடி சிரித்து கொண்டு மிக்க கோபத்துடன் சொன்னான்: எல்லா அக்னிகளும் நில்லுங்கள். இந்த நான் உங்களுக்குப் பயத்தை உற்பத்தி செய்வேன். என் அஸ்த்ர தேஜஸால் கொளுத்தப்பட்டு ஓடித் திசைகளை அடையுங்கள். பிறகு அங்கிரஸ் ஜ்வலிக்கும் த்ரிசூலத்துடன் பெரும் போரில் க்ருஷ்ணன் ப்ராணனை இழுக்கிறவர் போல் கோபங்கொண்டு ஓடினார். அவருடைய ஜ்வலிக்கும் த்ரிசூலத்தைக் கூரிய அர்த்த சந்த்ர வடிவுடைய சிறந்த பாணங்களால் யமன் அந்தகர்கள் போன்று க்ருஷ்ணன் வெட்டித் தள்ளினான். பிறகு மஹாத்மா க்ருஷ்ணன் அந்தகனை யொத்த ஜ்வலிக்கும் ஸ்தூணகர்ண பாணத்தால் அங்கிரஸின் மார்பில் அடித்தான். அங்கிரஸ் ரத்த வெள்ளம் பெருகும் உடலுடன் கதறிக் கொண்டு உடல் நடுங்குகிறவராய் திடீரெனப் பூமியில் விழுந்தார். பின்பு ப்ரஹ்ம புத்ரர்களான எஞ்சிய நான்கு அக்னிகளும் எல்லாமும் பாணனின் புறநகரின் அருகில் நின்றன.

பிறகு க்ருஷ்ணன் பாணபுரம் இருக்குமிடம் சேர்ந்தான். பாணபுரத்தைப் பார்த்த போது நாரதர் சொன்னார்: மஹாபாஹோ க்ருஷ்ணா! பார். இதுதான் சோணிதபுரம். பார் இங்கு மஹாதேஜஸ்வீ ருத்ரன், ருத்ராணி, யமன், வஸித்தான். முருகனும் பாணனைக் காப்பதற்காகவும் க்ஷேமத்திற்காகவும், இங்கு வஸித்தான். நாரதர் வார்த்தையைக் கேட்டு க்ருஷ்ணன் மிகச் சிரித்துக் கொண்டு சொன்னான், மஹாமுனியே! ஒரு க்ஷணம் சிந்திக்கப்படட்டும். கேட்கவும்படட்டும். ருத்ரன் பாணனைக் காப்பதற்காக இங்கு வந்தால் நாமும் இங்கு அவனுடன் சக்திக்கு ஏற்பப் போர் புரிவோம். க்ருஷ்ணனும் நாரதரும் பேசிக் கொண்டிருக்கும் போதே வேகமாகச் செல்லும் அவர்கள் ஒரு நிமிஷத்திற்குள் கருடன் மூலம் அந்நகரம் வந்தடைந்தனர். பிறகு கமலக்கண்ணன் சங்கத்தை வாயில் சேர்த்து வாயு வேகத்திலுண்டான மேகம் சந்த்ரனை வெளிப்படுத்துவது போல் இருந்தான். பின்பு அந்தச் சங்கை ஊதி வீர்யவான் க்ருஷ்ணன் பயத்தை உண்டு பண்ணி அற்புத கார்யம் செய்யும் பாணனின் நகரத்தில் புகுந்தான். பிறகு சங்கின் பேரொலியுடனும் பேரிகளின் முழக்குடனும் பாணன் ஸேனைகள் சீக்கிரம் தயாராயின. பின்பு கிங்கர ஸேனை ஏவப்பபட்டது. பயத்தால் ஜ்வலிக்கும் ஆயுதங்களுடைய ஸேனைகள் அதிகமாகக் கோடிக்கணக்கில் ஏவப்பட்டன. பெரும் மேகக்கூட்டங்கள் போல் நீருண்ட மேகம்

போன்ற அளக்கமுடியாத எண்ணமுடியாத குறைவற்ற அந்த ஸேனை ஓரிடம் கூடினது. ஒளி வீசும் ஆயுதங்களுடைய எல்லா தைத்ய, தாநவ, ராக்ஷஸர்களும், ப்ரமத கணமுக்யர்களும் அழிவற்ற க்ருஷ்ணனுடன் போரிட்டனர். ஜ்வாலை வீசும் அஸ்த்ரங்களை யுடைய ஒளிவீசும் அக்னி போலிருக்கும் மிகக் கொடிய யக்ஷ, ராக்ஷஸ கின்னரர்கள், நெருங்கி வந்த போது போரில் கருட, க்ருஷ்ண, பலராம, ப்ரத்யும்னன் நான்கு பேர்களுடையவும் ரத்தம் குடிக்கப்படுகிறது.

சத்ரு பலம் அழிக்கும் மஹாபலன் பலபத்ரன் எதிரியின் ஸேனையை அடைந்து அங்கு வார்த்தை சொன்னான், க்ருஷ்ண! க்ருஷ்ண! மஹாபாஹோ! இவர்களுக்குப் பெரும் பீதியை யுண்டு பண்ணு என்று புத்திமான் பலராமனால் நன்கு தூண்டப்பட்டான். யம அந்தகர் காந்தியுடைய அஸ்த்ரமறிந்தோரில் சிறந்த புருஷோத்தமன் க்ருஷ்ணன் அந்த சத்ருக்களின் வதம் பொருட்டு ஆக்னேய அஸ்த்ரத்தை யெடுத்தான். அஸ்த்ரத்தின் ஜ்வாலையால் மாம்ஸ பக்ஷிணிகளான அஸுரக் கூட்டங்களை சிதறவடித்துக் கொண்டு அந்த ஸேனை காணப்படும் இடத்துக் வேகமாகச் சென்றான். சூலம், பட்டிசம், சக்தி, ரிஷ்டி, பினாகம், பரிகம் இந்த ஆயுதங்களுடைய ப்ரமத கணங்களை மிகவுடைய அந்த ஸேனை பூமியில் இருந்தது. மலை, மேகம் போன்ற பலரூப பயங்கர வாஹனங்களுடன் எல்லா வீரர்களும் கூட்டங் கூட்டமாக அங்கிருந்தனர். உறுதி வில்லுடைய நிறைந்த ஸைன்யங்களால் காற்றுல் உண்டாகிய மேகங்கள் போலவும் அந்த இடம் ப்ரகாசித்தது முசலங்கள், வாள்சள், சூலங்கள், கதைகள், பரிகங்கள் இவைகளால் வெல்ல முடியாத அந்த ஸேனை எல்லா பக்கங்களிலும் ப்ரகாசித்தது பிறகு பலராமன மதுஸூதன தேவனைக் குறித்துச் சொன்னான் க்ருஷ்ண! க்ருஷ்ண! புருஷோத்தமா மஹாபாஹோ! இங்கே காணப்படும் இந்த ஸேனைகளுடன் போர்களத்தில் போரிட விரும்புகிறேன். க்ருஷ்ணன் சொன்னான், எனக்கும் இதே எண்ணம் உண்டாயிற்று என்று பலராமனை குறித்துச் சொன்னான். இந்த சிறந்த வீரர்களுடன் போரில் எதிர்க்க விரும்புகிறேன். கிழக்கு முகமாகப் போர் செய்யும் என் எதிரில் கருடன் இருக்கட்டும் இடது பக்கத்தில் ப்ரத்யும்னன் இருக்கட்டும். அப்படியே எனக்கு வலது பக்கத்தில் நீ (பலராமன்) இருப்பாய். இந்தக் கொடிய பெரும் போரில் ஒருவருக்கொருவர் ரக்ஷிக்க வேண்டும். இப்படி ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு கருடன் மேல் ஏறினர் அப்போது மலைச்சிகரம் போன்று கொடிய கதை, உலக்கை

கலப்பைகளால் போரிடும் பலராமனுக்கு, யுகமுடிவில் எல்லா ப்ராணிகளையும் அழிக்கும் காலனது ரூபம் போல் கொடிய ரூபம் உண்டாயிற்று. போர்வழி வல்ல, மிக்க பலவான் பலராமன் (போர்க்களத்தில்) ஸஞ்சரித்தான். கலப்பை முனையால் இழுத்து உலக்கையால் அழித்தான். புருஷ ஸ்ரேஷ்டன் மஹாபலவான் ப்ரத்யும்னன் போர் புரியும் அவ்வஸுரர்களை நாற்புறமும் அம்புக் கூட்டங்களால் தடுத்தான். நெய் கலந்த மைத்திரள் போன்ற நிறங்கொண்ட ஜனார்த்தனன் சங்க சக்ரம் கதை ஏந்தி பலமுறை சங்கை முழக்கிப் போர் புரிந்தான்.

புத்திமான் கருடனால் இறக்கை அடியால் கொல்லப்பட்டவர்களும், நகம், மூக்கு முனைகளால் பிளக்கப்பட்டவர்களுமாக யமபுரத்துக்கு அனுப்பப்பட்டனர். அவர்களால் பாணங்கள் பொழிந்து தாக்கி கொல்லப்பட்ட பயங்கர வீரமுடைய அஸுர ஸேனை பங்கமடைந்தது. ஸேனைகள் பிளக்கப்பட்டதும், மூன்று பாதம், மூன்று தலைகள், ஆறு புஜங்கள் ஒன்பது கண்கள், சாம்பல் ஆயுதம் இடிபோன்ற சப்தம் இவையுடைய காலாந்தக யமனுக் கொப்பான கொடிய ஜ்வர தேவதை ஆயிரக்கணக்கான மேகங்கள் போல் கர்ஜித்துக் கொண்டு (அஸுரரை) ரக்ஷிக்க விரும்பி வந்தது. பெருமூச்சும், கொட்டாவியும் விட்டுக் கொண்டு மிக்க உறக்கங் கொண்ட உடலுடையதாய், கண்களால் முகத்தைக் கலங்கச் செய்து அடிக்கடி சுற்றித் திரிந்து மயிர் கூச்செறிந்து வாடின கண்ணுடன் மனமுடைந்தது போல் மூச்சு விட்டு மிக்க கோபங் கொண்டு பலராமனைக் குறித்து ஆக்ஷேபித்து இந்த வார்த்தை கூறிற்று. ஏன் இப்படி வலிமை கர்வங் கொண்டிருக்கிறாய்? போரில் என்னைப் பார்க்கிறாயில்லை. நில், நில். போர்க்களத்தில் உயிருடன் என்னால் (நீ) விடப்படமாட்டாய். இப்படிச் சொல்லிப் பெருஞ்சிரிப்புடன் ப்ரள யாக்னி போன்ற கொடிய முஷ்டிகளால் பயமுறுத்திக் கொண்டு பலராமனைத் துன்புறுத்தியது. அந்தப் போரில் ஆயிரக்கணக்கில் வேகமாகச் சுற்றிச் சுற்றித் திரியும் பலராமன் இருப்பது தெரியவில்லை. அப்போது ஒப்பற்ற சக்தி வாய்ந்த ஜ்வரத்தால் வீசப்பட்ட பஸ்மம், அவனது மலை போன்ற சரீரத்தில் மார்பின் மேல் வேகமாக விழுந்தது. அந்த பஸ்மம் பலராமன் மார்பிலிருந்து மேரு சிகரத்தை யடைந்தது. அங்கு ஜ்வலித்துக் கொண்டு விழுந்தது. மலைச் சிகரத்தைப் பிளந்தது. மீதி பஸ்மத்தினால் பலராமன் மிக ஜ்வலித்தான். பெருமூச்சு விட்டு கொட்டாவியும் விட்டான். மிக்க தூக்கங் கொண்ட உடலுடையவனும் ஆனான். அப்படியே அடிக்கடி கண் கலங்கினவனாய் மயிர்கூச்செறிந்து கண் மயங்கி மனமுடைந்தவன் போல்

பெருமூச்சு விட்டான். பிறகு கலப்பை தரிக்கும் பலராமன் பங்கமடைந்து செயலற்று க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னான், க்ருஷ்ணா! க்ருஷ்ணா! மஹாபாஹோ தஹிக்கப்பட்டிருக்கிறேன். அபயம் கொடு. அப்பா! உடல் முழுதும் எரிக்கப்படுகிறேன். எனக்கு எப்படிச் சாந்தியுண்டாகும்? அளவற்ற வீர்யமுடைய பலராமனால் இப்படிச் சொல்லப்பட்டதும் போரில் சிறந்த க்ருஷ்ணன் சிரித்துக் கொண்டு சொன்னான். பயம் வேண்டாம்! என்று சொல்லி மிக்க அன்புடன் க்ருஷ்ணணால் ஆலிங்கனம் செய்து கொள்ளப்பட்டான். பிறகு தாபத்திலிருந்தது விடுபட்டான்.

அங்கு மதுஸூதனன் பலராமனை அந்தத் தாபத்திலிருந்து விடுவித்து, மிக்க கோபங்கொண்டு வாஸுதேவன் அப்போது ஜ்வரத்தைப் பார்த்துச் சொன்னான்: ஜ்வரமே! வா! வா! போர் புரி, பெரும் போரில் உன் சக்தி, உன் வீர்யம் எல்லாவற்றையும் நீ என்னிடம் காட்டு. இப்படிச் சொல்லப்பட்ட ஜ்வரம் அப்போது ஜ்வாலையை உள்ளே வஹிக்கும் பெரும் பலமுடையதாகி நிரம்ப பஸ்மத்தை க்ருஷ்ணனைக் குறித்து வலப்பக்க கைகளால் வீசிற்று. பிறகு தண்டிப் போரில் சிறந்த ப்ரபுக் கிருஷ்ணன் ஜ்வலிக்கும் உடலுடையனாய் ஒரு முஹூர்த்தம் இருந்தான். பிறகு ஜ்வராக்னி அணைந்தது. பின்பு ஜ்வரதேவதை ஸர்ப்ப வடிவ கொண்ட மூன்று கைகளால் க்ருஷ்ணனைக் கழுத்தில் அடித்தது. ஒரு முஷ்டியால் மார்பில் அடித்தது. அப்போது ஜ்வரதேவதை, மிக்க வீர்யமுடைய க்ருஷ்ணன் ஆகிய இரண்டு ச்ரேஷ்டர்களும் பயங்கரப் போர் மூண்டது. இப்படி அடிக்காதே! இப்படி கூடாது என்று பேரொலி அங்கு உண்டாயிற்று. மஹாத்மாக்கள் இருவருள் ஒருவருக் கொருவர் ஒரு முஹூர்த்த காலம் போர் நடந்தது. பிறகு மனித சரீரங்கொண்ட ஜகத்பதி க்ருஷ்ணன் போர்களத்தில் பெரிய போரில் விசித்ரமான ஸ்வர்ண பூஷணமுடைய ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஜ்வரதேவதையை ஜகத்தின் அழிவு ஏற்படுத்துபவனாய் இரண்டு கைகளாலும் துன்புறுத்தினான்.

122 அத்யாயம் முற்றும்.

## அத்யாயம் 123

### ஜ்வரதேவதை க்ருஷ்ணனால் ஒடுக்கிப் பின்விடுவிக்கப்பட்ட அது சரணடைந்து வரம் கேட்டல் - க்ருஷ்ணன் கட்டளைப்படி செய்ய ஒருப்படுதல்.

வைசம்பாயனர் சொன்னார் :சத்ருவை அழிக்கும் க்ருஷ்ணன் ஜ்வரம் மரித்தது என்று எண்ணி இரு புஜங்களின் பலத்தால்

ஜ்வர தேவதையைப் பூமியில் அடித்து தள்ளினான். விடுபட்டவுடனே அந்த ஜ்வரதேவதை க்ருஷ்ணன் கைகளால் க்ருஷ்ணன் தேஹத்தில் புகுந்தது. ஒப்பற்ற வீர்யமுடைய க்ருஷ்ணனின் உடலை விடாமல் இழுத்தது. ஒப்பற்ற வீர்யமுடைய அந்த ஜ்வரத்தால் ஆவேசிக்கப்பட்ட அந்த க்ருஷ்ணன் அடிக்கடி தள்ளாடி விழுந்தான். அடிக்கடி கொட்டாவி விடுகிறான். பெரு மூச்சு விடுகிறான். துள்ளிக் குதிக்கிறான், மயிர் கூச்செறிந்து துக்கத்தாலும் ஆவேசிக்கப்பட்டான். பிறகு மஹாயோகி சத்ரு நகரை ஜயிக்கும் க்ருஷ்ணனே தைர்யத்தைக் கைக்கொண்டு அடிக்கடி கொட்டாவி விட்டு விகாரமடைகிறான்.

அந்தப் புருஷோத்தமன் தன்னை ஜ்வரத்தால் பீடிக்கப்பட்டவனாய் அறிந்து முன் ஜ்வரத்தை அழிக்கக் கூடிய வேறொரு ஜ்வரத்தைப் படைத்தான். அந்தத் தேஜஸ்வீ க்ருஷ்ணின் எல்லாப் பிராணி பயங்கரமும், பயங்கர வீர்யமுமுடைய மிகக் கொடிய க்ரூரமான வைஷ்ணவ ஜ்வரத்தைப் படைத்தான். க்ருஷ்ணனால் படைத்து விடப்பட்ட ஜ்வரமோ அந்த முன் ஜ்வர தேவதையைப் பலாத்காரமாகப் பிடித்து, ஸந்தோஷமடைந்து க்ருஷ்ணனிடம் கொடுத்தது. பிறகு ஹரி க்ருஷ்ணன் அதைப் பிடித்தான். பிறகு மஹாபலன் வீர்ய வாஸுதேவன் மிகக் கோபங்கொண்டு தன் சரீரத்திலிருந்து தான் படைத்த தன் ஜ்வரத்தாலேயே முன் ஜ்வர தேவதையை வெளி தள்ளினன். பூமியில் அடித்து இந்த ஜ்வர தேவதையை நூறு துண்டுகளாகச் செய்ய முயன்றன்.

அங்கு என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று பழைய ஜ்வாதேவதை கூச்சலிட்டது. அளவற்ற தேஜஸ்வீ க்ருஷ்ணனால் அந்தத் ஜ்வரதேவதை அடிக்கப்படும் போது ஆகாயத்திலிருந்து அசரீரி வாக்குண்டாயிற்று. க்ருஷ்ணா! க்ருஷ்ணா! மஹாபாஹோ யாதவர்களுக்கு ஆநந்தமளிப்பவனே! இந்த ஜ்வர தேவதையைக் கொல்ல வேண்டாம். பாபமற்றவனே! உன்னால் இது ரக்ஷிக்கத்தக்கது. இப்படி வார்த்தை சொல்லப்பட்டதும், முக்கால உலகுக்கும் சிறந்த குருவான ஹரி, க்ருஷ்ணன், அந்த ஜ்வர தேவதையைத்தானே விடுவித்தான். இவ்விதம் விடப்பட்ட ஜ்வர தேவதை க்ருஷ்ணன் பாதங்களில் தலை வணங்கிச் சரணடைந்தது. பிறகு வார்த்தை சொல்லிற்று. யது நந்தந மஹாபாஹோ! கோவிந்தா! எனது விண்ணப்பத்தைக் கேள். தேவா! என் மனோரதத்தைச் செய்வாய். ஐயா! தேவர்தலைவனே! உலகில் நான் ஒன்றே ஜ்வரதேவதை. வேறொரு ஜ்வரம் இருக்கக்கூடாது. உனது அனுக்ரஹத்தால் இந்த வரத்தை நான் இச்சிக்கிறேன்.

தேவன் க்ருஷ்ணன் சொன்னான் : ஜ்வரதேவதையே! நீ எப்படி விரும்புகிறாயோ, அப்படியே ஆகட்டும். உனக்கு மங்களம். வரம் வேண்டுவோருக்கு வரம் கொடுக்கத்தக்கது. நீயோ சரணம் மடைந்தாய். முன் போலவே ஜ்வரதேவதை நீ ஒன்றே இருக்கட்டும். என்னால் படைக்கப்பட்ட இந்த (வைஷ்ணவ) ஜ்வரம் என்னிடமே மறையட்டும்.

வைசம்பாயனர் சொன்னார்: ஜ்வரத்தைக் குறித்து இவ்விதம் சொல்லப்பட்டதும் பெருங்கீர்த்தி வாய்ந்த சத்ருக்களைத் தண்டிப் போரில் சிறந்த க்ருஷ்ணன் திரும்பவும் சொன்னான்: ஜ்வரமே! உலகில், ஸ்தாவர ஜங்க எல்லாப் பிராணி ஜாதிகளிடத்தும் நீ ஸஞ்சரிக்க வேண்டிய விதிகளைப் பற்றி எனது கட்டளையைக் கேட்பாயாக. எனது ப்ரியத்திற்காக உன்னை மூன்றாகப் பிரித்து கொள். ஒரு பங்கால் நாற்கால் பிராணிகளை அடை. இரண்டாவதால் ஸ்தாவரங்களை அடைவாய். மூன்றாவது பாகத்தால் மனிதர்களை அடைவாய். இந்த மூன்றில் ஒரு பாகத்தில் உனது உடலை மூன்றாகப் பிரித்துப் பக்ஷிகளிடம் இருப்பாய். மூன்றினுள் ஒரு கால் பாகத்தில் ஒன்றுவிட்டொன்று சாதுர்த்திகோ ஜ்வரமாகும். நான் சொல்வதைக் கேள். பலவித பேதங்கள் நன்கு பிரித்துக் கொண்டு மனிதர் நீங்கலாக மற்ற ப்ராணி ஜாதியிடத்தில் வஸி. மரங்களில் புழு ரூபமாக வஸி. அப்படி இலைகள் சுருங்குதல், பழங்களில் [illegible] [illegible]மாக நீ இருப்பாய். ஜலத்தில் நீலிகா ஸ்வரூபமாக இரு. மயில்களுக்கு உச்சிக் கொண்டை பிளந்தில் ரோகமாய் இரு. தாமரைத் தடாகங்களில் பனியாக இரு. புற்களில் உஷர் நிலமாயிரு. மலைகளில் சிகப்புக் கல்லாகவும் இரு. இப்படி என் அனுக்ரஹத்தால் ஆவாய். பசுக்களில் [illegible] நோயாகவும் குறும்பு நோயாகவும் ஆவாய். இவ்விதம் பூமியில் பல ரூபமாக இருப்பாய். பார்வை மாத்ரம் [illegible] ப்ராணிகளைக் கொல்வாய். தேவர்களும் மனுஷ்யர்களும் தவிர வேறெவரும் உன்னை ஸஹிக்கமாட்டார்கள்.

வைசம்பாயனர் சொன்னார் : க்ருஷ்ணனின் வார்த்தைகளைக் கேட்டு ஜ்வரதேவதை மனமகிழ்ந்ததாயிற்று. [illegible] கை கூப்பி வணங்கி சில வார்த்தைகள் சொல்லிற்று: [illegible] [illegible] ஜாதிக்கும் அதிகாரியாக [illegible] [illegible] [illegible]. மறுபடியும் மேலும் உனது வார்த்தைப்படி [illegible] [illegible]. மஹாபுஜா! கோவிந்தா! என்ன செய்ய வேண்டும்? கட்டளையிடு. நான் அஸுரகுலத்தை அழிக்கும் த்ரிபுர ஸம்ஹார சிவனால் படைக்கப்பட்டேன். உம்மால் போர்க்களத்தில் ஜயிக்கப்

பட்டேன். தேவா! நீ எனக்கு ப்ரபு உனக்கு நான் பணியாள். தன்யனுனேன். அனுக்ரஹிக்க வேண்டுகிறேன். உம்மால் என் விருப்பம் செய்யப்பட்டது. சக்ராயுதனே! உமது ப்ரியமென்ன? கட்டளையிடு. நான் செய்கிறேன்.

வைசம்பாயனர் சொன்னார் : ஜ்வர தேவதையின் வார்த்தையைக் கேட்டு, வாஸுதேவன் பதில் வார்த்தை சொன்னான், எனது நிச்சயித்த முடிவான அபிப்ராயத்தைக் கேள். ஸ்ரீ பகவான் க்ருஷ்ணன் சொன்னான். புஜபலம் அஸ்த்ரம் இரண்டையும் உடைய இந்த நாமிருவரின் போர் பராக்ரமத்தை என்னை வணங்கி ஒரே மனதுடையவனாக எவன் படிப்பானோ, அந்த மனிதன் ஜ்வரமே! ஜ்வரம் வராதவனாகவிருப்பான். மற்றும் மூன்று பாதங்களுடையதும் பஸ்மத்தை ஆயுதமாகவுடையதும் மூன்று தலைகளுடையதும், ஒன்பது கண்களுடையதும் ஆகிய இத்தகையதாய் எல்லா விரோதிகளுக்கும் தலைமையாகும். ஜ்வரம், ப்ரீதி அடைந்ததாய் எனக்கு ஸுகம் கொடுக்கட்டும். ஜகத்தின் ஆத்யந்தத்தைத் தங்கள் வசமுடையவர்கள், தத்வ ஞானிகள் மிகவும் பழையவர்கள், ஸூக்ஷ்ம ஸ்வரூபி ப்ரஹத் ஸ்வரூபி ஆயினும் எல்லோரையும் அடக்கியாள் பவர்கள். இத்தகைய அநிருத்த ப்ரத்யும்னன் ஸங்கர்ஷண வாஸுதேவர்கள் எல்லா ஜ்வரங்களையும் அழிக்கட்டும். வைசம்பாயனர் சொன்னார்: மஹாத்மா க்ருஷ்ணனால் நேரில் சொல்லப்பட்ட ஜ்வரமும் யது ச்ரேஷ்டர்களைப் பார்த்து இவ்விதம் சொல்லிற்று. இது உண்மையே ஆகும். க்ருஷ்ணனிடமிருந்து வரம் பெற்று மகிழ்ச்சியடைந்த ஜ்வரதேவதை திரும்பவும் பயத்துடன் க்ருஷ்ணனைத் தலையால் வணங்கி, பிறகு போர்க்களத்திலிருந்து வெளியேறிற்று.

123 அத்யாயம் முற்றும்

## அத்யாயம் 124

### அஸுரர் சேனை புறங்கொடுத்தோடவே, பாணன் அதனைத் தடுத்துப் பேசுதல் - சிவன்-க்ருஷ்ணன் போரிடல் - பாணன் நேரில் போர்க்கு வருதல்

வைசம்பாயனர் சொன்னார்: 'பிறகு அந்த மூவரும் வேகமாக கருடன் மேலேறி, மூன்று அக்னிகள் போல் போர்க்களத்தில் போர் புரிந்தனர். கருடன் மேலிருந்த அவர்கள் சப்தித்துக் கொண்டு போரில் எல்லா ஸேனைகளையும் மிக்க பலத்தோடு பாண மழை பொழிந்து துன்புறுத்தினர். சக்ரம், கலப்பை தாக்குதல்களாலும் பாண மழைகளாலும் துன்புறுத்தப்பட்ட அணுக முடியாத தானவர்களின் பெரும் ஸேனை கோபங்கொண்டது

மேல் கிளம்பிய க்ருஷ்ணனின் பாண அக்னி, வைக்கோலில் தீப்போல் மிகவும் பெருகி காய்ந்த கட்டையால் தூண்டப்பட்டது போல் மிகப் பெரிதாக வளர்ந்தது. அந்தப் போர்க்கள நடுவில் ஆயிரக்கணக்கான தானவர்களைத் தகித்து ஜ்வாலையுடைய ப்ரளயாக்னி போல் ப்ரகாசித்தது. பலவித ஆயுதங்களால் பீடிக்கப்பட்டுச் சிதறடிக்கப்பட்ட அந்த பெரிய ஸேனையை பாணன் அடைந்து தடுத்து வார்த்தை சொன்னான்: 'அஸுர வம்சத்தில் பிறந்த நீங்கள் தாழ்வடைந்து பயத்தால் நடுங்கிப் பெரும் போரிலிருந்து எதற்காக ஓடுகிறீர்கள். கவசம், உடைவாள், கதை, ப்ராசம், பெரியவாள், கேடயம், கோடரி இவைகளை எறிந்து விட்டு ஆகாயத்தையடைந்து நீங்கள் ஏன் ஓடிப் போகிறீர்கள். தன் ஜாதியையும், பெருமையையும், சிவனின் சேர்க்கையையும் கௌரவிக்கிற உங்களால் போகத் தக்கதில்லை. இந்த நான் வந்திருக்கிறேனே! இவ்விதம் சொல்லப்பட்ட வார்த்தையைக் கேட்ட அந்த எல்லா அஸுரரும் பயத்தால் மயங்கி அந்த வார்த்தையைக் கவனிக்காமல் வெளியேறினார்கள். அந்த ஸேனை ப்ரமத கணங்கள் மீதியாக, அப்போது பங்கப்பட்டு மீதியான அந்த ஸேனை திரும்பவும் போர் புரிய மனம் வைத்தது.

பாணனின் தோழனும் மந்த்ரியுமான கும்பாண்டனெனும் வீரன் பங்கப்பட்ட தன் ஸேனையைப் பார்த்து இந்த வார்த்தை சொன்னான். இந்த பாணன் போருக்கு வந்துள்ளான். அப்படியே இந்த முருகனும், சிவனும் இருக்கின்றனர். நீங்கள் புத்தி மயங்கி ஸேனையை விட்டு ஏன் போகிறீர்கள்? இவ்விதம் கும்பாண்டன் வார்த்தையைக் கேட்டு எல்லாத் தானவ ஸ்ரேஷ்டர்களும் பயத்தால் கலங்கி ப்ராணனை விட்டு ஓடுகின்றனர். சக்ராக்னி பயத்தால் நடுங்கி எல்லோரும் பத்து திக்குகளையும் [illegible] கின்றனர் [illegible] தேஜஸ்வி க்ருஷ்ணனால் [illegible] ஸேனை [illegible] [illegible] சிறந்த [illegible] சிவன் [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] ஓடினான். [illegible] தேர் [illegible] சந்த்ரன் போல் சோபித்தது. [illegible] பலவித ரூபங்களுடையனவும் பலவித சப்தங்கள் செய்பவைவுமான ஆயிரக்கணக்கான சிவ கணங்களால் தேர் சோபித்தது. சில ஸிம்ஹ முகமுடையன. சில புலிமுகம். வேறு சில யானை, குதிரை

ஒட்டக முகம். அங்கு போர்களத்தில் க்ருஷ்ணன் சக்ராக்னியால் பீடிக்கப்பட்டு நடுங்கின. சில சர்ப்பத்தை யக்ஞோபவீதமாக யுடையன. மஹாபலமுடைய சில கழுதை ஒட்டகம், யானை முகம் உடையன. குதிரைக் கழுத்துடையன சில, சில வெள்ளாட்டு முகம் சில பூனை முகம், சில செம்மறியாட்டு முகம், வேறு சில மரவுரி தரித்தவை. சில சிகையுடையன. ஜடையுடையன சில. மேல் நோக்கிய சிகையுடையன சில இவையெல்லாம் சங்க துந்துபி ஒலியால் பங்கப்பட்டுக் கீழே விழுந்தன. அழகிய முகமுடைய சில, பலவித புஷ்பங்களால் செய்யப்பட்ட க்ரீடம் உடையன. பல்வேறு ஆயுதங்களுடையன. சில குறுகியவை. விகாரமானவை. ஸிம்ஹம், புலித்தோல் உடுத்தியவை. ரத்தம் நனைந்த பெரிய வாயுடையன. சில கோரைப் பற்களுடையன. (ம்ருக) பலியில் ப்ரியமுடையன வேறு சில. (இவை) பிறகு பெரிய சத்ருக்களை அழிக்கும் ருத்ரனை நாற்புறமும் சுற்றி விளையாடிக் கொண்டு போரை எதிர் பார்த்துத் தயாராயிருக்கின்றன.

எளிதில் எதையும் செய்யவல்ல ருத்ரனின் திவ்ய ரதத்தைப் பார்த்து பிறகு கருடன் மேலேறி க்ருஷ்ணன் போரில் ருத்ரனை நோக்கிச் சென்றான். கருடன் மேல் அமர்ந்து எதிர்த்து வருகிற ஹரி க்ருஷ்ணனைக் கோபங்கொண்ட சிவன் பாணங்களாலும் நூறு நாராச இரும்பு அம்புகளாலும் அடித்தான். எளிதில் போர் செய்ய ஸமர்த்தனான அந்த ஹரனுல் சரங்கள் கொண்டு துன்புறுத்தப்பட்ட க்ருஷ்ணன் கோபத்துடன் சிறந்த பார்ஜன்ய அஸ்த்ரத்தைக் கைக் கொண்டான். பிறகு, விஷ்ணு ருத்ரரால் பீடிக்கபட்ட பூமி நடுங்கினது. அங்கு துன்புறுத்தப்பட்ட யானைகளுடைய மேல் முகம் தூக்கி அழுதன. மக்கள் அங்கு நீர்த் தாரைகளால் நனைக்கப்பட்டுக் கீழே விழுந்தன. சில மலைகள் நாற்புறமும் சிகரங்களை நழுவவிட்டன. திக்குகளும் திசை யிடங்களும் பூமியும், ஆகாயமும், சிவன் க்ருஷ்ணன் மோதலில் ஜ்வாலை விட்டெரிவது போல் தோன்றுகின்றன. பூமியில் நாற்புறமும் இடிகள் விழுகின்றன. பயங்கர தோற்றமுள்ள நரிகளும் அமங்கள ஒலிகளை எழுப்பின. இந்த்ரனும் [illegible] செய்து ரத்த மழை பொழிந்தான். தூமகேதுவும் பாணன் சேனையைத் தனது வால் பாகத்தால் சுற்றிக் கொண்டு நிற்கிறது. காற்று பலமாக வீசுகிறது. நக்ஷத்ரங்கள் கலக்கத்தை யடைகின்றன. ஓஷதிகள் (மருந்து செடிகள்) ஒளியிழந்தன. ஆகாய ஸஞ்சாரிகள் ஸஞ்சரிக்கவில்லே. இச்சமயம் ப்ரஹ்மா, பலதேவகணங்கள் சூழ திரிபுரமெரித்த சிவன் போருக்குக் கிளம்புவதை அறிந்து அங்கு வந்து சேர்ந்தார். கந்தர்வ அப்ஸரஸ் ,வித்யாதரர், ஸித்த சாரணர் கூட்டங்களும் பார்த்துக் கொண்டு

ஆகாயத்தில் இருந்தனர். பிறகு விஷ்ணுவால் ருத்ரனைக் குறித்து வீசப்பட்ட பார்ஜயை அஸ்த்ரம் தேரிலிருக்கும் ருத்ரனை நோக்கி ஜ்வலித்துக் கொண்டு சென்றது. பின்பு நூறாயிரக் கணக்கில் கணுக்கள் வளைந்த அம்புகள் ருத்ரன் தேரிருக்கும் இடத்தைக் குறித்துச் நாற்றிசைகளிலிருந்தும் வந்து விழுந்தன. அஸ்திரமறிந்தோரில் சிறந்த ருத்ரன் மிகக் கொடிய ஆக்னேயாஸ்த்ரத்தை விட்டான். அது அற்புதம் போலிருந்தது.

பின்பு அங்கு கருட க்ருஷ்ண, பலராம ப்ரத்யும்னன் நால்வரும் உலர்ந்த உடலுடையவராய் நாற்புறமும் அம்புகளால் மறைக்கப்பட்டுத் தீயால் கொளுத்தப்பட்டுக் காணப் படவில்லை. இவனது ஆக்னேயாஸ்தரத்தால் ஹதமானர் என நினைத்துப் பிறகு எல்லா அஸுர ஸ்ரேஷ்டர்களும் ஸிம்ஹ கர்ஜனை செய்தனர். அஸ்த்ர மறிந்தோரில் சிறந்த கீர்த்தி வாய்ந்த வாஸுதேவன் போரில் அதை ஸஹித்து வாருண அஸ்த்ரத்தைக் கையாண்டான். வாஸுதேவனால் அதி தேஜஸ்ஸுள்ள வருணாஸ்த்ரம் ஏவப்பட்டதும் வருண தேஜஸால் ஆக்னேயாஸ்த்ரம் அடங்கிற்று. போரில் வாஸுதேவனால் அந்த வருணாஸ்த்ரங் கொண்டு திருமபி யடிக்கப்பட்டதும், ருத்ரன் பைசாசம், ராக்ஷஸம், ரௌத்ரம் அப்படியே ஆங்கிரஸம் ஆகிய இந்த ஊழித்தீப் போன்ற நான்கு அஸ்த்ரங்களை விட்டான். வாஸுதேவன் வாயவ்யம், ஸாவித்ரம், ஸவாஸஸம் அப்படியே மோஹனம் ஆகிய இந்த அஸ்த்ரங்களை ருத்ரன் அஸ்த்ரங்களைத் தடுக்க எய்தான். அந்த மாதவன் தன் நான்கு அஸ்த்ரங்களால் ருத்ரனின் நான்கு அஸ்த்ரங்களைத் தடுத்துப் பின் பிளந்த வாயுடைய யமனைப் போன்ற வைஷ்ணவாஸ்த்ரத்தை விட்டான். வைஷ்ண வாஸ்த்ரம் ஏவப்பட்டதும், எல்லா அஸுரர் ஸ்ரேஷ்டர்களும் பூத யக்ஷகணங்களும், பாணன் ஸேனையும் நாற்புறமும் எல்லாத் திசைகளிலும் பய மோஹத்தால் கலங்கி ஓடினர். ப்ரமத கணங்களால் நிறைந்த ஸேனை புறங்காட்டி ஓடியது. பிறகு மஹா அஸுரனான பாணன் வேகமாகப் போருக்கு நேரில் முன் வந்தான். பயங்கர ஆயுதமேந்திய மிக்க பலம் வாய்ந்த பயங்கர அஸுரர்களாலும் மஹாரதரான வீரர்களாலும் சூழப்பட்டு மேலும் ஸுர ஸ்ரேஷ்டர் களாலும் சூழப்பட்ட இந்த்ரன் போல் விளங்கினான்.

வைசம்பாயனர் சொன்னார் : 'அந்தப் பலி புத்ரன் பாணன் அங்கு வஸ்த்ரங்கள், மங்களமான பசுக்கள், பழங்கள், புஷ்பங்கள், ஸ்வர்ண நாணயங்கள் இவைகளை ப்ராஹ்மணர்களுக்குத் தானம் செய்து அதனால் குபேரன் போல் ப்ரகாசிக்கிறான். ஜபங்களாலும் மந்த்ரங்களாலும் அப்படியே ஓஷதிகளாலும், மஹாத்மா பாணனுக்கு ப்ராஹ்மணர் ஆசி கூறினர். ஆயிரம் ஆதித்யரையுடையது.

மணிகளையுடையது. விலை மதிக்க முடியாத தங்கத்தாலும், ரத்னத்தாலும், ஆச்சர்யமானது. ஆயிரம் சந்த்ரர்களையும், பத்தாயிரம் நக்ஷத்ரங்களையும் உடையது. இத்தகைய பாணன் தேர் பெரிய தீப் போல் ப்ரகாசிக்கிறது. அந்தப் பாணன் வில்லேந்தி அஸுரனால் பிடித்துச் செலுத்தப்படும் பெருங்கொடியையுடைய தேரில் அமர்ந்து யது ஸ்ரேஷ்டர்களை அழிப்பவனாய் மிகக் கொடிய ரூபத்தைத் தரித்தான். வீரர்களாலும் தேர்கூட்டங்களாலும் நிறைந்த கோபங் கொண்ட அந்த அஸுரர் கடல், காற்றால் வளர்ச்சி பெற்ற அலைகள் நிறைந்த கடல் உலகை அழிக்க எழுவது போல் யாதவர்களைக் குறித்துக் கிளம்பிற்று. ஜனமேஜய ராஜனே! நடுக்கத்தை விளைக்கும் பயங்கர உடலுடைய உயர்த்திய வில்லுடைய பெரிய தேர்களைக் கொண்ட அந்தப் பாணனின் ஸேனை, மலைகளுடன் வனங்கள் போல் சோபிக்கிறது. அற்புத ரூபமுடைய பாணாஸுரன் போரைப் பார்த்துப் போர் புரிய விரும்பி ஸமுத்ர ஜலப் பக்கத்திலிருக்கும் இருப்பிடத்திலிருந்து வெளிக் கிளம்பினான்.

## 124 அத்யாயம் முற்றும்

## 125 அத்யாயம்

### க்ருஷ்ணனால் சிவன் ஸ்தம்பிக்கப்படுதல் - ப்ரத்யும்னன் போரிடல் பிரம்மா சிவனுக்குக் கூறுதல் - சிவ விஷ்ணு ஐக்யம் சான்றுகளோடு நிறுவப்படல்

வைசம்பாயனர் சொன்னார் : 'க்ருஷ்ணனின் வைஷ்ண வாஸ்த்ரத்தால் உலகம் இருள் மயமாக்கப்பட்டதும், அப்படியே ருத்ரன் ஜ்வலிக்கப்பட்டதும், நந்தியில்லை, ரதமுமில்லை– ருத்ரன் காணப்படவில்லை. ரோஷத்தாலும் பலத்தாலும் இரண்டு பங்கு ஜ்வலிக்கும் தேஜஸுமுடைய திரிபுரமெரித்த அந்த ருத்ரனும் நான்கு முக பாணத்தை எடுத்தான். வில்லெடுத்துப் பாணம் எய்ய விரும்பும் முக்கண்ணனையும், சித்தத்தை அறியும் மஹாத்மா வாஸுதேவனால் தெரிந்து கொள்ளப்பட்டான். அந்தப் புருஷோத்தமன் க்ருஷ்ணனும் ஜ்ரும்பணம் எனும் அஸ்த்ரத்தை கையிலெடுத்தான். வேகமாகச் செயல்புரியும் மஹாபலன் கிருஷ்ணன், ருத்ரனை ஜ்ரும்பண பாணத்தால் சோம்பியிருக்கச் செய்தான். அதனால் வில்லோடும் அம்போடும் ருத்ரன் ஸ்தம்பிக்கச் செய்யப்பட்டான். அஸுர ராக்ஷஸரை ஜயிக்கும் பகவான் ருத்ரன் நினைவு அடையவில்லை. அம்பொடும் வில்லொடும் ஸ்தம்பிக்கச் செய்யப்பட்ட ருத்ரனைப் பார்த்துப் பலத்தால் மதங்கொண்ட பாணன்

ருத்ரனே அடிக்கடி தூண்டினான். பிறகு பூதாத்மா மஹாபலன் க்ருஷ்ணன் இனிய காம்பீர்யமுடைய ஒலியுடன் சங்கை ஊதினான். பாஞ்சஜன்ய கோஷத்தாலும், சார்ங்கத்தின் நாணொலியாலும் ருத்ரன் ஸ்தம்பிக்க செய்யப்பட்டதைப் பார்த்து, எல்லா ப்ராணிகளும் நடுங்கின. இச்சமயம் அங்குப் போரில் ருத்ரனுடைய பக்க கணங்கள் மாயப் போரை ஆஸ்ரயித்து ப்ரத்யும்னனைச் சூழ்ந்து கொண்டன. வீரன்மகரக் கொடியன், ப்ரத்யும்னன் ப்ரமதகணம் நிறைந்த மஹாபலமுடைய எல்லா தானவரையும் நித்ரை வசப்பட்டவராக்கி அங்கு அழியச் செய்தான். பிறகு கொட்டாவி விடும், எளிதில் செயல் புரிய வல்ல ருத்ரனுடைய வாயிலிருந்து பத்து திசைகளை யெரிப்பது போன்ற ஜ்வாலை உண்டானது. பின்பு ருத்ர க்ருஷ்ணாதி மஹாத்மாக்களால் பிடிக்கப்பட்ட பூமி தேவி நடுங்கி, ஜகத்ஸ்ருஷ்டி ப்ரஹ்மாவைச் சரணடைந்தாள்.

ப்ரிதிவீ சொன்னாள் : 'மஹாபாஹோ! ப்ரஹ்மாவே! மிகப் பெரிய பராக்ரமத்தால் பிடிக்கப்பட்டிருக்கிறேன். க்ருஷ்ண ருத்ர பாரத்தால் ஆக்ரமிக்கப்பட்டுத் திரும்ப ஒரே ஸமுத்ரமாகி விடுவேன். பிதாமஹரே! ஸஹிக்க முடியாத இந்தச் சுமையை ஆலோசியும் தேவா! திரும்ப லகுவாக ஆகி சராசரங்களை நான் தரிக்கும் வகை ஆலோசியும்.' பின்பு பிதாமஹர் ப்ரஹ்மா காஸ்யபர் தேவி பூமியைப் பார்த்துச் சொன்னார் : 'ஒரு முஹூர்த்த காலம் ஸஹித்துக் கொள். சீக்ரம் லகுவாகி விடுவாய்'.

வைசம்பாயனர் சொன்னார்: பகவான் ப்ரஹ்மா ருத்ரனை பார்த்து வார்த்தை சொன்னார் 'பெரிய அஸுரனுடன் [illegible] எதற்காக அஸுரன் (உன்னால்) மறுபடியும் [illegible] படுகிறான். மஹாபாஹோ! க்ருஷ்ணனுடன் நீ போர் [illegible] இரண்டாய் [illegible] க்ருஷ்ணனை நீ [illegible] அழிவற்ற பகவான் [illegible] க்ருஷ்ணன் [illegible] முழுவதும் [illegible] பார்க்கிறான்' [illegible] ருத்ரன் [illegible] சிந்தித்து [illegible] விலகி [illegible] க்ருஷ்ணன் [illegible] மாகவும் க்ருஷ்ணனி [illegible] போரிலிருந்து விலகி க்ருஷ்ணனுடன் [illegible] நிறுத்தினான். ருத்ரனும் 'பகவானே! க்ருஷ்ணனுடன் போர் புரிய மாட்டேன். பூமி லகுவாக ஆகட்டும்.' இப்படி ப்ரஹ்மாவைக் குறித்துச் சொன்னார்.

பிறகு க்ருஷ்ணனும் ருத்ரனும் ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் செய்து பரம ப்ரீதியடைந்து பின்பு போர்க்களத்திலிருந்து வெளியே சென்றனர். ஒன்று சேர்ந்த அந்த யோகிகள் க்ருஷ்ணன், ருத்ரன் இவ்விருவரும் ஒன்றையும் பார்க்கவில்லை. பிதாமஹன் ப்ரஹ்மா, ஒருவனே, அவ்விதம் அவர்களைச் செய்து லோகங்களைக் கருத்தில் கொண்டு இதைச் சொன்னார். தீர்க்க தர்சியான நாரதருடன் தன் பக்கத்திலிருக்கும் மார்க்கண்டேயரை வினவினார்.

பிதாமஹர் ப்ரஹ்மா சொன்னார்: 'ப்ரஹ்மக்ஞானியே! மந்த்ரகிரி பக்கத்தில் தடாக கரையில் ஸ்வப்னத்தில் என்னால் விஷ்ணு சிவன் இருவரும் காணப்பட்டனர். விஷ்ணுவைச் சிவரூபமாகவும், சிவனை விஷ்ணுரூபமாகவும், சிவனைச் சங்கசக்ர பாணியாகவும், பீதாம்பர னாகவும், கருடாரூடனாகவும், விஷ்ணுவை த்ரிசூல, பட்டிசம் கைக்கொண்டவனாகவும், புலித்தோல் தரித்தவனாகவும், காளைக் கொடியனாகவும் கண்டேன். ப்ரஹ்மக்ஞானியே! அந்த பெரிய ஆஸ்சர்யத்தைப் பார்த்து எனக்கு மிக வியப்பு, பகவானே! நல்ல வ்ரதமுடையவனே! இதை உள்ளபடி எனக்குச் சொல்ல வேண்டும்.

மார்க்கண்டேயர் சொன்னார்: 'சிவ ரூபியான விஷ்ணுவுக்கும், விஷ்ணு ரூபியான சிவனுக்கும் வேறுபாட்டை நான் காணவில்லை. அதனால் அவர்கள் மங்களத்தைக் கொடுக்கின்றனர். ஹரிஹரன் இணைந்த ரூபம், ஆதி, நடு, முடிவு அற்றது, அழியாதது, குறைவற்றது. அதையே உமக்குச் சொல்வேன் விஷ்ணு ருத்ரன், ருத்ரனே பிதாமஹன். ப்ரஹ்மாவே! உடல் ஒன்று ருத்ர விஷ்ணு பிதாமஹர் தேவர் மூவர். வரங்கொடுப்பவர், லோகஸ்ருஷ்டி கர்தாக்கள், உலகத் தலைவர், தான் தோன்றியவர், பெண் கூறு பாதியுடையவர். தீவ்ர வ்ரதத்தைக் கைக்கொண்டவர். ஜலத்தொடு ஜலம் சேர்ந்தால் ஒரே ஜலம் ஆகும் மாதிரி ருத்ரனிடத்தில் கலந்த விஷ்ணு ருத்ர மயமாவான். அக்னியுடன் சேர்ந்த அக்னி அக்னி மயமாவது போன்று விஷ்ணுவுடன் சேர்ந்த ருத்ரன் விஷ்ணு மயமாகவே ஆவான். ருத்ரனை அக்னி மயமாக அறிய வேண்டும். விஷ்ணுவை சந்த்ர மயமாக அறிய வேண்டும். ஸ்தாவர ஜங்கம ரூபமயமான உலகு, அக்னி சந்த்ர மயமானதாகவே ஆகும். மஹேஸ்வரர் ஹரிஹரர் இருவரும் ஸ்தாவரஜங்கம ரூப உலகிற்கு படைப்பவர், அழிப்பவரும் கூட, மங்களம் செய்யபவர், கீர்த்தியுடையவர். நாரயணன், சிவன் இருவரும் கர்த்தாவிற்கும், காரணத்திற்கும் கர்த்தாக்கள். திரிகால ரூபியாயிருப்பவர்கள். இவர்கள் ஜகத்தை ரக்ஷிப்பவர்கள். இவர்கள் படைப்பவர் எனவும் கருதப்படுகின்றனர்.

இவர்களே, மழைபொழிபவர், ப்ரகாசிப்பவர், காற்றாக வீசுபவர், படைப்பரும் கூட பிதாமஹா! ப்ரஹ்மாவே! இந்த மிகச் சிறந்த ரகஸ்யம் உமக்குச் சொல்லப்பட்டது. இதை எப்போதும் படிப்பவனும் கேட்பவனும் விஷ்ணு ருத்ரரின் அனுக்ரஹத்தால் உண்டான மிகச் சிறந்த ஸ்தானத்தை அடைகிறான். ப்ரஹ்மாவுடன் கூடிய ஹரிஹர தேவர்களை துதிக்கிறேன். இவ்விரு சிறந்த தேவர்களும் ஜகத் உத்பத்தி லய காரணம். ருத்ரனுககு மேலானவர் விஷ்ணு. விஷ்ணுவுக்கு மேலானவன் சிவன். ஒருவனே இரண்டாக உலகில் எப்போதும் ஸஞ்சரிக்கிறான். சங்கரனில்லாமல் விஷ்ணுவில்லை. கேசவனில்லாமல் சிவனில்லை. ஆதலால் முன் ருத்ர-விஷ்ணு வாயிருந்தவர் ஒன்றான தன்மையை அடைந்தனர். ருத்ர ரூபியான க்ருஷ்ணனுக்கு வணக்கம். சேர்ந்து ஸஞ்சரிக்கும் க்ருஷ்ண ருத்ரருக்கு வணக்கம். முக்கண்ணனுக்கு வணக்கம். இருகண்ணனுக்கு வணக்கம். பிங்கள நிறக்கண்ணனுக்கு வணக்கம். தாமரைக் கண்ணனுக்கு வணக்கம். முருகன் பிதாவுக்கு வணக்கம். ப்ரத்யும்னன் பிதாவுக்கு வணக்கம். பூமியை தாங்குபவனுக்கு வணக்கம். கங்கையைத் தரித்தவனுக்கு வணக்கம். மயில்தோகை தரித்த சிவனுக்கு வணக்கம். கேயூரம் தரித்த கேசவனுக்கு வணக்கம். கபால மாலையனுக்கு வணக்கம். துளசி மாலையனுக்கு வணக்கம். த்ரிசூலகையனுக்கு வணக்கம். சக்கரக் கையனுக்கு வணக்கம். ஸ்வர்ணதண்டகையன் கேசவனுக்கு வணக்கம். ப்ரஹ்ம தண்டக்கயைன் சிவனுக்கு வணக்கம். தோல் ஆடையன் சிவனுக்கு வணக்கம். பீதாம்பரதாரி விஷ்ணுவுக்கு வணக்கம். லஷ்மீபதி விஷ்ணுவுக்கு வணக்கம். உமாபதி சிவனுக்கு வணக்கம். வாள் தரித்த சிவனுக்கு வணக்கம். உலக்கைக் கையன் விஷ்ணுவுக்கு வணக்கம். சாம்பல் பூசியவனுக்கு வணக்கம். கார்மேனியனுக்கு வணக்கம். ஸமுத்ரவாஸி விஷ்ணுவுக்கு வணக்கம். ஸ்மசான வாஸி சிவனுக்கு வணக்கம். கருட வாகனனுக்கு வணக்கம். காளை வாகனனுக்கு வணக்கம். அநேக ரூபங் கொண்டு அவதாரம் செய்த விஷ்ணுவுக்கு வணக்கம். பஹுவேடம் தரித்த சிவனுக்கு வணக்கம். ப்ரளய காரணன் சிவனுக்கு வணக்கம். மூவுலகையும் ரக்ஷிக்கும் விஷ்ணுவுக்கு வணக்கம். அழகிய ரூப விஷ்ணுவுக்கு வணக்கம். பயங்கர சாபரவ ரூபி சிவனுக்கு வணக்கம். பயங்கர முக்கண்ணனுக்கு வணக்கம். அழகிய (தாமரைக்) கண்ணனுக்கு வணக்கம். தக்ஷ யக்ஞத்தை அழித்த சிவனுக்கு வணக்கம். பலியை அடக்கிய விஷ்ணுவுக்கு வணக்கம். கைலாசமலை வாஸிக்கு வணக்கம். பாற்கடலில் பள்ளிக் கொண்டானுக்கு வணக்கம். தேவ சத்ருவை வதம் செய்யும் விஷ்ணுவுக்கு வணக்கம். த்ரிபுரமெரித்தவனுக்கு வணக்கம். நரகாஸுரனை அழித்த

விஷ்ணுவுக்கு வணக்கம். காமன் உடலெரித்த சிவனுக்கு வணக்கம். அந்தகாஸுரனைக் கொன்ற சிவனுக்கு வணக்கம். மதுகை । ரை அழித்த விஷ்ணுவுக்கு வணக்கம். ஆயிரக் கையன் விஷ்ணுவுக்கு வணக்கம். கணக்கில்லா கையுடைய சிவனுக்கு வணக்கம். ஆயிரம் சிரஸுடைய விஷ்ணுவுக்கு வணக்கம். பஹுசிரஸுடைய சிவனுக்கு வணக்கம். தாமோதர தேவனுக்கு வணக்கம். புல்கயிறு அரைஞாணுடைய சிவனுக்கு வணக்கம். பகவான் விஷ்ணுவுக்கு வணக்கம். பகவான் சிவனுக்கு வணக்கம். பகவான் மஹா தேவனுக்கு வணக்கம். தேவர் பூஜிக்கும் விஷ்ணுவுக்கு வணக்கம். ஸாம வேத கீதனான சிவனே உனக்கு வணக்கம். யஜுர் வேதமும் பாடும் பரமனே உனக்கு வணக்கம். தேவ சத்ருக்களை யழிப்பவனே வணக்கம். தேவர்கள் பூஜிக்குமவனே உனக்கு வணக்கம். கர்மயோகிகளின் கர்மஸ்வரூபியே உனக்கு வணக்கம். அளவற்றை பராக்ரமமுடையவனே உனக்கு வணக்கம். ஹ்ருஷீகேசனே உனக்கு வணக்கம். ஸ்வர்ண கேசனே உனக்கு வணக்கம்.

மஹாத்மாக்கள் விஷ்ணு ருத்ரருடைய இந்த ஸ்துதி வேதமறிந்த ரிஷிகள் மஹரிஷிகள், வ்யாஸர், ஸ்ரீமான் நாரதர், பரத்வாஜர், கர்கர், விஸ்வாமித்ரர், அகஸ்தியர், புலஸ்த்யர், மஹாத்மா தௌம்யர், முதலியோர் கூடி ஸ்துதிக்கப்பட்டது. ஹரிஹராத்மகமான இந்த ஸ்துதியை எப்போதும் படிப்பவன் நோயற்றவனாகவும் பலவானாகவும் ஆகிறான். இதில் ஸந்தேஹமில்லை. நித்யைஸ்வர் யத்தையும் அடைகிறான். ஸ்வர்கத்திலிருந்து திரும்புகிறதுமில்லை. புத்ரனில்லாதவன் நல்ல புத்ரனையடைகிறான். கன்யை நல்ல கணவனை யடைகிறாள். இதைக் கேட்ட கர்பிணிகள் நல்ல புத்ரனைப் பெறுகிறார்கள். இந்த ஸ்துதி படிக்கப்படுமிடத்தில் ராக்ஷஸர்கள், பிசாசங்கள் பயத்தைக் கொடுப்பதில்லே.

125 அத்யாயம் முற்றும்

## 126 அத்யாயம்

குகனோடு க்ருஷ்ணன் போரிடல்-குகன் கோடவி என்ற தேவியால் காப்பாற்றப்படல்-பாணன் நேரில் தானே போரிடவருதல்-கடும் போர் நிகழ்தல்-கருடவாகனன் மயிலையொடுக்குதல்-சிவன் பாணனுதவிக்குத் தேர் அனுப்புதல்-சக்ரத்தால் பாணன் கைகள் துண்டிக்கப்பட்டு இரு கைகளோடு மட்டும் சிவானுக்ரஹத்தால் உயிருடன்விடப்படல் - பாணன் சிவனிடம் ஐந்து வரம் கேட்டு பெறுதல்.

ஜனமேஜயர் சொன்னார்: மஹாத்மா க்ருஷ்ணனும் ருத்ரனும் சென்றதும் திரும்புவம், பிறருக்கு மயிர் கூச்செறிக்கும் பெரியபோர் எப்படி நிகழ்ந்தது?

வைசம்பாயனர் சொன்னார்: அப்போது கும்பாண்டன் மூலம் கொண்டு வரப்பட்ட தேரில் குஹன் இருந்து கொண்டு க்ருஷ்ணன், பலராமன், ப்ரத்யும்னன் மூவரையும் பின் தொடர்ந்தோடினான். பின்பு ஸ்ரேஷ்டனான முருகன் பொறுமையால் கோபங்கொண்டு, கர்ஜித்து நூற்றுக் கணக்கான கொடிய அம்புகளால் அவர்களை அடித்தான். பிறகு அம்மூவரும் அம்பால் போர்த்தப்பட்டு ரத்த வெள்ளத்தால் நனைந்த தேஹத்துடன் மூன்று அக்னிகள் போல் குஹனோடு கடும் போர் புரிந்தனர். போர் முறையறிந்த அந்த மூவரும் பின்பு வாயு, அக்னி, பர்ஜன்யமாகிய மூன்று சிறந்த அஸ்திரங்களால் குஹனை யடித்தனர். கோபங்கொண்ட குஹன் அந்த அஸ்த்ரங்களை சைலம், வாருணம் ஸாவித்ரம் ஆகிய மூன்று அஸ்த்ரங்களால் தடுத்துத் திரும்பி யடித்தான். ஒளி வீசும் அம்பு [illegible] தேஜஸால் ஜ்வலிக்கும் குஹனது பாணக் கூட்டங்களை [illegible] அஸ்த்ர மாயையால் விழுங்கினர். குஹப்ரபு [illegible] அடித்துக் கொண்டு, அணுக முடியாத காலனையொத்த [illegible] எனும் அஸ்த்ரத்தைப் போரில் கையாண்டான். உலகை [illegible] போன்று ஒளிவீசும் நெருங்க முடியாத கொடிய [illegible] ப்ரயோகிக்கப்பட்டதும் உலகில் எல்லோரும் "[illegible]" [illegible] கொண்டு நாற்புறமும் ஓடினர். உலகம் [illegible] பயங்கித் துன்புற்றது. அப்போது கேசியைக் [illegible] எல்லாப் பாண வீர்யங்களையும் [illegible] கொடிய சக்ரத்தை வீச எடுத்தான். [illegible] முடிவில் மேகங்களால் மறைக்கப்பட்ட [illegible] ப்ரஹ்மசிரஸ் எனும் பாணம் [illegible] முடைய அந்த ப்ரஹ்மசிரஸ்

அஸ்த்ரம், வீர்ய நஷ்டமாகி ஒளி யிழந்த பிறகு, கோபத்தால் மிகச் சிவந்த கண்ணுடைய குஹன் ஹவிஸ்ஸால் ஜ்வலிக்கும் அக்னி போல் போரில் மிக ஜ்வலித்தான். எல்லா உலகுக்கும் பயமூட்டும் விஞ்ஞாததான உகந்த கொடிய ஜ்வாலை வீசும் சத்ருக்களைக் கொல்லவல்ல, திவ்யமான 'சக்தி'யைக் குஹன் கைக்கொண்டான். யுகாந்தாக்னி போல் ஒளி வீசும் பெரிய தூம கேது போன்ற மிக ஜ்வலிக்கும் மணிவரிசைகளையுடைய அந்த திவ்ய சக்தியை கோபங் கொண்ட குஹன் வீசினான். சத்ரு பயங்கர பலமான முழக்கத்தையும் செய்தான்.

ப்ராஹ்மண பக்த அந்த மஹாத்மா குஹனால் எறியப்பட்ட அந்த மஹா சக்தி, ஜ்வாலை வீசும் முகத்துடன் வாய் பிளப்பது போன்று க்ருஷ்ணன் வதத்தை விரும்பி ஆகாயத்தில் ஓடிற்று. மிகவும் துக்கித்த இந்த்ரனும எல்லாத் தேவ கூட்டங்கள் சூழ அந்தச் சக்தியைப் பார்த்து 'க்ருஷ்ணன் எரிந்து போனான்' என்று சொன்னான். பெரிய போரில் அருகில் வந்த அந்த மஹாசக்தியை க்ருஷ்ணன் 'ஹூங்'காரத்தாலேயே கண்டித்து பூமியில் விழச் செய்தான். அந்த மஹா சக்தி தள்ளப்பட்டதும் இந்த்ரனுள்பட எல்லாத் தேவகணங்களும் 'நன்று! நன்று!' என்று எல்லாப் பக்கத்திலும் ஸிம்ஹநாதம் செய்தனர். தேவர்கள ஸந்தோஷ கோஷம் செய்த பிறகு கீர்த்தி வாய்ந்த வாஸுதேவன் அஸுர நாசம் செய்யும் சக்ரத்தைப் போரில் திரும்பவும் எடுத்தான்.

ஒப்பற்ற வீர்யமுடைய க்ருஷ்ணனால் சக்கரம் சுழற்றப்பட்டதும், பார்வதி தேவியின் எட்டாவது பாகமான மஹா பாக்யசாலி கோடவி என்பவள் அழிய ரூபமெடுத்து ருத்ரன் வார்த்தை கொண்டு முருகன் ரக்ஷணத்திற்காக வஸ்த்ரமில்லாமல் அங்குப் போர்களம் வந்து ஆச்சர்ய ஸ்வர்ண சக்தி ரூபமாக ஆகாயத்தில் நக்னையாக நின்றாள். பிறகு முருகனுக்கு நடுவில் தேவியைப் பார்த்து மஹா புஜன் மதுஸூதனன் முகத்தைத் திருப்பிக் கொண்டு வார்த்தை சொன்னான். பகவான் க்ருஷ்ணன் சொன்னான் : 'சீ! சீ! நீ தூரச் செல். வதம் செய்யும் என் முடிவான எண்ணத்துக்கு ஏன் விக்னம் செய்கிறாய்?'

வைசம்பாயனர் சொன்னார்: அந்த ப்ரபுவின் இந்த வார்த்தையைக் கேட்டு, குமரனைக் காப்பாற்ற வஸ்த்ரத்தை உடுத்திக் கொள்ளவேயில்லை. பகவான் க்ருஷ்ணன் சொன்னான் குகனைச் சீக்கிரம் எடுத்துக் கொண்டு வெளியேறு என்னுடன் போரிடும் குஹனை இப்போது இப்படி எடுத்துச் சென்றால் க்ஷேமம் உண்டாகும். போர்க்கள நடுவில் இருக்கும் அந்தத் தேவியைப் பார்த்து இந்திரன் தம்பி பகவான் க்ருஷ்ணன் சக்கரத்தை பின்னிழுத்துக் கொண்டான்.

புத்திமான் தேவதேவன் க்ருஷ்ணனால் இவ்விதம் செய்யப்பட்ட பின்பு கோடவிதேவி குஹனே எடுத்துக் கொண்டு பரமசிவன் பக்கல் வந்தாள். பெரிய பயமுண்டாகி கோடவி தேவியால் குஹன் ரக்ஷிக்கப்பட்டதும் இந்த ஸமயத்திலேயே பாணன் போர்க்கள தேசத்துக்கு வந்தான். போரிலிருந்து க்ருஷ்ணனால் விடப்பட்டுக் குஹன் திரும்பிச் செல்வதைப் பார்த்துப் பாணன் தானே மாதவனுடன் போர் செய்ய நினைத்தான்.

வைசம்பாயனர் சொன்னார்: பயத்தால் கலங்கின கண்களுடைய பூத, யக்ஷகணங்களும், பாணன் ஸேனையும் எல்லோரும் நாற்புறமும் வேகமாக ஓடினர். ப்ரபுத கணங்கள் நிறைந்த ஸேனே ஓடினதும், மஹா அஸுரன் பாணன் வேகமாகப் போருக்கு நேர் முகமாக வெளிக் கிளம்பினான். பயங்கர ஆயுதங்களையுடைய, கொடிய சிறந்த மஹா ரதர்களான அஸுர ஸ்ரேஷ்டர்களுடன், மஹா வீரர்களான மஹாபலம் வாய்ந்த தேவஸ்ரேஷ்டர்களுடன் இந்த்ரன் போல் வெளிக் கிளம்பினான். கேள்வி, ஒழுக்கமுள்ள பெரியோரும், முதியோரும், அப்படியே புரோஹிதரும் சத்ரு வதத்தைச் சொல்லிக் கொண்டு, ஜபங்களாலும் மந்த்ரங்களாலும், ஓஷதிகளாலும், மஹாத்மா பாணனுக்கு ஆசி கூறினர். பின்பு வாத்ய சப்தத்துடன் பேரிகளின் பெரு முழக்கத்துடன் அஸுரரின் ஸிம்ஹநாதத்துடன் பாணன் க்ருஷ்ணனை நோக்கி ஓடினான். போருக்காகத் தயாராகி, வெளியேறும் பாணனைப் பார்த்து க்ருஷ்ணன் கருடன் மீதேறிப் பாணனுக்கு எதிர் முகமாகச் சென்றான். கருடன் மீதேறி வரும் ஒப்பற்ற வீர்யமுடைய யது ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனைப் பாணன் பார்த்தான்.

தன் முன் வந்துள்ள பலவான் வாஸுதேவனைப் பார்த்துக் கோபங்கொண்டு பாணன் சொன்னான்: 'நில்! நில்! என்னிடமிருந்து நீ உயிருடன் திரும்ப போவதில்லை. த்வாரகையையும் த்வாரகையிலிருக்கும் உன் நண்பர்களையும் பார்க்கப் போவதில்லை. மாதவனே! காலனால் தூண்டப்பட்டுப் போரில் மரிக்க விரும்பி என்னால் ஆக்ரமிக்கப்பட்டு இப்போது மரங்களின் நுனிகளை ஸ்வர்ண நிறமுடையனவாகப் பார்க்கிறாய். கருடக் கொடியோனே! ஆயிரங்கைகளுடைய என்னுடன் போரில் கலந்து, எட்டு புஜங்களுடைய நீ எப்படிப் போர் புரிவாய்? இன்று பந்துக்களுடன் கூடிய நீ போரில் ஜயிக்கப்பட்டு சோணிதபுரத்தில் கொல்லப்பட்டவனாய், த்வாரகையை நீ காணாய். இப்போது பலவித ஆயுதங்கள் கொண்டு பல அங்க பூஷணங்களால்

அலங்கரிக்கப்பட்ட என்னுடைய ஆயிரம் கைகளும் கோடிக் கைகளாவதைப் பார்.' கர்ஜிக்கும் பாணனுடைய மிகக் கொடிய பல வார்த்தைகள் ஸமுத்ரத்திலிருந்து காற்றால் பொங்கி வரும் அலைத்திரள் போல் வெளிக் கிளம்பின. பாணனின் கண்கள் கோபத்தால் மிகக் கலங்கியவை ஆயின. உலகைத் தஹிக்க விரும்பும் பெரிய ஸூர்யன் போல் தோன்றினான். அந்தப் பாணனது மிகக் கொடூர வார்த்தைகளை நாரதர் கேட்டு ஆகாயத்தைப் பிளப்பவர் போல் மிகப் பெருஞ்சிரிப்புச் சிரித்தார். நாரத முனிவர் போரைப் பார்க்கும் விருப்பத்தால் முதுகு முழந்தாள் யோக பட்டம் தரித்து அமர்ந்திருந்தார். குதூகலத்தால் மலர்ந்த கண்களுடன் ஸஞ்சரித்தார்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னான்: 'பாண! மோஹத்தால் ஏன் கர்ஜிக்கிறாய்? ஸூரர்களுக்குக் கர்ஜனையில்லை. வா! வா! போர் புரி. ஏன் வீணாக கர்ஜிக்கிறாய்? போரில் வார்த்தைகளால் வெற்றியுண்டாகுமானால் திதி புத்ரனே! எப்போதும் நீதான் ஜயிப்பாய். மிக அபத்தமாகப் பேசுகிறாய். பாணனே! வா! வா! என்னை ஜயி. அல்லது வெல்லப்பட்டு பூமியில் அஸுரர்களுடன் குப்புற விழுந்து தீனனாய் நீண்ட காலம் படுத்திருப்பாய்'. இவ்விதம் சொல்லி க்ருஷ்ணன் மர்மத்தைப் பிளக்கும், வீணாகாது வேகமாகப் பாயும் சிறந்த அம்புகளால் அந்தப் பாணனை அப்போது பிளந்தான். க்ருஷ்ணனால் மர்மத்தைப் பிளக்கும் அம்பு கொண்டு பிளக்கப்பட்ட பாணன், சிரித்துப் பிறகு க்ருஷ்ணன் மீது அம்பு மழை பொழிந்தான். அந்தப் பாணாஸுரன் போரில் ஒளி வீசும் பர்கம், நிஸத்ரிமஸம், கதை, தோமரம், சக்தி, முசலம், பட்டிசம் இவை கொண்டு ஆயிரம் கைகளால் கர்வங்கொண்ட அஸுர ஸ்ரேஷ்டனும், இரண்டு கைகளுடைய க்ருஷ்ணனோடு விளையாட்டாகப் போர் புரியச் செய்தான். க்ருஷ்ணனது வேகத்தால் கோபங்கொண்ட பலி புத்ரன் பாணாஸுரன் பிறகு சிறந்த திவ்யாஸ்த்ரத்தை விட்டான். அது தபோ பலத்தால் அடைந்தது. பெரியது. போரில் எல்லோராலும் தடுக்க முடியாதது. எல்லா சத்ருக்களையும் அழிக்க வல்லது. பாசுபதமாய் ஜ்வலிக்கப்பட்டது. அந்த அஸ்த்ரம் விடப்பட்டதும் எல்லாத் திக்குகளும் மிக இருண்டன. நாற்புறமும் ஆயிரக்கணக்கில் மிகக் கொடிய அபசகுனங்கள் உண்டாயின. உலகம் இருள் மூடி ஒன்றும் அறியப்படவில்லை. 'நன்று! நன்று!' என அஸுரர் பாணனைக் கொண்டாடினர். 'சீ! சீ! ஆஹா! ஆஹா!' என தேவர் கூறும் வார்த்தை கேட்டது பிறகு அஸ்த்ரபல வேகத்தால் ஒளிவீசும் மிகக் கொடிய கோர ரூபமுள்ள மஹாவேகமாகப் பாயும் அம்பு மழைகள் பொழிந்தன. பாணன் விட்ட அஸ்த்ரத்தால்

கேசவன் தபிக்கப்பட்டதும் காற்று வீசவில்லை. மேகங்கள் அசையவில்லை. பிறகு பகவான் மதுஸூதனன் மிக வேகங்கொண்ட காலாந்தகனை யொத்த பார்ஜன்ய மெனும் அஸ்த்ரத்தைக் கையாண்டான். பிறகு உலகு இருள் நீங்கியது. அம்பு அக்னியும் அடங்கியது. அப்போது தானவர் எல்லோரும் ஸங்கல்பம் வீணனவர் ஆயினர். பார்ஜன்யாஸ்த்ரம் மந்தரித்து ஏவப்பட்டதும் தான வாஸ்த்ரமோ அடங்கியே விட்டது. பிறகு எல்லாத் தேவகணங்களும் ஆரவாரித்தனர். நகைத்தனர்.

ஜனமேஜயனே! அஸ்த்ரம் அடக்கப்பட்டதும், பாணஸுரன் கோபங்கொண்டு கருடன் மீதிருக்கும் கேசவனை முசலங்களாலும், பட்டிசங்களாலும் திரும்பவும் வீசி யடித்தான். சத்ருவைக் கண்டிக்கும் கேசவன் மிகச் சிரித்து வேகமாக மேலெறியப்பட்ட அந்த அம்பு மழையைத் தடுத்தான். கேசவனின் பாணத்தால் பெரும் போர் நிகழ்ந்தது. அவனது இடத்திலிருந்து விடப்பட்ட இடியொத்த பாணங்கள் குதிரை, த்வஜம், கொடிகளையுடைய பாணனின் தேரை எள்ளுப் பொடியாக்கின. மஹா தேஜஸ்வி கேசவன் பிறகு பாணனின் உடல் கவசத்தை வெட்டினான். மிக்க சோபையுள்ள மகுடத்தையும வில்லையும், சே[illegible]த்தையும் வெட்டி வீழ்த்தினான். சிரித்துக் கொண்டு அவனது மார்பில் அம்பால் அடித்தான். மர்மத்தில் அடிக்கப்பட்ட அவன் புத்தி கலங்கி மயக்கமடைந்தான்.

அம்பு வீச்சுக்களால் துன்புறுத்தப்பட்டு மூர்ச்சித்த அந்தப் பாணனே, சிறந்த மாடி சிகரத்திலிருக்கும் முனி ஸ்ரேஷ்டர் நாரதர், அப்போது தோள் தட்டி எழுந்து பார்த்தார். விரலைச் சொடுக்கி 'அஹோபாக்யம்! அஹோபாக்யம்!' என்று சொன்னார். அஹோ! என் ஜன்மம் ஸபலமாயிற்று. இந்த விசித்திரமான தாமோதரனின் வீரம் என்னால் பார்க்கப்பட்டது. மஹாபாஹோ! தேவ சத்ரு [illegible] [illegible] [illegible] [illegible] [illegible]' இவ்விதம் [illegible] ஸ்துதி செய்து [illegible] [illegible] நாரதர் [illegible] [illegible] திசைகளில் போர்க் களத்தில் ஸஞ்சரித்தார். [illegible] [illegible] போர் [illegible] போது [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] வாகனங்களிடையே போர் மூண்டது. புத்திமான் கருடனுக்கும் மயிலுக்கும் இறக்கைகளாலும் [illegible] மூக்கு கால் நகங்களாலும் போர் நிகழ்ந்தது. மயில் கருடன் இருவரும் கோபங்கொண்டு ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டனர்.

பிறகு கோபங்கொண்ட மஹாபலன் கருடன் மிக ஒளி வீசும் மயிலைச் சீக்கிரம் தலையில் அடித்தான். அப்போது மூக்கால் கொத்தித் தூக்கி போட்டு இறக்கைகளால் அடித்தான். கால்களாலும் பக்க (இறக்கை) அடிக்களாலும் பல படியாக அடி கொடுத்து, வேகமாக இழுத்துத் தள்ளி மஹாபலன் கருடன் ஆகாயத்திலிருக்கும் சூர்யனைப் போல் விளங்கி அந்த மயிலை மூச்சற்றதாக்கித் தள்ளினான். அந்த மயில் விழுந்ததும் அதிபலவான் பாணன் போரில் மிக மனம் கலங்கித் தான் இனிச் செய்வதை நினைத்துப் பூமியில் விழுந்தான். 'அதிபலத்தால் கர்வங் கொண்ட என்னால் நல்லோர் வார்த்தை சொல்லப்படவில்லை. தேவாஸுரர் பார்க்க மிக்க கஷ்டம் அடைந்துள்ளேன்.' போரில் மனமழிந்து, மிக கலங்கிய பாணனை அறிந்து வருந்திய பகவான் ருத்ரன், பாணனை ரக்ஷிக்க சிந்தை கொண்டான்.

பின்பு மஹாதேவன் கம்பீரமான வார்த்தையால் நந்தியைக் குறித்துச சொன்னான். 'நந்திகேஸ்வரா! போர்க்களத்தில் பாணனிருக்குமிடம் செல். பாபமற்றவனே! ஸிம்ஹத்தையுடைய இந்த திவ்ய தேருடன் போரின் பொருட்டுச் சென்று சீக்கிரம் தேரைப் பாணனிடம் சேர்ப்பாயாக. நான் ப்ரமத கண நடுவில் இருக்கிறேன். இப்போது என் மனம் போர் புரிய முற்படவில்லை. பாணனை நன்கு காப்பாற்றச் செய்வாய்.' பிறகு தேரோட்டிகளில் சிறந்த நந்தி 'அப்படியே' என்று சொல்லித் தேருடன் பாணனிடம் சென்று பாணனைக் குறித்து மெதுவாக இந்த வார்த்தை சொன்னான் : 'மஹாபலவானே! அஸுரனே! இந்தத் தேரிலேறிச் சீக்ரம் செல். பின்பு தானவரை அழிக்கும் க்ருஷ்ணனுடன் போர் செய்.' பாணன் ப்ரஹ்மசிரஸ் என்னும் அஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். ப்ரஹ்மஸிரஸ் எவ்விடத்தும் உலகைக் கலக்கிற்று. ப்ரஹ்மாவால் உலக மங்களத்துக்காகப் படைக்கப்பட்டதல்லவா? மிக்க பலமுள்ள அந்த அஸ்த்ரத்தை க்ருஷ்ணன் சக்ரத்தால் அழித்து, உலகில் கீர்த்தி பெற்ற போரில் ஒப்பற்ற பாணனைக் குறித்துச் சொன்னான்: 'அப்பா பாணா! உன் பேச்சு எங்கு போயிற்று? (இப்போது) ஏன் பேசுகிறாயில்லை? போரில் உன் எதிர் உள்ளேன். போர் செய். புருஷனாய் இரு. முன் கார்த்தவீர்ய அர்ஜுனன் என்பான் ஆயிரங்கையுடையவன். மிக்க பலவான். அவன் போரில் பரசுராமனால் இருகையுடையவனாக செய்யப்பட்டான். அப்படியே உனக்கும் புஜ வீர்யத்தால் உண்டானது இந்த கர்வம். இந்த நான் உனது கர்வ அடக்கத்தைப் போர்க்களத்தில் செய்கிறேன். இப்போது என் கையால் உனது கர்வ அடக்கம் முழுதும் செய்வேன். நில் போர்க்களத்தில் என்னால் விடப்படமாட்டாய்.'

பின்பு தேவாஸுரப் போர் போன்ற மிக்க கொடிய அந்த அபூர்வ போரைப் பார்த்து நாரதர் நடனமாடுகிறார். மஹாத்மா ப்ரத்யும்னனால் எல்லாக் கணங்களும் ஜயிக்கப்பட்டன. போரில் பேச்சடங்கி மறுபடியும் மஹாதேவனை அடைந்தனர். அந்த க்ருஷ்ணன், கோடை மேகம் போல் கர்ஜித்து பாணன் முடிவைச் செய்யும் ஆயிரம் ஆரமுடைய அந்தச் சக்ரத்தைப் போரில் வேகமாக எடுத்தான். எல்லா ஜோதிகளின் தேஜஸ்ஸும், வஜ்ராயுதம், மின்னல் இவை ஒளியும், இந்த்ரன் ஒளியும் இவை யாவும் சக்கரத்தில் இருந்தன. த்ரேதாக்னி யொளியும், ப்ரஹ்மசாரிகளின் ஒளியும், ரிஷிகளின் ஞான ஒளியும் இவை யாவும் சக்கரத்தில் இருந்தன. பதிவ்ரதைகளின் ஒளியும் ம்ருக, பக்ஷிகளின் ப்ராணங்களின் ஒளியும், சக்ரதாரிகளின் ஒளியும் இந்தச் சக்கரத்தில் இருந்தன. நாக ராக்ஷஸ யக்ஷர்கள், கந்தர்வ அப்ஸரஸ்கள், மூவுலகோர் இவர்களின் ப்ராணன்களின் ஒளியும் சக்கரத்தில் இருந்தன. அந்த எல்லா ஒளிகளும் திரண்டு கூடிய சக்ரம், ஸூர்யன் போல் ஒளிவீசி, எதிரில் இருக்கும் பாணன் தேஜஸைத் தன் தேஜஸால் இழுத்துக் கொண்டது.

போரில் க்ருஷ்ணனுல் எடுக்கப்பட்ட சக்ரம் அளவிட முடியாத அதி தேஜஸுடையதாகவும், தடுக்க முடியாததாகவும் இருப்பதை அறிந்து பார்வதி சிவனைக் குறித்துச் சொன்னாள்: 'க்ருஷ்ணனால் தரிக்கப்படும் சக்ரம் மூவுலகிலும் ஜயிக்க முடியாதது. தேவா! க்ருஷ்ணன் சக்ரத்தை விடுவதன் முன்னம், பாணனை ரக்ஷிப்பாயாக.' பிறகு முக்கண்ணன் அந்த வார்த்தையைக் கேட்டு லம்பா தேவியைக் குறித்துச் சொன்னான்: 'லம்பே! இங்கு வா. பாணன் ரக்ஷணைக்காகச் சீக்கிரம் செல். பின்பு பார்வதி யோகத்தை நன்கடைந்து, காணப்படாமல் க்ருஷ்ணன் ஒருவனுக்கு மட்டும் தன் ரூபத்தைக் காட்டிக் கொண்டு அருகில் சென்றாள். போர்க்களத்தில் சக்ரத்தை யேந்திய கையுடைய க்ருஷ்ணனைப் பார்த்து, அந்தக் கோடவி தேவீ மறைந்து மறுபடி வஸ்த்ரங்களை விட்டு, பாணன் ரக்ஷைக்காக வெற்றியில் நோக்கங் கொண்டு வாஸுதேவன் எதிரில் உடையின்றி நின்றாள். ருத்ரனுக்கும் ப்ரியமான லம்பையுடன் கூடி, மறுபடியும் வந்த அந்தக் கோடவீ தேவியைப் பார்த்து க்ருஷ்ணன் கூறினான் : கோபத்தால் சிவந்த கண்ணுடைய ஆடையில்லா நீ மறுபடியும் பாண ரக்ஷணத்திற்காக வந்துள்ளாய். பாணனைக் கொல்கிறேன். ஸந்தேஹமில்லை. க்ருஷ்ணனால் இப்படிச் சொல்லப்பட்ட தேவீ மறுபடியும் இதைச் சொன்னாள்: 'உன்னை எல்லாப் பூதங்களையம் படைப்பவன், புருஷோத்தமன், மஹாபாக்யசாலி, மஹாதேவன், அநந்தன், நீலன் அழிவற்றவன் பத்மநாபன் ஹ்ருஷீகேசன், உலகுக் கெல்லாம் மூ

தோன்றி என்று அறிகிறேன். தேவா! ஒப்பற்ற பாணனைப் போரில் கொல்லத் தக்கதல்ல. மாதவா! அபயம் கொடு. ஜீவபுத்ரியாய் இருக்கும் தன்மையையும் (எனக்குக்) கொடு. வரங்கொடுக்கப்பட்ட இவன் (பாணன்) என்னால் மறுபடி காப்பாற்ற வேண்டப்படுகிறான்.' தேவியால் இவ்விதம் சொல்லபட்டதும் சத்ரு நகரங்களை ஜயிக்கும் க்ருஷ்ணன் கூறுகிறான்: 'அழகியே! ஸத்யத்தைக் கேள். பாணன் ஆயிரங்கைகளால் கர்வம் கொண்டு கர்ஜிக்கிறான். இந்தக் கைகளை வெட்டுதல் இப்போது செய்யத் தக்கது. இதில் ஸந்தேஹமில்லை. இரண்டு கையுடைய பாணனால் (உயிருடன் இருத்தலால்) நீ ஜீவ புத்ரி ஆவாய். அஸுர கர்வத்தைக் கொண்டு என்னைச் (சரண்) அடைகிறானில்லை.' எளிதில் செய்யவல்ல க்ருஷ்ணனால் இவ்விதம் சொல்லப்பட்டதும். தேவி சொன்னாள்: இந்தப் பாணன் தேவனாகிய உன்னால் உயிர் பிச்சை கொடுக்கப்பட்டவன் ஆவான்.

அந்த பார்வதி தேவியிடம் இவ்விதம் சொல்லி, சொல்வல்லோரில் சிறந்த ப்ரபுக்ருஷ்ணன் பின்பு கோபங்கொண்டு போரில் பாணனைக் குறித்துச் சொன்னான்: 'போர்க் களத்தில் போர் செய்! போர் செய்! சக்தி யில்லாதாருக்குப் போர். உன் ரக்ஷணத்திற்குக் கோடவி இருக்கிறாள். சீ! சீ! உனது பௌருஷம்' என்று இவ்விதம் கூறி, மஹாபலன் க்ருஷ்ண பரமாத்மா கண்ணை மூடிக் கொண்டு பாணனைக் குறித்து அந்தச் சக்ரத்தை ப்ரயோகித்தான். ஸ்தாவர ஜங்கம ரூபமான லோகங்களை மோஹமடையச் செய்வதும் பெரும் போரில் மாம்ஸ பக்ஷிணி பெரும் பூதங்களை த்ருப்தி செய்வதும், ஒப்பற்ற கார்யம் செய்வதும், ஸூர்ய ஒளியை யொத்ததுமான அந்தச் சக்ரத்தைக், கோபத்தால் ஜ்வலிக்கும் அந்தக் கதாதரன், ஸ்ரீதரன், க்ருஷ்ணன் பெரும் சக்தியுடைய தன் தேஜஸால் அஸுர தேஜஸை யடக்கச் சக்ரத்தை உயர்த்தி, சக்ரத்தால் பாணன் கைகளை யறுத்தான். போர்க் களத்தில் வாஸுதேவனால் பாணனைக் குறித்து எறியப்பட்ட விஷ்ணுசக்ரம், அக்னிசக்ரம் போல் விரைவாகச் சுழன்று, சீக்ரம் சீக்ரம் சுழன்று கொண்டே சென்றது. வேகத்தால் உருவம் தெரியவில்லை. போர்க்கள நடுவில் அந்தச் சக்ரம் அந்தப் பாணனது ஆயிரங்கைகளின் துண்டித்தலை மாறி மாறி திரும்பத் திரும்பச் செய்தது. அந்தப் பாணனைக் கிளையறுக்கப்பட்ட மரம் போல் இரண்டு கைகளுடைய வனாகச் செய்து, ஸுதர்சன சக்ரம் க்ருஷ்ணன் கைமுனையை மீண்டும் வந்தடைந்தது.

வைசம்பாயனர் சொன்னார் : அஸுர வீழ்ச்சியில் செய்ய வேண்டியதைச் செய்து முடித்த சக்ரம் வந்தடைந்தும், அறுக்கப்பட்ட கைகளுடைய மலைபோன்ற மஹாஸுரன் ரத்த வெள்ளம் பெருகும் உடலுடையவன் ஆனான். ரத்த வெறி கொண்டு மேகம்

போல் பலபடி ஓலமிட்டான். அவனது பேரொலியால் சத்ருக்களை யழிக்கும் க்ருஷ்ணன் பாணனை அழிக்க உத்தேசித்து மறுபடியும் சக்ரத்தைப் ப்ரயோகிக்க விரும்பினான்.

மாலுடன், மஹாதேவன் அவனிடம் வந்து சொன்னான்: 'க்ருஷ்ண! க்ருஷ்ண! மஹாபாஹோ! உன்னைப் புருஷோத்தமனாகவும், மதுகைடபரை வதம் செய்தவனாகவும், தேவ தேவன் மிகப் பழமையனாகவும் அறிகிறேன். தேவா! நீ உலகுக் கெல்லாம் புகலிடம். இந்த உலகம் உன்னிடமிருந்து உண்டானது. தேவாஸுர பந்நகருடன் கூடிய மூவுலகங்களாலும் நீ ஜயிக்கப்பட முடியாதவன். ஆதலால் நீ நன்கு உயர்த்தியதும், தடுக்க முடியாத, அழிக்க முடியாத, போரில் சத்ருவைப் பயப்படுத்தும் இந்தத் திவ்ய சக்ரத்தை நன்றாக அமைத்துக் கொள். கேசியை வதம் செய்தவனே! இந்தப் பாணனுக்கு என்னால் அபயங் கொடுக்கப்பட்டது. அந்த என் வார்த்தை வீணாகக் கூடாது. ஆகையால் உன்னை க்ஷமை செய்ய ப்ரார்த்திக்கிறேன்.'

க்ருஷ்ணன் சொன்னான். 'தேவா! இந்த பாணன் உயிருடன் இருக்கட்டும். இந்தச் சக்ரம் திருப்பி கொள்ளப்பட்டது. தேவா! தேவர்களாலும் அஸுரர்களாலும் நீ எல்லாப் படியாலும் கௌரவிக்கத் தக்கவன். மஹேஸ்வரா! உனக்கு வணக்கம். செய்யப்பட வேண்டிய கார்யம் செய்யப்படப் போவதில்லை. ஆதலால் என்னை அனுமதிக்க வேண்டும். போய் வருகிறேன். விசால உள்ளம் படைத்த க்ருஷ்ணன், மஹாதேவனிடம் இப்படிச் சொல்லி நாக பாசங்களால் கட்டப்பட்ட அனிருத்தன் இருக்குமிடம் சென்றான்.

க்ருஷ்ணன் சென்றதும் நந்தி பாணனைப் பார்த்து [illegible] வார்த்தை சொல்லிற்று. 'பாணா! [illegible] மஹாதேவனின் முன்னால் செல்' [illegible] பாணன் சீக்ரமாகச் சென்றான். [illegible] பாணனைப் பார்த்து இவனைத் தேற்றிவிடு! மஹாதேவனை [illegible] சிறந்த [illegible] வாய்ந்த நந்தி சொன்னான். பிறகு நந்தி பாணனைப் பார்த்து மறுபடியும் நல்ல வார்த்தை சொன்னான். 'பாணா! பாணா! [illegible] உனக்கு [illegible] இந்த மஹாதேவன் உனக்கு ப்ரியத்துடன் அனுக்ரஹம் செய்வான்.' நந்தி வார்த்தையால் தூண்டப்பட்ட அந்த பாணாஸுரன் [illegible] உயிருக்கு வேண்டிப் பயத்துடன் நடுங்கி, சங்கரனுக்கு முன்னால் நடனமாடினான். நந்தி வாக்யத்தால் தூண்டப்பட்டு பயத்துடன் நடுங்கி நடனமாடும் அந்தப் பாணனைப் பார்த்து, பக்தானுக்ரஹம் செய்யும் மஹாதேவன், கருணை வசப்பட்டுத திரும்பத் திரும்ப வார்த்தை

சொன்னான். ஈஸ்வரன் சொன்னான் : 'பாணு! நீ மனதால் விரும்பும வரத்தை வேண்டிக் கொள். உன்னிடம் கருணையால் நான் ப்ரீதனுனேன். அஸுரனே! நீ எனக்கு ப்ரியனாயிருக்கிறாய்.' பாணன் சொன்னான் 'ப்ரபோ! நான் எப்போதும் போரில் இறப்பற்றவனாயிருக்க வேண்டும். நீ விரும்பினால் இது என் முதல் வரமாயிருக்க வேண்டும்.' மஹாதேவன் சொன்னான் : 'பாணா! நீ தேவர்களுக்கு ஸமமாயிருக்கிறாய். உனக்கு மரணமில்லை. பிறகு மற்றொரு வரம் வேண்டிக் கொள். எப்போதும் என்னால் அனுக்ரஹிக்கத் தக்கவனாயிருக்கிறாய்.' பாணன் சொன்னான், தேவா! ரத்தம் பூசப்பட்டு, மிகப் புண்பட்டு வருந்தி நான் நடனமாடுகிறேன். தேவா! அப்படியே நடனமாடும் பக்தாகளுக்கு மக்கட்பேறு உண்டாக வேண்டும்.'

ஸ்ரீஹரன் சொன்னான்: 'ஆகாரமின்றிப் பொறுமையோடு உண்மை ஒழுங்குடையவர்களாய் நடனமாடும் என் பக்தர்களுக்கு இவ்விதம் (புத்ரப்பேறு) உண்டாகட்டும். பாணு! நீ உன் மனதிலுள்ள மூன்றாம் வரத்தையும் கேட்டுக் கொள். மகனே! உனக்கு அதைச் செய்வேன். இங்கு வரம் பெற்று பலனடைந்தவனாயிரு.' பாணன் சொன்னான், பாபமற்றவனே! எனக்குச் சக்ர அடியால் உண்டாக்கிய கொடிய துன்பம் மிகுந்திருக்கிறது. இந்தத் துன்பம் உனது மூன்றாம் வரத்தால் சாந்தியடையட்டும். ருத்ரன் சொன்னான்: 'அப்படியே ஆகட்டும். உனக்கு மங்களம். துன்பம் சக்தி யுடையதாகாது (அழியும்). உனது உடல் புண்கள் நீங்கி ஸுக நிலே யுடையதாகும். நான்காம் வரம் தருவேன். விரும்பியதைக் கேட்டுக் கொள். குழந்தாய் உன்னிடம் எனக்கு வெறுப்பில்லை. கருணையால் உன்னிடம் நான் விருப்புள்ளவன்.' பாணன் சொன்னான்: ப்ரபோ! ப்ரமத கண ஸமுதாயத்தில் தலைவனாக வேண்டும். நீண்ட கால மஹாகாலன் [illegible] பெற வேண்டும்.'

ஸனத்குமாரர் சொன்னார்: மஹேஸ்வர தேவன் பாணனுக்கு இவ்விதம் சொன்னான்: 'என்னை அண்டியதால், திவ்ய ரூபங் கொண்டு புண்கள் ஆறி ரோகமற்றவனுய் இப்படி ஆகும். கீர்த்தி பெற்ற பலமும், பௌர்ஷமும் உடைய பாணனே! எனது ஸமீபத்தில் நீ எங்கிருந்தும் பயமற்றவனாக ஆவாய். திரும்பவும் ஐந்தாவது வரம் தருவேன். உனது மனதில் இருப்பதை மறுபடியும் கேள். உனக்கு மங்களம்.' பாணன் சொன்னான், தேவா! பவா! எனது உடலில் உண்டான குரூபம் இருக்கக் கூடாது. இரண்டு கையுடன் இருந்த போதிலும் குரூபமாக இருக்கக் கூடாது. ஸ்ரீஹரன் சொன்னான்: 'மஹாஸுரா! பாணு! நீ விரும்புகிறபடி இந்த எல்லாம் உனக்கு உண்டாகும். பக்தர்களுக்குக் கொடுக்க முடியாதது எனக்கு ஒன்றுமில்லே.

வைசம்பாயனர் சொன்னார் : பின்பு அருகிலிருந்த பாணனைப் பார்த்து மஹாதேவன் சொன்னான்: 'உன்னால் விரும்பி வேண்டப்பட்ட எல்லாம் அப்படியே ஆகும் முக்கண்ணன் தேவன் இவ்விதம் சொல்லி எல்லாப் பூதங்களும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கணங்களால் சூழப்பட்டு அவ்விடத்திலேயே மறைந்தான்.

126 அத்யாயம் முற்றும்

## அத்தியாயம் 127

### அநிருத்தன் நாக பாசத்தினின்று விடுபடல் - அநிருத்தன் உஷையை மணத்தல் - கும்பாண்டனுக்கு ராஜ்யம் கொடுத்தல் - துவாரகைக்குப் புறப்படல் - வழியில் வருணனோடு பசுக்கள் காரணமாகப் போர் நிகழ்தல் - பசுக்களை அவனுக்கே கொடுத்து த்வாரகை சேர்தல்

வைசம்பாயனர் சொன்னார்: இவ்விதம் பாணன் பல வரங்களைப் பெற்று மகிழ்ந்த மனத்தினனுனன். மஹாகாலன் தன்மையடைந்து ருத்ரனுடன் சென்றான். வாஸுதேவனும் நாரதரைப் பலபடி கேட்டான். பகவானே! நாகபந்தத்தால் கட்டுண்ட அநிருத்தன் எங்கிருக்கிறான் உள்ளபடி கேட்க விரும்புகிறேன். என் மனது (அவனிடம்) ஸ்நேஹத்தால் வருந்துகிறது. அநிருத்தன் அபஹரிக்கப்பட்டதால் த்வாரகாபுரி கலங்கியிருக்கிறது. அவனைச் சீக்ரம் விடுவிப்போம். அதற்காக நாம் வந்துள்ளோம். நாசமடைந்த சத்ருவையுடைய அந்த அநிருத்தனை இப்போதே நாம் பார்க்க விரும்புகிறோம். பகவானே! நல்ல வ்ரதமுடையவனே! அந்த இடமோ உமக்கு தெரிந்தது.'

க்ருஷ்ணனுல் இவ்விதம் சொல்லப்பட்ட நாரதர் பதில் சொன்னார். மாதவா! க்ருஷ்ணா! கன்னிகை அந்தப்புரத்தில் இந்தப் பிள்ளை நாகபாசங்களால் கட்டப்பட்டான். இச் சமயத்தில் சித்ரலேகை வந்தாள். 'சிவனுக்கு மிக ப்ரியமான மஹாத்மா அஸுரஸ்ரேஷ்ட பாணனின் இந்த அந்தபுரத்தில், தேவனே! ஸுகமாகப் புகவும்' என்று சித்ரலேகை சொன்னாள். பிறகு பலராமன், கருடன், க்ருஷ்ணன், ப்ரத்யும்னன், அப்படியே நாரதர் அந்த எல்லோரும் அநிருத்தனை விடுவிக்க அங்குப் புகுந்தனர். பிறகு கருடனைப் பார்த்தவுடனேயே அநிருத்தன் உடலில் சுற்றிக் கொண்டிருந்த அம்பு ரூபமான மஹா ஸர்பங்கள் எல்லாம் அவனுடைய தேஹத் திலிருந்து சீக்ரம் வெளிக் கிளம்பிப் பூமியில் சுற்றி விழுந்து இயற்கை அம்புகளாகவே ஆயின. மஹாகீர்த்தி வாய்ந்த அந்த அநிருத்தன் க்ருஷ்ணனால் பார்க்கப்பட்டான்.

தொடவும் பட்டான். ப்ரீதி மனத்தினனாகி கை கூப்பி அநிருத்தன் வார்த்தை சொன்னான். தேவதேவா! கேசவா! நீர் எப்போதும் போரில் வெற்றி கொள்பவர். ஸாக்ஷாதிசதக்ருது தேவேந்தரனும் உம்முன் எதிர்த்து நிற்பதற்கு சக்தியுள்ளவனில்லை. பிறகு மஹாபலன் கீர்த்தி வாய்ந்த பலராமனை விசால மனதுடைய அநிருத்தன் மகிழ்ந்து வணங்கினான். கைகூப்பி மஹாத்மா மாதவனுக்கு அபிவாதனம செய்து, மஹா வீர்யன் பக்ஷிஸ்ரேஷ்டனை அபிவாதனம் செய்து, பின் விசித்ர பாணம் தரித்த மகரத்வஜன் தன் பிதா ப்ரத்யும்னனையும் அருகில் வந்து அபிவந்தனம் செய்தான். வீட்டிலிருந்த, தோழியர் கணங்களால் சூழப்பட்ட உஷாதேவியும் மிக்க பலமுடைய பலராமனேயும், மிகவும் ஜயிக்க முடியாத வாஸுதேவனேயும், கணக்கிடவொணு வேகமுடைய கருடனேயும் வணங்கி, மன்மதனாகிய ப்ரத்யும்னனேயும் வெட்கத்துடன் வணங்கினாள்.

பிறகு இந்க்ரன் வார்த்தையால் பரம தேஜஸ்வீ அந்த நாரதர் சிரித்துக் கொண்டு க்ருஷ்ணன் ஸமீபம் திரும்ப வந்தார். சத்ருக்களே அழிக்கவல்ல அந்த கோவிந்த தேவனேப் பெருமைப் படுத்தினார். 'கோவிந்தா! அதிரிஷ்டத்தால அநிருத்தன் சேர்க்கை காரணமாகப் பெருமையடைகிறாய். பின் ; அநிருத்தனுக்கு வீர்ய விவாஹம் செய்யப்படட்டும். ஜம்பூல மாளிகையில் பிள்ளை, பெண் அகத்து ஸ்த்ரீகளின் பரிஹாசப்) பேச்சுக்கள் கேட்க என் மனதில் ஸ்ரத்தையுண்டாகிறது.'. நாரதர் வார்த்தையைக் கேட்டு பிறகு எல்லோரும் பரிஹாஸம் செய்து கொண்டனர். க்ருஷ்ணன் சொன்னான், ' பகவானே! சீக்ரம் ஆகட்டும் தாமஸம் வேண்டாம்.' இந்த மைதானத்தில் அப்பா! ஜனமேஜயா! கும்பாண்டன் விவாஹத்துக்கான பொருள்கள் எடுத்துக் கொண்டு க்ருஷ்ணனே வணங்கி நின்றான்.

கும்பாண்டன் சொன்னான். க்ருஷ்ணா! க்ருஷ்ணா! மஹாபாஹோ! எனக்கு அபயம் கொடு. தேவேச! உன்னைச் சரணடைகிறேன். க்ருபை செய். உனக்கு இந்த அஞ்சலி.' நாரதர் வசனமெல்லாம் முன்னரே கேட்ட அச்சுதனும், அந்த மஹாத்மா கும்பாண்டனுக்கு அபயம் கொடுத்தான். 'கும்பாண்டா! மந்த்ரிகளில் சிறந்தவனே! நல்லொழுக்கத்தினனே! உன்னிடம் ப்ரீதி கொண்டேன். உனது நல்ல செயல்களை அறிவேன். நீ இங்கு ராஷ்ட்ரபதியாயிரு. இங்கு நீ பந்துக்களுடன் கூடி மிக்க ஸுகத்துடன் நிம்மதி அடைந்திரு. என்னால் உனக்கு ராஜ்யம் கொடுக்கப்பட்டது. என்னை யண்டி சிரஞ்ஜீவியாயிரு.' இந்த மஹாத்மா கும்பாண்டனுக்கு இப்படி ராஜ்யத்தைக் கொடுத்து ஜனார்த்தனன் அநிருத்தனுக்குக் கல்யாணம் செய்வித்தான்.

பின்பு அக்னி பகவான் (விவாஹ ஹோமத்துக்கு) தானாக வந்தான். அநிருத்தனின் அந்தக் கல்யாணம் சுப நக்ஷத்ரத்தில் நடந்தது. பிறகு அப்ஸரஸ் கணங்கள் மங்கள கார்யம் செய்ய வந்தன. பின்பு அங்கு அநிருத்தன் தன் பார்யையுடன் ஸ்நானம் செய்து அலங்கரித்துக் கொண்டான். அப்போது கந்தர்வரும் சுபமும் ப்ரியமுமான வார்த்தைகள் கொண்டு கானம் செய்தனர். அப்ஸரஸ்களும் நடனமாடி விவாஹத்தைச் சிறப்பித்தனர். சத்ருக்களை அழிக்கும், தெளிந்த புத்தியுடைய க்ருஷ்ணன் அநிருத்தனின் கல்யாணத்தை நடத்தி, எல்லாத் தேவர்களால் சூழப்பட்டுத் தேவர்கள் வணங்கவும்,வரந்தரும் ருத்ரனிடம் விடைபெற்று சத்ரு நகரத்தை ஜயிக்கும் க்ருஷ்ணன், த்வாரகைக்குப் போக எண்ணங் கொண்டான்.

சத்ருஸூதனன, மதுஸூதனன் க்ருஷ்ணன் த்வாரகை போகும் நோக்கினனுக இருப்பதை அறிந்து கும்பாண்டன், கைகூப்பி, வார்த்தைகள் சொன்னான். மாதவா! பாணனுடைய பசுக்கள் வருணன் கையில் இருக்கின்றன. அந்தப் பசுக்கள் அம்ருதம் போன்ற பாலைக் கறக்கின்றன. அதைக் குடித்து மனிதன் அதிபலனாயும், ஜயிக்க முடியாதவனாயும் ஆகிறான். இவ்விதம் கும்பாண்டனால் சொல்லப்பட்டதும் அப்போது மகிழ்ந்த மனத்தினனுன க்ருஷ்ணன், போக வேண்டுமென நினைத்துப் புறப்பட நிச்சயித்தான். பிறகு அந்தப் பகவான் ப்ரஹ்மா கேசவனைப் பாராட்டித் தன் லோகத்தவர் சூழ ப்ரஹ்ம லோகத்திற்குச் சென்றார். மருத் கணங்களுடன் கூடிய இந்த்ரன் த்வாரகை நோக்கிச் சென்றான். பின்பு க்ருஷ்ணன் புறப்பட்டான். ஜயத்தை விரும்பும் மற்றவரும் சென்றனர். ஸகிகள் சூழ உஷை மயில் வாஹனத்தில் பார்வதி தேவியால் வழியனுப்பப்பட்டு த்வாரகை நோக்கிச் சென்றாள். பின்பு பலராமன், க்ருஷ்ணன், மஹாபலன் ப்ரத்யும்னன், வீர்யவான் அநிருத்தனும் கருடன் மேலேறிக் கொண்டனர். பக்ஷி ஸ்ரேஷ்டன் தேஜஸ்வீ கருடனும் மரக்கூட்டங்கள் வேரொடு கிளம்பி விழச் செய்து கொண்டும், பூமியை நடுங்கச் செய்து கொண்டும் புறப்பட்டான். எல்லாத் திக்குகளும் கலங்கின. ஆகாயம் தூசி நிறைந்தது. கருடன் புறப்பட்டதும் சூர்யன் ஒளி மங்கினான். பின்பு அந்தப் புருஷ ஸ்ரேஷ்டன் உள்ளிட்ட எல்லோரும் மிக்க வீர்யவான் பாணனை ஜயித்துக் கருடன் மேலேறி வெகுதூரம் சென்றனர். பின்பு ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கும் (வருணனின்) மேற்கு திக்கை அந்த மஹாத்மாக்கள் அடைந்தனர். ஸமுத்ர தீர வனத்தில் ஸஞ்சரிக்கும் திவ்ய பாலைத் தரும் பல நிறமுடைய பசுக்களை [illegible]ங்கில் கண்டனர்.

உண்மையறிந்தும் கார்யம் செய்யவல்ல போரிடுவோரில் வல்ல க்ருஷ்ணன் கும்பாண்டன் வார்த்தையால் அந்தப் (பாணனின்) பசுவின் ரூபமறிந்து பாணன் பசுக்களைப் பார்த்து அப்போது அந்தப் பசுக்களிடத்தில் தன் மனதைச் செலுத்தினான். கருடன் மேலிருக்கும் உலகுக்கெல்லாம் முதலான குறைவற்ற கோவிந்தன் கருடனிடம் சொன்னான். (ஸ்ரீகிருஷ்ணன் சொன்னான்) :'கருடா! பாணன் பசுக்கள் இருக்குமிடம் செல். அவைகளின் பாலைக் குடித்துச் சாகா நிலை அடைகிறானல்லவா! ஸத்யபாமாவும் எனக்குச் சொன்னாள். பாணன் பசுவைக் கொண்டு வாருங்கள். அவைகளின் பாலைக்குடித்துப் பெரிய அஸுரர்கள் மூப்பின்றி யிருக்கிறார்களல்லவா? தர்மம் கேடின்றியிருப்பதானால் அவைகளைக் கொண்டு வாருங்கள். உமக்கு மங்களம். அப்படியின்றிச் செல்லும் கார்யத்துக்குத் தடையேற்படுமானால் அவைகளில் மனம் வைக்க வேண்டாம் என்று ஸத்யபாமை எனக்குச் சொன்னாள். அந்தப் பசுக்களான இவை என்னால் முன்னரே அறியப்பட்டவை.

கருடன் சொன்னான்: முன் சொல்லப்பட்ட அந்தப் பசுக்கள இதோ இங்குக் காணப்படுகின்றன என்னைப் பார்த்து எல்லாப் பசுக்களும் ஸமுத்ரத்தில் மறைந்தன. இதில் தக்க கார்யம் செய்யப்பட வேண்டும். இவ்விதம் சொல்லிக் கருடன் இறக்கைக் காற்றால் ஸமுத்ரத்தைத் திடீரென கலங்கச் செய்து ஸமுத்ரத்தில் புகுந்தான். வேகமாக ஸமுத்ரத்தை அடைந்த கருடனைப் பார்த்து எல்லா வருண கணங்களும் மிக ப்ரமித்தன. நடுங்கவும் செய்தன. பின்பு மிகவும் ஜயிக்க முடியாத வருணனின் ஸேனை கிளம்பிற்று. வாஸுதேவன் எதிரில் கருடனுக்கும் நானாவித ஆயுதங்கள் ஏந்திய வருண ஸேனைக்கும் கொடிய போர் நிகழ்ந்தது போரில் வேகமாகப் பாயும் அந்த வருணனின் அடக்க முடியாத ஸேனை மஹாத்மா கேசவனால் ஆயிரக்கணக்கில் பங்கப்படுத்தப்பட்டது. பிறகு அவர்கள் ஓடி ஸமுத்ரத்துள் புகுந்தனர். அறுபத்தாறாயிரம் ஜ்வலிக்கும் ஆயுதங்களுடைய வருணனின் போர்த் தேர்படை வந்தது. அந்தப் படை, பலவான்களும் சூரர்களுமான பலராமன் ஜனார்த்தனன், ப்ரத்யும்னன், அநிருத்தன், கருடன் இவர்களால் நாற்புறமும் எல்லா முறையிலும் பலவித கூரிய அம்புக் கூட்டங்களால் வதம் செய்யப்பட்டது. எளிதில் எதையும் செய்யவல்ல க்ருஷ்ணனால் ஸேனை பங்கப்படுத்தப் பட்டதைப் பார்த்து கோபங்கொண்ட வருணன் கேசவனிருக்குமிடத்துக்கு வந்தான்.

ரிஷிகள் தேவகந்தர்வர் அப்படியே அப்ஸரஸ் கூட்டங்கள் இவர்களால் பல படியாக ஸ்துதிக்கப்படும் வருணன் அங்கு வந்து காணப்பட்டான். ஜலம் சொரியும் வெண்ணிறக் குடை பிடிக்கப்பட்டு சிறந்த வில்லேந்தி வருணன் வந்தான். அபாம்பதி வருணன் மிகக் கோபங் கொண்டு புத்ர பௌத்ர ஸேனைகளுடன் பெரிய வில்லை நாணேற்றிச் சப்தம் செய்து போருக்கு அழைப்பவன் போல் நின்றான். வருணன் போர் சங்கை ஊதி ருத்ரன் போல் க்ருஷ்ணனை நோக்கி ஓடினான். அம்புக் கூட்டங்களால் க்ருஷ்ணனைச் சுற்றிலும் மூடினான். பிறகு மஹாபலன் ஜனார்தனன் ஜலத்தில் பிறந்த பாஞ்சஜன்யத்தை ஊதி பாணக் கூட்டங்களால் எல்லா திசைகளையும் மறைத்தான். பிறகு ப்ரகாசிக்கும் பாணங்களால் போரில் வருணன் துன்புறுத்தப்பட்டான். வருணன் பின்பு கர்வங்கொண்டு க்ருஷ்ணனை எதிர்த்துப் போரிட்டான். வாஸுதேவன் பிறகு கொடிய வைஷ்ணவ மந்த்ரத்தைச் சொல்லி பாணத்தை ஊக்குவித்துப் போர்களத்தில் நின்றான்.

அந்தப் புத்திமான் வருணனிடம் வார்த்தை சொன்னான்: சத்ருவை அழிக்கும் மிக்க கொடிய இந்த வைஷ்ணவ அஸ்த்ரம் உன் வதத்தின் பொருட்டு என்னால் ஏவ உயர்த்தப்பட்டது. அசையாது இரு. அந்த மஹாபலன் வருணன் பிறகு வைஷ்ணவ பாணத்தை வாருணாஸ்த்ரத்தால் எதிர்த்துத் தூக்கிக் கோஷமிட்டான். வருணனின் அஸ்த்ரத்திலிருந்து விஸ்தாரமாக ஜலம் வெளிக்கிளம்பிற்று. போரில் வெல்லும் வருணன் வைஷ்ணவாஸ்த்ரத்தை அடக்குவதில் முயன்றான். வருணாஸ்த்ரத்தின் ஜலம் ஆங்காங்கு விழுந்து ஜ்வலித்தது. பிறகு திரும்ப மஹா வீர்யமுள்ள வைஷ்ணவ பாணம் ஜ்வலிக்கும் போது வருண ஸேனை தஹிக்கப்பட்டுப் பயந்து திசைகளில் ஓடின.

அந்த வருணஸேனை ஜ்வாலையால் தஹிக்கப்பட்டதைப் பார்த்து வருணன் க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னான்: க்ருஷ்ணா! இங்கு வ்யக்த ரூபமான நீ முன் அவ்யக்தமான உனது ப்ரக்ருதியை நினைவில் கொள். மஹா பாக்யசாலியே! தமோ குணத்தை அடக்கு. தமோகுணத்தால் ஏன் மயங்குகிறாய்? யோகீஸ்வரா! மஹாபுத்தியுடையவனே! எப்போதும் ஸத்வ குணமுள்ளவனாகவே உன் இயற்கைக் குணத்தால் இருக்கிறாய். பஞ்ச பூதங்களை அடையும் தோஷங்களையும் அஹங்காரத்தையும் அகற்று. வைஷ்ணவ மூர்த்திகளுக்கெல்லாம் முதல் மத்ஸ்யா வதாரத்துக்கு இன்றியமையாத முன் தோன்றிய நான் ஜ்யேஷ்டன். ஜ்யேஷ்ட பாவத்தால் கௌரவிக்கத்தக்க என்னை

எதற்காகத் தஹிக்க விரும்புகிறாய். வீரஸ்ரேஷ்ட! அக்னி அக்னியில் விக்ரமத்தைக் காட்டாது. உன்னிடத்தில் நான் சக்தியுடையவன் இல்லை. நீ ஜகத்துக்கு உற்பத்தி காரணமாக இருக்கிறாய். விகாரமடையும் ப்ரக்ருதி உன்னால் முதலில் படைக்கப்பட்டது. மாறும் தர்மத்தைக் கொண்டது. உற்பத்தி காரணத்தால் காரண ரூபமாயிருக்கிறது. ஆக்நேயாஸ்த்ரம் வைஷ்ணவாஸ்த்ரம் இவை இரண்டும் முதலிலிருந்தே ஸ்வபாவத்தில் நட்பானவை. இந்த உலகம் முழுதும் உன்னால் படைக்கப்பட்டது.

என்னிடம் ஸௌம்யத்துடன் இருக்க வேண்டிய நீ எப்படி விரோத பாவத்துடனிருக்கிறாய்? மஹா சோபையுடையவனே! தேவரீர் ஜயிக்க முடியாதவர். நிலையானவர். தான்தோன்றி பூதங்களுக்கு உயிர்ச் சக்தி. அழிவற்றதும் அழிவதும் உனது பாவமும் அபாவமும் ஆகும். பாபமற்றவனே! என்னை ரக்ஷி. உன்னால் நான் ரக்ஷிக்கத் தக்கவன். உனக்கும் வணக்கம். லோகத்துக்கெல்லாம் முதலில் படைப்பவன் நீ. உன்னால் இது (உலகு) விரிவாக்கப்பட்டது. மஹாதேவா! விளையாட்டுப் பொருள் கொண்டு வினையாக்குவது போல் நீ விளையாடுகிறாய். நான் ப்ரக்ருதி த்வேஷி இல்லை. தூஷிப்பவனும் இல்லை. மஹாதேஜஸ்வீ! புருஷ ஸ்ரேஷ்ட! விகாரங்களிலிருக்கும் ப்ரக்ருதியை அடக்குவதில் நீ அடக்கிச் செயல் புரிகிறாய். பாபமற்றவனே! விகாரங்களுக்கு விகாரம். உன் விகாரத்துக்காகாது செயலற்ற தர்மமறியாதவைகளை நீ எப்போம் விகாரமடையச் செய்கிறாய். இந்த உலகு ப்ரக்ருதி தோஷங்கள் காரணமாக தமோகுணத்தால் எப்போதும் மயங்குகிறது. ரஜோ குணத்தால் தொடப்படும் போது மோஹம் உண்டாகிறது. ஸர்வக்ஞா! உயர்ந்தது தாழ்ந்தது இரண்டையும் அறிந்தவனும் ஐஸ்வர்ய முறையை அடைந்தவனுமான நீ ப்ரஜாபதியைப் போல் எங்கள் எல்லோரையும் ஏன் மோஹிக்கச் செய்கிறாய்? உலகம் போற்றும் உலக ப்ரக்ருதி அறிந்த வருணனால் இவ்விதம் சொல்லப்பட்ட எல்லாம் செய்யும் தீரன் க்ருஷ்ணன் ப்ரிய மனத்தினன் ஆனான்.

இப்படிச் சொல்லப்பட்ட க்ருஷ்ணனும் சிரித்து வார்த்தை சொன்னான்: வீரா! பயங்கர பராக்ரமசாலியே! சாந்திக்காக எனக்குப் பசுக்களைக் கொடு. க்ருஷ்ணனால் இப்படி சொல்லப்பட்டதும் சொற் செல்வன் வருணன் திரும்பவும் சொன்னான்: மதுஸூதனா! நான் சொல்வதைக் கேள். தேவா! முன்னர் பாணனுடன் என்னால் ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது. ஒப்பந்தம் செய்து வேறு விதம்

ஒப்பந்தத்தைப் பயனற்றதாக எப்படி செய்வேன்? நீ எல்லாம் அறிவாய். ஒப்பந்தத்தை மீறுகிறவன் ஒழுக்கம் கெடுகிறது. ஆதலால் ஸாதுக்களால் கௌரவிக்கப்படுகிறதில்லை. மதுஸூதனா! தர்மாத்மாக்களால் ஒப்பந்தத்தை மீறும் மனிதன் எப்போதும் விலக்கப்படுகிறான். பாபியான அவன் உத்தம லோகம் அடையமாட்டான். மதுஸூதனா! அருள்புரி. தர்மலோபம் எனக்கு உண்டாக வேண்டாம். மாதவா! என்னை ஒப்பந்தம் மீறும்படி நீ செய்ய வேண்டாம். காளை கண்ணா! நான் உயிருள்ளவரை பசுக்களைக் கொடுப்பதில்லை. என்னைக் கொன்று பசுக்களை அழைத்துச் செல். இது நான் செய்த ஒப்பந்தம். மதுஸூதனா! இந்த ஒப்பந்தம் உனக்கு நன்கு சொல்லப்பட்டது. மஹாபாஹோ! இது ஸத்யமே! தேவதேவா! இது பொய்யில்லை. மதுஸூதனா! நான் இப்படி அனுக்ரஹிக்கத் தக்கவனாயின் என்னை ரக்ஷி. மஹா புஜா! பசுக்களைக் கொண்டு போக நிர்பந்தமானால் என்னைக் கொன்று அவைகளைக் கொண்டு போ.

வருணனால் இவ்விதம் சொல்லப்பட்ட யதுவம்சத்தை வளர்க்கும் க்ருஷ்ணனும் ஒப்பந்தம் மீற முடியாததை நினைத்து பசுக்களைப் பற்றிய பேச்சை நிறுத்தினான். காரியங்களை ஆராய்ந்து செய்ய வல்ல க்ருஷ்ணன் சிரித்து பிறகு வார்த்தை சொன்னான். பாணனுடன் இப்படி ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்குமானால் [illegible] காரணத்தால் விடப்பட்டாய். [illegible] சேர்ந்த மதுரமான [illegible] வருணனை [illegible] [illegible] நீ [illegible] [illegible] [illegible] வருணன் [illegible] கொண்டு [illegible] [illegible] பூஜித்தான். மதுஸூதனன் [illegible] வருணனிடம் [illegible] பெற்றுக் கொண்டான். பின்பு [illegible] வருண தேவன் [illegible] பலராமனையும் பூஜித்தான். கீர்த்தி வாய்ந்த உபேந்த்ரன் வாஸுதேவன் வருணனுக்கு அபயம் தந்து தேவேந்த்ரனுடன் த்வாரகைக்குப் புறப்பட்டான். அங்கு மருத்துக்கள், ஸாத்யர்கள், ஸித்த சாரணர்கள் கூடிய தேவர்கள், கந்தர்வ அப்ஸரஸ்கள், ஆகாயத்தில் செல்லும் கின்னரர்கள் இவர்கள் எல்லோரும் பூதங்களுக்குத் தலைவனும் ஆதியும் அழிவற்றவனுமான க்ருஷ்ணனைப் பின் தொடர்ந்தனர். ஆதித்யர், வஸூக்கள், ருத்ரர்கள், அஸ்வினி தேவதைகள், யக்ஷ ராக்ஷஸர்

வித்யாதர கணங்கள், மற்றுமுள்ள ஸித்தசாரணர் எல்லோரும் வெற்றியுடனும் புகழுடனும் செல்லும் க்ருஷ்ணனைப் பின் தொடர்ந்தனர். கைலாச சிகரம் போன்ற மங்களமான அறைகள் கொண்ட மாளிகைகளும் அழகிய வரிசையான வாயில்களுடைய த்வாரகாபுரியை நோக்கி சீக்ரம், கதை தரித்த மதுஸூதனன் பாஞ்ச ஜன்யத்தை ஊதினான். இப்படி க்ருஷ்ண தேவன் த்வாரகா புரிவாசிகளுக்கு தான் வரும் அடையாளம் தெரிவித்தான். பின்தொடர்ந்த தேவர்கள் சப்தத்தையும், பாஞ்சஜன்ய முழுக்கத்தையும் கேட்டு த்வாரகை முழுதும் ஒப்பற்ற ஸந்தோஷமடைந்தது. பூர்ண கும்பங்களாலும், நெற்பொரிகளாலும், பலபடி விரிவாக த்வராகாபுரியை ப்ராகாசிக்கும் வாயில்களை யுடையதாகவும், சிறந்த பொருள்களால் ப்ரகாசிப்பதாகவும் செய்தனர்.

குலாசாரத்தில் சிறந்த விப்ரர்களும் அர்க்யம் கொண்டு வந்து அப்படியே பல வித ஜய கோஷங்களாலும், கருடன் மேலிருக்கும் கரிய மைத்திரள் போன்ற அந்த க்ருஷ்ணனைப் பூஜித்தார்கள். மிகச் சிறந்த சோபை பொருந்திய அந்த க்ருஷ்ணனை எல்லாப் பிரிவினரும் முறைப்படி பூஜித்தனர். வணிகர்கள் முன்னிட்ட வரிசையாரும், கேசியை வதம் செய்த அனந்தன் க்ருஷ்ணனைப் பூஜித்தனர். த்வாரகையின் உபவனத்திலிருக்கும் தாமரைக் கண்ணன் ரிஷிகளாலும் தேவகந்தர்வர்களாலும், சாரணர்களாலும் ஸ்துதிக்கப்படுகிறார். தாஸார்கணத்தில் சிறந்தவர் அந்த ஆச்சர்யத்தைக் கண்டனர். பாணனை ஜயித்துத் திரும்பி வரும் மஹாபுஜன் மஹா தேவன் புருஷோத்தமன் க்ருஷ்ணனைப் பார்த்து ஒப்பற்ற மகிழ்ச்சி யடைந்தனர்.

யாதவ மஹாரதன், மஹா பாக்கியசாலி க்ருஷ்ணன் நகரை அடைந்த போது த்வாரகா வாஸிகள் பலவித வார்த்தைகள் பேசினர். கருடன் தூர வழி சென்று சீக்ரம் வந்துள்ளான். புண்யவான்களானோம். அனுக்ரஹிக்கப்பட்டோம். ஜகத்துக்குப் பிதா மாக்கு ஜயன், க்ருஷ்ணன் நமக்கு ரக்ஷகனாகவும், பாலகனாகவும் இருக்கிறான். இந்தத் தாமரைக் கண்ணன் கருடன் மேலேறி, ஜயிக்க முடியாத பாணஸூரனை ஜயித்து நமது மனதை ஆனந்தப்படுத்திக் கொண்டு வந்துள்ளான். இப்படி த்வாரகாவாஸிகள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அந்த மஹாரத தேவர்கள், வாஸுதேவன் மாளிகையை அடைந்தனர். வாஸுதேவன், பலராமன், ப்ரத்யும்னன், அநிருத்தன் இவர்கள் கருடன் மேலிருந்து இறங்கி வீடுகளை அடைந்தனர். பின்பு பலவித ரூபங்கொண்டு ஆகாயத்தில்

ஸஞ்சரித்து கொண்டிருந்த தேவ விமானங்கள் அப்போது அசையாமல் இருந்தன. அந்த விமானங்கள் ஹம்ஸம், வ்ருஷபம், மான், யானை, குதிரை, தாமரை முதலியவை களால் சோபிக்கின்றன. இவை ஆயிரக்கணக்கில் காணப்படுகின்றன.

பின்பு க்ருஷ்ணன், ப்ரத்யும்னன் முன்னிட்ட எல்லாப் பிள்ளைகளையும் நோக்கி இனிய ம்ருதுவான வார்த்தைகளைச் சொன்னான். இவர்கள் ருத்ரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், அச்வினி தேவதைகள் ஸாத்யர்கள், தேவர்கள், அப்ஸரஸ்ஸுக்கள் மற்றவர்களும் முறைப்படி (இவர்களை) வணங்குங்கள். அஸுரர்களுக்குப் பயங்கரனும் ஆயிரங்கண்ணனும் யானை வாஹனனும் ஆகிய கணங்களுடன் கூடிய மஹாபாக்யசாலி இந்த்ரனை எல்லோரும் சேர்ந்து வணங்குங்கள். மஹாபாக்யசாலி ஸப்தரிஷிகள், ப்ருகு அங்கிரஸ் இவர்களுடன் கூடியவர்கள் மற்ற மஹாத்மாக்களான ரிஷிகளையும் முறைப்படி வணங்குங்கள். சக்கரம் தரித்த லோக பாலகர்கள் இவர்கள். இவர்களை எல்லாப் படியாலும் வழிபடுங்கள். திக்குகள், விதிக்குகள் என்னிடம் ப்ரியத்திற்காக இங்கு வந்துள்ளார்கள். ஜோதிகளும், நக்ஷத்ரங்களும், ராக்ஷஸ கின்னரர்களும் என்னிடம் ப்ரியத்தின் பொருட்டு வந்துள்ளனர். முறைப்படி வந்தனம் செலுத்துங்கள். மிக்க பலமுடைய வாஸுகி முதலிய நாகங்களும் பசுக்களும் என்னிடம் ப்ரியத்திற்காக வந்துள்ளனர். முறைப்படி வழிபடுங்கள். வாஸுதேவன் வார்த்தையைக் கேட்டு மஹாத்மாக்களான எல்லாத் தேவதைகளையும் குமாரர்கள் முறைப்படி வழிபட்டு நின்றனர். நகர மக்கள் எல்லாத் தேவதைகளையும் பாத்து ஆச்சர்யமடைந்தனர். வழிபாட்டுக்கான பொருள்களை எடுத்துக் கொண்டு விரைவாக வந்தனர். 'அஹோ! மிகப் பெரிய ஆச்சர்யம். வாஸுதேவனை ஆச்யரயித்ததால் இங்கு இந்த பாக்யம் நம்மால் அடையப்படுகிறது என்று வார்த்தைகள் நடமாடின.

பிறகு நகர மக்கள் அந்த எல்லாத் தேவதைகளையும் வழிபட்டு வாஸனை புஷ்பங்களாலும் சந்தன சூர்ணங்களாலும் நாற்புறமும் இறைக்கின்றனர். எல்லா த்வாரகா வாஸிகளும் பொரிகளாலும், வணக்கங்களாலும், தூபங்களாலும் அப்படியே வாத்யத்வனி (முதலிய) பூஜா க்ரமங்களாலும் தேவர்களைப் பூஜித்தனர். அப்போது ஆஹுகன், வாஸுதேவன், யது குமாரன் சாம்பன்,ஸாத்யகி, உல்முகன், மஹாபலன், விப்ருது, மஹாபாக்யசாலி அக்ரூரன், நிசுடன் இவர்களை இந்த்ரன் ஆலிங்கனம் செய்து

உச்சி முகர்ந்து, யாதவ கூட்டத்தின் முன்னிலையில் ஸ்துதி செய்து கேசி வத க்ருஷ்ணனுக்குப் பதிலுரைத்தான். 'இந்த க்ருஷ்ணன் யாதவ ஸாத்வகுலத்தில் சிறந்தவன். இவன் ருத்ரனும் மஹாத்மா முருகனும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பராக்ரமத்தால் போரில் பாணனை ஜயித்து அநிருத்தனை விடுவித்து கீர்த்தியுடனும் பௌர்ஷத்துடனும் த்வாரகைக்குத் திரும்பி வந்துள்ளான். இந்த ஹரிக்ருஷ்ணன் ஆயிரங்கையுடைய பாணனுக்கு இரண்டு கைகளை (வெட்டாமல்) உத்மமாக இருக்கவிட்டு இரட்டைக் கையன் நிலையில் நிறுத்தி தன்னூர் திரும்பியிருக்கிறான். மஹாத்மா க்ருஷ்ணனுக்கு மனிதப் பிறவியின் கார்யம் முடிக்கப்பட்டது. நாம் சோகமற்றவராகச் செய்யப்பட்டோம். உங்களுக்கு இனிய மதுபானம் செய்வதிலும் விஷயானுபவங்களிலும் இடைவிடாமல் பொழுது கழியப் போகிறது. இந்த மஹாத்மா க்ருஷ்ணனுடைய கைகளை ஆஸ்ரயித்தால் நாமெல்லோரும் சோகம் நீங்கி ஸுகமாக விளையாடுவோம்.

ஆயிரம் கண்ணுடைய இந்த்ரன் அஸுர சத்ரு கேசவனை இவ்விதம் ஸ்துதித்து எல்லாக் கணங்கள் சூழ தேவ மருத் கணங்களுடன் உலகம் வணங்கும் க்ருஷ்ணனை ஆலிங்கனம் செய்தான். மறுபடியும் விடை பெற்று மஹாபாக்யசாலி இந்த்ரன் ஸ்வர்க்கம் சென்றான். மஹாத்மா ரிஷிகளும், யக்ஷ,ராக்ஷஸ, கின்னரர்களும் வெற்றி ஆசிகூறி வந்த வழி திரும்பிச் சென்றனர். இந்த்ரன் ஸ்வர்கம் சென்றதும் மஹாபலன்மஹாபாக்யசாலி பத்மநாபன் எல்லோரையும் க்ஷேமம் விசாரித்தான். பின்பு கிலாகிலா சப்தம் செய்து கொண்டு சந்த்ரிகையைப் பார்ப்பதற்கு ஆயிரக்கணக்கில் சென்றனர். பாபமற்ற அந்த க்ருஷ்ணன் எபபோதும் மகிழ்ச்சியுடன் இருந்தான். சிறந்த சோலையுடன் க்ருஷ்ணனும் த்வாரகையடைந்து விரும்பிய பலவித பொருள்களையும் யாதவ கணங்களுடன் கூடி ரமித்தான்.

அத்யாயம் 127 முற்றும்

## 128 அத்யாயம்

### த்வாரகையில் பெண்களின் அளவற்ற ஆனந்தம் - உஷை அநிருத்தனுடன் கூடி மகிழ்தல் - க்ருஷ்ணன் 'ஆஸ்சர்யன், தன்யன்' என்று நாரதர் சொன்னது உண்மையென நிறுவப்பட்டது - பலச்ருதி

வைசம்பாயனர் சொன்னார்: பின்பு மஹாபாஹு மஹாதேஜஸ்வீ ஆஹுகன் ஆனந்தத்தால் மலர்ந்த கண்களுடன், 'யதுநந்தன! கேட்கப்படட்டும்' என்று சொன்னான். க்ஷேமமாகத

திரும்பி வந்த க்ருஷ்ணனைப் பார்த்து மஹா ஞானியே! க்ருஷ்ண! அநிருத்தனுக்குப் பெரிய உத்ஸவம் செய்யப்படட்டும். ஸகிகளுடன் பணிவிடை செய்து சூழப்பட்ட உஷையும் அநிருத்தனுடன் சேர்ந்து மிக்க ப்ரீதியுடன் ரமிக்கிறாள். உஷையின் ஸகிகளின் குழுவில் கும்பாண்டன் மகள் மஹாபாக்யசாலியான ராமா அந்தப்புரத்தில் சேர்க்கப்படட்டும். ருக்மிணி தேவி கொண்டாடுவாள். கும்பாண்டன் மகள் மங்களமான ராமா சாம்பனுக்குக் கொடுக்கப்படட்டும். மற்ற பெண்களும் யது குமாரர்களுக்கு முறைப்படி கொடுக்கப்படட்டும். அந்த மங்கள உத்ஸவம் அநிருத்தனதும், ஸ்ரீதன்வாவதுமான மாளிகைகளில் நடக்கட்டும். அந்த த்வாரகாபுரியில் அந்தந்த மதங் கொண்ட பெண்கள் வாத்யங்கள் வாசித்தனர். அப்ஸரஸ்கள் நடனமாடினர். பிற ஸ்த்ரீகளும் ஆடினர். பலவித நிறங்கொண்ட ஆடை உடுத்த சில பெண்கள் விளையாடி மகிழ்ந்தனர். சிலர் ஒருவருக் கொருவர் உரையாடினர். மதங்கொண்ட பெண்கள் ஒருவருக் கொருவர் நெருங்கித் தழுவிக் கொண்டனர். சிலர் மகிழ்ச்சியால் மலர்ந்த கணங்களுடன் சதுரங்கம் போன்ற ஆட்டம் ஆடினர்.

க்ருஷ்ணன் ருக்மிணியிடம் சொன்னான்: பார்வதி தேவியால் அன்புடன் அனுப்பப்பட்ட [illegible] ஸகிகள் சூழ வந்திருக்கும் உஷை ஏற்றுக் கொள்ளப்படும். இவளும் சிறந்த குலத்தவள். உஷை என் [illegible] பாணன் மகள். உனது மருமகள். இந்தப் பெண்ணை ஏற்றுக் கொள்.

பின்பு கல்யாணத்திற்கு வேண்டிய முறைப்படி மங்களங்களுடன் ஸ்த்ரீகளால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அந்த மங்களமான உஷை [illegible] தேவகீ, [illegible] ருக்மிணியும் [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] முகமுடையாள் அந்த உஷை [illegible] பொருள்களுடன் ரமிக்கிறாள். இங்கு பெண்ணுருவாய் [illegible] அப்ஸரஸ் சித்ரலேகையும் உஷையிடமும் தோழியரிடமும் விடை பெற்று ஸ்வர்க்கம் சென்றாள். அந்த எல்லா ஸகிகள்

சென்றதும் அஸுர ஸுந்தரி உஷை (மாமியார்) மாயாவதியால் விசேஷமாக வரித்து தன் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். அழகிய இடையையுடைய (ப்ரத்யும்னன் தேவி) மாயாவதி அழகிய மருமகள் உஷையைப் பார்த்து ஆடைகளாலும் அன்ன பானங்களாலும் கௌரவித்தாள். பின்பு அந்த எல்லா யாதவப் பெண்களும் மருமகள் உஷைக்கு வழக்கத்தை அனுஸரித்து தங்கள் கடமைகளைச் செய்தனர்.

வைசம்பாயனர் சொன்னார்: குருகுல ஸ்ரேஷ்டனே! பாணன் ஜயிக்கப்பட்டதும் போரில் விஷ்ணுவால் உயிருடன் விடப்பட்டதும். இவையெல்லாம் என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. பின்பு க்ருஷ்ணன் யாதவ கணங்களால் சூழப்பட்டு த்வாரகையில் ரமித்திருந்தான். மிக மேலான மகிழ்ச்சியுடன் பூ மண்டல முழுதையும் ஆண்டான். ஜனமேஜயராஜனே! இவ்விதம் இந்த விஷ்ணு பூமியில் அவதரித்து யதுகுல ஸ்ரேஷ்டன் வாஸுதேவன் எனப் புகழப்பட்டான். இந்த காரணங்களால் ஸ்ரீமான் ப்ரபு விஷ்ணு வ்ருஷ்ணி வம்சத்தில் வாஸுதேவர் குலத்தில் தேவகியிடம் பிறந்தான். இது நீ என்னைக் கேட்ட விஷயம்.

ஜனமேஜயா! உன்னால் விஸ்தாரமாகக் கேட்கப் பட்டவை எல்லாம் முன்னர் நாரதரின் (110அ) "ஆஸ்சர்யன், தன்யன் யார்?" எனும் ப்ரச்னம் முடிவாக என்னால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. விஷ்ணுவின் மதுரை கல்பத்தில் பிறப்பு, வளர்ப்பில் உனது பெரிய ஸம்சய நீக்கமும் வாஸுதேவன் எல்லோருக்கும் புகலிடமென்பதும் என்னால் உனக்குச் சொல்லப்பட்டது க்ருஷ்ணனைத் தவிர வேறொரு ஆச்சர்ய வஸ்து இல்லை. க்ருஷ்ணன் ஆச்சர்யங்களுக்கு இருப்பிடம். ஆச்சர்யமான எல்லாவற்றிலும் விஷ்ணு ஸம்பந்தமில்லாத ஆச்சர்யமில்லை. இந்த க்ருஷ்ணன் பாக்யசாலிகளில் எல்லோரிலும் சிறந்த பாக்யசாலி. பாக்யம் செய்கிறவன். பாக்யமாகவே இருப்பவன். அஸுரர்களிலும் தேவர்களிலும் அச்சுதனைக் காட்டிலும் தன்யவான்கள் எவருமில்லை.

ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள், அஸ்வினி தேவதைகள், மருத்துக்கள் அப்படியே ஆகாயம், பூமி, திக்கு, ஜலம், ஜ்யோதி எல்லாம் இவனே. இவன்-தாதா, விதாதா எப்போதும் அளிப்பான். ஸத்யம், தர்மம், தவம், ப்ரஹ்மா, பிதாமஹர், நாகர்களில் அநந்தன், ருத்ரர்களில் சங்கரன். இந்த ஜங்கமாஜங்க ரூபமான உலகம் நாராயணனிடமிருந்து உண்டானதே. இந்த ஜனார்தனனிடமிருந்து எல்லா ஜகத்தும் உண்டாயிற்று. தேவத்தலைவன் க்ருஷ்ணனிடம் எல்லா ஜகத்தும் இருக்கின்றன.

ஜனமேஜயா! அவனை வணங்கு. மிகப் பழைய இவன் எல்லாத் தேவர்களாலும் எப்போதும் பூஜிக்கத் தக்கவன். பாணனுடன் போராடிய இந்தக் கேசவனின் மஹாத்ம்யம் உனக்கு இவ்விதம் சொல்லப்பட்டது. கேசவனின் மஹாத்ம்யமாகிற பாணனுடன் இந்த மிகப் பெரிய போரை மனதில் வைத்துக் கொள்கிறவரை அதர்மம் அடையாது.

ஜனமேஜயா! ஒப்பற்ற வம்ச வ்ருத்தியை நீ அடைவாய். இந்த யக்ஞ முடிவில் கேட்ட உனக்கு இந்த விஷ்ணு லீலை முழுதும் என்னால் சொல்லப்பட்டது. ஜனமேஜயராஜனே! இந்த விஷ்ணு பர்வ முழுதும் மனதில் கொள்பவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு விஷ்ணு லோகத்தை அடைகிறான்.

காலையில் எழுந்து ஒரே மனதுடன் இதைச் சொல்கிறவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் அடைய முடியாதது ஒன்றுமில்லை. விப்ரன் ஸர்வக்ஞன் ஆவான். க்ஷத்ரியன் விஜயம் அடைவான். வைச்யன் செல்வம் மிக்கவன் ஆவான். சூத்ரன் விரும்பியதைப் பெறுவான். இதைப் படிக்கிறவன் சிறிதும் அமங்களம் அடையமாட்டான். தீர்காயுளைப் பெறுவான்.

ஸூத புத்ரர் சொன்னார் : ப்ராஹ்மணோத்தமர்களே! பரீக்ஷித் புத்ரன் ஜனமேஜயன் அசையாமலிருந்து வைசம்பாயனரால் சொல்லப்பட்ட ஹரிவம்ஸத்தை இவ்விதம் கேட்டான். ஸௌனகரே! எல்லா வம்சங்களும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் உமக்கு இவ்விதம் சொல்லப்பட்டன. மேலும் எதைக் கேட்க விரும்புகிறீர்.

அத்யாயம் 128 முற்றும்

## ஹரிவம்ஸம் விஷ்ணு பர்வம் முற்றும்